# பாறைச் சூறாவளித் துறைமுகம்

சோவியத் எழுத்தாளர்களின்
அறிவியல் புனைகதைகள்





மொழிபெயர்ப்பாளர் : பூ. சோமசுந்தரம்

# பாறைச் சூறாவளித் துறைமுகம்

## சோவியத் எழுத்தாளர்கள் இயற்றிய விஞ்ஞானக் கற்பனைக் கதைகள்

மொழிபெயர்ப்பாளர்

பூ.சோமசுந்தரம்




நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,

41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,

அம்பத்தூர், சென்னை– 600 098.

☎: 26258410, 26251968, 26359906

Language : Tamil
**Parai Suravali Thuraimugam**
**Soviet Science Stories**
Translator : **B. Somasundaram**
Co-ordinator : **Yuma. Vasuki**
First Edition : April, 2013

No.of Pages : 296
Publisher:
**New Century Book House Pvt. Ltd.,**
41-B, SIDCO Industrial Estate,
Ambattur, Chennai - 600 098.
Tamilnadu State, India.
Email: info@ncbh.in
Online: www.ncbhpublisher.com

ISBN: 978 - 81 - 234 - 1116 - 3

Code No. A 1543

**₹ 125/-**

**Branches**

**Ambattur** (H.O.) 044-26359906, 26258410, 26251968 **Thiruvanmiyur** 044-24404873 **Spenzer Plaza** (Chennai) 044-28490027 **Trichy** 0431-2700885 **Tanjore** 04362-231371 **Tirunelveli** 0462-2323990 **Madurai** 0452-2344106, 2350271 **Dindigul** 0451-2432172 **Coimbatore** 0422-2380554 **Salem** 0427-2450817 **Hosur** 04344-245726 **Ooty** 0423-2441743 **Vellore** 0416-2234495 **Villupuram** 04146-227800 **Pondicherry** 0413-2280101 **Thiruvannamalai** 04175-223449

பாறைச் சூறாவளித் துறைமுகம்

(சோவியத் எழுத்தாளர்கள் இயற்றிய

விஞ்ஞானக் கற்பனைக் கதைகள்)

மொழிபெயர்ப்பாளர் : பூ. சோமசுந்தரம்

ஒருங்கிணைப்பு : யூமா. வாசுகி

முதல் பதிப்பு : ஏப்ரல், 2013

*அச்சிட்டோர் : பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்,*
*16 (142), ஜானி ஜான் கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14*
**☎ : 044 - 28482441, 28482973**

பொருளடக்கம்



கேன்ரிஹ் அல்த்தோவ் (பிறப்பு 1926) - தொழில் முறைப் புதுப்புனைவாளர். புதுப்புனைவு முறை இயலை ஆக்கியவர். 1959ஆம் ஆண்டு முதல் விஞ்ஞானக் கற்பனைக் கதைகள் இயற்றத் தொடங்கினார். "நட்சத்திரக் காப்டன்கள் பற்றிய கதைகள்", "அனல் வீசும் பகுத்தறிவு" என்னும் அவரது கதைத் தொகுப்புகள் மிகப் பிரசித்தமானவை. மனிதனும் விண்வெளியும், கண்டுபிடிப்பால் ஏற்படும் இன்பக் கிளர்ச்சி, விஞ்ஞானத்தின் பொருட்டும் மக்களின் நன்மைக்காகவும் அருஞ் செயல்கள் ஆற்றல், வருங்கால விண்வெளி விமானிகளின் இயல்புகள், மனிதனுக்கும் ஸைபர்னெடிக்ஸ் முறைத் தானியங்கி இயந்திரங்களுக்கும் உள்ள பரஸ்பர உறவுகள் - இவையே கே. அல்த்தோவ் முடிவு காணும் முக்கியப் பிரச்சினைகள். "அனல்வீசும் பகுத்தறிவு" என்ற தொகுப்பிலிருந்து எடுக்கப்பட்ட "பாறைச் சூறாவளித் துறைமுகம்" என்ற கதை தமிழ் வாசக நண்பர்களுக்காக இங்கே பிரசுரிக்கப்படுகிறது.

## பாறைச் சூறாவளித் துறைமுகம்

கேன்ரிஹ் அல்த்தோவ்

"தாவூ" என்னும் விண்வெளிக் கப்பலில் இருந்து ஸோரஹ் அனுப்பியிருந்த தகவல் பதிவு நாடா ஆறு மாதங்களுக்கு முன் குறியீடு விளக்குவதற்காக என்னிடம் தரப்பட்டது.

மீட்க முடியாதபடிச் சிதைந்து போனதாகக் கருதப்படும் தகவல்களைத் துலக்கித் தெளிவு படுத்துவது சங்கடம் பிடித்த வேலை. காரியத்தில் உள்ள கஷ்டமல்ல விஷயம். அது

சகஜமானதுதான். திகிலூட்டுவது வேறு விஷயம். எதைச் சாதிப்பதற்காகப் பல ஆண்டுகள் பாடுபடப் போகிறோம் என்று வேலை தொடங்கும்போது அறிய முடியாது. வாழ்நாள் முழுவதும் செலவிட்டும், சர்வசாதாரணமான சில தகவல்களைத் தெளிவு படுத்துவதுடன் நின்றுவிட நேரலாம்.

"தாவூ"விலிருந்து வந்த தகவல் இம்மாதிரியே சிறப்பான முக்கியத்துவம் இல்லாதது என முதலில் எனக்குத் தோன்றியது. வரப்போகும் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பார்வை செலுத்த எனக்கு வாய்க்கும் என்பதை அப்போது நான் அறியவில்லை.

ஸோரஹ் தகவல் அனுப்பியதற்குச் சிறிது காலத்திற்குள் அவனுடைய விண்வெளிக் கப்பல் பூமிக்குத் திரும்பியிருக்க வேண்டும். ஆனால் இதுவரை "தாவூ" காணப்படவில்லை. தானியங்கி இயந்திரங்கள் மாதம் ஒரு முறை தகவல்களை மறுபடி அனுப்பவேண்டும். இந்தத் தகவல்களும் வரவில்லை.

கருஞ்சாம்பல் நிறமான எழுநூற்று நாற்பது மீட்டர் நீள ஒலி, ஒளிப்பதிவு நாடா. சிற்சில இடங்களில் அது ஒரே கறுப்பாய் இருந்தது. வெளித் தொடர்புத் துணைக் கோளத்தில் ஏற்பட்ட விபத்து காரணமாக மங்கியிருந்தது அந்த நாடா. என்னிடம் இருந்தது இது மட்டுமே.

குறியீடு விளக்குபவர்களான எங்களிடம் விசேஷ இயந்திரம் ஏதுவோ இருப்பதாகச் சிலவேளைகளில் ஜனங்கள் நினைக்கிறார்கள். இல்லை, எங்களிடம் இருப்பது வேறு. பொறுமையும் கற்பனையுமே அது. அளவற்ற பொறுமையும் எவ்விதத் தளையும் அற்ற கற்பனையும். ஒன்றுக்கு ஒன்று தொடர்பற்ற, அரிதாகவே கண்ணுக்குப் புலப்படுகிற கோடுகளைக் கண்டுபிடித்து, அவற்றின் பரஸ்பர சம்பந்தத்தை ஊகித்து அறிந்து, படத்தைத் திரும்ப முழுதாக்குவதே எங்கள் வேலையின் சாரம். கவிகளையும் ஓவியர்களையும் போலவே நாங்கள் தனிமையில் வேலை செய்கிறோம். கற்பனைக்கு நிசப்தம் தேவைப்படுகிறது.

ஸோரஹ் அனுப்பிய தகவல்களின் குறியீட்டு விளக்கம் பற்றிய அறிக்கை "விண்வெளித் தொடர்புச் செய்தித்தாளின்" அண்மை இதழில் வெளியிடப்படும். வழக்கப்படி முற்றிலும் நம்பக்கூடிய விவரங்கள் மட்டுமே அறிக்கையில் அடங்கியிருக்கும். இவை அதே கோடுகள்தாம். இந்தக் கோடுகளோ முழுச் சித்திரத்தையும் பற்றிய எண்ணத்தை இன்னும் தரவில்லை. ஆனாலும் இதே



வழக்கப்படி கற்பிதக் கொள்கையை முன்வைக்க எனக்கு உரிமை உண்டு.

ஸோரஹ் அனுப்பியிருந்த தகவல்களை மீட்டமைக்கையில் நான் உள்ளுணர்வைப் பெருமளவு பயன்படுத்தினேன். என்னால் காண முடியாததைக் கற்பனை தனக்குரிய ஏதோ விதிப்படி முழுச் சித்திரமாகப் பூர்த்தி செய்தது. "வோல்ப் - 424" என்னும் நட்சத்திர மண்டலத்தில் ஸோரஹ் செய்த கண்டுபிடிப்பை ஒருவேளை எல்லோரும் நம்பாதிருக்கலாம். என்னிடம் போதிய சான்றுகள் இன்னும் இல்லை.

ஆயினும் ஒன்று உறுதியாகச் சொல்லுகிறேன்: வருங் காலத்தைப் புரிந்துகொள்வதற்கு இவ்வளவு முக்கியத்துவம் உள்ள கண்டுபிடிப்பு இதுவரை செய்யப்படவில்லை. 21ஆம் நூற்றாண்டின் முதல் முப்பது ஆண்டுகளுக்குள் எல்லா மக்களுக்கும் வாழ்வதற்கு இன்றியமையாத சாதன வசதிகள் கிடைத்துவிட்டன. போர்கள் வெகுகாலத்துக்கு முன்பே நின்றுவிட்டன. நோய்களும் பஞ்சமும் ஒழிந்துவிட்டன. இருப்பிட வசதிகளில் பற்றாக்குறை இல்லை. இன்னும் ஓர் இருபது, முப்பது ஆண்டுகளில் நாம் தானியங்கி இயந்திரங்களால் எல்லாத் துறைகளிலும் இயக்கப்படும் ஸைபர்னெடிக்ஸ் உற்பத்தி அமைப்பை நிறுவிவிடுவோம். அது தானே தன்னை விரிவுபடுத்திக் கொண்டு செவ்வைப்படுத்திக் கொள்ளும். தற்போது மனிதகுலத்தின் ஆற்றலில் தொண்ணூறு சதவிகிதத்தை உட்கொள்ளும் கவலைகள் மறைந்துவிடும்.

அப்படியானால் அப்புறம் என்ன நடக்கும்?

## 1

ஸோரஹ் செல்வதற்கு முன் "வோல்ப் - 424" மண்டலத்தின் நட்சத்திரத்துக்கு ஒருவரும் பறந்து சென்றதில்லை. அந்தப் பறப்பால் விஞ்ஞானத்துக்கு எவ்விதப் பயனும் ஏற்படாது என்று எண்ணப்பட்டது.

மெய்யாகவே 424வது மண்டலம் அக்கறையைக் கவராத இலக்கு. சின்னஞ்சிறிய இரண்டு நட்சத்திரங்கள் கொண்டது அது. சகஜமான செங்குறள் விண்மீன்கள் அவை. மனிதப்பரி நட்சத்திரத்தின் அருகாமையில் முதல் பறப்புக்கள் நடந்த போதே

இவ்வகை விண்மீன்கள் நன்கு ஆராய்ந்து அறியப்பட்டு விட்டன. "வோல்ப் - 424" மண்டலத்தில் நிலையான கிரகப் பாதைகள் இருக்க முடியாது என்பது கணக்கீடுகளால் பலமுறை நம்பத்தக்க விதத்தில் நிரூபிக்கப்பட்டிருந்தது.

424வது மண்டலம் ஓர் அரை நூற்றாண்டுக் காலம் விண்வெளிப் பறப்புப் பாதைகளிலிருந்து விலகியே இருந்தது. பிறகு புஷார்டு இரட்டை க்வாந்தம் இடமறி கருவியின் உதவியால் "424"ல் ஒரு கிரகத்தைக் கண்டுபிடித்தார். அதை அவர் 'கிமெரா' - அதிசயக் கற்பனை - என்று அழைத்தார். இந்த கிரகம் தடுக்கப்பட்ட கிரகப் பாதையில் இயங்கியது. இவ்வாறே தோன்றியது "புஷார்டு முரண்."

ஸோரஹ் செய்தது ஆராய்ச்சிப் பறப்பு. வழக்கமாக அம்மாதிரிப் பறப்புக்களுக்கு உரிய செயல் திட்டம் கொண்டது. ஆனால் நடப்பில் அதன் முக்கிய நோக்கம் "புஷார்டு முரணைத்" தெளிவுபடுத்துவதே.

ஸோரஹ் தனியாகப் பறந்தான். அது எல்லை கடந்த தொலை தூரப் பறப்பு. எனவே அதிகப்படிப் பறப்புச் சாதனங்களும் ஆராய்ச்சிக் கருவிகளும் எடுத்துச் செல்வதும் பயணி அறையின் உயிர்க்காப்பை வலுப்படுத்துவதும் அவசியம் ஆயிற்று.

"தாவூ" விண்வெளிக் கப்பல் தலைவனாக ஸோரஹ் ஏன் நியமிக்கப்பட்டான் என்று சொல்வது கடினம். நட்சத்திர விமானிகளைத் தேர்ந்தெடுப்பதற்காக விசேஷமாக நிறுவப்பட்ட தெரிவு இயந்திரம் ஸோரஹைத் தெரிந்தெடுத்தது. பறப்புச் செயல்திட்டம் கிடைத்ததும் அந்த இயந்திரம் பல்வகை உடல், உளச் சோதனைகளைத் தயாரித்து, இந்தப் பறப்புக்கு யாவரிலும் ஏற்ற ஆட்களைப் பொறுக்கி எடுத்தது.

ஸோரஹுக்கு அந்த இயந்திரம் ஏன் முதன்மை அளித்தது என்பதை நிச்சயப்படுத்திக் கொள்வது இப்போது முற்றிலும் அசாத்தியம். உண்மையில் அப்போதுங்கூட இது புதிராகவே இருந்தது. மற்ற விண்வெளி விமானிகளால் ஆயிரத்தில் 110-120 மதிப்பெண்களுக்கு மேல் பெற முடியவில்லை. ஸோரஹுக்கோ, 937 மதிப்பெண்கள் கிடைத்தன.

மறு சோதனைகள் பற்றிய விவரப் பதிவேடு பத்திரமாக வைக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது தடவையும் தெரிவு இயந்திரம் ஸோரஹுக்கு 937 மதிப்பெண்களே அளித்தது.



பறப்பு (விண்வெளிக் கப்பலின் நேரப்படி) சுமார் மூன்று ஆண்டுகள் நீடித்தது. பூமியிலோ இதற்குள் பதினைந்து ஆண்டுகள் கழிந்துவிட்டன. ஆயினும் எல்லாம் நன்றாகவே இருக்கிறது என்று பொருள்படும் சுருக்கமான ஒரே மாதிரிக் குறிகள் தவிர வேறு எவையும் விண்வெளித் தொடர்பு நிலையத்துக்குக் கிடைக்கவில்லை.

ஸோரஹ் மின் சக்தியைச் செட்டாகச் செலவிட்டான்.

முதலாவது தகவல் நாடா "தாவூ" 424வது மண்டலத்தை அடைந்த பின்பே பதிவு செய்யப்பட்டது. அதற்கே குறியீடு விளக்கம் செய்வதில் நான் ஈடுபட்டிருந்தேன்.

424வது மண்டலத்தில் ஒரு கிரகம் இருக்கிறது. அது, ஒரு சிவப்புச் சூரியனைச் சுற்றி, தடுக்கப்பட்ட, சித்தாந்த ரீதியில் அசாத்தியமான கிரகப் பாதையில் இயங்குகிறது.

"தாவூ" விண்வெளிக் கப்பலிலிருந்து எடுக்கப்பட்ட 'கிமெரா' கிரகத்தின் நிழற்படங்களை நான் துலக்கினேன். தொடர்ச்சியான பதினொரு நிழற்படங்கள். ஸோரஹ் நிச்சயமாக எதை அறிய அக்கறை கொண்டான் என்பதை இந்தப் படங்களிலிருந்து அனுமானிக்க முடிந்தது. கிரகத்தின் கோள நடுவரையில், விசாலமான மலைத் தொடர்களின் மையத்தில் இருந்தது "வட்டம்". அது என்ன என்பதை ஸோரஹ் அப்போது அறிந்திருக்கவில்லை. ஆயிரம் கிலோ மீட்டருக்கும் அதிகமான விட்டம் கொண்ட இருண்ட பகுதியை மட்டுமே அவன் கண்டான். 'கிமெரா'வில் ஒரு நாள், பூமியில் உள்ளதற்குப் பாதிதான். ஆனால் பகலும் இரவும் விரைவாக மாறுவதன் பாதிப்பு 'வட்டத்தின்' வெப்பநிலையில் பிரதிபலிக்கவில்லை. அது எப்போதும் +24 டிகிரியாக நிலையாக இருந்தது. ஆனால் முக்கியமானது இது அல்ல. 'வட்டம்' நிலவியதே புதிராக இருந்தது.

'கிமெரா'வின் கிரகப் பாதை சிவப்புச் சூரியனுக்கு மிக மிகக் கிட்டத்தில் இருந்தது. எனவே, ஈர்ப்பின் விளைவாக கிரகத்தில் அசாதாரண வலிமையுள்ள உப்பலேற்றம் உண்டாயிற்று. நிழற்படங்களைக் கொண்டு அனுமானிக்க முடிந்தவரையில் கடல்கள் (குறைந்த பட்சம் பெருங்கடல்கள்) அங்கே இல்லை என்று தெரிந்தது. ஏற்றத்தின் காரணமாகப் பாறை அலைகள் எழும்பின.

'கிமெரா' என்பது, பாறைச் சூறாவளிக் கிரகம்.

'கிமெரா'வில் ஒவ்வொரு நாளும் இரண்டு தடவைகள் ஏற்ற அலை எழுந்தது. இதன் விளைவாக நிலநடுக்கம், சரியாகச் சொன்னால் 'கிமெரா' நடுக்கம் உண்டாயிற்று. ஆனால் முக்கிய விஷயம் பெயர் பற்றியது அல்ல. மெல்லிய காற்று வீச்சுடன் ஒப்பிடும்போது புயல்காற்று எவ்வளவு வலிமை மிக்கதோ, மிக மிக அழிவு விளைவிக்கும் பூகம்பங்களைக் காட்டிலும் இந்தப் பாறைச் சூறாவளிகள் அவ்வளவே வலிமை மிக்கவை. நில அளவுப்படி கணக்கிட்டால் இந்தச் சூறாவளிகளின் ஆற்றலை மூவிலக்க எண்ணால் குறிக்க வேண்டியிருக்கும். முக்கிய விஷயம் என்னவென்றால், பாறைச் சூறாவளிகள் முறையாக ஆறு மணிக்கு ஒரு தடவை கணக்காகத் திரும்ப வந்த வண்ணமாய் இருந்தன. சூறாவளிகளுக்கு நடுவே இருந்த குறுகிய இடை நேரங்களில் நிலவியதை ஒப்புக்காக மட்டுமே அமைதி என்று சொல்லலாம். ஒரு துருவத்திலிருந்து மறு துருவம்வரை சிதறிக் கிடந்த ஆயிரக்கணக்கான எரிமலைகள் வெடித்து முழங்கின. எரிமலைக் குழம்புப் பெருக்குகள் மலைத் தொடர்களைக் கறவி வழி செய்து கொண்டு கணவாய்கள் வழியே பாய்ந்தன. கொதித்துத் தளதளத்தன குழம்பல் சேற்று ஏரிகள்... இல்லை, ஏரிகள் அல்ல (இது சரியான சொல் அல்ல), பொங்கிக் குமையும் சேற்றுக் கடல்களும் மாகடல்களும்.

மூன்று நான்கு நாட்களுக்குள் கிரகத்தில் இருந்தவை எல்லாம் மாறிவிடும். எல்லாம் - 'வட்டம்' ஒன்றைத் தவிர. சூறாவளிகள் 'வட்டத்தை' நெருங்காமல் விலகிச் சென்றன போலக் காணப்பட்டன. 'வட்டத்தின்' எல்லைகளுக்கு உள்ளே, எரிமலைக் குழம்பின் நெருப்பு அலைகளோ, எரிமலைகளின் புகையோ, பாறைச் சூறாவளிகள் எழுப்பிய புழுதியோ எதுவுமே புகவில்லை.

வேற்று அறிவாளிகளுடன் சந்திப்பு நேரும் என்று ஸோரஹ் தொடக்கத்திலிருந்தே அனுமானித்தான் என நம்புகிறேன். மனிதன் நிலவுலகிலிருந்து கிளம்பி விண்வெளிக்குச் செல்லத் தொடங்கிய நாளிலிருந்தே இத்தகைய சந்திப்பை மனிதர்கள் தேடி வந்தார்கள், ஆனால் அது நிகழவில்லை. அது இத்தகையதாக இருக்கும் என நாம் அறிந்திருக்கவில்லை.

கீழே இருந்தது வேற்று வாழ்க்கை. ஸோரஹ் தனது விண்வெளிக் கப்பலில் இருந்தபடி அதைக் கூர்ந்து நோட்டமிட்டான். அவன் அவசரப்படவில்லை. சுமார் இருநூறு



மணி நேரம் கடந்தபின்பே அவன் இறங்கு சறுக்கு விமானங்களை ஆயத்தம் செய்யத் தொடங்கினான்.

மூன்று சறுக்கு விமானங்களில் இயக்குவதற்கும் வேவு பார்ப்பதற்கும் தேவையான தானியங்கிப் பொறிகளை இணைத்துப் பொருத்தினான். அந்தக் காலத் தரத்தின்படி அவை மிகச் செவ்வைப்பாடு உள்ளவை. முதல் சறுக்கு விமானம் 'வட்டத்தின்' மையத்தை நோக்கிச் சென்றது. அப்புறம் திடீரென்று திரும்பி, ஒரு புறம் விலகிப்போய் மேகங்களின் கருங் குழப்பத்தில் மறைந்துவிட்டது.

ஸோரஹ் இரண்டாவது சறுக்கு விமானத்தை வேவு பார்ப்பதற்காக அனுப்பினான்.

இந்தத் தடவை பறப்புத் திட்டத்தை ஸோரஹ் தானே அமைத்தான். விமானம் இறங்குவதற்காக அவன் தேர்ந்தெடுத்த இடம் விந்தையானது. 'வட்டத்துக்கு' மிக அருகே இருந்த, வெகு உயரமான சிகரம் அது. விமானம் நலமே இறங்கியிருக்க வேண்டும், தானியங்கிக் கருவிகள் "தாவூ" விண்வெளிக் கப்பலுக்கு ஏதோ தகவல் அனுப்புவதில் வெற்றி பெற்றிருக்கவேண்டும். (அதன் பின்னர் ஸோரஹ் உறுதியான நம்பிக்கையுடன் செயல் புரிந்ததற்கு வேறு காரணம் கூறுவது கடினம்). ஆனால் இறங்கிய பதினேழு நிமிடங்களுக்குப் பின் விபத்தை அறிவிக்கும் குறி வந்தது. தொடர்பு துண்டிக்கப்பட்டுவிட்டது.

ஸோரஹ் இதை எதிர்பார்த்தான் போலும். அவன் 'கிமெரா'வில் இறங்குவதற்கு உடனே ஆயத்தம் செய்யலானான்.

"தாவூ" விண்வெளிக் கப்பலை ஒரு நாளில் ஒரு சுற்று வீதம் கிரகப்பாதையில் இயங்கவைத்துவிட்டு, கடைசிச் சறுக்கு விமானத்தில் புறப்பட்டான் ஸோரஹ். விண்வெளிக் கப்பல் இறங்கிடத்திற்கு மேலே வான உச்சத்தில் மிதந்தது.

## 2

முதல் நிழற்படங்கள் இறங்கிய உடனேயே எடுத்தவை. பிலிம் சுருள் நாடாவில் ஒப்புநோக்கில் முழுமையாக எஞ்சியிருக்கும் பகுதி இதுவே. தொலை நிழற்படக் கருவி நாற்பது வினாடிகளுக்கு ஒரு தடவை தானாகவே இயங்கி, படங்களை "தாவூ" விண்வெளிக் கப்பலுக்கு அனுப்பியது.

புகை சூழ்ந்த வானில் மங்கலான சிவப்புச் சூரியன். அது விரைவாகத் தொடுவானை நோக்கிச் செல்கிறது. அங்கே, தொடு வானில் இருக்கவேண்டும் 'வட்டம்'. படங்களில் அது தென்பட வில்லை. ஆனால் மலைகள் துலக்கமாகக் காட்சியளிக்கின்றன. பாறை முகட்டின் உச்சி அருகே இருந்த மிகச் சிறு திடலிலிருந்து அவை படம் பிடிக்கப்பட்டிருக்கின்றன. இங்கிருந்துதான் இரண்டாவது சறுக்கு விமானம் அகாதத்தில் பாய்ந்தது.

மலைகள் கொந்தளிக்கும் மாகடலை நிகர்த்திருந்தன. சூறாவளியில் எழும்பும் மாகடல் அலைகளை யாரோ பல நூறு, பல்லாயிரம் மடங்கு பெரியவை ஆக்கி, அவை ஆற்றலின் உச்சத்தை எட்டியதும் அவற்றை நொடிப்பொழுதில் பாறைகளாகச் செய்துவிட்டதுபோல் இருந்தது. பாறை அலைகளின் உச்சிகளின்மீது படிந்திருந்தது வெண்நுரை போன்ற வெண்பனி.

மூன்று படங்கள் மங்குலில் ஒளிவீச்சுக் கருவிகளின் வெளிச்சத்தில் எடுக்கப்பட்டிருந்தன. பாறைச் சூறாவளிக்கு முன் தன் "விண்வெளி விமானநிலையத்தை" அமைப்பதற்காக ஸோரஹ் பாடுபட்டான்.

ஸோரஹ் சுபாவத்தில் எப்படிப்பட்டவன் என்பதை நான் சிறிதும் அறியேன். பொதுவாக, இளம் விண்வெளி விமானிகளின் தனிப்பட்ட இயல்புச் சிறப்புகள் வழக்கமான நிலைமைகளில் அவர்களது நடத்தையில் தென்படுவதில்லை. சுபாவம் அமைவது விண்வெளியில்தான் நிகழ்கிறது. ஸோரஹின் செயல்களை ஆராய்ந்து, அவன் வேறுவிதமாக இன்றி இப்படி நடந்து கொண்டது ஏன் என்று நான் ஓரளவுதான் விளக்க முடியும். இந்தத் திடலில் அவன் தங்கியது ஏன்?

இவ்வாறு செய்ததன் மூலம் ஸோரஹ் அறிவார்ந்த சிந்தனைக்கு எதிராக நடந்துகொண்டான் என்பதற்குச் சான்று காட்டத் தேவையில்லை. ஆராய்ச்சிப் பயணத்தை இத்தகைய ஆபத்துக்கு உள்ளாக்க எந்த விதமான அவசியமும் இல்லை. சறுக்கு விமானம் வேறு இடத்துக்குப் பறந்து போயிருக்கலாம், முடிவில் "தாவூ" விண்வெளிக் கப்பலுக்குத் திரும்பி வர அதனால் முடிந்திருக்கும். சிகரத்தின் உச்சியில் தங்கியதால் ஸோரஹ் எவ்விதப் பயனையும் அடையவில்லை. அளவற்ற ஆபத்தை வேண்டுமென்றே போல அவன் எதிர்கொள்ளச் சென்றான், எதற்காக?

பாறைச் சூறாவளி என்பது என்ன என்று நிழற்படங்களைப் பார்த்தாலே தெரிகிறது.



சூறாவளி தொடங்குவதற்குச் சுமார் பத்து நிமிடங்களுக்கு முன் மலைகளில் ஊதா ஜுவாலைகள் தோன்றின. கிரகப் புறணி ஏற்றத்தால் ஏற்படும் பெயர்வை எதிர்த்து மின்னாற்றலை வெளிப்படுத்தின. பாறைகளின் கூர் முகடுகள் தண்ணிய நீல - ஊதாத் தழல்களால் ஒளிர்ந்தன. இந்தத் தழல்கள் விரைவில் மூண்டு எரிந்தன. நிழல்கள் பின்வாங்கி, கீழே சரிந்தன. மிகத் தொலைவில் உள்ள சிகரங்கள் கூடத் தென்படத் தொடங்கின. நீல - ஊதா ஒளி அதிகபட்சச் சுடர்நிலையை எட்டியதும் உப்பலேற்றம் மலைகளைப் பெயர்த்தது. அந்தக் கணத்தில் எடுக்கப்பட்ட படத்தில் மலைகள் சடையடர்ந்து மங்கலாகக் காணப்படுகின்றன; விண்மீன்கள் சுடரும் வானமும் சடையடர்ந்து சிலிர்த்து நிற்கும் மலை முகடுகளும்.

பாறை மாகடல் நடுநடுங்கிற்று, அலையடிக்கத் தொடங்கிற்று. பாறைகள் கடுமையை இழந்துவிட்டன. திடத்தன்மையுள்ள பாறை தன் இயல்புக்கு மாறாக இயக்கம் உள்ளது ஆகிவிட்டது.

புயலில் கொந்தளிக்கும் சமுத்திரத்தை நீந்திக் கடந்துவிடலாம், வெயிலில் பொசுங்கும் பாலைவனத்தை வென்றுவிடலாம், எங்குமே போகலாம் - வெறித் தாண்டவம் செய்யும் இந்தப் பாறை அலைகளைத் தவிர.

அரக்கர்கள்போல உயர்ந்து நின்ற மலைச்சிகரங்கள், யாரோ அவற்றை அடியில் வெட்டிவிட்டதுபோல நிலைகுலைந்து சரிந்தன. பாறைகள் ஒன்றோடொன்று மோதி நொறுங்கின. அடர்ந்த கரும் புழுதிப் படலம் விரைவாக மேலே திடலை நோக்கி எழுந்தது. அங்கே ஏதோ மாயத்தால் நின்று கொண்டிருந்தது சறுக்கு விமானம்.

பாறைச் சூறாவளியால் உடைந்து பிளந்த மலைகளின் அடியிலிருந்து பீரிட்டுப் பெருகின அழலும் எரிமலைக் குழம்புப் பிரவாகங்கள். ஒளிவீச்சுக் கருவிகளின் குறுகிய கதிர்கள் நெருப்பும் புகையுமாகக் குமைந்த குழப்பத்தில் மறைந்துவிட்டன. அப்புறம் கெட்டிச் சுவர்போல எழுந்து கவிந்தது பாறைப் புழுதி. தொலை நிழற்படக் கருவி கடைசிப் படத்தை "தாவூ"வுக்கு அனுப்பிவிட்டு நின்றுவிட்டது.

சூறாவளி ஒரு மணி நேரத்துக்கு மேல் நீடித்தது. எல்லாம் முடிந்து புழுதி படியத் தொடங்கியதும் தானியங்கிகள் மீண்டும்

படப்பிடிப்பைத் தொடர்ந்தன. ஒளிவீசும் ராக்கெட்டுகள் மீது ஸோரஹ் திறன்மிக்க குவாந்தம் ஜெனரேட்டர்களைப் பொருத்தினான். அப்படியும் படங்கள் மோசமாகவே வாய்த்தன.

முன்போலவே நாற்புறமும் உறைந்த அலைகளை ஒத்த மலைகள். ஆயினும் இவை வேறு அலைகள். இமயமலைத் தொடர் போன்ற மலைத் தொடரைப் பாறைப் புயல் 'கிமெரா'வின் மேற்பரப்பிலிருந்து துடைத்து ஒழித்து, அதற்குப் பதில் புகை உமிழும் மலைகளின் புதிய தொடர்களைத் தோற்றுவித்தது. ஒரு சில மிகப் பெரிய சிகரங்கள் மட்டுமே எஞ்சியிருந்தன. அவற்றின் உச்சிகள் புழுதி மேகங்களுக்கு மேலே தனித்தனியாக நீட்டிக் கொண்டிருந்தன.

## 3

என்ன ஆனாலும், மலைச் சிகரத்தில் உச்சியில் இருந்த சிறு திடலில் ஸோரஹ் தங்கியிருக்க எதுதான் காரணமாக இருந்தது?

இந்தக் கேள்விக்கு விடை காண நான் வீணே முயன்றேன். முதலில் வேறொரு விஷயத்தை ஆராய்ந்து, தெரிவு இயந்திரம் "தாவூ" விண்வெளிக் கப்பலின் தலைவனாக ஸோரஹை ஏன் பொறுக்கி எடுத்தது என்பதை எப்படியாவது புரிந்துகொள்ள வேண்டும் என அப்புறந்தான் எனக்கு விளங்கிற்று.

இந்த இயந்திரங்கள் வெகு காலமாகப் பயன்பாட்டில் இல்லை. அவற்றின் விவரமான வருணனைகூட எனக்குக் கிடைக்கவில்லை. என்னுடைய கருத்து நம்பத் தகுந்தது என்று என்னால் நிரூபிக்க முடியாது. இது வெறும் அனுமானமாகவே இருந்துவிட்டுப் போகட்டும்.

ஆக, என் கருத்துப்படி இந்தப் பறப்புத் திட்டத்தின் முக்கியச் சிறப்பு, உயர் வளர்ச்சி பெற்ற வேற்று வாழ்வை அனேகமாகச் சந்திக்க நேரலாம் என்ற குறிப்பே ஆகும். 'கிமெரா' கிரகத்தின் வழக்கத்துக்கு ஒவ்வாத கிரகப்பாதை, இத்தகைய சந்திப்பு சாத்தியம் என்பதைப் பறப்புக்கு முன்பே கணக்கில் எடுத்துக்கொள்ள வைத்தது. தேர்வின் முக்கியச் சிறப்பு என்னவென்றால், ஸோரஹ் வேட்பாளர்கள் எல்லோரிலும் இளைஞன் என்பதே. அவனைவிட இளைய விண்வெளி விமானி யாரேனும் தேர்வுக்கு வந்திருந்தால் தெரிவு இயந்திரம் அந்த இளைஞனைப் பொறுக்கி எடுத்திருக்கும் என்று நம்புகிறேன்.



அதிக வளர்ச்சி பெற்ற வேற்று நாகரிகத்துடன் முதல் சந்திப்பின்போது மனித சமுதாயத்தின் பிரதிநிதியாகச் செல்பவன் மிகவும் இளைஞனாக இருக்கவேண்டும் என்று தெரிவு இயந்திரம் கருதியது. இதில் அதற்கே உரிய தர்க்கப் பொருத்தம் இருக்கிறது. வேற்று நாகரிகம் மனித நாகரிகத்தைவிடத் தரத்தில் அளவு கடந்து வித்தியாசமுள்ளதாக இருக்கலாம், எனவே விண்வெளி விமானியின் ஞானமும் அனுபவமும் கொஞ்சம் கூடவோ குறையவோ இருப்பது எவ்வித முக்கியத்துவமும் உள்ளதாய் இராது.

ஆனால் மறுபடி சொல்கிறேன், இயந்திரத்தின் தெரிவுக்கு ஆதாரங் காட்ட நான் முற்படவில்லை. எனக்கு முக்கியமானது வேறு விஷயம். இந்தச் சந்தர்ப்பத்தில் ஸோரஹின் பிரதானமான தன்மை இளமைதான் என்றால், எத்தனையோ விஷயங்கள் தெளிவுபட்டுவிடுகின்றன.

முதலில் அனுப்பிய இரண்டு சறுக்கு விமானங்கள் அழிந்து போயின. ஸோரஹின் இடத்தில் அனுபவம் முதிர்ந்த, தேர்ந்த விண்வெளி விமானி இருந்திருந்தால், இரு மடங்கு எச்சரிக்கை அடைந்திருப்பான். ஸோரஹோ, இரு மடங்கு துணிவு கொண்டான். ஏனெனில் அவன் இளைஞன்.

இந்தத் துணிவு அடாதது, அர்த்தம் அற்றது - அதாவது... அதாவது, மனிதனை முதல் தடவையாகக் காணும் எவனோ ஒருவன், ஒரு பக்கத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தான் என்று வைத்துக் கொள்ளாவிட்டால். அந்த "எவனோ ஒருவன்" பாறைச் சூறாவளிக்கு அஞ்சவில்லை. ஸோரஹும் சூறாவளிக்கு எதிரே பின்வாங்க விரும்பவில்லை. சிறுபிள்ளைத்தனம்! ஆனால் ஸோரஹ் உண்மையில் சிறுபிள்ளை தானே.

வேற்று கிரகத்தில் அந்தக் குறுகிய இரவில் ஸோரஹுக்குக் கஷ்டமாக இருந்தது. இத்தகைய சந்தர்ப்பங்கள் விண்வெளிப் பயணத்தில் முன்பு நேர்ந்ததில்லை. புதிய கிரகத்துக்குப் பறப்பதற்கு முன் விண்வெளி விமானிகளின் குழு முறையான வேவுப் பறப்புக்கள் நடத்துவது வழக்கம். ஸோரஹோ, தன்னந்தனியாய் இருந்தான். அவன் விண்வெளிக் கப்பலில் கழித்த மூன்று ஆண்டுகளும் தனிமையில்தான் கழிந்தன, என்றாலும் அது முற்றிலும் வேறு வகையான தனிமை. கப்பல் குறுகிய இடம் கொண்டது, மனித வாசத்துக்குப் பழக்கமானது. அதன் வரம்புகளுக்கு வெளியே வெறுமை மட்டுமே இருப்பதாகத்

தோன்றுகிறது. எல்லையின்றித் தொலைவில் உள்ள நட்சத்திர விளக்குகளின் செறிவை மூளைதான் காண்கிறது, இதயம் அல்ல. விண்வெளிக் கப்பலின் அறையில் அதற்கே உரிய பரிமாணங்கள் உண்டு: பெரியவனான மனிதன் விறல்மிக்க, கீழ்ப்படிவுள்ள இயந்திரங்களால் சூழப்பட்டிருக்கிறான். அவதானிக்கைத் திரைகளில் மிக ஆழத்தில் தெரிகின்றன சின்னஞ்சிறு உலகு எங்கள்... 'கிமெரா'வில் இறங்குவதற்கு ஒரு மணி முன்னால்கூட ஸோரஹ் அந்த கிரகம் முழுவதையும் ஒரே பார்வையில் காண முடிந்தது. மலைச் சிகரத் திடலில் இறங்கியபின் அவன் சறுக்கு விமானத்தின் கதவைத் திறந்ததுமே, எல்லாம் மாறிவிட்டன. பிரபஞ்சம் வேறு பரிமாணங்களை மேற்கொண்டுவிட்டது. இந்தப் பரிமாணங்களில் மனிதன் பிரமாண்டமான மலைகளின் நடுவே தவறி வந்துவிட்ட அற்பத் துகள் ஆகிவிட்டான். அப்புறம், பிரபஞ்சத்தின் புதிய பரிமாணங்களை உறுதிப்படுத்துவதுபோல அடிக்கத் தொடங்கிற்று பாறைச் சூறாவளி.

ஸோரஹைத் தேர்ந்தெடுத்த இயந்திரத்தை நிறுவியவர்கள் மனிதர்கள்தாம். இம்மாதிரி இயந்திரம் இளமை என்றால் துணிவு என்று மதித்தது புரியக்கூடியதே. நான் இன்னொன்றை அழுத்திச் சொல்ல விரும்புகிறேன்: "துணிவு" என்பதற்கு இயந்திரம் கொண்ட அர்த்தம், அபாயம் எதிர்ப்படும்போது அச்சத்தை அடக்கிக் கொள்ளுதல் என்பது மட்டும் அல்ல, மலைகள் தகர்ந்து சிதறும் போது பயங்கரமாகத்தான் இருக்கும். ஆனால் நிலையானவையாகத் தோன்றிய வழக்கமான எண்ணங்கள் தகர்ந்து சிதறும்போதோ, நூறு மடங்கு அதிகப் பயங்கரமாக இருக்கும்.

அறிவார்ந்த வேற்று வாழ்வைச் சந்திக்கையில் இம்மாதிரி அதிர்ச்சி தவிர்க்க முடியாதது என்று இயந்திரம் கருதியது (இப்போது இதை நான் உறுதியாக நம்புகிறேன்). அதனால்தான் எல்லோரிலும் வயதில் இளைய விண்வெளி விமானியை அது தேர்ந்தெடுத்தது. வேறு, உயர்ந்த வகையான துணிவு அவனிடம் இருக்கும் என அது மதித்தது. ஸோரஹோ, வெறுமே முன்யோசனையற்ற துணிச்சலைக் காட்டுவதுடன் தொடங்கினான்...

என் கருத்தை ஏற்கும்படி யாரையும் நான் கட்டாயப்படுத்த விரும்பவில்லை. இது என் தொழில்முறை அனுமானம் தவிர வேறல்ல. ஆயினும், வெளிப்படையாகச் சொல்வதானால் சந்திப்பு (இந்த நிகழ்ச்சியை ஒரே சொல்லில் குறிக்க நான் பழகிவிட்டேன்) இவ்விதம் நிகழ்ந்தது பற்றி எனக்கு மகிழ்ச்சியே. மனிதனை முதன் முதலாகச் சந்திப்பவன் அவனுடைய முன்ஜாக்கிரதையை அல்ல, துணிவைக் கண்டதே மேல்.

## 4

ஸோரஹின் தகவல்களைக் குறியீடு விளக்கம் செய்கையில் நான் சந்திப்பைப் பற்றி நிறைய எண்ணமிட்டேன். சந்திப்பு எவ்வாறு நிகழ்ந்தது என்பதை ஆரம்பத்தில் புரிந்து கொள்வதே குறியீடு விளக்க முறைக்கு ஆதாரமாக இருந்தது.

வழக்கம்போல இயந்திரங்களால் திரட்டித் தரப்படும் தகவல்களை நான் பயன்படுத்தவில்லை. அனுமானிக்கக்கூடிய சந்திப்பு பற்றி எழுதப்பட்டவற்றை எல்லாம் நானே படித்தேன். புனை கதைகள், கற்பிதக் கொள்கைகள், விவாத விவரக் குறிப்புகள், விண்வெளி உயிரியலாரின் ஆராய்ச்சிகள், எல்லாவற்றையும், அதில் நிறைய நேரம் செலவாயிற்று என்றாலும், நான் படித்தேன்.

மெய்விவரங்களும் எதிர் விவரங்களும் ஊகங்களும் எதிர் ஊகங்களும் நிறைந்த குவியலிலிருந்து தெளிவான முறை என்று சொல்லக்கூடிய ஒன்று எப்போது தோன்றியது என்று எனக்கு நினைவில்லை.

என்னுடைய எண்ணத்தைப் போதிய அளவு துல்லியமாகச் சூத்திரப்படுத்த இப்போது என்னால் முடியும்:

புவிமைய நிலைகளிலிருந்து நாம் எவ்வளவு தூரம் விலகிச் செல்கிறோமோ, சந்திப்பு பற்றிய அனுமானம் உண்மைக்கு அவ்வளவு நெருங்கியது ஆகும்.

பூமியே பிரபஞ்சத்தின் மையம் என்றும் மனிதன் மட்டுமே அறிவு படைத்த ஒரே பிராணி என்றும் ஒரு காலத்தில் எண்ணப்பட்டு வந்தது. அப்போது சந்திப்பு பற்றிய பிரச்சனையே எதிர்ப்படவில்லை. எல்லையற்ற பிரபஞ்சத்தில் நிலவுலகம் வகிக்கும் இடம் உண்மையில் எத்தகையது என்று விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக ஜனங்கள் பிற்பாடு புரிந்து கொண்டார்கள். ஆயினும் நம் சிந்தனை மட்டும் அதே பழைய போக்கில் சடவேகம் காரணமாக இயங்கிக் கொண்டிருக்கிறது. மற்றவர்கள் நம் உலகுக்குப் பறந்து வரவேண்டும், நம்மைத் தேட

வேண்டும், நமக்குக் குறியொலிகள் அனுப்பவேண்டும்... என்றே இன்னமும் நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

நிலவுலகம் பிரபஞ்சத்தின் மையம் அல்ல என்பதை நாம் அறிவோம். ஆயினும், பிரதானப் பாத்திரம் இல்லாவிட்டாலும் சமமான பாத்திரத்தை நமக்கு வைத்துக்கொள்ள இன்னமும் விரும்புகிறோம். இந்த எண்ணத்தின் அடிப்படையிலேயே எல்லாக் கற்பிதக் கொள்கைகளும் நிறுவப்பட்டுள்ளன. வானொலி அல்லது ஒளித் தொடர்பால் இணைக்கப்பட்ட உலகங்களின் மாபெரும் வளையம் நமது ஆதர்ச அனுமானத்தில் காட்சி அளிக்கிறது. இந்தக் கணக்கீட்டின்படியே நாம் ஆராய்ச்சியைத் திட்டமிடுகிறோம். வானவியல் ஆராய்ச்சிக் கழகத்தின் யோசனைப்படி முதலாவது வானொலித் தேட்டத்திலிருந்து புதன் கிரகத்தில் பெரிய சூரியக் கதிர்வீச்சுக் கருவியை நிறுவுவது வரை நம் திட்டங்கள் எல்லாம் இம்மாதிரியானவையே.

வேற்று நாகரிகங்களின் குறியொலிகளைக் கருவிகளால் ஏற்றுப் பதிவு செய்ய நமக்கு ஏன் வாய்க்கவில்லை?

இதற்கு மிக இயல்பான பதில், இந்தக் குறியொலிகள் இல்லை என்பதே. நாகரிகங்கள் இருக்கின்றன, குறியொலிகள் அனுப்புவது அவற்றால் முடியுங்கூட. ஆனால் அவை வேறு காரியங்களில் ஈடுபட்டிருக்கின்றன.

மிக மிகச் சாதாரணமான இந்தச் சிந்தனையை மேல் எழ விடாமல் அமுக்குகின்றன புவிமைய எண்ணங்களின் மிச்சங்கள். "அது எப்படி?" நாம் தேடுகிறோம், இந்தத் தேட்டத்திலேயே சக்தியை எல்லாம் ஈடுபடுத்துகிறோமே. ஆகவே, மற்றவர்களும் நம்மைத் தேட வேண்டும் அல்லவா?" - இந்தப் போக்கில் செல்கிறது நமது சிந்தனை...

ஸோரஹ் தன் சறுக்கு விமானத்தை 'வட்டத்தின்' விளிம்பை ஒட்டியிருந்த சிறு குன்றின் உச்சியில் இறங்கியபோது மங்கிய சிவப்புச் சூரியன் தொடுவானத்துக்கு மேல் எழுந்தது.

மீட்டமைக்கப்பட்ட படங்களில் இந்த விளிம்பு துலக்கமாகத் தென்படுகிறது. நெடுகப் பரவியிருக்கிறது பழுப்புப் புகை. ஏதோ ஒரு சக்தி அதை 'வட்டத்தின்' எல்லைக்குள் புகவிடாமல் தடுக்கிறது. ஸோரஹ் வியப்பூட்டும் இரண்டு படங்கள் எடுத்திருக்கிறான்: குறுகிய எரிமலைக் குழம்புப் பெருக்கு 'வட்டத்தின்' விளிம்புவரை சென்று, திடீரெனத் திரும்பி வந்த



வழியே - கீழிருந்து மேல்நோக்கிப் - பாய்கிறது.

'வட்டம்' உட்புக முடியாத எல்லைகள் கொண்டிருந்தது. ஆனாலும் தான் புக அனுமதிக்கப்படுவோம் என்பதில் ஸோரஹ் கொஞ்சங்கூடச் சந்தேகம் கொள்ளவில்லை. சறுக்கு விமானத்தில் சக்கரச் சட்டம் பொருத்தப்பட்டிருந்தது - 'வட்டத்தின்' மழமழப்பான மேற்பரப்பில் இயங்க வாய்ப்பாக. முதலில் தானே நடந்து போய் எல்லையைத் தாண்டிச் சோதனை பார்த்திருக்க வேண்டும் என்று நமக்குத் தோன்றும். 'வட்டத்தின்' புலப்படாதத் தடைச் சுவருடன் சறுக்கு விமானம் மோதியிருந்தால் பெரு விபத்து நேர்ந்திருக்கக் கூடுமே. ஆயினும் ஸோரஹ் சறுக்கு விமானத்தில் ஏறிக்கொண்டான், விமானம் மெதுவாக (சக்கரங்கள் சாம்பலில் புதைந்ததால்) 'வட்டத்தை' நோக்கிச் சென்றது.

தொலைக்காட்சி அஞ்சல் கருவியை ஸோரஹ் எல்லை அருகே வைத்துவிட்டான். இப்படி அவன் செய்தது முன்ஜாக்கிரதை காரணமாக அல்ல, 'வட்டத்தின்' எல்லைக்குள் புகுவதைப் படம் எடுத்துக் கொள்வதற்காகவே. படங்கள் மிகவும் பழுதடைந்திருக்கின்றன. ஆனாலும் கனத்த சறுக்கு விமானம் ஆடி அசைந்து கொண்டு குன்றிலிருந்து கீழே செல்வதைக் காண முடிகிறது.

சறுக்கு விமானம் தடையின்றி, ஓரளவு வெற்றிப் பெருமிதத்துடன்கூட, எல்லையைக் கடந்தது. அப்புறம் ஸோரஹ் விமானத்தை நிறுத்திவிட்டு, தொலைக்காட்சி நிழற்படக் கருவியை எடுத்து வரத் திரும்பி விமானத்தின் இறக்கைக்கு அடியில் அதை பொருத்தினான். கருவி ஐந்து வினாடிகள் இடை விட்டு விட்டுப் படங்கள் எடுக்கத் தொடங்கிற்று.

'வட்டம்' ஏதோ இயற்கையாக அமைந்ததுபோலத் தோற்றம் அளிக்கக்கூடும். ஆரம்பத்தில் எனக்கு இது சாத்தியமாகப்பட்டது. ஆனால் 'வட்டத்தின்' எல்லைகளுக்குள் எடுக்கப்பட்ட முதல் படங்களை ஆராய்ந்து பார்த்ததும், இந்த 'வட்டம்' உயர் வளர்ச்சி பெற்ற நாகரிகத்தால் அமைக்கப்பட்ட சிக்கலான இயந்திரம் என்பதைப் புரிந்து கொண்டேன்.

ஆனால் ஒன்று: ஸோரஹ் ஒரு தரங்கூட "இயந்திரம்" என்று சொல்லவில்லை. "பாறைச் சூறாவளித் துறைமுகம்" என்றே அவன் அதைக் குறிக்கிறான். துறைமுகம் கண்ணாடிப் பீடபூமியை ஒத்திருக்கிறது என்று உடனே விளக்கம் தருகிறான். இதைப்பற்றி

ஸோரஹ் மேலெழுந்த வாரியாகவே, மிகவும் மேம்போக்காகவே விவரிக்கிறான்!... படங்களில் "பாறைச் சூறாவளித் துறைமுகம்" உலோகத்தால் அமைந்ததுபோலக் காணப்படுகிறது. ஒரு படத்தை அனேகமாக முழுதும் மீட்டமைக்க முடிந்தது: முற்றிலும் சமதளமான மேற்பரப்பு தொடுவானம் வரை பரந்து சென்றிருக்கிறது. சிவப்புச் சூரியனின் சாய்வான கிரணங்களை மங்கலாகப் பிரதிபலிக்கிறது. ஆனால் "துறைமுகத்தின்" மேற்பரப்பு ஒளி ஊடுருவக் கூடியது என்கிறான் ஸோரஹ். அங்கே, பசிய ஆழத்தில், ஏதோ இடைவிடாது இடம் பெயர்ந்த வண்ணமாக இருந்ததாம். பூதங்கள் போன்ற, மினுமினுக்கும் நிழல்கள் மேல் மட்டத்துக்கு வருவதும்; ஆழ்ந்து மறைவதுமாக இருந்தனவாம்...

சுமார் ஐம்பது மணி நேரம் ('கிமெரா'வில் இது நான்கு நாட்களுக்குச் சமம்) சறுக்கு விமானம் "துறைமுகத்தின்" ஓரத்தில் நின்றது. இங்கே கிமெரா நடுக்கம் இல்லை. ஸோரஹ் சந்திப்பைப் பற்றியே நினைத்துக்கொண்டிருந்தான் போலும். துறைமுகத்தின் எல்லைகளுக்கு வெளியே நிகழ்ந்தவற்றின் மீது அவன் கவனம் செலுத்தவில்லை. கற்களும் சாம்பலுமாக மலைமேலிருந்து நிலச்சரிவு வழியில் எதிர்ப்பட்டவற்றை எல்லாம் துவம்சம் செய்துகொண்டு பாய்ந்து வந்தபோது அவன் சறுக்கு விமானத்தை அப்புறப்படுத்த வில்லை. நிலச்சரிவு எல்லை வரையில் புரண்டோடி வந்தது. கொதித்துத் தளதளக்கும் இருநூறு மீட்டர் உயரச்சுவர் அனேகமாய்ச் செங்குத்தாக மேலெழுந்தது. ஆனால் கண்ணுக்குத் தெரியாத தடையால் நிறுத்தப்பட்டு, அதே நொடியில் உறைந்து போயிற்று.

ஐம்பது மணி நேரம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தபின் ஸோரஹ் "துறைமுகத்தின்" உள்ளே செல்லப் புறப்பட்டான். விமானம் விரைவாக வேகத்தை அதிகப்படுத்தியவாறு கண்ணாடி போல் மழமழப்பான தளத்தில் ஓடியது.

"அறிவுச்சோதரர்களைத்" தேடினான் ஸோரஹ்.

குறிப்பிடத் தகுந்த விவரம் ஒன்று: தொலைக்காட்சி நிழற்படக் கருவியை இயக்கும் தானியங்கி இயந்திரம் இந்தப் பரபரப்பான ஓட்டசாட்டத்தால் பயன் எதுவும் கிட்டாது என்பதை ஸோரஹுக்கு முன்பே புரிந்துகொண்டு விட்டது. ஆரம்பத்தில் அது மூன்று நிமிடங்களுக்கு ஒருமுறை இயங்கியது. தானியங்கி படப்பிடிப்புக்கு இடையில் உள்ள நேரத்தைப் படிப்படியாக அதிகமாக்கிற்று. பின்பு படப்பிடிப்பை ஒரேயடியாக



நிறுத்திவிட்டது.

## 5

"தாவூ" விண்வெளி விமானத்திலிருந்து வந்த தகவல், பழுதடைந்த எழுநூறு மீட்டர் நீளப் பிலிம் சுருள், வழக்கமான பலவகை மீட்டமைப்பு முறைகள் கையாளப்பட்ட பிறகே எனக்குக் கிடைத்தது. அப்போதே சில படங்களை, பொது அம்சங்களில் மட்டுந்தான் என்றாலும், புரிந்துகொள்ள முடிந்தது. பெரும்பாலான படங்கள் தானியங்கியால் பிடிக்கப்பட்டிருந்தன. ஆனால் ஒலிப்பதிவோ, ஸோரஹ் தானே சொன்ன விவரங்கள் அடங்கியது. எனவே தகவலின் மிக மதிப்புள்ள பகுதி ஒலிதான். அதை மீட்டமைக்கும் வேலையோ, இன்னும் மோசமான நிலையில் இருந்தது. எங்களிடம் ஓரளவு அதிகப்படியாக இருந்த மீட்டமைப்புச் சாதனங்களை நாங்கள் விரைவில் செலவிட்டுத் தீர்த்துவிட்டோம்.

ஒலிப்பதிவை மறுபடி மறுபடி கேட்பது ஒன்றுதான் நான் செய்யக்கூடியதாய் இருந்தது. இது மட்டுமீறிச் சலிப்பூட்டும் ஒரே மாதிரியான வேலை. மீண்டும் மீண்டும் நாடா சுருள் பிரியும் - இரைச்சல், சடசடப்பு, சீழ்க்கை. வேகத்தையும் ஒலிப் பெருக்கத்தையும் மாற்றுவேன், குரலைச் சீர்படுத்துவேன், ஒலிவடி கட்டிகளைப் பொறுக்குவேன், அப்போது, இரைச்சல் திரை ஊடாகக் காதுக்கு எட்டும் ஒரு சொல். ஒரே சொல், பெரும் பாலும் எவ்விதக் கருத்தையும் வெளியிடாத சொல்...

இருந்தாலும் அனுமானத்தின் பேரிலேயே பதிற்றுக் கணக்கான, நூற்றுக்கணக்கான சொற்களைத் தெளிவுபடுத்த வேண்டும். கடைசியில் திறவுகோல் போன்ற சில சொற்கள் கிடைக்கும். அவற்றை வைத்துக்கொண்டு அவற்றுக்கு முன்னும் பின்னும் பதிவானவற்றை ஊகித்து அறிய முயல்வேன். உத்தேசச் சொற்றொடர்கள் எதிர்ப்படும்.

இந்த வேலைக்கு நிசப்தம் தேவைப்பட்டது. படிப்படியாகச் செவிப் புலனைக் கூர்மையாக்கும் அமைதியான சூழ்நிலையில் பல வாரங்கள் இருப்பது அவசியமாக இருந்தது. பைக்கால் ஏரிப் பிரதேசத்தில், கைவிடப்பட்ட உலோகச் சுரங்கத்தின் அடித்தளத்தில் அமைந்த சோதனைக்கூடத்தை நான் இடமாக்கிக் கொண்டேன். ஒரு கிலோமீட்டர் ஆழத்தில் இருந்த அந்த

இடத்தில், அனேகமாகப் பூரண நிசப்தம் நிலவியது.

சுரங்கத்தின் நடைப் படிகள் வெள்ளிப் புற்கள் மண்டி, செங்குத்தாக மேலே சென்றன. நடு மத்தியானத்தில் மட்டுமே அளவற்ற நீல உயரத்தில் எங்கோ சூரியன் குறுகிய நேரத்திற்குத் தென்படும். இடம் வெறுமையானது. தனக்கேயுரிய முறையில் அக்கறைக்கு உரியது. உலோக மண் வெட்டி எடுப்பது நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே நிறுத்தப்பட்டுவிட்டது. அதன் பின் தரைக்கீழ் ஊர்திகளின் சோதனைப் பயிற்சிக் களமாக இந்தச் சுரங்கம் நீண்ட காலம் பணி ஆற்றியது. நடைபாதையின் செங்குத்துச் சுவர்களில் மேலே செல்லும் குடைவுகளின் கருந் துவாரங்கள் வாய்களைத் திறந்து கொண்டிருந்தன. வெடி அதிர்ச்சிகளால் பிளவுபட்ட சுரங்கத் தளத்தின் மேல் உடைந்த கற்களுக்கு நடுவே கிடந்தன பழைய இயந்திரங்களின் கனத்த சட்டகங்கள்.

தரைக்கீழ் ஊர்தி என்பது என்ன என்று நான் அனேகமாக அறியேன். இப்போது அவை தேவையில்லை. கிரகத்தின் ஊடாக ஒளி பாய்ச்சும் நியூட்ரினோ பகுப்பாய்வுக் கருவிகள் தற்போது உள்ளன. இந்த ஊர்திகளை ஆராய்ந்து அறிய நான் முயலவில்லை. வெறுமே சுற்றி வந்து நோட்டமிட்டேன். சில வேளைகளில் அவற்றின் சின்னஞ்சிறு அறைகளுக்குள் சிரமத்துடன் நெருக்கிப் புகுந்து, அங்கிருந்த எலிகளையும் குருவிகளையும் கலவரப் படுத்தினேன்.

என் சோதனைக் கூடத்திலிருந்து சுமார் இருநூறு மீட்டர் தூரத்தில், ஆழமான பள்ளத்திலிருந்து மேலே துருத்திக் கொண்டிருந்தன தரைக்கீழ் ஊர்தி ஒன்றின் எஃகுக் கரங்கள். ஊர்தி கண்ணுக்குத் தெரியவில்லை. அது தரைக்கு அடியிலேயே இருந்தது. திருப்ப இயக்குவிசைகள் மட்டுமே குறுகிய வழியைக் குடைந்து கொண்டு மேற்பரப்புவரை நீண்டிருந்தன. தரைக்கீழ் ஊர்தியின் இந்த எட்டுக் கைகள் கடைசிப் பாய்ச்சலில் உயரே துருத்தி, பாறைகளைப் பற்றியவாறு அசைவற்றுப் போயிருந்தன.

இரவுகளில், சுற்று வேலிக் கம்பங்கள் மேல் எரிந்த சிவப்பு விளக்குகளை உராய்ந்தவாறு, சுரங்கத்துக்கு மேலே விரைவாகப் பறந்தன வெண் மேகங்கள். பக்கத்தில் எங்கோ வானிலை ஆராய்ச்சிப் பாதை சென்றது. மேகங்கள் அதன் வழியே மங்கோலிய ஸ்தெப்பி வெளிக்குச் செலுத்தப்பட்டன. காற்று குடைவுகளின் புதிர்ப் பின்னலில் வழி தவறி அலைந்து, ஸ்தெப்பி



வெளிப்பூக்கள், அறுவடையான புல் ஆகியவற்றின் மணத்தைச் சுரங்கத்தின் அடித்தளத்துக்கு ஓசைப்படாமல் கொண்டு வந்தது.

நிசப்தத்துக்கு நான் விரைவில் பழகிவிட்டேன்.

நான்காவது நாள், ஒலிப்பதிவை முழுவதும் கவனமாகக் கேட்ட பொழுது, பல தடவைகள் திரும்பத் திரும்ப ஒலித்த ஒரு சொற்றொடர் என் காதில் பட்டது. ஆரம்பத்தில் நான் தனித்தனிச் சொற்களைப் புரிந்துகொள்ள முயலத்தானும் இல்லை. இசையைக் கேட்பதுபோல ஒலிப்பதிவைச் செவிமடுத்தேன்.

மறுபடி மறுபடி ஒலித்த அந்தச் சொற்றொடரைத் தெளிவு படுத்திக் கொள்வதற்கு முன்பே ஸோரஹ் அசாதாரண முக்கியத்துவம் உள்ள ஏதோ விஷயம் பற்றிப் பேசுகிறான் என்பதை அறிந்துகொண்டேன்.

சறுக்கு விமானம் "பாறைச் சூறாவளித் துறைமுகத்"தின் நடுப்பகுதியில் வெகு நேரம் நின்று கொண்டிருந்தது. அப்புறம் ஸோரஹ் எல்லைக்குப் போய் அதை ஒட்டினாற்போலச் சுமார் இருநூறு கிலோ மீட்டர்கள் சென்றான். கரடுமுரடாகச் செதுக்கப் பட்ட தூண்கள் போன்ற பழுப்புப் பாறைகளின் சுற்றுச் சுவற்றைக் கடந்து சறுக்கு விமானம் மெதுவாகச் சென்றது. ஓர் ஐந்து, ஆறு மணி நேரத்துக்குப் பின் சறுக்கு விமானம் (அதேபோல மெதுவாக) வந்த வழியே திரும்பி, "துறைமுகத்"தின் மையத்துக்குப் போயிற்று.

நிழற்படங்களை வைத்துக்கொண்டு பார்க்கையில் ஒன்றும் நிகழவில்லை என்று தெரிகிறது. ஆயினும் ஸோரஹ் ஏதோ ஒரு தகவலை விடாப்பிடியாகத் திரும்பத் திரும்பத் தெரிவித்தான்.

என் ஊகம் எப்படித் தோன்றியது என்று நிச்சயமாகச் சொல்லுவது இப்போது கடினம். ஓர் இரவு மேகங்கள் கலைந்து விலகிவிட்டன. சுரங்கத்துக்கு உயரே விண்மீன்கள் செறிந்த வானம் தென்பட்டது. சுற்று வேலிக் கம்பங்கள்மேல் ஒளிர்ந்த சிவப்பு விளக்குகளின் துலக்கமான வரிசை கணக்கற்ற தாரகை களின் நடுவே உடனே அமிழ்ந்துவிட்டது. அப்போதுதான் போலும் "சிவப்புப் பெயர்ச்சி"* என்ற சொற்களை நான் தெளிவாகக் கேட்டேன்.

* நட்சத்திர மண்டலங்கள் எல்லாப் புறங்களிலும் சிதறி ஓடுபவை போலக் காட்சி அளிக்கின்றன. நம்மிடமிருந்து அவற்றின் தூரம் அதிகம் ஆக ஆக அவற்றின் வேகம் அதிகரிக்கிறது. டாப்ளர் - பிஸோ கோட்பாட்டின்படி, விலகிச் செல்லும் நட்சத்திர மண்டலங்களின் கோடுகள் நிறமாலை காட்டிகளில் நிறமாலையின் சிவப்பு நுனியை நோக்கிப் பெயர்ந்திருக்கும்.

வேற்று நாகரிகத்தால் நிறுவப்பட்ட "பாறைச் சூறாவளித் துறைமுகம்", நட்சத்திர மண்டலங்கள் சிதறி ஓடுவதற்கு எதிராகச் செயல் புரிந்தது.

ஸோரஹ் சொன்னதை நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்ததால், அம்மாதிரி இயந்திரங்கள் நிறைய இருக்கின்றன. நமது நட்சத்திர மண்டலத்தின் வெவ்வேறு பகுதி களில் அமைந்துள்ள இவை கோவையான ஒரே அமைப்பாக விளங்குகின்றன. இவ்வமைப்பின் திறன் படிப்படியாக அதிகரிக்கிறது. இனிமேல் அக்கம் பக்கத்திலுள்ள நட்சத்திர மண்டலங்கள் ஒன்றிலிருந்து ஒன்று விலகி ஓடுவதற்குப் பதிலாக ஒன்றுக்கு ஒன்று நெருங்கி வரவேண்டும்.

விண்வெளியில் மனித குலத்துக்கு எதிர்ப்பட்ட பகுத்தறிவு இத்தகையது.

## 6

விண்வெளி உயிரியல் அறிஞர்களின் முக்கியத் தவறு என்ன என்பதை இப்போது நான் தெள்ளத்தெளிவாகக் காண்கிறேன். அவர்கள் பின்வருமாறு தர்க்கித்தார்கள்.

உயிர் தோன்றுவதற்கு, கிரகம் அளவுக்குமேல் பெரியதோ அல்லது மட்டுமீறிச் சிறியதோ அல்லாத நிறை கொண்டிருக்க வேண்டும். கிரகம் தன் சூரியனுக்கு மிக மிக அருகில் இருக்கக் கூடாது, அதை விட்டு வெகு தூரம் விலகியிருக்கவும் கூடாது. சூரியன் பல நூறு கோடி ஆண்டுகள் ஏறத்தாழ ஒரு நிலையான அளவு ஆற்றலைக் கதிர்வீச்சால் வெளிப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். கதிர்வீச்சின் இந்த அளவு எல்லைகடந்து அதிகமாகவோ குறைவாகவோ இருக்கக்கூடாது...

இந்த மாதிரி நிபந்தனைகள் மிக நிறையச் சேர்ந்துவிட்டபடி யால் பூமிக்கு அருகே உயிர் வாழ்க்கைக்கு ஏற்ற கிரகங்களைக் கண்டுபிடிக்கும் சாத்தியப்பாடு அற்பமாகத் தோன்றியது. தொடர்பு எப்படி ஏற்படுத்திக் கொள்வது என்ற ஒரு பிரச்சினை முதன்மை பெற்றுவிட்டதில் வியப்பென்ன?

உயிர்கள் தோன்றி வளர்வதற்குக் குறித்த நிலைமைகள் ஒருங்கு சேர்வது மெய்யாகவே அவசியந்தான். ஆனால் உயிர்ப் பிராணிகள் பகுத்தறிவு பெற்றதும் வெளி நிலைமைகளைச் சார்ந்திருப்பதி



லிருந்து படிப்படியாக விடுபட்டுவிடுகின்றன. அவை இந்த நிலைமைகளை மாற்றத் தொடங்குகின்றன. இவற்றைக் கட்டுப்படுத்தி இயக்கத் தொடங்குகின்றன - முதலில் தங்கள் கிரகத்திலும் பின்பு விண்வெளிப் பரிமாணங்களிலும்.

நமது சூரிய மண்டலத்தில் தேவையான நிலைமைகளின் சேர்க்கை பூமியில் மட்டுமே இருந்தது, ஆனால் இப்போதோ, சந்திரனும் புதனும் வெள்ளியும் செவ்வாயும், பெரிய கிரகங்களின் துணைக் கோளங்களும் வாழத் தகுந்தவை ஆகிவிட்டன...

மனிதன் விண்வெளியில் சென்றதன் விளைவாக, உயர் வளர்ச்சி பெறத் தொடங்கியிருக்கும் நாகரிகத்தை எதிர்ப்படும் சாத்தியக் கூறு உண்மையிலேயே அற்பமானது. இந்த விஷயத்தில் தர்க்கமும் விண்வெளி உயிரியலாரின் கணக்கீடும் நியாயமானவை. ஆனால் உயர் வளர்ச்சி பெற்ற நாகரிகத்துக்கு விண்வெளியில் ஏற்ற நிலைமைகள் கிடையாது. விண்வெளியை வெற்றிகொண்ட பின் இத்தகைய நாகரிகம் எம்மாதிரி நிலைமைகளிலும், எங்கு வேண்டுமானாலும் நிலவ வல்லது. எந்த கிரகங்களில் நிலைமை களின் அனுகூலமான சேர்க்கையின் விளைவாக, அவற்றுக்கே உரிய உயிர்கள் சுதந்திரமாக வளர்ச்சி பெறுகின்றனவோ, அந்த கிரகங்கள் மட்டுமே இம்மாதிரி நாகரிகத்துக்கு வாழத் தகுதி அற்றவையாக இருக்கின்றன. ஏனெனில் இத்தகைய கிரகங்களை மாற்றி அமைக்க முடியாது. வாழ்க்கையின் ஒரு வடிவத்துக்குச் சாதகமான நிலைமைகள் மற்ற வடிவத்துக்கு அனேகமாக எப்போதுமே பாதகமாயிருக்கும்.

இன்னும் ஒரு விவரம்.

விண்வெளியில் பரவும் நாகரிகத்தின் முனைமுகத்துக்கு நெடுந்தூரம் முன்னே செல்கின்றன அதன் இயந்திர நுட்பச் சாதனங்கள். இவற்றையே, வேற்று உலகின் தொலைதூர எல்லைப் புறங்களில் உள்ள இயந்திரங்களையே நாம் முதலில் சந்திக்க நேர்ந்தது.

உதாரணமாக, மாகடலின் நடுவே எங்கோ உள்ள சின்னஞ்சிறு தீவில் வசிப்பவர்கள் முதன் முதலாக மற்ற நாடுகளுடன் தொடர்பு கொள்ளத் தீர்மானித்ததாக வைத்துக் கொள்வோம். சாண் அகலத் தீவில் வளர்ந்தவர்களுக்கு உலகம் தங்களது போன்ற சிறு சிறு தீவுகள் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிதறிக் கிடக்கும் மாகடலால் ஆனது என்று தோன்றுகிறது. ஆக, அவர்கள்

பிரமாண்டமான கண்டத்தை அடைகிறார்கள். கடற்கரை வெறுமையாய் இருக்கிறது. கண்ணுக்கு எட்டிய தூரம் வரை எவரையுமே காணோம். ஒரு கோபுரம் மட்டுமே இருக்கிறது. அதன் வட்டச் சாளரத்தில் ஒரு சீராக இடைவிட்டு விட்டு விளக்கு திடீரென எரிவதும் அணைவதுமாக இருக்கிறது. அது தானே இயங்கும் கலங்கரை விளக்கம் என்பது தீவுக்காரர்களுக்குத் தெரியவில்லை. அவர்கள் ஆட்களைத் தேடப் பிடிவாதமாக முற்படுகிறார்கள். பிரமாண்டமான அந்தத் தீவின் வாசிகள் கரையிலிருந்து வெகுதூரத்தில், மிக மிக உயரமான மலைகளின் பின்னே எங்கோ வசிக்கிறார்கள் என்பது படிப்படியாகத் தான் அவர்கள் அறிவுக்கு எட்டுகிறது...

இவ்வாறே ஸோரஹ் பூமியைப் போன்ற சிறு தீவை, அல்லது சூரிய மண்டலம் போன்ற தீவுக்கூட்டத்தைத் தேடினான். அவன் மட்டுமே அல்ல, நாம் எல்லோருமே அப்படித்தான் நினைத்தோம். உதாரணமாக, சந்திப்பு நேரும்போது நாம் எப்படிப் பேசப் போகிறோம் என்ற கவலை நம்மை உலப்பியது. எனவே நாம் தொடர்பு மொழியை மிகப் பாடுபட்டுத் தயாரித்தோம். உண்மையிலோ இந்தப் பிரச்சனையே நிலவவில்லை. நாம் சந்திக்கப் போகிற நாகரிகம், பரஸ்பரம் புரிந்து கொள்வதற்கு வசதியான சாதனங்களை வெகுகாலமாகவே பயன்படுத்தி வருகிறது.

அளவின்றி அதிக முக்கியத்துவம் உள்ளதோ வேறு விஷயம்: நாம் அடைந்ததைக் காட்டிலும் ஆயிரம், பத்து லட்சம் மடங்கு அதிக முன்னேற்றம் அடைந்துள்ளவர்களிடம் நாம் என்ன சொல்லப் போகிறோம்?

இதுபற்றி நாம் மிக மிகக் குறைவாகவே சிந்தித்தோம்.

மாபெரும் வளையம் என்ற கருத்தின் பாதிப்பினால் இவ்வாறு நிகழ்ந்திருக்கலாம். இந்தக் கருத்து ஆழ்ந்த உளப்பதிவு ஏற்படுத்துவதுதான். எனினும் தத்துவ உட்பொருளில் பூமியை மையமாகக் கொண்டது.

அதனால் என்ன பயன் கிடைக்கும்?

ஒவ்வொரு தகவலும் பத்துக்கணக்கான, நூற்றுக்கணக்கான, ஒருவேளை ஆயிரக்கணக்கான ஆண்டுகள் சென்று கொண்டிருக்கும்... மாபெரும் வளையம் என்ற கருத்தை ஏற்றுக் கொண்டால், தொடர்புகள் ஏற்படுத்துவதால் எவ்வித மாறுதலும்



விளையாது. எல்லோரும் முன்போன்றே தங்கள் தங்கள் "சிறு தீவுகளுக்குள்" அடைந்து கிடப்பார்கள். எஃப்ரேமவ் எழுதிய "காசியபி ஒளிமுகில்" என்னும் நவீனத்தில்தான் மாபெரும் வளையம் பற்றிய கருத்து முதன்முதலில் வெளியிடப்பட்டது. பூமியில் வாழ்க்கை தன் கிரமப்படி நடந்துகொண்டு போயிற்று என்றும் வளையத்தைச் சுற்றிச் சென்ற தகவல்கள் முன்போலவே தனித்து ஒதுங்கிய இந்த வாழ்க்கையை நடைமுறையில் பாதிக்க வில்லை என்றும் அந்த நவீனத்தில் வருணிக்கப்பட்டிருப்பது தற்செயலாக அல்ல.

பிரபஞ்சத்தின் ஒரு சின்னஞ்சிறு தீவில் வசிக்கும் நாம், பிரமாண்டமான ஒரு கண்டத்தின் கரையை முதல் தடவை அடைந்ததுமே நமது ஒதுக்குநிலை ஒரேயடியாக மறைந்துவிடும். நமக்குப் புதியதான இந்தப் பெரிய பிரபஞ்சத்தில் மனிதர்களாகிய நாம் வகிக்கும் இடம் என்ன என்பதே அப்போது எல்லாவற்றிலும் முக்கியமான பிரச்சனையாக விளங்கும்.

## 7

சந்திப்பு பற்றிய பிரச்சினையுடன் ஏதாவது ஒரு விதத்தில் தொடர்பு கொண்ட புத்தகங்களைப் பார்வையிடுகையில் இந்த வரிகளை நான் பெயர்த்து எழுதிக்கொண்டேன்: "பிரபஞ்சத்தில் நமக்கு 'இயற்கைக்குப் புறம்பான' (அதாவது சடப்பொருள் இயக்க விதிகளுக்கு உட்படாத) நிகழ்ச்சிகள் எதிர்ப்படுமா? இந்த முக்கியப் பிரச்சனையை இங்கே நாம் அணுகுகிறோம். தற்போது இந்தப் பிரச்சனைக்கு விடை அளிப்பது முடியாது.... எனினும், வரையறையின்றி வளர்ச்சி அடைந்து வரும் பகுத்தறிவுள்ள வாழ்க்கை நட்சத்திர மண்டலங்கள் அனைத்தையும் வியாபிக்கும் பரிமாணத்தில் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளத் தொடங்காமல் இருப்பதற்குரிய காரணங்கள் தென்படவில்லை."

எம்மாதிரி "வெளிப்பாடுகள்" தேவையாய் இருந்தனவாம்? பிரபஞ்சத்தின் கட்டமைப்பில் விதிமுரண்கள் இல்லையா? பகுத்தறிவின் ஆக்கச் செயலே இவற்றுக்கு எல்லாவற்றிலும் இயல்பான காரணமாகப் படவில்லையா? "வெளிப்பாடுகளின்" நிகழ்ச்சி நிரலின்படி, "தயை செய்து கவனியுங்கள்..." என்ற விளம்பரக் குறிப்பு வானில் சுடரும் என்று எதிர்பார்க்கக் கூடாது அல்லவா?

ஸோரஹ் சொன்னதை நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால், வளர்ச்சி பெற்ற நாகரிகங்கள் அக்கம் பக்கமுள்ள நட்சத்திர மண்டலங்களின் இயக்கத்தில் கூடக் குறுக்கிட வல்லவை, அவற்றின் விறல் அப்படிப்பட்டது. அப்படியானால் நமது சொந்த நட்சத்திர மண்டலத்தின் எல்லை களுக்குள் பகுத்தறிவுச் செயலின் விளைவுகள் சிறப்பாக உணர்வில் படத்தக்க விதத்தில் வெளிப்படவேண்டும்.

"தாவூ" விண்வெளிக் கப்பலிலிருந்து வந்த தகவல்களின் குறியீடு விளக்கத்தால் பெறப்பட்ட விவரங்கள் இங்கே முடிந்துவிட்டன. மேற்கொண்டு விவரங்களை நானே தேட வேண்டியிருந்தது. இல்லை, தேட என்பது சரியான சொல் அல்ல. பால்வீதி மண்டலத்தின் கட்டமைப்பிலேயே பகுத்தறிவார்ந்த புனர் நிர்மாணத்தின் சுவடுகள் காணப்படவேண்டும் என்ற எண்ணம் உடனே பல நிகழ்ச்சி விவரங்களை முன்னே கொண்டு வந்தது.

கோள வடிவானவை, சிதறியவை என்ற இரு வகையான நட்சத்திரக் கூட்டங்கள் இருக்கின்றன என்பது பால்வீதி மண்டலத்தை ஆராய்ந்ததன் விளைவாக வெகு காலத்துக்கு முன்பே கண்டுபிடிக்கப்பட்டது. பால்வீதி மண்டலத்தின் மையத்தில் பெரிய கோளவடிவ நட்சத்திரக் கூட்டம் இருக்கிறது என்பதையும், வேறு கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்கள் அதைச் சூழ்ந்துள்ளன என்பதையும் நாம் அறிந்திருந்தோம். ஆனால் நட்சத்திரங்களைக் கூட்டமாகச் சேர்ப்பது எந்தச் சக்தி? கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களைப் பால்வீதி மண்டலத்தின் மையத்தைச் சுற்றிக் குழுமும்படி செய்வது எந்தச் சக்தி?

இந்தக் கேள்விகளுக்கு விடையளிக்கும் முயற்சியில் முற்றிலும் வெவ்வேறான, சில வேளைகளில் மிகமிகச் சிக்கலும் நுண்மையும் கொண்ட காரணிகள் பரிசீலிக்கப்பட்டன. ஒரு காரணி மட்டுமே கவனிக்காமல் விட்டுவிடப்பட்டது. அதுதான் பகுத்தறிவின் ஆக்கச் சக்தி.

உதாரணமாக, நமது சூரியன் போன்ற குறள் நட்சத்திரங்கள் கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களிலேயே செறிந்திருக்கின்றன என்பதில் ஏன் கவனம் செலுத்தப்படவில்லை? கிரக மண்டலங்கள் அற்ற பிரமாண்டமான நட்சத்திரங்கள் கொண்ட இயல்பான சிதறல் நட்சத்திரக் கூட்டங்களை இந்த ஒரு விஷயமே வேறுபடுத்திக் காட்டுகிறது.

கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்கள் செயற்கை முறையால்



தோற்றுவிக்கப்பட்டவை என்ற கருத்துக்கு வேறொரு வழியிலும் வந்து சேரமுடியும்.

நட்சத்திரங்களுக்கிடையே பறப்புகள் நடத்தும் சகாப்தத்தில் நாம் வெகு காலத்துக்கு முன்பே அடி வைத்துவிட்டோம். மேற் கொண்டு என்ன? ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்பும் தனிப்பட்ட பறப்புக்களா? பத்து லட்சம் ஆண்டுகளுக்குப் பின்புமா?

மனிதனின் கனவைப் பிரதிபலிக்கும் கற்பனை நவீனம் பின்வருமாறு கூறியது: ஒளியின் வேகத்துக்கு முடிந்தவரை அதிகம் நெருங்கிய, அல்லது அதை முந்தக்கூடிய வேகத்தில் பறக்க வேண்டும். இடவெளியின் ஒரு இலக்கிலிருந்து மறு இலக்குக்கு "ஊடு" தாவுவதற்கு நமக்கு இதுவரை தெரியாத இடவெளியின் பண்பு எதையேனும் பயன்படுத்த வேண்டும்... கற்பனை நவீனம் சரியான இறுதிக் குறிக்கோளைக் கண்டது. ஆனால் சரியான சாதனங்களைக் கண்டறிய அதனால் முடியவில்லை (அது அதன் பொறுப்பும் அல்ல)

எவ்வளவு அதிக வேகத்தில் வேண்டுமானாலும் விரையும் விண்வெளிக் கப்பல்களில் பறந்தாலும் மொத்தத்தில் மனித சமுதாயம் விண்வெளி நோக்கில் தனித்து ஒதுங்கிய நிலையிலேயே இருக்கும்.

"ஒளியின் வேகத்தைவிட சதவிகிதத்தில் ஒரு பகுதியே குறைவான வேகத்தில் பறக்கும் விண்வெளி விமானிகள், பெரு நட்சத்திர மண்டலங்களின் உள்ளே நெடுந்தொலை சென்று விட்டு பூமிக்குத் திரும்புவதற்குள், அதிகமாகப் போனால் சில மாதங்களே வயதில் முதிர்ந்திருப்பார்கள். ஆனால் நிலவுலகத்திலோ, இதற்குள் நூற்றாண்டுகள் அல்ல, பத்து லட்சக்கணக்கான ஆண்டுகள் கழிந்திருக்கும். திரும்பும் விமானிகள் காணும் நாகரிகத்தால் அவர்களை ஏற்றுக் கொள்ளமுடியாது."

சென்ற நூற்றாண்டின் நடுவிலேயே எழுதப்பட்ட புத்தகத்தில் நான் இதைப் படித்தேன். இம்மாதிரி எத்தனை எத்தனை புத்தகங்கள். எத்தனை எத்தனை கைப்பு நிறைந்த வரிகள், தொலை தூர விண்மீன்கள்பால் உள்ள கவர்ச்சி காரணமாகவே எழுதப் பட்டுள்ளன!

நல்லது, இவை பழைய புத்தகங்கள். ஆனால் நம் காலத்தில் எழுதப்பட்டுள்ள, விண்வெளி பற்றி மிகுந்த நம்பிக்கை நிறைந்த கதைகளில்கூட, ஓரளவு நிராசை இழையோடித்தானே இருக்கிறது.

விந்தைப் பிராணி மனிதன்! பிரபஞ்சத்தில் தான் வென்று பெற்ற இடத்தில் நலமே வாழ்வது அவனுக்குப் போதவில்லை. புதிய கிரகங்களை அமைப்பது பற்றவில்லை. தன் சித்தப்படி புதிய சூரியன்களைச் சுடரச் செய்வது போதவில்லை. வேற்றுப் பகுத்தறிவைச் சந்திப்பதற்கு ஆவல் கொண்டு விடாப்பிடியாக முயல்கிறான் மனிதன். நான் சிலவேளைகளில் நினைக்கிறேன்; ஒன்று சேர்வதற்கான ஆர்வம் வாழ்க்கைக்கு, சிறப்பாக அதன் உயர் வடிவங்களுக்கு இயல்பான பண்பு போலும்?

மனிதகுல வரலாறு, பிரிவுநிலை மீது வெற்றி கொண்டதன் வரலாறு ஆகும். எல்லா மனிதர்களையும் ஒன்றுபடுத்தியுள்ள கம்யூனிஸச் சமுகத்துக்கு நாம் வந்துவிட்டோம். ஆனால் ஒன்று சேர்வதற்கான பெருங்கவர்ச்சி இத்துடன் என்றென்றைக்கும் தீர்ந்து போய்விட வேண்டியது ஏன்? பகுத்தறிவின் பரஸ்பர ஈர்ப்புச் சக்தி எதற்காக வற்றிப் போகவேண்டும்?

ஆம், அருகே உள்ள நட்சத்திரங்கள், உயிர்கள் வாழும் கிரகங்கள் அற்றவைதாம். ஒளியின் இறுதி வேகம் மாபெரும் வளையம் பற்றிய கருத்தை ஒன்றும் அற்றதாகச் செய்து விடுகிறது என்பதும் உண்மையே. ஆயினும் மனிதகுல வளர்ச்சியின் வரலாறும் தர்க்கப்போக்கும், மனிதச் சிந்தனையின் அமைப்பு முழுவதுமே (நமது நிலவுகையின் முறையே கூட) இந்த நிலையிலிருந்து வெளியேறும் வழியைக் காட்டுகின்றன. இடவெளி மீது வெற்றி கொள்வதும் மற்ற நாகரிகங்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்வதும் கடினமானது, நீண்ட காலம் பிடிப்பதுதான், என்றாலும் கட்டாயமாக நிகழ்ந்தே தீர வேண்டியது என்று குறிக்கின்றன இவை.

வெண்கலக் கோடரியிலிருந்து விண்வெளிக் கப்பல்கள்வரை முன்னேறுவதற்குச் சில ஆயிரம் ஆண்டுகளே தேவைப்பட்டன. இன்னும் இருநூறு அல்லது ஆயிரம் ஆண்டுகளுக்குள் நாம் சூரியனை நம் விருப்பப்படி இயங்கச் செய்வோம் என்பதை யார்தான் சந்தேகிப்பான்?

தங்கள் தங்கள் "தீவுகளில்" உட்கார்ந்து கொண்டு வெறுமே ஒருவருக்கொருவர் பேசுவது அல்ல, பிரமாண்டமான நட்சத்திர நகரங்களாக ஒன்றிணைவதே ஒரே சாத்தியப்பாடு ஆகும். அப்புறம் கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களை, இந்த நட்சத்திர நகரங்களை, பால்வீதி மண்டலத்தின் மையத்துக்குச் செலுத்த வேண்டும் - இன்னும் பெரிய லட்சியத்தை அடைவதற்காக.



தனித்தனியே பிரிந்துள்ள நட்சத்திர மண்டலங்களை நெருக்கமாகச் சேர்ப்பதே அந்த லட்சியம்.

## 8

அண்மையில் உள்ள கோளவடிவ நட்சத்திரக் கூட்டம் போய்ச் சேர்வதற்கு எவ்வளவு நேரம் பிடிக்கும்?

இந்தக் கேள்விக்கு என்னால் பதில் சொல்ல முடியாது. அதீத நட்சத்திரங்கள் எனப்படுபவற்றின் விளங்கா இயல்பை விளக்க முயலும் ஒரு பைத்தியக்காரக் கற்பிதக் கொள்கையைப் பற்றிச் சொல்லுகிறேன்.

அதீத நட்சத்திரங்கள்... தொடக்கத்தில் அவை ரேடியக் கதிர் வீச்சின் ஊற்றுக்கண்களாக மட்டுமே தெரிந்திருக்கின்றன. அப்புறம் அவற்றின் நிறமாலைகளில் விதிமுரணான பெரிய "சிவப்புப் பெயர்ச்சி" கண்டறியப்பட்டது. சிந்தனையின் சடத்துவம் காரணமாக, நட்சத்திர மண்டலங்களின் நிறமாலை களில் காணப்படும் "சிவப்புப் பெயர்ச்சிக்கு" வழக்கமாகத் தரப்படும் விளக்கமே இதற்கும் தரப்பட்டது. அதாவது, அதீத நட்சத்திரங்கள், தூரத்துக்கு விகிதப் பொருத்தம் உள்ள வேகத்தில் நம்மிடமிருந்து அப்பால் விலகிச் செல்கின்றன என்று முடிவு செய்யப்பட்டது. பெருந்தொலைவு - விளைவாக ஒளியின் வேகத்துக்கு நெருக்கமான வேகம்.

அதீத நட்சத்திரங்கள் அவதானிக்கக்கூடிய பிரபஞ்சத்தின் எல்லையில் எங்கோ இருந்தால், மிக விறல் உள்ள தொலை நோக்கிகளுக்குக்கூட எட்டாதவையாக அவை இருக்கவேண்டும். ஆனால் அதீத நட்சத்திரங்களின் பிரகாசம் யாவற்றிலும் பெரிய நட்சத்திர மண்டலங்களின் பிரகாசத்தைக் காட்டிலும் அதிகமாயிருக்கிறது. எனவே, அதீத நட்சத்திரங்கள் அசாதாரணப் பரிமாணங்களும் நிறையும் கதிர்வீச்சும் உள்ளவை என்று வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

ஏனோ?

இவ்வாறு தோன்றியது புதிர்களின் சிடுக்கு.

ஈர்ப்பாற்றல் கொண்ட 'வெடிப்பு எதிர்ப்பு' என்பது இந்தப் புதிர்களுக்கு யாவற்றிலும் திருப்திகரமான விளக்கம் ஆகும். இந்தக் கற்பிதக் கொள்கையின் ஆதரவாளர்கள் சொல்வது

என்னவென்றால் நட்சத்திரம் தானே பெரிய வேகத்தைப் பெற்றிருக்கவில்லை. ஆனால் "வெடிப்பு எதிர்ப்பின்" விளைவாக நட்சத்திரத்தின் புறணி இறுகுகிறது, மையத்தை நோக்கிப் பாய்கிறது. ஒளியின் வேகத்துடன் "வீழும்" நட்சத்திரப் புறணியையே நாம் காண்கிறோம். நிறமாலையில் "சிவப்புப் பெயர்ச்சி" காணப்படுவது இந்தக் காரணத்தினால்தான்.

இது புத்தி சாதுர்யம் உள்ள திட்டந்தான், என்றாலும் செயற்கையானதாக எனக்குத் தோன்றுகிறது. மிக மிகக் கெட்டிக் காரத்தனம் உள்ள திட்டங்களை நாம் அடிக்கடி முன்வைக்கிறோம். ஆனால் பகுத்தறிவு விண்வெளியில் ஆற்றும் பங்கை மறந்துவிடுகிறோம். பகுத்தறிவு எல்லையின்றி வளர்ச்சி அடைய வேண்டும், எனவே அதன் ஆற்றல் வரம்பற்றது என்பது தான் நமக்கு நன்றாகத் தெரியுமே!

எல்லாக் கற்பிதக் கொள்கைகளும் அதீத நட்சத்திரங்களின் பெரு வேகம்பற்றிய விதி முரணை எப்படியாவது அகற்றிவிட முயல்கின்றன. மிக எளிய விஷயத்தை அனுமானித்துக் கொள்வோம்: அதீத நட்சத்திரங்கள் பிரபஞ்சத்தின் தொலைதூர எல்லைகளில் இருக்கவே இல்லை. அவை ஒப்பு நோக்கில் அண்மையில் உள்ளன. அவற்றின் பரிமாணங்களும் நிறையும் பிரகாசமும் போதிய அளவு சாதாரணமானவை. "சிவப்புப் பெயர்ச்சி" ஏற்படுவதன் காரணம் என்னவென்றால், நமக்கு அருகே உள்ள மற்ற விண்மீன்களுக்கு மாறாக, அதீத நட்சத்திரங்கள் மெய்யாகவே ஒளியின் வேகத்துக்குச் சிறிதே குறைந்த வேகங்களில் இயங்குவதுதான்.

பேரளவுள்ள விண்வெளிக் கோளங்கள் (அவை அவதானிக்க முடியும் பிரபஞ்சப் பகுதியின் எல்லைகளின் அருகே இல்லாவிடில்) இத்தகைய விரைவைத் தாமாகவே பெற்றிருக்க முடியாது. ஆனால் செயற்கையாக முடுக்கப்படும் விண்வெளிக் கோளங்களுக்கு இதுதான் ஒரே சாத்தியமான வேகம். ஒளியின் வேகத்துக்கு ஏறக்குறையச் சமமான வேகங்களில் இயங்கினால் தான் நட்சத்திரங்களுக்கு இடையே பறப்புக்கள் நடக்கக்கூடும்.

கிரகங்களின் பரிவாரம் புடைசூழ்ந்த எவையோ சூரியன்கள் விண்வெளி மாகடலின் குறுக்கே செல்கின்றன...

இப்போதைக்கு இது வெறும் அனுமானம் தவிர வேறில்லை. உதாரணமாக, பின்வருமாறு கேட்கப்படலாம்: எல்லா அதீத



நட்சத்திரங்களும் நம்மிடமிருந்து விலகிச் செல்வது ஏன்? இது தற்செயல்தானா, ஒருங்கு நிகழ்வுதானா?

அறியேன்.

ஒன்றை மட்டும் நினைப்பூட்ட விரும்புகிறேன்: போட்டோன் ராக்கெட்டுகளின் விஷயத்தில் இவ்வாறே நேர்ந்திருக்கும். போட்டோன் எஞ்சின்களை நாம் நிறுவுவதில்லை. பிளாஸ்மா மோட்டார்களையே நாம் பயன்படுத்துகிறோம். ஆனால் போட்டோன் இயந்திரத்தால் இயங்கும் விண்வெளிக் கப்பல் கோட்பாட்டளவில் சாத்தியமே. பின்புறம் பிரமாண்டமான பரவளைவு நிலைக்கண்ணாடி பொருந்திய நீண்ட ஊசி வடிவான உடல் கொண்டதாக இருக்கும் இந்தக் கப்பல். இந்தக் கண்ணாடிக்குள் மூண்டெரியும் நெருப்பு, கப்பலின் பின்பக்கம் பார்ப்பவன் புறம் திரும்பியிருந்தால்தான் கண்ணுக்குப் புலனாகும். போட்டோன் ராக்கெட்டுகளில், நம்மிடமிருந்து விலகிச் சென்றவற்றை மட்டுமே நாம் பார்த்திருப்போம். அதீத நட்சத்திரங்கள் போல...

## 9

இந்த நாட்களில் நான் ஸோரஹை மறந்துவிட்டேன். 'கிமெரா' கிரகத்தில், மிகப் பெரிய "பாறைச் சூறாவளித் துறைமுகத்"தின் நடுவில் எங்கோ சின்னஞ்சிறு சறுக்கு விமானம் நின்று கொண்டிருந்தது என்பதை மறந்துவிட்டேன். வழக்கமான திட்டப்படி ஸோரஹ் பூமிக்குப் பறந்து வரும்பொருட்டு "தாவூ" விண்வெளிக் கப்பலுக்குத் திரும்பியிருக்க வேண்டும். ஆனால் 'சந்திப்பு' வேறுவிதமாக எண்ணமிடுவதற்கு (விரைவில் நாம் எல்லோரும் இவ்வாறே சிந்திக்கப் போகிறோம்) ஸோரஹுக்குக் கற்பித்திருக்கிறது என்பதை நான் இன்னும் புரிந்துகொள்ள வில்லை.

எனது கண்டுபிடிப்பால் நான் மலைத்துப்போனேன். சோதனைக்கூடத்தில் எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. சுரங்க நடைபடியில் ஏறி மேலே, திடலுக்குச் சென்றேன். காற்று காதுகளைத் துளைக்கும்படி சீழ்க்கை அடித்தது. கோடை வெயிலில் பொசுங்கிப் பழுப்பேறியிருந்த புற்களுக்கு உயரே பனிப் பாளங்கள் போலத் தட்டையான மேகங்கள் மிதந்து சென்றன. பூமி, பூமி முழுவதுமே முடிவற்ற இந்த மேகங்களின் ஊடாக

விரைந்து பாய்வதுபோல் சிலவேளைகளில் எனக்குத் தோன்றியது...

பால்வீதி மண்டலத்தின் கட்டமைப்பு பற்றி வானவியல் சேகரித்துள்ள விவரங்களை நான் ஒரே ஆர்வத்துடன் ஆராய்ந்தேன். பல விவரங்கள் என் கற்பிதக் கொள்கையை உறுதிப் படுத்தின. கோள வடிவ நட்சத்திரக் கூட்டங்களின் வியப்பூட்டும் வசதியான கட்டுமானம் (வேறு சொல்லைத் தெரிந்தெடுப்பது கடினம்) இவற்றில் ஒன்று. விரைந்த இயக்கமுள்ளதும் பிரமாண்டமான, சிலவேளைகளில் அழிவு விளைவிக்கும் மாறுதல் களுக்கு உட்படுவதுமான நட்சத்திர உலகில், கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களின் நிலையுறுதி துலக்கமாகத் தனிப்படத் தெரிகிறது. இவை நீண்ட காலமாக, மிக நீண்ட காலமாக நிலவி வருகின்றன. பிரிந்து சிதறும் போக்கை இவை வெளிக்காட்ட வில்லை. இவற்றில்தான், கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களில் தான், பண்டைய விண்மீன்களின் கிரகங்களில்தான், உயர் வளர்ச்சி பெற்ற நாகரிகம் முதன்மையாக இருக்கவேண்டும்.

மட்டுமீறிப் பேரளவான நட்சத்திரங்களும் விண்வெளிப் புழுதி மேகங்களும் வாயு மூட்டமும் கோளவடிவ நட்சத்திரக் கூட்டங் களில் இல்லை. ஏன்? இதன் இயல்பான பதிலை இப்போது நான் கண்டேன். நகரங்களின் எல்லைகளுக்குள் எரிமலைகளோ, சதுப்புநிலங்களோ, பாலைவனங்களோ எப்படி இருக்க முடியாதோ அப்படியே கோள வடிவ நட்சத்திரக் கூட்டங்களில் உயிர் வாழ்வதற்கு ஒவ்வாத, அல்லது அதன் வளர்ச்சியைத் தடை செய்கிற பொருள்கள் இருக்க முடியாது.

ஆனால் இந்தக் கற்பிதக் கொள்கைக்கு எதிரான வாதங்களும் இருந்தன. பகுத்தறிவே பால்வீதி மண்டலத்தின் பிரதானக் கட்டடச் சிற்பி என்றால் எங்குமே (கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களில் மட்டுமல்ல) புனரமைப்பின் விளைவுகள் துலக்கமாகத் தென்பட வேண்டும். இந்த விளைவுகள் எங்கே?

இது பற்றிச் சிந்திக்கையில் கவர்ச்சியுள்ள சோதனை ஒன்றின் கருத்து எனக்கு உதித்தது.

ஒளியின் வேகம் நூற்றாண்டுக்கு ஒரு கிலோமீட்டர் மட்டுமே என்று வைத்துக்கொள்வோம். அப்போது, உதாரணமாக லெனின் குன்றுப் பிரதேசத்தில் நிற்கும் ஒருவனுக்கு மாஸ்கோ எப்படிக் காட்சி அளிக்கும்?



பக்கத்தில் உள்ள கட்டிடங்கள் பழக்கமான தோற்றமே கொண்டிருக்கும். ஆனால் லூழ்னிக்கியில் உள்ள பல்வகை விளையாட்டு அரங்குகள், அனேகமாக நூறு ஆண்டுகளுக்கு முன், அதாவது 20ஆம் நூற்றாண்டில் எப்படி இருந்தனவோ அப்படிக் காட்சி தரும். வெள்ளிக் கும்மட்டங்களோ, கோள வடிவ நீச்சல் குளங்களோ, விமான விளையாட்டுக்களுக்கான பறப்புத் திடல்களோ அவற்றில் இரா. அப்பால் சோலை, நோவதெவிச்சிய், அந்திரேயெவ்ஸ்கிய் மடங்கள், 19வது, 18வது நூற்றாண்டுகளைச் சேர்ந்த சிறு கிராமங்களின் குடில்கள் ஆகியன தெரியும்.

தற்போது விண்வெளிக் காட்சி நிலையத்தின் வானளாவிய கோபுரம் கம்பீரமாக நிற்கும் இடத்தில், ஷாபொலோவ்ஸ்கிய் கிராமத்தின் தாறுமாறான வீடுகள் சிதறிக் கிடக்கும். கிரெம்ளின், ஆறு நூற்றாண்டுகளுக்கு முன், மூன்றாம் இவானின் காலத்தில் இருந்த விதத்தில் தோற்றம் அளிக்கும். செஞ்சதுக்கமும் வஸீலிய் பிளாழேன்னிய் மாதா கோயிலும் பார்வையில் பட மாட்டா. அவை பிற்காலத்தில் நிறுவப்பட்டன. அவற்றிலிருந்து ஒளி பார்வையாளனை எட்ட முடிந்திராது...

இம்மாதிரியே நாமும் பால்வீதி மண்டலத்தைப் பார்க்கிறோம்!

ஒலியின் வேகம் மிகப் பெரிதுதான், என்றாலும் அளவுக்கு உட்பட்டது. பால்வீதி மண்டலத்தின் தூரப் பகுதிகளிலிருந்து ஒளி நம்மை வந்து அடையப் பல பத்தாயிரம் ஆண்டுகள் பிடிக்கின்றன. நாம் காண்பது முன்பு இருந்தவற்றையே, அவதானிக்கப்படும பகுதி நம்மிடமிருந்து எவ்வளவு அதிகத் தொலைவில் இருக்கிறதோ, கண்ணுக்குப் புலனாகும் காட்சிக்கும் எதார்த்தத்தில் நிலவுவதற்கும் இடையே உள்ள கால வேறுபாடு அவ்வளவே அதிகம்.

நான் செய்ய நினைத்த சோதனை என்னவென்றால், காலத்தில் திருத்தம் செய்து பால்வீதி மண்டலத்தின் உண்மைக் கட்டமைப்பைக் கணக்கிடுவதுதான். அதாவது ஒளி நொடிப் போதில் பரவினால் நாம் கண்டிருக்கக்கூடிய கட்டமைப்பை. அப்போது, பால்வீதி மண்டலத்தின் புனரமைப்பைக் காட்டும் அறிகுறிகள் துலக்கமாகப் புலப்பட்டிருக்கும்.

இம்மாதிரிச் சோதனை எவ்வளவு சிக்கலானது என்பது எனக்கு நன்றாகத் தெரிந்தது. ஆனாலும் ஒருமுறை தோன்றிவிட்ட கருத்து

மனதை விட்டு அகலாமல் நிலைத்துவிட்டது.

கோட்பாட்டளவில் எல்லாம் சகஜமாகவே படும். பெரும்பாலான நட்சத்திரங்கள் எவ்வளவு தொலைவில் இருக்கின்றன என்பது தெரிந்த விஷயம். நட்சத்திரங்களின் வேகங்களும் தெரிந்தவைதாம். எனவே, ஒவ்வொரு நட்சத்திரமும் இருக்கவேண்டிய இடத்தைக் கணக்கிட்டுவிடலாம். ஆனால் இங்குதான் தொடங்குகிறது கஷ்டம். நட்சத்திரங்களின் இயக்கம் பரஸ்பரத் தொடர்பு உடையது. வேகங்கள் இடையறாது மாறிக் கொண்டிருக்கின்றன. முடிவற்ற திருத்தங்கள் செய்த வண்ணமாயிருக்க வேண்டும். இது மிகப் பேரளவான கணக்கீட்டு வேலை!

குறியீடு விளக்குவோரான நாங்கள் விசேஷ நிலைமையில் இருக்கிறோம். ஆராய்ச்சி இயந்திர சாதனங்களை முறைக்காகக் காத்திராமல் உபயோகிக்க எங்களுக்கு உரிமை உண்டு. உண்மையில் இங்கே எங்கள் உரிமை வரம்பற்றது. விஞ்ஞானமும் இயற்கையின் குறியீடு விளக்கம்தான் என்றும் எனவே எங்கள் வேலையும் விஞ்ஞானத்தின் உள்ளார்ந்த சாராம்சமும் ஒரே மாதிரியானவை என்றும் கூறுவது இப்போது மோஸ்தரில் உள்ளது. இந்த ஒப்பீடு முற்றிலும் சரியானது அல்ல, எனவே இதை ஒரு புறம் ஒதுக்கிவிடுவோம். எங்கள் காரியம் அதிக எளியது, அதிகத் திட்டவட்டமானது. விபத்து நிலைமை களில் அகப்பட்டுக் கொண்டிருப்பவர்களின் உயிர்கள் சில வேளைகளில் குறியீடு விளக்கத்தையே சார்ந்திருக்கின்றன. எனவே தான் எந்த இயந்திரத்தை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ள எங்களுக்கு உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது.

ஆயினும் குறியீடு விளக்குபவன் ஒருவனும் இதுவரை ஒரு தடவைகூட இந்த உரிமையைப் பயன்படுத்தியதில்லை. திட்டப்படி நடத்தப்பெறும் ஆராய்ச்சி முறையின் லயத்தைக் குலைப்பது மிகப் பெரிய பொறுப்பு. காரணம் இல்லாமல் ஆர்ப்பாட்டம் செய்வதன் விளைவாக, அவ்வாறு செய்தவனின் விஞ்ஞான வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டுவிடுவதோடு, எந்த இயந்திரத்தையும் பயன்படுத்தக் குறியீடு விளக்குவோருக்கு உரிமை அளித்திருப்பது அறிவுக்கு ஒத்ததுதானா என்ற சந்தேகங்கூட எழலாம். நாங்களோ, இந்த உரிமையை உயர்வாக மதிக்கிறோம். அது இன்னும் தேவைப்படலாம்.

விஷயத்தை விட்டுவிட்டு என் சந்தேகங்களைப் பற்றி நான்



விவரிக்கப் போவதில்லை. எனினும் நீண்ட தயக்கத்துக்கும் ஊசலாட்டங்களுக்கும் பிறகே சோதனை நடத்த முடிவு செய்தேன் என்பதைச் சொல்லாவிட்டால், பொய்யான எண்ணத்தை ஏற்படுத்தியவன் ஆவேன்.

## 10

சுரங்கத்தில் இருந்த என் சோதனைக் கூடத்தை விட்டுவிட நான் விரும்பவில்லை. நான் "நிசப்தத்துடன் சுருதி சேர்ந்திருந்தேன்". பெரிய நகரம் இந்தச் "சுருதியை" அக்கணமே கலைத்துவிடும். நானோ குறியீடு விளக்கும் வேலையைத் தொடர்ந்து செய்ய வேண்டியிருந்தது: ஸோரஹுக்கு என்ன நேர்ந்தது என்று நான் இன்னும் தெரிந்து கொள்ளவில்லை.

சோதனைக்கு முன்னேற்பாடுகள் செய்ய ஒத்திசைவிப்புக் கேந்திரம் எனக்கு இரண்டு நாள் அவகாசம் கொடுத்தது. நிலவும் ஒளித் தொடர்பு மார்க்கங்கள் வழியே எல்லாத் தகவல்களும் இங்கே வந்து சேர வேண்டியிருந்தன. ஏற்புவான் கம்பியைப் பொருத்தி மாதிரி அமைப்புத் திரையைப் பிரித்துவிடுவது மட்டுமே தேவையாய் இருந்தது.

சோதனை தொடங்குவதற்கு ஒரு மணி முன்னாலேயே நான் திரையைப் பிரித்துப் பொருத்திவிட்டேன். இந்த ஒரு மணி நேர எதிர்பார்ப்பு மிகக் கடினமாயிருந்தது.

சுரங்கத்தின் அனேகமாக முழு அகலத்துக்குப் பரப்பப்பட்டிருந்த மிகப் பெரிய திரைக்கு முன்னால், வீட்டு மாடியில் நான் உட்கார்ந்திருந்தேன். மங்குலில் கண்ணுக்குத் தென்படாத விசேஷச் சட்டத்தை ஆதரவாகக் கொண்டிருந்த வெள்ளைத் திரைப்படலம் முற்றிலும் அசைவற்றதாகத் தோன்றியது. ஒத்திசைவிப்புக் கேந்திரம் வானிலையியல் நிபுணர்களுக்கு முன்னெச்சரிக்கை விடுத்திருந்ததுபோலும். சோதனைக்கு ஒரு நாள் முன்பே காற்றோட்டம் அறவே நின்று விட்டது.

குறித்த நேரத்தில், சரிபார்ப்பதற்கான குறுகிய சங்கேதங் களுக்குப் பிறகு திரையில் தோன்றியது பால்வீதி மண்டலத்தின் திட்பக்காட்சிப் படம். ஓவியங்களிலும் மாதிரி வரைவுகளிலும் திரைப் படங்களிலும் நெளிந்த புரிகோடுகள் கொண்ட நட்சத்திர

வட்டத்தை நான் ஆயிரந்தடவைகள் பார்த்திருக்கிறேன். ஆயினும் இப்போது பால்வீதி மண்டலத்தின் படத்தை முதல் தடவை பார்ப்பவன் போல நோக்கினேன். இந்த உணர்ச்சியை எடுத்துச் சொல்வது கடினம்.

சோதனைச் செயல்திட்டப்படி வெவ்வேறு வகைப் பொருள்கள் வெவ்வேறு நிறங்களால் குறியிட்டுக் காட்டப் பட்டிருந்தன. பகுத்தறிவுள்ள வாழ்க்கைக்கு எவ்விதத்திலும் பொருந்தாத பொருள்கள் மஞ்சள் நிறம் கொண்டிருந்தன.

பிரமாண்டமான நட்சத்திரங்களும், ஒளிச்சிதறல் மூட்டங்களும் கிரக முகில்களும் விண்வெளிப் புழுதி மேகங்களும் தட்டையான மஞ்சள் வட்டமாக உருவாகியிருந்தன. புரிகோடுகளும் பளிச்சிடும் மஞ்சள் நிறம் கொண்டிருந்தன. "மஞ்சள்" பால்வீதி மண்டலத்தின் இந்தப் பின்னணியில் சிறு குறள் நட்சத்திரங்களும் குறுகிய இடைவெளி விட்டு ஒளிர்ந்த ஸேஃபெயிடுகளும்* இளநீல நிறத்தால் குறிக்கப்பட்டுத் துலக்கமாகத் தென்பட்டன. "இளநீலப்" பால்வீதி மண்டலம் உருண்டை வடிவாக - பல படிவுகள் கொண்டதாகக்கூட - இருந்தது. மண்டலத்தின் நடுவில் இருந்த பெரிய கோளவடிவ நட்சத்திரக் கூட்டத்தை மற்ற கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களின் கனத்த படிவுகள் சூழ்ந்திருந்தன. ஆம், வெளிப் "படிவுகள்" அவ்வளவு கனத்தவையாக இல்லை. தனித்தனி "வெற்றிடங்கள்" அவற்றில் கரும்புள்ளிகளாகத் துலக்கமாகப் புலப்பட்டன...

படங்களின் அளவை இன்னும் பெரிதாக்கும்படி கேட்டுக் கொண்டேன். பால்வீதி மண்டலத்தின் "மஞ்சள்" பகுதிகள் திரையின் ஓரங்களுக்கு விலகிச் சென்றன. "மஞ்சள்" பிரதேசங்களில் தனித்தனியே சிதறியோ சிறு குழுக்களாகச் சேர்ந்தோ இருந்த நீலப்புள்ளிகள் இப்போது எனக்குப் புலப்பட்டன.

நமது சூரியனைப்பற்றி எதனாலோ நான் சிந்தித்தேன். இந்த எண்ணம் முற்றிலும் இயல்புக்கு முரணாக இருந்தது. சூரியன் துலா ராசியையும் ஹெர்க்குலீஸ் நட்சத்திரக் கூட்டத்தையும் நோக்கி, அதாவது, அருகில் உள்ள கோள வடிவ நட்சத்திரக்

* ஸேஃபெயிடுகள், துடிப்பு உள்ள நட்சத்திரங்கள். இவற்றின் ஒளிர்வு துடிப்பின் அதிர் வெண்ணைப் பொறுத்திருக்கிறது. துடிப்பின் அதிர்வெண்ணின்படி கணக்கிடப்பட்ட ஸேஃபெயிடின் ஒளிர்வை அதன் அவதானிக்கக்கூடிய பிரகாசத்துடன் ஒப்பிட்டு நட்சத்திரம் எவ்வளவு தூரத்தில் உள்ளது என்று எளிதாக நிச்சயித்து விடலாம். அதனால்தான் ஸேஃபெயிடுகள் "பிரபஞ்சத்தின் கலங்கரை விளக்கங்கள்" எனச் சிலவேளைகளில் அழைக்கப்படுகின்றன.



கூட்டதை நோக்கிச் செல்கிறது!

இது தற்செயலான உடன் நிகழ்வு என்று சொல்லக்கூடுந்தான். சூரியனின் இயக்கவேகம் மிகக் குறைவானது என்பதையும் ஹெர்க்குலீஸில் உள்ள கோள வடிவ நட்சத்திரக் கூட்டம் வெகு தொலைவில் உள்ளது என்பதையும் ஒத்துப் பார்க்கலாம்.

ஒருவேளை இது தற்செயலான உடன் நிகழ்வுதான் போலும். என் விருப்பத்துக்கு ஒத்ததை எதார்த்தமானது என்று நான் வைத்துக் கொண்டிருக்கலாம். நாம் நெடுந்தொலை வழி செல்ல வேண்டியிருக்கிறது என்பதை உணர்ந்தவுடன் நிகழ்ச்சிகளை நான் என் வசமின்றியே விரைவுபடுத்திவிட்டேன்.

திரை சிலநிமிடங்களுக்கு இருண்டது. அப்புறம் மறுபடி பிரகாசமாயிற்று.

சோதனையின் முக்கிய அம்சம் ஆரம்பமாயிற்று. அசைவற்ற பால்வீதி மண்டலத்தின் ஓரளவு துல்லியமான காட்சியைப் படத்தில் காட்டுவது ஒப்புநோக்கில் எளிது. இப்போது ஒவ்வொரு நட்சத்திரத்துக்கும் "காலத் திருத்தம்" செய்வது அவசியமாக இருந்தது.

"லெத்ஸ்" வரிசையைச் சேர்ந்த அபூர்வ இயந்திரங்களையும் அனேகமாக எல்லாக் கணிப்பு நிலையங்களையும் ஒத்திசைவிப்புக் கேந்திரம் பயன்படுத்திய என்று பிற்பாடு நான் தெரிந்து கொண்டேன். திரையில் பால்வீதி மண்டலத்தின் படம் இடையறாது மாறிய வண்ணமாய் இருந்தது. மாறுதல்கள் பெரியவை அல்ல என்றாலும் அவற்றைக் காண முடிந்தது.

எந்த அளவுக்குக் "காலத் திருத்தம்" செய்யப்பட்டதோ அந்த அளவுக்குப் பால்வீதி மண்டலத்தின் கட்டமைப்பு திட்டமாக ஒழுங்குபட்டது. மையக் கருவைச் சுற்றிக் கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களின் "படிவுகள்" முன்னிலும் துலக்கமாக உருக்காட்டின. கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்கள், சிறப்பாகப் பூமியிலிருந்து அதிகத் தொலைவில் உள்ளவை, அதிகச் சரியான உருண்டை வடிவம் பெற்றவை. பால்வீதி மண்டலத்தின் மையப் பிரதேசங்களிலிருந்து நட்சத்திரங்களின் நடுவிலுள்ள பொருள் இடைவிடாமல் எறியப்பட்டது. இது ஒரு குறித்த பாதை வழியே எறியப்படுவது போலத் தோன்றியது. கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களின் "படிவுகளுக்கு" நடுவே உள்ள இடைவெளி முன்னிலும் தூயது ஆயிற்று. கோள வடிவ நட்சத்திரக்

கூட்டங்களுக்கு உள்ளே குறுகிய இடைவெளி விட்டு ஒளிர்ந்த ஸேஃபெயிடுகளின் எண்ணிக்கை அதிகமாயிற்று. நட்சத்திர நகரக் கூட்டங்களில் இவை என்ன பணி ஆற்றுகின்றன? ஒருவேளை இவை உயர் வளர்ச்சி பெற்ற நாகரிகங்களுக்கு உரிய தனி வகை ஆற்றல் நிலையங்களோ?

இதற்கும் இன்னும் சில கேள்விகளுக்கும் என்னால் தற்போது விடையளிக்க முடியாது என்பது வருந்தத்தக்கது. கணக்கீட்டின் விளைவுகள் பற்றிய மிகப் பொதுவான எண்ணத்தை திரை தருகிறது. ஆனால் பெறப்பட்ட விவரங்களை ஆராய்ந்து முடிவாகச் செப்பமுறத் தொகுப்பதற்குப் பல வாரங்கள் பிடிக்கும். காரியம் இத்துடன் தீர்ந்துவிடாது. ஏனெனில் நட்சத்திர மண்டலங்களின் தொகுப்பு விஷயத்திலும் நாங்கள் இதே போன்ற சோதனையை நடத்தப் போகிறோம். நட்சத்திர மண்டலங்களின் இடையே உள்ள தொலைவுகளில் "காலத் திருத்தம்" இன்னும் எவ்வளவோ பெரிதாயிருக்கும். அதற்கேற்ப, கட்புலனாகும் காட்சிக்கும் எதார்த்த நிலைமைக்கும் இடையில் உள்ள வேறுபாடும் பெரிதாயிருக்கும். நட்சத்திர மண்டலங்களின் பரஸ்பரப் பாதிப்புக்கு உரிய செயல்முறை இதுவரை விளங்காதிருக்கிறது. இந்தச் சோதனையின் விளைவாக அதற்கு விளக்கம் பெற வாய்க்கலாம். ஈர்ப்புச் சக்திகளும் மின்காந்தச் சக்திகளும் இந்தப் பரஸ்பரப் பாதிப்பை விளக்குவதற்குப் போதுமானவை அல்ல என்பது தெளிவு. உதாரணமாக, நட்சத்திர மண்டலங்களுக்கு இடையே இணைபாலங்களை, தனிவகைப் பட்ட "மேம்பாலங்களை" நிறுவவும் தாங்கவும் வல்ல சக்திகள் யாவை?...

பொழுது புலரும் தறுவாயில், சுரங்கத்துக்கு மேலே வானம் வெளிறத் தொடங்கியதும், திரையில் படக் காட்சி அனேகமாக அசைவற்றது ஆகிவிட்டது. கணக்கீடு முன்னிலும் மிகப் பேரளவுள்ளது ஆயிற்று. புதிய புள்ளி விவரங்கள் முன்னிலும் மெதுவாகவே செயல்படுத்தப்பட்டன.

விந்தையான பொறுமையின்மை மீண்டும் என்னை ஆட்கொண்டது. திரைமீது நடக்கும் நிகழ்முறையை எப்படியாவது இன்னும் விரைவுபடுத்த ஆசை உண்டாயிற்று.

அப்போதுதான் நான் ஸோரஹை நினைவு கூர்ந்தேன். அவனும் இதே உணர்ச்சியால், இன்னும் ஆயிரம் மடங்கு தீவிரமாக, ஆட்கொள்ளப்பட்டிருக்க வேண்டும்!



"தாஹூ" விண்வெளிக் கப்பல் பூமிக்குத் திரும்புவதால் என்ன பயன் கிடைத்திருக்க முடியும்? எப்படியும் தகவல் அதைவிட எவ்வளவோ முன்னதாகப் பூமிக்கு எட்டிவிடும். நேரம் வீணாகும். இனிமேல் மனித குலத்துக்கு முன்னிலும் அளவின்றி அதிக மதிப்புள்ள நேரம் வீணாகும்.

எனவே, திரும்ப வேண்டாம், மேற்கொண்டு பறந்து முன் செல்லலாம் என அவன் முடிவு செய்தானோ?...

## 11

424வது நட்சத்திரக் கூட்டத்துக்கு ஸோரஹ் புறப்பட்டபோது, "பகுத்தறிவுச் சோதரர்கள்" பற்றிய வழக்கமான, மாதிரித் திட்டம் ஆகிவிட்ட எண்ணத்துடனேயே சென்றான். இந்தத் திட்டப்படி எல்லாம் முன்கூட்டியே முடிவு செய்யப்பட்டிருந்தது; அவர்கள்தாம் சோதரர்கள் ஆயிற்றே. ஒரே அச்சில் வார்த்தவர்கள் போல அவர்கள் நம்மை ஒத்திருக்கலாம், அல்லது முற்றிலும் வேறாக இருக்கலாம். எனினும் அவர்கள் சோதரர்கள் என்ற விஷயம், பரஸ்பர அக்கறையும் தொடர்பும் புரிவும் சாத்தியம் என்று முடிவு செய்ய இடம் தருகிறது, அல்லவா?

முதலில் நிகழ்ச்சிகள் இந்தத் திட்டத்தின் எல்லைகளுக்கு உள்ளேயே நிகழ்ந்தன. ஸோரஹ் 'வட்டத்தைக்' கண்டுபிடித்தான். வேற்றுப் பகுத்தறிவாளிகளைச் சந்திக்கலாம் என்று சரியாக முடிவு செய்தான். பிறகு, முதல் சறுக்கு விமானத்தை 'வட்டம்' இறங்க அனுமதிக்காததும் ஸோரஹ் மறுபடி சரியான முடிவே செய்தான்: 'வட்டத்தின்' எல்லைக்கு அருகே இறங்குவது என்று.

"பகுத்தறிவுச் சோதரர்கள்" சந்திப்புக்கு அவசரப்படவில்லை. வீசியடித்த பாறைச் சூறாவளியையும் பொருட்படுத்தாமல் ஸோரஹ் தன் மலை "விண்வெளி விமான நிலையத்தில்" காத்திருந்தான்.

ஸோரஹ் சந்திப்புக்கு மிக முனைந்து ஆயத்தங்கள் செய்தான் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. 'கிமெரா'வில் இறங்கிய முதல் மணிகளில் அவன் விரைவாக, தன்னம்பிக்கையுடன் செயல் புரிந்தான். இது சிறந்த தொழில்முறைப் பயிற்சியின் விளைவு மட்டும் அல்ல. ஸோரஹ் செய்தவை எல்லாவற்றிலும் உள்தூண்டுதலும் புலப்படுகிறது. "பகுத்தறிவுச் சோதரர்களுடன்"

வெகுகாலமாக எதிர்பார்த்த சந்திப்பு, இதோ நிகழப் போகிறது என ஸோரஹ்ற நினைத்திருக்க வேண்டும். ஸோரஹறின் செயல்கள் துணிவு மிக்கவைதாம், விரைந்த முற்போக்கு உள்ளவை கூடவும் தான். எனினும் அவன் தான் திரட்டிய தகவல்கள் பத்திரமாகப் பூமிக்குப் போய்ச் சேரவேண்டும் என்பது பற்றி இடைவிடாமல் கவலை எடுத்துக்கொண்டான். அரை மணிக்கு ஒரு தரம் அவன் "தாவூ" விண்வெளிக் கப்பலுடன் வானொலித் தொடர்பு வைத்துக் கொண்டான். ஸோரஹறுக்கு ஏதேனும் நேர்ந்திருந்தால் விண்வெளிக் கப்பல் தானாகவே பூமிக்குத் திரும்பியிருக்கும்.

ஆனால் ஒன்றும் நேரவில்லை. "பாறைச் சூறாவளித் துறைமுகம்" ஸோரஹைற நல்லெண்ணத்துடனேயே, ஆனால் விசேஷ அக்கறை இன்றி வரவேற்றது. ஒவ்வொரு கோளவடிவ நட்சத்திரக் கூட்டத்திலும் உயிர்வாழ்வின் மிகமிக வெவ்வேறு வடிவங்கள்* கொண்ட ஏராளமான கிரகங்கள் உள்ளன என்பது இப்பொழுது புரிகிறது. நான் இந்த எண்ணத்துக்குப் படிப்படியாக வந்து சேர்ந்தேன், ஸோரஹறுக்கோ இது திடீரென உதயமாயிற்று...

பகுத்தறிவின் மாட்சி பற்றிப் பேசுகையில் நாம் எப்போதும் மனிதனையே கருத்தில் கொண்டிருந்தோம். அவனது பகுத்தறிவின் ஆற்றல் குறித்து நாம் எப்போதும் பெருமைப்பட்டோம். பல்லாயிரம் ஆண்டுகளாக இது மனிதனது சுய உணர்வின் அடிப்படையாக இருந்து வந்திருக்கிறது. எனவேதான், "அதிக அறிவுள்ள சோதரர்கள்" தோன்றுவது சாத்தியமே என்ற, வெறும் சித்தாந்த ரீதியான எண்ணங்கூட, மனிதர்களுக்குச் சுருக்கென்று உறைத்தது. மனிதனது தரத்துக்குச் சிந்தனை செய்யவல்ல ரொபாட்டுகள் இன்று வரை நிறுவப்படவில்லை. ஆயினும் விவாதம் இரண்டு நூற்றாண்டுகளாக ஓயாமல் நடந்து வருகிறது.

பிரபஞ்சத்தில் ஒப்புநோக்கில் அதிக வளர்ச்சி பெற்ற நாகரிகத்தினர் உள்ளனர் என்பதை நாம் தாராளமாக ஒப்புக் கொண்டோம். நம்மிடம் இயந்திரங்கள் உள்ளன, அவர்களிடமும் இயந்திரங்கள் உள்ளன. ஆனால் அவை சற்று மேலானவை. நம்மிடம் நகரங்கள் இருக்கின்றன, அவர்களிடமும் நகரங்கள்

*நமக்கு யாரும் குறியொலிகள் அனுப்பாதது இதனால்தான் போலும். கோளவடிவ நட்சத்திரக் கூட்டங்களின் எல்லை வட்டத்தில் நிலவும் "வெளி" நாகரிகத்தினர், லட்சக்கணக்கான அல்லது பத்துலட்சக்கணக்கான அதிக வளர்ச்சி பெற்ற "உள்" நாகரிகத்தினரிடமிருந்து தகவல்கள் பெறுவதிலேயே எல்லா முயற்சிகளையும் ஈடுபடுத்துகிறார்கள். பகுத்தறிவின் சின்னஞ்சிறு தீவுகளை ஊகித்துத் தேடுவதைவிட இது அவர்களுக்கு அதிக முக்கியமானது.



இருக்கின்றன, ஆனால் அவை கொஞ்சம் பெரியவை. நாம் விண்வெளிப் பறப்புக்கள் நடத்துகிறோம், அவர்களும் விண்வெளிப் பறப்புகள் நடத்துகிறார்கள், ஆனால் அவர்கள் கொஞ்சம் அதிகத் தொலைவு பறக்கிறார்கள். இப்படி நாம் எண்ணி வந்தோம். வழக்கமான இந்த எண்ணங்கள் தகர்ந்து சிதறியதும் ஸோரஹறின் உள்ளத்தில் எத்தகைய சூறாவளி வீசிற்று என்பதைப் புரிந்துகொள்ளலாம்.

பூமி பிரபஞ்சத்தின் மையம் அல்ல என்பதை ஒரு காலத்தில் புரிந்துகொண்டதால் மனிதர்கள் எல்லையற்ற பேரண்டத்தைப் பெற்றார்கள். அவ்வாறே, நம்மை அளவின்றி முந்திவிட்ட பகுத்தறிவு உள்ளது எனத் தெரிந்துகொண்டதால் நாம் எதையும் இழந்துவிடவில்லை. நன்மைகளோ ஏராளமாகப் பெறுவோம். முதன்மையாக வருங்காலம் பற்றிய புரிவு நமக்குக் கிடைக்கும்.

வருங்காலத்தை வருணிக்கையில் கற்பனை நவீன ஆசிரியர்கள் உடைகளையும் அன்றாட வாழ்க்கை முறையையும் இயந்திர சாதனங்களையும் போன்ற சில்லறை விவரங்களை ஊகிக்க முயல்கிறார்கள். ஆனால் முடிவில் இவை என்ன முக்கியத்துவம் உள்ளவை? வருங்காலச் சமூகம் நிலவுவதன் குறிக்கோளை அறிவதே பிரதானமானது.

அடுத்துவரும் பல பத்தாண்டுகளுக்கு உரிய குறிக்கோளை நாம் தெளிவாகக் காண்கிறோம். ஆனால் இன்னும் மேற்பட்ட காலத்துக்கு, ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்வரும் குறிக்கோள் களையும் அறிவது இன்றியமையாதது. "நிலவுகையின் உயர்ந்த குறிக்கோள்." மனித சமூகத்தின் நீண்டாயுள் பற்றிய கருத்து. இது மிக அவசியம், ஏனெனில் மாபெரும் ஆற்றல் மாபெரும் குறிக்கோளை அடைவதன் பொருட்டாக மட்டுமே தோன்றுகிறது.

நெடு வழிப் பயணம் நம்மை எதிர்நோக்கி இருக்கிறது.

அருகாமையிலுள்ள கோளவடிவ நட்சத்திரக்கூட்டத்துக்குப் பயணம் செய்ய எவ்வளவு காலம் செல்லும் என்று சுமாராகக் கூடச் சொல்ல என்னால் முடியாது. அனேக தலைமுறைகள் அதற்குள் மாறிவிடக்கூடும். வெளி உதவி நமக்கு எப்போதிருந்தாவது கிடைப்பது சாத்தியமே என்றாலும் நாம் சொந்த பலத்தையே கணக்கில் கொள்ளவேண்டும். புயலில் கொந்தளிக்கும் பிரபஞ்சம் என்னும் மாபெரும் கடலைக் குறுக்கே கடக்கும் கப்பலின் மாலுமிகள் போல் இருப்போம் நாம்.

கஷ்டங்களைக் குறைத்து மதிப்பிடுவதில் அர்த்தம் இல்லை. புயல்கள் வீசும், கடினமான வேலை செய்ய நேரும். யுத்தத்துக்கும் ஆற்றலின் வீண் செலவுக்கும் ஒரேயடியாக முடிவு கட்டிவிட்ட ஒன்றுபட்ட மனித சமுதாயம்தான் நெடுந்தொலைவில் உள்ள நட்சத்திரக் கூட்டங்களுக்குப் பயணம் செய்ய நம்மை வல்லவர்கள் ஆக்கும். ஒவ்வொரு மனிதனும் மிகச் சிறந்த வளர்ச்சி அடைய வசதி அளிக்கும் சமுதாயம்தான் இவ்வாறு செய்ய வல்லதாகும்.

ஸோரஹும் கட்டாயம் இவ்வாறு எண்ணியிருப்பான்.

கடைசி நிழற்படங்கள் இரவில் எடுக்கப்பட்டுள்ளன. சறுக்கு விமானம் நிற்கும் இடம் கீழிருந்து மெல்லிய ஒளியால் வெளிச்சமாக்கப்பட்டிருக்கிறது. மிகவும் பருத்த நீலக் கண்ணாடி வழியே ஒளி வருவதுபோலத் தோன்றுகிறது. மேலே விண்மீன்கள் சுடரும் வானம். ஸோரஹ் சறுக்கு விமானத்தின் அருகே அமர்ந்து விண்மீன்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

'வட்டத்துடன்' ஸோரஹ் எப்படிப் பேசினானோ, இதுவரை அறியேன். மீட்டமைக்கப்பட்ட தகவல்களில் இதுபற்றிக் கூறப்படவில்லை. என் அனுமானம் சரியாய் இருந்தால் "தாவூ" விண்வெளிக் கப்பலிலிருந்து மறு தகவல் நமக்குக் கட்டாயம் கிடைக்கும்.

விண்வெளிக் கப்பலில் உள்ள தானியங்கி இயந்திரங்கள் ஒவ்வொரு மாதமும் மறுபடி தகவல் அனுப்ப வேண்டும் என ஏற்கனவே சொல்லிவிட்டேன். முதல் தகவல் கிடைத்த பின் அரை ஆண்டு கழிந்துவிட்டது; ஆயினும் "தாவூ" பேசாதிருக்கிறது. ஆகவே விண்வெளிக் கப்பல் பூமியிலிருந்து அப்பால் விலகிச் செல்கிறது என்று தெரிகிறது.

விண்வெளிக் கப்பலில் நேரக் கணக்கு வேறானது. பூமியில் அரை ஆண்டுக் காலம் விண்வெளிக் கப்பல் கணக்குப்படி பதினைந்து, இருபது நாட்களாக இருக்கலாம். ஸோரஹ் அனுப்பிய மறு தகவல் இன்னும் வழியில் இருக்கிறது! விண்வெளிக் கப்பலின் தலைவனாக ஸோரஹைத் தெரிந்தெடுத்த இயந்திரம் தவறு செய்யவில்லை. வேறு உலகின் பகுத்தறிவை முதன்முதலில் சந்தித்த மனிதனான ஸோரஹ் அதன் பெருவிறலால் விதிர்விதிர்த்துத் தன் வசம் இழந்துவிடவில்லை. வேற்றுப் பகுத்தறிவின் அளவற்ற மேன்மை, மனிதனின் பகுத்தறிவிலும் வருங்கால வாய்ப்புக்களிலும் ஸோரஹின்



நம்பிக்கையைச் சிதைத்துவிடவில்லை.

நிலவுலகுக்குத் தகவல் அனுப்பிவிட்டு ஸோரஹ் மேற்கொண்டு பாதையை வேவுபார்க்கப் போய்விட்டான். ஒரு காலத்தில் நாம் எல்லோரும் அந்தப் பாதையில் செல்லப் போகிறோம்.

இன்றே, இப்போதே, இக்கணத்திலேயே, ஆயிரமாயிரம் கிரக மண்டலங்கள் எல்லையில்லாக் கரு வானின் ஊடே சென்று கொண்டிருக்கின்றன. ஒன்றாக இணையவும் பிரபஞ்சத்தை மாற்றி அமைக்கவும் செல்கின்றன அவை.

நாமும் இவ்வாறே செல்லும் நேரம் வரும்.

வானம், பழக்கமான வானம் குழம்பும். உயரமான பாய்மரங்களுக்கு மேலே முகில்கள் போல நட்சத்திரக் கூட்டங்கள் அறிமுகமான உருவரைகளை மெதுவாக இழந்தவாறு மிதந்து செல்லும். புதிய நட்சத்திரங்கள் முன்னே சுடரும். தொடக்கத்தில் அவை அரிதாகவே கண்ணுக்குப் புலப்படும், ஆனால் படிப்படியாக அவற்றின் ஒளிமிகுந்து கொண்டு போகும். இந்த நட்சத்திரங்களின் எண்ணிக்கை வர வர அதிகமாகும். இவை வானகத்தை, நாம் வாழப் போகிற நமது புதிய வானகத்தை நிறைக்கும்.



மிஹயீல் விளாதீமிரவ் - இது பிரபல சோவியத் விஞ்ஞானி மிஹயீல் விளாதீமிரவ்ச் வால்க்கென்ஷ்த்தைன் என்பவரின் புனைபெயர். வால்க்கென்ஷ்த்தைன் சோவியத் யூனியன் விஞ்ஞான அகாதமி உறுப்பினர் பட்டம் பெற்றவர், பேராசிரியர், பௌதிக, கணித விஞ்ஞான டாக்டர். கூட்டணு பௌதிகம், ஜீவபௌதிகம் ஆகிய துறைகளில் 250க்கு மேற்பட்ட ஆய்வுரைகள் இயற்றியுள்ளார். அரசாங்கப் பரிசு பெற்றிருக்கிறார். இங்கே பிரசுரிக்கப்படும் "கண்ணாடிப் பிரதிபலிப்புத் தீவு" என்னும் கதை, ஆசிரியரின் முதலாவது விஞ்ஞானக் கற்பனைப் படைப்பு ஆகும்.

# கண்ணாடிப் பிரதிபலிப்புத் தீவு

மிஹயீல் விளாதீமிரவ்

வண்ணத்திப் பூச்சிக்கு எத்தனை கால்கள்?

மூச்சிழுப்போம் பெட்ரோல் ஆவியினை,
மொழிந்திடுவோம் அது 'ஓ.கே.' என்று.
நீர்ப்பாசி போன்றிடும் சாம்பல் வானம்
நெடுந்திடல் பள்ளங்களுக்கு மேலே.



சுவாசங்களிலே தூசிக் காற்று,
களியாடல் வண்ண விளம்பரங்கள்.
பிணங்கள் கிடந்திடும் படுக்கைகளில்.
வேலைக்குச் சென்றிட்டார் உயிருள்ளவர்

வில்லி பாட்டர்ன்

விக்ஃபீல்டு நகருக்கு மேலே தாழ மிதந்தன கனத்த மேகங்கள். வானளாவிய மாளிகைகளின் மேல் மாடிகள் காலை மூடுபனியில் நீந்தின. கீழே அரையிருட்டாயிருந்த வீதிகளில் மோட்டார்களின் போக்குவரத்து தொடங்கிவிட்டது. அவற்றின் பிரேக் விளக்குகள் சிவப்பு, ஆரஞ்சு ஒளிவீசின.

ஜானி மெல்வின் விழித்து எழுந்து, வெறுங்கால்களுடன் ஜன்னல் அருகே சென்றான். அறை மங்கலாக இருந்தது. பாதி குடித்த பூர்பன் விஸ்கி இருந்த கண்ணாடித் தம்ளர்கள் மங்கலாகப் பளிச்சிட்டன. அவற்றில் போடப்பட்ட பனிக்கட்டித் துண்டுகள் எப்போதோ உருகிவிட்டன.

ஜன்னல் எதிர்ப்புற வீட்டுச் சுவரை நோக்கி இருந்தது. ஆங்காங்கு விளக்குகள் இன்னும் எரிந்துகொண்டிருந்தன. புறாக் களின் ஒரு சீரான அகவல் தவிர வேறு ஒலிகளே கேட்கவில்லை.

வழக்கம்போலவே ஜானி தன்னம்பிக்கை இன்மையும் இனந் தெரியாத கலக்கமும் நிறைந்த உணர்ச்சியுடன் கண்விழித்தான். சற்று நேரத்தில் இந்த உணர்ச்சி மறைந்துவிடும் என்று அவனுக்குத் தெரியும். இப்போது அவன் ஜன்னலுக்கு எதிரே நின்று சாம்பலைத் தரையில் உதிர்த்தவாறு சிகரெட் புகைத்தான்.

பெஸ்ஸி இரவு வெகுநேரம் கடந்தபின் புறப்பட்டுப் போனாள். அவன் உடை மாற்றிக் கொண்டு தன்னைக் கொண்டுவிட வருவதை அவள் விரும்பவில்லை. அவன் நன்றாக உறங்கினான். உண்மையில் எல்லாம் நன்றாய் இருந்தன. அர்த்தமில்லாத இந்த மனக்கலக்கம் ஏன்? அவன் ஆரோக்கியசாலி, இளைஞன். "விக்ஃபீல்டு செய்திகள்" என்ற தினத்தாளின் நிருபனாக வெற்றி கரமாக முன்னேறி வந்தான். தான் முழுமதிப்பு அற்றவன் என்ற தாழ்வு மனப்பான்மையும் வேறு வகையான உளக் கோட்டங் களும் அவன் கொள்வதற்கு எவ்வித ஆதாரமும் இருக்கவில்லை.

ஏதோ ஆளற்ற தீவில் போல இங்கே நின்றான் அவன். வெளிச்சம் ஆயிற்று. எதிர்ப்புற ஜன்னல்கள் வழியே தெரிந்த

விளக்குகள் அணைந்தன. புறாக்கள் ஒரே சீராக அகவின. வெளியே தலையை நீட்டி உயரே பார்த்தால் வடிவகணிதப் பாங்கில் கத்தரிக்கப்பட்ட சாம்பல் நிற ஆகாயத் துண்டைக் காணலாம். சுற்றுச்சூழலின் கொடூரமான வெறுமையை அவன் நன்றாக உணர்ந்தான். தவிர, பணமும் போதவில்லை. பெஸ்ஸியை மணந்துகொள்வதற்குச் சொந்த வீடு - நகர்க் கோடியில் வசதியான பங்களா - வேண்டும். இதன் விலை மிக அதிகம்.

விக்ஃபீல்டு அருமையான நகரம். வானளாவிய மாளிகைகளும் தரையடி ரெயில் பாதையும் எல்லாம் அதில் இருந்தன. நகரப் பூங்காவில் இருந்த தியோடோர் ரூஸ்வெடின் குதிரையேற்றச் சிலை. அடிமனக்காட்சிவாதச் சிற்பி பிச்சோனி என்பவர் அமைத்தது அந்தச் சிலை. அதன் நிழற்படம் பதித்த, ஒரு டாலர் விலையுள்ள ரோஜா நிறத் தபால்தலை, அஞ்சல்தலை சேகரிப்போரால் வெகுவாக மதிக்கப்பட்டது.

தலைமை ஆசிரியர் இன்று அவனை எங்கே அனுப்புவார்? கொலை, அல்லது கொள்ளை வழக்கை விவரிப்பதற்கா, யாரேனும் பிரபலஸ்தரின் வருகையை வருணிப்பதற்கா? இடைவிடாத ஓட்ட சாட்டம். கட்டுரையை முறையாகச் சிந்தித்துச் செப்பம் செய்யவோ, உபயோகமானது எதையும் படிக்கவோ நேரமே கிடைப்பதில்லை. சம்பளம் நிறையத்தான் கொடுக்கிறார்கள். ஆனாலும் போதவில்லை. எழுத்தாளன் ஆக வேண்டும் என்று அவன் ஒரு காலத்தில் ஆசைப்பட்டான். தனது நவீனங்கள் எல்லா மூலைகளிலும் விற்பனையாக வேண்டும். ஒளி வீசும் புன்னகை மிளிரும் அரைநிர்வாண அழகியின் படம் பதித்த மழமழப்பான காகித அட்டை அவற்றை அலங்கரிக்க வேண்டும். பிரசுரகர்த்தர்கள் நாட்டின் எல்லாப் பகுதிகளிலுமிருந்து அவனுக்குச் காசோலைகள் அனுப்பவேண்டும். அப்புறம் ஐரோப்பியப் பயணம் - பாரிஸ், பாரிஸ்! - இப்படிக் கனவு கண்டான்.

இப்போதோ, அவன் இந்த அறையில் தன்னந்தனியன். புறாக்கள்தாம் அவன் துணைவர்கள். பெஸ்ஸி அதற்குள் அலுவலகத்தில் உட்கார்ந்திருப்பாள். மணி என்ன?

டெலிபோன் மணி அடித்தது.

தலைமை ஆசிரியர் பேசினார் : "ஹலோ, ஜானி. பேராசிரியர் ஹாக்லண்டின் புத்தகத்தை நீங்கள் படித்திருப்பீர்கள் என்று



நினைக்கிறேன்."

முடிந்தவரை உண்மையே பேசுவது ஜானியின் அலுவல் கோட்பாடுகளில் ஒன்று. இல்லாவிட்டால் சங்கடத்தில் மாட்டிக் கொள்ள நேரலாமே.

"இல்லை, ஸார்"

"அப்படியானால் படியுங்கள். இந்தப் புத்தகத்தைப் பற்றி ஒரே பேச்சாய் இருக்கிறது. படித்தபின் ஹாக்லண்டை பேட்டி காணுங்கள். எனக்குக் கட்டுரை வேண்டும். அவசரமாக."

"புத்தகத்தின் பெயர் என்ன, ஸார்?"

"எஸ்.ஏ. ஹாக்லண்டு, - மனிதர்கள், விலங்குகள், தாவரங்கள். வணக்கம்."

ஜானி விஞ்ஞான நூல்களைப் படிப்பதே இல்லை. ஆனால் இது புரியும் விதத்தில் எழுதப்பட்டிருந்தது. இந்த விஞ்ஞானிகள் எழுதாத விஷயமே கிடையாது போலும்! இந்த மாதிரி விஷயங்களைப் பற்றி ஜானி ஒருபோதும் எண்ணிப் பார்த்ததே இல்லை.

மனிதர்களின் வாழ்க்கை - விலங்குகள், தாவரங்களின் வாழ்க்கையிலிருந்து துணிக்கப்பட்டிருப்பது பற்றி எழுதியிருந்தார் ஹாக்லண்டு. மனிதர்களும் அவர்களைச் சூழ்ந்துள்ள உயிர் இயற்கையும் ஒன்றிலிருந்து ஒன்று தனித்து விலகிய இரு வெவ்வேறு தளங்களில் நிலவுகின்றனர். இப்போது, இருபதாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதியில், மனிதன் இயற்கையைப் புரிந்துகொள்வதையே நிறுத்திவிட்டான். மரங்களையும் பட்சிகளையும் பற்றி நமக்கு அக்கறையே இல்லை - இப்படிக் கூறியது ஹாக்லண்டின் நூல்.

"பட்சிகளாவது! உண்மையாகவே, பட்சிகள் எக்கேடு கெட்டால் எனக்கு என்ன? ஜன்னலுக்கு வெளியே கொழுத்த புறாக்களைக் கண்டாலே எனக்குக் கரிக்கிறது. அவை அகவுவதும், அவற்றின் காதல் முனகலும் சகிக்கவில்லை. அவை எனக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டன. வெறுமே ஏக்கந்தான் உண்டாக்குகின்றன அவை. மனிதர்களுடன் பேசுவதை நான் விரும்புகிறேன், பைப்பாலூட்டிகளான ஒப்போசங்களுடன் அல்ல, ஒப்போசத்துடன் நான் எப்படி உறவாடுவேன்? காலஞ்சென்ற அமெரிக்க எழுத்தாளர் ஹெமிங்வே, தாம் ஒரு தத்துக்கிளியை

மீன் பிடிக்கும் தூண்டில் முள்ளில் கோர்த்தது பற்றி உற்சாகம் பொங்க வருணிக்கிறார். அருவருப்பு உண்டாகிறது. 'க்ளோரியா' உணவு விடுதியில் ஃபோரல் மீனைச் சாப்பிடுவதே மேல் என மதிக்கிறேன். உடன் பருக ஆற்று நீரை அல்ல, லிப்ஃப்ராவுமில்ஷ் சாராயத்தையே விரும்புவேன்." - இவ்வாறு எண்ணமிட்டான் ஜானி.

ஹாக்லண்டு அவனைப் பற்றியே எழுதியிருந்தார். காட்டுக்கு எப்போதாவது போனாலுங்கூட அவன் எதையும் காணவோ கேட்கவோ மாட்டான். காட்டு வண்ணத்திப் பூச்சியின் பருத்த மேலுறை கொண்ட கூட்டுப்புழு கூதிர்கால இலை மேல் இருப்பதை அவன் கவனிக்க மாட்டான். கரும்பறவைக்கும் தங்காராவுக்கும் (Pyranga rubra) ஒரு வித்தியாசமும் அவனுக்குத் தெரியாது. அவன் நவீன நகரவாசி. "விக்ஃபீல்டு செய்திகளின்" நிருபர் ஜானி மெல்வின். அவனுக்கு இந்த உலகில் வசதியில்லை. ஆனால் அவன் முயன்று வழி செய்துகொண்டு முன்னேறிச் செல்வம் திரட்டிவிடுவான். இத்தகையவனைப் பற்றித்தான் பேராசிரியர் ஹாக்லண்டு எழுதியிருந்தார்.

உயிரியல்வாதிகள் கூட இப்போது இயற்கையிலிருந்து துணிக்கப்பட்டுவிட்டார்கள் என்று ஹாக்லண்டு கருதினார். DNA என்பது என்ன, ஒளிக் கதிர்ப்பு பச்சைக் கணிகங்கள் மீது என்ன பாதிப்பு விளைவிக்கிறது என்பவை அவர்களுக்குத் தெரியும். ஆனால் பெரிப்பாட்டஸ் என்பது என்ன? Onychofora வகையைச் சேர்ந்த Peripatus? இதை அவர்கள் அறியார். உண்மையில் இந்தப் பிராணி முக்கியமானது. இது இல்லாவிட்டால் முதுகெலும்பு இல்லாத பிராணிகளின் பரிணாம வளர்ச்சியைப் புரிந்துகொள்ள முடியாது.

உயிரியல்வாதிகளின் நிலைமையே இது ஆனால் உயிரியலுடன் தொடர்பு இல்லாதவர்களைப் பற்றி என்ன சொல்வது? (உங்கள் பணிவுள்ள ஊழியன் - ஜா., மெல்வின்!) அவர்கள் மிக ஆழ்ந்த அறியாமை இருளில் மூழ்கியிருக்கிறார்கள்.

ஹாக்லண்டு எழுதியிருந்தார்: "வண்ணத்திப் பூச்சிக்கு எத்தனை கால்கள் என்று அறிமுகமான, அறிமுகமற்ற டஜன் கணக்கான மனிதர்களிடம் கேட்டேன். எனக்குப் பல்வேறு விடைகள் கிடைத்தன - கால்களே இல்லை என்பதிலிருந்து பனிரெண்டு கால்கள் என்பது வரை. சிலர் ஒற்றைப் படை எண்ணுள்ள கால்கள் என்றுகூடச் சொன்னார்கள்."



"என்னிடம் கேட்டால் தெரியாது, தெரிந்துகொள்ள விருப்பமும் இல்லை என்று சொல்லியிருப்பேன். மெல்லியலாரின் கால்கள் பற்றி எனக்கு எவ்வளவோ அதிக அக்கறை" என்று எண்ணமிட்டான் ஜானி.

மனிதனால் இயற்கை அழிக்கப்படுவது பற்றி ஹாக்லண்டு எழுதியிருந்தார். கானடாவின் வடபகுதியில் கரீபூ என்ற கலைமான் இனமும் கருங்கடலில் அஃபாலியா என்னும் அறிவுள்ள பிராணியும் அழித்து ஒழிக்கப்பட்டுவிட்டன. ஆறுகளும் ஏரிகளும் நஞ்சூட்டப்படுகின்றன. மரங்கள் முன் யோசனை இன்றி வெட்டித் தள்ளப்படுகின்றன. செழுமண் அரிக்கப்படுகிறது. மீன் வகைகள் மறைந்து வருகின்றன. மென்மயிர்த் தோல்களும் யானைத்தந்தங்களும் அருகத் தொடங்கி விட்டன. இவற்றால் ஒருவரும் அவ்வளவாகக் கவலைப்படுவதில்லை. செய்தித்தாள்கள் செயற்கை உணவு பற்றி ஆரவாரம் செய்கின்றன. மென்மயிர்த் தோல்களுக்கும் யானைத் தந்தங்களுக்கும் பதிலாகச் செயற்கைப் பொருள்கள் முழு வெற்றி கரமாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. - இவ்வாறு எழுதியிருந்தார் ஹாக்லண்டு.

"பெஸ்ஸியிடம் அருமையான நைலான் மேல்கோட்டு இருக்கிறது. விலையும் மலிவு. ஆனால் ஸேபல் மென்மயிர்த்தோல் கோட் வாங்கிக் கொடுத்தால் பெஸ்ஸிக்கு உச்சி குளிர்ந்து விடுந்தான், சந்தேகமில்லை" - இப்படிச் சிந்தனை செய்தான் ஜானி.

விஞ்ஞான நோக்கிலும் சரி, அழகியல் நோக்கிலும் சரி, இயற்கையை அறிந்து கொள்வதற்கான வாய்ப்பை மக்கள் இழந்து வருகிறார்கள். ஸ்தெகோஸாரஸ் என்னும் அரக்க ஓணான், லாட்டிமேரியா என்னும் மீன் முதலிய விலங்கினங்கள் அழிந்து ஒழிந்து போய்விட்டன என்று அவர்கள் அறியாமை காரணமாக நினைக்கிறார்கள். உண்மையிலோ, இயற்கை எதிர்பாரா விந்தைகள் நிறைந்தது. இவற்றில் சில ஒருவேளை மாண்பு மிக்கவையாக இருக்கலாம். இவ்விந்தைகள் நிலவுவது மாகடல்களின் ஆழப் பகுதிகளில் மட்டுமே அல்ல.

நமது பூமியில் மக்கள் வசிக்காத தீவுகள் இன்னும் உள்ளன. ஆராய்ந்து அறியப்படாதவை இன்னும் எத்தனையோ! பார்க்கப் போனால் விசித்திரமான தன்மைகள் கொண்ட புதிய முட்செடி வகை ஒன்று எந்தத் தரிசு நிலத்திலும் எதிர்ப்படக்கூடும். மனிதன்

எப்படி எல்லாம் சித்திரவதை செய்தாலும் சரியே, இயற்கை தொடர்ந்து வளர்ச்சி அடைந்துவருகிறது. - இந்தப் பொருள்படக் கருத்து உரைத்திருந்தார் ஹாக்லண்டு.

மக்கள் வசிக்காத தீவுகள் என்ற சொற்கள் ஜானிக்கு அக்கறைக்கு உரியவையாகப் பட்டன. "ஆமாம், ஆமாம். உலகம் மக்கள் வசிக்காத தீவுகளால் நிறைந்திருக்கிறது. சந்தேகம் இல்லாமல், நாம் எல்லோரும் ராபின்ஸன் க்ரூஸோக்கள்தாம். என் இருப்பிடமும் மக்கள் வசிக்காத தீவுதான். பெஸ்ஸி இதில் குடிபுக மறுக்கிறாளே. தென்னை, பனை வகை மரங்களுக்குப் பதில் இதில் தொலைக்காட்சிப் பெட்டியும் குளிர்காப்புப் பெட்டியும் வளர்கின்றன என்பதுதான் வித்தியாசம். இந்தப் பொருள்பற்றிக் கவிதை எழுதலாம். வரிக்கு பத்து டாலர்கள் கிடைக்கும். என்னால் எழுத முடியாது என்பதுதான் வருந்தத்தக்க விஷயம்."

ஹாக்லண்டு மேலும் எழுதியிருந்தார்: "இல்லை, ழான் - ழாக் ரூஸோவின் காலத்துக்குத் திரும்புமாறு நான் மக்களை அழைக்க வில்லை. மனித சமுதாயத்தின் வளர்ச்சி விதிப்படியே நிகழ்கிறது. வருங்கால மனிதன் நகரத்தை விட்டுவிடமாட்டான். ஆனால் அவன் இயற்கையுடன் நெருங்கிய உறவு கொண்டாக வேண்டும். எவ்வளவு விரைவாக அவன் உறவு கொள்கிறானோ அவ்வளவு நல்லது. விலங்குகளுடனும் தாவரங்களுடனும் அவன் ஒத்துழைப்பான். அவற்றின் மொழியைப் பேசுவான். அவன் அழிக்க மாட்டான், அழித்ததை மீட்டமைப்பான். காட்டின் அரவம், தகைவிலான் குருவியின் பறப்பு, கடல் நுண்ணுயிர்களின் ஒளிர்வு ஆகியவற்றால் உற்சாகமூட்டப்பெறும் புதிய கலை உதயமாகும். வாழ்க்கையின் முதல் ஆண்டுகளிலிருந்தே குழந்தைகள் இயற்கையை நேசிப்பார்கள். புரிந்துகொள்வார்கள்."

"அடேயப்பா, எவ்வளவு நேர்த்தி!" என்று மனதுக்குள் நொடித்தான் ஜானி. "கற்பனை உற்சாகத்தையும் உள நெகிழ்வையும் என்னால் சகிக்கவே முடியாது. புட்களின் இசையை ஆர்வத்துடன் கேட்கவும் நீல மலர்களைக் கண்டு நெஞ்சுருகிக் கண்ணீர் விடவும் நான் முதுகன்னி அல்ல! ஹாக்லண்டுடன் நான் என்ன பேசுவது? அவருடைய புத்தகத்தைப் பற்றி இவ்வளவு ஆரவாரம்தான் ஏனோ?"

இத்தகைய எண்ணங்களுடன் தலைமை ஆசிரியருக்கு போன் செய்தான் ஜானி:



"தலைமை ஆசிரியரே, உங்களிடம் இரண்டு கேள்விகள் கேட்க விரும்புகிறேன்."

"கேளுங்கள்."

"வண்ணத்திப் பூச்சிக்கு எத்தனை கால்கள்?"

"நீங்கள் என்ன, குடிபோதையில் இருக்கிறீர்களா?"

"பளிங்கு போன்ற தெளிவுடன் இருக்கிறேன். சொல்லுங்கள், எத்தனை?"

"மெல்வின், நான் வேலையாய் இருக்கிறேன்."

"சரி, போகட்டும். இரண்டாவது கேள்வி: ஹாக்லண்டு இரும்பு முண்டாக்களும் கருகருவென்று அடர்ந்த தாடியும் உள்ளவரா?"

"எங்கிருந்து இந்தக் கேள்வி உங்களுக்குத் தோன்றியது?"

"ஒன்றுமில்லை, அவர் கானன்-டாயிலின் நவீனத்தில் வரும் பேராசிரியர் சேலஞ்சர் போன்றவர், பேட்டி காண வருபவனை மாடிப் படிகளில் நெட்டித் தள்ளிவிடுவார் என்று அஞ்சுகிறேன். பிரார்த்தனை செய்யும்போது எனக்காக வேண்டிக் கொள்ளுங்கள்."

"அசட்டுத்தனம் செய்யாதீர்கள். ஹாக்லண்டைப் பற்றிய கட்டுரையை நாளை மாலை எழுதிக் கொடுத்துவிடுங்கள். கட்டுரை பொருள் பொதிந்ததாகவும் நகைச்சுவை உள்ளதாகவும் இருக்கவேண்டும்."

தலைமை ஆசிரியர் டெலிபோனை வைத்துவிட்டார்.

இந்த உரையாடல் பயனற்றதல்ல என்று நினைத்தான் ஜானி. தலைமை ஆசிரியர் கொஞ்சம் எரிச்சல் அடைந்தார் என்பது உண்மைதான். ஆனாலும் தம் நிருபரின் துடியான அறிவை அவர் கட்டாயம் கவனித்திருப்பார். அவர் கானன் - டாயிலின் நூல்களைப் படித்திருக்கிறாரோ இல்லையோ?

ஜானி ஹாக்லண்டுக்கு போன் செய்தான். மறுநாள் காலை ஒன்பது மணிக்கு அவனுக்கு பேட்டி தர அவர் இசைந்தார். ஹாக்லண்டின் குரல் இனிமையாக இருந்தது.

மாலையில் மழை பெய்தது. ஜானியும் பெஸ்ஸியும் திரைப்படம் பார்த்துவிட்டு வெளியே வந்தார்கள், பிரமிப்பூட்டும் அந்தப் படத்தை அக்கணமே மறந்துவிட்டார்கள். கரிய ரஸ்தா

அதிர்ந்து முழங்கிற்று. ஒளி வீசிற்று. விளம்பர விளக்குகள் சுழன்றன, கார் முன் விளக்குகள் மினுமினுத்தன.

"எதைப் பற்றி எண்ணமிடுகிறாய்?" என்று கேட்டாள் பெஸ்ஸி.

"ஸ்டெல்லரின் பசுவைப் பற்றி."

"யார் அவர், ஸ்டெல்லர்?"

"தெரியாது. அவருடைய பசுவும் பசு அல்ல. நீரில் வாழும் ஏதோ ஒரு பிராணி."

"அதற்கென்ன?"

"பதினெட்டாம் நூற்றாண்டில் அதைக் கொன்று ஒழித்துவிட்டார்கள்... என் இருப்பிடம் போவோமா?"

பெஸ்ஸிக்கு விருப்பம் இல்லை. அவன் அவளை வீட்டுக்குக் கொண்டு விட்டுவிட்டு தன் அறைக்குத் திரும்பினான். பன்றி இறைச்சி இடையில் வைத்த இரண்டு ரொட்டித் துண்டுகளைத் தின்று தகரக் குவளையில் பீர் அருந்தினான். பின்பு உறங்குவதற்காகப் படுத்துக்கொண்டான். வெகுநேரம் வரை அவனுக்குத் தூக்கம் வரவில்லை. இருளும் தனிமையும். "நாய் வளர்ப்போமா? நாய்களையும் அவற்றின் குரைப்பையும் அவற்றின் நாற்றத்தையும் எனக்குப் பிடிக்காதே. தெள்ளுப் பூச்சிகள் வேறு. ஆனால் நாய்கள் அறிவுள்ளவைதாம். குழந்தைப் பருவம் முதலே நான் அவற்றுடன் பழகியது கிடையாது."

பசிய காடும் வெயில் ஒளி சுடரும் பூம்பரப்பில் வெண் மலர்களும், புல்லில் குழிமுயல்களும் அவனுக்குக் காட்சி அளித்தன.

ஜன்னலுக்கு வெளியே புறாக்கள் மௌனமாக இருந்தன. மழைக்கு ஒதுக்கமாக ஒண்டியவாறு அவை உறங்கின.

காலையில் ஒன்பது அடிக்க ஐந்து நிமிடங்கள் இருந்தபோது ஜானி ஹாக்லண்டின் இருப்பிடத்தை அடைந்தான். அவர் நடுத்தர உயரமுள்ள அமைதியான மனிதர். அவருக்குச் சுமார் ஐம்பது வயது இருக்கும். அவர் முகம் மலர முறுவலித்தார். ஜானிக்கு பூர்பன் விஸ்கியும் சோடாவும் ஊற்றிக் கொடுத்தார். தாம் ஆரஞ்சுச் சாற்றை உறிஞ்சிக் குடிக்கலானார்.

"பேட்டி தொடங்கலாமா, பேராசிரியர் அவர்களே?"



"இந்தச் சொல் எப்படி எழுதப்படுகிறது?"

இருவரும் கொல்லென்று சிரித்தார்கள்.

"உங்கள் விருப்ப வேலை என்ன, ஐயா?"

"பறக்கும் மாதிரிகள் புனைவதில் எனக்குப் பெருத்த ஆர்வம். இதோ பாருங்கள்" என்று விட்டத்துக்கு அடியில் தொங்கிக் கொண்டிருந்த அமைப்பைக் காட்டினார் ஹாக்லண்டு. மரப் பலகைகளாலும் வண்ணப்பட்டினாலும் ஆக்கப்பட்டிருந்தது அது.

"மீன் பிடிப்பது, வேட்டை ஆடுவது?"

"மன்னியுங்கள். நான் நகரவாசி. அறைக்குள் அமர்ந்திருக்கும் விஞ்ஞானி."

"ஆனால் இயற்கையை இவ்வளவு நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறீர்களே."

"இதனால் நான் மீன்களையோ பறவைகளையோ கொல்ல வேண்டும் என்று அர்த்தம் ஆகாதே. இயற்கையை அறிவது என் தனித் தேர்ச்சி."

"ஒன்று கேட்க அனுமதியுங்கள். இப்போது நீங்கள் என்ன ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் நூல் எல்லோருக்கும் எளிதில் விளங்கும் புத்தகம் ஆயிற்றே. உங்கள் முக்கிய வேலை என்ன?"

"இது உங்கள் செய்தித்தாளின் வாசகர்களுக்கு அக்கறை ஊட்டுவது அரிதே. உயிரணுப் பகுப்பு உறுப்பின் அல்புமென் தொகுப்பின் தொடர்பில் 'DNA'யின் மாற்று மறு நிகர் தயாரிப்பதில் ஈடுபட்டிருக்கிறேன்."

"இது எனக்கு ஏதோ விளங்காத வேற்று மொழி போலப் படுகிறது என்பது உங்களுக்குப் புரிகிறதா ஐயா? எங்கே, தயை செய்து திருப்பிச் சொல்லுங்கள்."

பேராசிரியர் நிதானமாகத் திருப்பிச் சொல்ல ஜானி விருப்பின்றிச் சுருக்கெழுத்தில் குறித்துக் கொண்டான். அப்போது அவன் மூளையில் உதித்தது அதிகப் பொருள் பொதிந்த கேள்வி:

"நீங்கள் 'DNA'யைக் குறிப்பிட்டீர்கள். இது பிறப்பியல் சம்பந்தமானது அல்லவா? ஆனால் உயிரியலார் 'DNA'யைப் பற்றி

அறிந்திருக்கிறார்கள். வண்ணத்திப் பூச்சிக்கு எத்தனை கால்கள் என்பதையோ அறியாதிருக்கிறார்கள் என்பதற்காக அவர்களை உங்கள் நூலில் விளாசியிருக்கிறீர்களே." (சபாஷ் ஜானி! பொருத்தமான கேள்வி)

"உயிரியலார் அறிவார்கள் என்று வைத்துக் கொள்வோம். நீங்களோ?"

"இரட்டைப் படை எண், பேராசிரியரே"

"சரியான பதில். நல்லது, மெல்வின், 'DNA' என்பது உயிர். இதுவே ஜீன்கள், பாரம்பரியம், மாற்றம், பரிணாமம் எல்லாம். ஆனால் உயிர் என்பது 'DNA' மட்டுமே அல்ல."

"உலகத்தில் ஆட்கள் வசிக்காத தீவுகள் இருப்பதாக நீங்கள் உண்மையிலேயே எண்ணுகிறீர்களா?"

"நமக்குத் தெரியாத, வரைபடத்தில் பெயர் குறிக்கப்படாத தீவுகள் அனேகமாக இல்லை என்றே நினைக்கிறேன். ஆனால் ஆட்கள் அற்றவையும் ஆராய்ந்து அறியப்படாதவையும் கணிசமாக உள்ளன."

"எங்கே?"

"பெரும்பாலும் பனிக்கட்டி மாகடலில். தென் கடல்களிலும் இம்மாதிரித் தீவுகள் இருக்கத்தான் செய்கின்றன."

அரசியல் கேள்விகளுக்கு விடைகள் அளிக்க ஹாக்லண்டு மறுத்துவிட்டார். திரைப்படங்களிலும் தொலைக்காட்சி நிகழ்ச்சி களிலுமோ அவருக்கு அக்கறையே இல்லை.

ஜானி தன் கட்டுரையை உரிய நேரத்தில் எழுதிக் கொடுத்து விட்டான். அவன் உளமார்ந்த ஈடுபாட்டுடன் அதை எழுதினான். சலிப்பூட்டும் இந்தக் கனவு காண்பவரின் அவலப் பிதற்றலை மறுத்துரைக்க அவனுக்கு விருப்பம் உண்டாயிற்று.

அவன் எழுதினான்: "சால்புள்ள அஃபாலியாக்களும் அவற்றை விட எவ்வளவோ கவர்ச்சி குறைந்த பைப்பாலூரட்டி ஓநாயும் மறைந்து ஒழிந்ததற்காகக் கண்ணீர் விட நாம் தயாராயிருக்கிறோம். ஆனால் இது பயனற்ற கண்ணீர். மனிதன் இயற்கையை வெற்றி கொண்டுவிட்டான். இனி அது நம்மை எதனாலும் வியப்பு அடையச் செய்ய முடியாது. நமது குழந்தைகள் மிருகக் காட்சிசாலைகளுக்குப் போகட்டும். மிருகக்



காட்சிசாலைகளில் உள்ள பிராணிகள் நலமே வாழட்டும். பொருட்காட்சிசாலைகள் இருக்கும்போது பிராணிக் காட்சியிடங்களும் ஏன் இருக்கக் கூடாது? மிருகங்களைப் பார்ப்பது பயன் உள்ளது. நமக்குத் தெரிந்த நல்லியல்பு உள்ளவர்களை அப்போது நாம் இன்னும் நன்றாகப் புரிந்து கொள்வோம். எங்கள் கல்லூரிப் பேராசிரியர் ஒருவர் என் நினைவுக்கு வருகிறார். சரியான நீர்யானை அவர். அப்படியே நாங்கள் அவரை அழைத்தோம்.

"நகரத்திலாயினும் சரி, ஆளற்ற தீவிலாயினும் சரி, பார்க்கப் போனால் மனிதன் எங்குமே ராபின்ஸன் க்ரூஸோ தான். எங்குமே அவன் தனியன் - இந்தச் சொல்லின் ஆழ்ந்த பொருளில். ஆளற்ற தீவு எனக்கு அச்சம் ஊட்டவில்லை. அதிலும் துணைக்கு ஒரு பெண் - இனியவள், குதூகலம் உள்ளவள் - கிடைத்தால்.

ஆனால் கடற்கரையில் அழுகிக்கொண்டிருக்கும் நீர்ப்பூண்டு களின் மணத்தைவிடப் பெட்ரோலின் வாசம் தற்கால மனிதனுக்கு நிச்சயமாக அதிக உவப்பானது."

### கெட்ட தீவு

மூடுபனியின் ஊடாகவே கப்பலின்
முன்னே எழுந்ததோர் தீவு.
காடு அடர்ந்தது, விந்தையானது,
ஆளற்ற, பேரற்ற தீவு.
சோம்பலுடனே பார்த்திருந்தோம் நாங்கள்
அக்கறை ஏதும் இல்லாமல்,
கூம்பு சுருட்டு வடிவச் சுறாமீனின்
மேலாகச் சென்றதெம் கப்பல்.
பாய்ந்து வடக்கு நோக்கிப் பெருகிட்ட ஆழ்
நீரோட்டத்திற்கு மேலே,
மாயத்தோற்றம்போல் பெருமிதம் ஆர்ந்திட
அமைதியாகச் சென்றோம் நாங்கள்.
தீவு மிதந்தது எங்கள் முன்னே, வான
வில் நிறத் தொலைவிலிருந்தே
மேவும் இசைக் குழல்கள் போல் ஒலித்தன
விதவித விந்தை மரங்கள்.
ஆர்வம் பொங்கும் இதழ் வாய்கள் திறந்தன

அழகிய பல்நிற மலர்கள்.
பேரின்பத்தையும் அற்புதத்தையும்
போற்றி ஆர்த்தன புட்கள்.
தங்கிற்று முன்போல மர்மத்திரைபோர்த்துக்
கப்பலின் பின்னே அத்தீவு.
பொங்கு நுரைத் தடம் மங்கிற்று எங்கட்கும்
எங்கள் கனவுக்கும் ஊடே

வில்லி பாட்டன்

ஜானியின் கட்டுரை இரண்டு நாட்களுக்குப் பிறகு வெளி வந்தது. சன்மானம் நிறையத்தான் கிடைத்தது. ஆனால் வாசகர்கள் அதைப் பற்றிச் சர்ச்சை செய்து கடிதங்கள் எழுதவில்லை.

அப்புறம் வாழ்க்கை பழைய போக்கிலேயே இயங்கலாயிற்று. செய்தித்தாள் அலுவலகம், ஏதேனும் பிணத்தைப் பார்வையிடு வதற்கு அதிகாரிகளுடன் பயணம், திரைப்பட நட்சத்திரம் மே ஓல்டர்சனுடன் பேட்டி, மாலைகளில் பெஸ்ஸியுடன் அளவளாவல், சினிமா, "க்ளோரியா" ரெஸ்டாரண்டில் நடனங்கள் என்று நாட்கள் கழியலாயின. காலையில் மனச் சலிப்பு, மதியச் சாப்பாட்டுக்கு பின் வேலையில் துடிப்பும் தன்னம்பிக்கையும். ஹாக்லண்டையும் அவருடைய நூலையும் ஜானி மறந்து விட்டான்.

ஒரு வாரத்துக்குப் பின் தலைமை ஆசிரியர் ஜானியைக் கூப்பிட்டு அனுப்பினார்.

"மெல்வின். நீங்கள் திறமையுள்ள இளைஞர். உங்கள் தனிப்பட்ட தகுதியைக் காட்டவும் பணம் சம்பாதிக்கவும் உங்களுக்கு வாய்ப்பு அளிக்க விரும்புகிறேன்."

"நன்றி, ஐயா"

"நமது செய்தித்தாள் பரபரப்பு ஊட்டவேண்டும். நல்ல மாதிரியான பரபரப்பு, அரசியல் தொடர்பு இல்லாதது. வியத்-நாம் போர் வாசகர்களுக்குப் புளித்துப்போய்விட்டது. துப்பறியும் தொடர் கதையும் பயன்படாது. நான் சொல்வது விசித்திரமாகப் படலாம். ஆனால் தற்கால வாசகர்கள் விஞ்ஞானத்தில் அக்கறை காட்டுகிறார்கள். குறுகிய காலத்தில் ஹாக்லண்டின் புத்தகத்தின் ஆறு பதிப்புகள் வெளியாகிவிட்டன. மற்றவையும் இவ்வாறே. கட்டுமரத் தெப்பத்தில் பயணம் செய்த நார்வே வாசியின் கதை நினைவிருக்கிறதா உங்களுக்கு?"



"ஹையர்டாலின் பயணம் தானே?"

"ஆம், அப்படித்தான் ஏதோ ஒன்று. ஆகவே, மெல்வின், உங்களை ஆளற்ற தீவுக்கு அனுப்ப எண்ணியிருக்கிறேன்."

"எதற்காக?"

"உங்கள் கட்டுரையிலிருந்துதான் இந்த எண்ணம் உதயம் ஆயிற்று. தற்கால மனிதன் ஆளற்ற வனப் பிரதேசத்தில். இதை வைத்துக் கொண்டு அருமையான கட்டுரைத் தொடர், ஏன், புத்தகங்கூட எழுதலாமே."

"அம்மாதிரித் தீவுக்கு எங்கே போவது?"

"உங்கள் ஹாக்லண்டு சொல்வது உண்மை ஆனால் போலினேஷியாவில். நமது செய்தித்தாள் எல்லாம் செய்ய வல்லது. நீங்கள் தன்னந்தனியே, ஆண் அல்லது பெண் துணை எதுவும் இல்லாமல் அங்கே போங்கள். உணவுப் பண்டங்களோ, ரேடியோவோ உங்களிடம் இருக்காது. தீவில் ஒரு மாதம் இருங்கள். உங்கள் பயணச் செலவைச் செய்தித்தாள் ஏற்றுக் கொள்ளும், தகுந்த சன்மானமும் அளிக்கும்."

"எவ்வளவு?"

"நன்றாக எழுதப்பட்ட ஆயிரம் வரிகளுக்கு ஆயிரம் டாலர்கள். மாதச் சம்பளம் தனி."

"ஓ. கே. (எத்தனை வரிகள் அவன் எழுதுவான்? பதினாயிரத்துக்குக் குறையாமல். எதற்கும் முயன்று எழுதினால் போயிற்று!)

"நல்ல பையன். நீங்கள் போகலாம், மெல்வின். வியாழக் கிழமை மறுபடி சந்திப்போம்."

ஜானி ஆளற்ற தீவைப் பற்றி எண்ணலானான். ஆனால் தஹீத்தி, ஸமோவா தீவுகளின் அழகைக் கண்டு களிக்கும்படி அழைத்த உல்லாசப் பயணக் கம்பெனிகளின் விளம்பரப் போஸ்டர்கள் தவிர எதையும் அவனால் கற்பனை செய்ய முடிய வில்லை. சிவப்பு மலர் வளையங்களைத் தலைகளில் அணிந்த அரைநிர்வாணப் பழுப்பு மேனி நங்கையர், பனை வகை மரங்கள், கிளிகள், நீலமணிக் கடல் - இந்தக் காட்சியே அவன் மனக்கண் முன் தோற்றம் அளித்தது.

அன்று மாலை ஜானியும் பெஸ்ஸியும் பல்வகை நிகழ்ச்சியைக்

காணச் சென்றார்கள். மேடையில் சோர்ந்த கோமாளி சயாமியப் பூனையுடன் உரையாடினான்:

"பூனைப் பெண்ணே, நீ இந்தோசீனத்தவள் அல்லவா? தாய்நாடு செல்ல உனக்கு ஆசையாய் இல்லையா?"

பூனை முதுகை வளைத்துப் பயங்கரமாகச் சீறியது. அதன் விழிகள் செந்தணல்களாகச் சுடர்ந்தன.

"ஆசை இல்லையா என்ன?"

பூனை மியாவ் என்று கத்தித் தலையை ஆட்டிற்று.

"ஓ, சண்டை நடப்பது உனக்குப் பிடிக்கவில்லையா?"

பூனை மியாவ் என மறுபடி கத்தியது.

"பார்த்தீர்களா சீமாட்டிகளே, சீமான்களே! மிக அறிவுள்ள பூனை கூட மனிதனைவிடப் புத்தி மந்தமானதுதான். இந்தப் பூனைக்குச் சண்டை நடப்பது பிடிக்கவில்லை. வியத் - நாம் செல்ல இஷ்டமில்லை! இல்லை சீமாட்டிகளே, சீமான்களே, பூனைக்கு ஆன்மா கிடையாது. மனிதர்களுக்கோ உண்டு. நாம் இதை அறிவோம், பத்திரிகைகள் வாயிலாக!"

பார்வையாளர்கள் கரகோஷம் செய்தனர், சில கோபக் குரல் களும் ஒலித்தன. கோமாளி தன் பூனையுடன் திரைக்குப் பின் மறைந்தான். ஜாஸ் இசை ஒலித்தது. மேடைமீது தோன்றினாள் பாடகி - அழகிய நீக்ரோ மங்கை.

பரிசாரகன் மது எடுத்து வந்தான்.

"புதிய ராபின்ஸன் க்ரூஸோவுக்காகப் பருகுவோம்!" என்று மதுக் கிண்ணத்தை உயர்த்தினாள் பெஸ்ஸி.

இருவரும் அருந்தினார்கள். இது அவர்கள் குடித்த மூன்றாவது கிண்ணம். பெஸ்ஸி உற்சாகம் அடைந்தாள். மாறாக ஜானியோ ஏங்கிப்போனான். பிரெஞ்சுக்காரர்கள் சொல்வது போல Vin triste*.

"பாழாய்ப்போகிற ஹாக்லண்டு! அவர் தயவால் நான் உலகின் மறுகோடிக்குப் பயணம் செய்யவேண்டும். ஒரு மாதம் பூராவும் தென்னை மரத்தின் அடியில் வசிக்க வேண்டும். அடிமுட்டாள்தனம்!"

* துயர்தரும் மது.



"இதில் ஆழ்ந்த பொருள் இருக்கிறது, அன்பே! டாலர்களில் கணக்கிடக்கூடிய பொருள்."

"அங்கே நண்டுகள் ஊர்ந்துகொண்டிருக்கும். நீந்திக் குளிக்கவும் முடியாது - சுறாமீன்கள்!"

"அப்படியானால் நீந்தாதே. நீ பத்திரமாகத் திரும்புவதுதான் எனக்கு வேண்டும். ஆகா, உன் உடம்பு எப்படிப் பழுப்பேறியிருக்கும்!"

"ஒரு விஷயத்தில் ஹாக்லண்டு சொல்வது சரியே! எனக்கு உண்மையாகவே விலங்குகளைப் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்தக் கேடுகெட்ட பூனையின் விழிகள் எப்படிச் சிவப்பாகச் சுடர்ந்தன பார்த்தாயா? ஒருவேளை அது பூனையே இல்லை போலும். ஏதேனும் மனித விகிருதியோ என்னவோ."

"அழகுதான் போ. சயாமியப் பூனைகளின் கண்கள் செவ்வொளி வீசும். சாதாரணப் பூனைகளின் விழிகளோ பச்சையாக மின்னும். வகைக்கு ஒன்றாக இரண்டு பூனைகளைக் கொண்டு போக்குவரத்துக் குறிவிளக்கு ஒன்று அமைத்துவிடலாம்."

"மர்மத் தீவு, ஹுவான் ஃபெர்னாண்டஸ் தீவு, புனித ஈஸ்டர் தீவு, புதையல் தீவு. எதிர்பாராவிதமாக மூன்று எலும்புக்கூடு களுக்கு அடியே புதையல் பெட்டி எனக்குக் கிடைக்கலாம். யார் கண்டது? ஆமாம், ஆமை முட்டையின் ருசி எப்படி இருக்கும் என்று தெரிந்தால் தேவலையே."

அடுத்த நாளே ஜானி வேலையில் முனைந்தான். நகர நூலகத்துக்கு அடிக்கடி போனான். தென்கடல்கள் பற்றி "ஜியோக்ராஃபிகல் மாகஸீன்" என்னும் சஞ்சிகையில் அழகாகப் பதிப்பிக்கப்பட்டிருந்த ஏராளமான கட்டுரைகளையும் அதிக ஆழ்ந்த முறையில் எழுதப்பட்ட நூல்களையும் படித்தான். போர்ட்டர் என்ற கிழவனோடு சேர்ந்துமீன் பிடிக்கக் கற்றான். அதில் ஓரளவு தேர்ச்சியும் பெற்றான். இந்த விந்தைத் திட்டத்தில் அவன் மனம் முழுதும் ஈடுபட்டுவிட்டது. ஆளற்ற தீவைக் கண்டுபிடிக்க வாய்க்காமல் போய்விடுமோ என்ற ஒரு பயந்தான் இப்போது அவனுக்கு உண்டாயிற்று.

ஆனால் "விக்ஃபீல்டு செய்திகள்" பத்திரிகை உண்மையிலேயே மிகுந்த வல்லமை கொண்டிருந்தது. இந்தத் திட்டத்தால் குறைந்த செலவில் நிறைய லாபம் கிடைக்க வாய்ப்பு இருந்தது. எனவே

தலைமை ஆசிரியர் இதில் முழுமூச்சாக ஈடுபட்டார். ஸான் - பிரான்சிஸ்கோவிலும் ஹோனலூலுவிலும் இருந்த பத்திரிகை நிருபர்கள் ஹவாயிலிருந்து ஆஸ்திரேலியாவுக்கும் மணிலாவிலிருந்து வால்பரைஸோவுக்கும் செல்லும் கப்பல்களின் தலைவர்களைச் சூழ்ந்தார்கள். ரம்மும் பிராண்டியும் ஏராளமாகப் பருகப்பட்டன. ஐந்தாவது கிண்ணம் பருகியபின் கப்பல் தலைவர்கள் படர்தாவரப் புதர்களில் இருந்த விஷமுள்ள அட்டைகளையும் புலிச் சுறா மீன்களையும், காற்சட்டை அணிபவர்களும் வானொலி கேட்பவர்களுமான மர்ம மனிதவூன் தின்னிகளையும் பற்றி மாயக் கதைகள் சொல்லத் தொடங்குவது வழக்கம். இந்த உரையாடல்களே செய்தித்தாள்களுக்குச் சுவையான விஷயங்களைத் தந்தன. "செய்திகள்" பத்திரிகையின் ஸான் - டியாகோ நிருபர் மாக் அல்லிஸ்டர் கடற்பிரயாணக் கதைகளின் தொகுப்பு ஒன்று வெளியிடுவது பற்றி ஏற்கனவே சிந்தனை செய்யலானான். "போலந்துவாசி ஜோஸஃப் கொன்ராடைவிட நான் எந்த வகையில் தாழ்ந்தவன்?" என்று அவன் எண்ணினான். ஆனால் க்ளாய்டு டிப்பிட் என்பவனுக்குத் தான் அதிர்ஷ்டம் அடித்தது. "வைகறை" என்ற கப்பலின் தலைவனான க்னூத் போந்தேஸன் என்னும் நார்வேக்காரன் ஆளற்ற தீவு ஒன்றைப் பற்றி டிப்பிட்டுக்குத் தகவல் கொடுத்தான். இந்த நார்வேக்காரன் நிதானம் உள்ளவன். மதுபானத்தை ஆச்சரியப்படும் அளவுக்கு விலக்கி ஒதுக்கியவன். சந்தேகமின்றி நம்பத் தகுந்தவன். அவன் சொன்ன விவரம் இது:

மிக்ரோனேஷியாவில், கரோலினா தீவுக்கூட்டத்தில் ஹோாக் தீவுக்குத் தெற்கே உள்ளது இத்தீவு. அந்தப் பக்கத்தவர்கள் அதை "பூவா-தூ-தஹீ" என்று அழைத்தார்கள். தனித்த பவளப்பாறை என்பது அதன் பொருள். தீவு அளவில் பெரியது அல்ல. ஐந்து கிலோமீட்டர் அகலமும் அதே நீளமும் கொண்டது. ஆனால் நன்னீரும் செழுமையான தாவரங்களும் அதில் உள்ளன. தேங்காய்களும் வேறு எவையோ மஞ்சள் பழங்களும் - அவை என்ன என்பது போந்தேஸனுக்கு நன்றாக நினைவில்லை - அங்கே உண்டு. அவன் தீவின் கரையில் தங்கியது ஒரு மணி நேரத்துக்குமேல் இராது. அங்கே அக்கறைக்கு உரிய எதையும் அவன் காணவில்லை. போலினேஷியர்கள் அந்தத் தீவுக்குப் போவதே கிடையாது. ஜப்பானியர்கள் அங்கே போனார்கள், ஆனால் போந்தேஸன் அறிந்தவரை, அவர்கள் விரைவில் வெளியேறிவிட்டார்கள். அவர்கள் படைவீரர்கள் போலக்



காண்கிறது. ஆனால் தீவில் படைத் தளம் எதுவும் அவர்கள் அமைக்கவில்லை. அமெரிக்கர்களும் அதைப் புறக் கணிக்கிறார்கள். ஆனால் கடற்படை இலாக்காவுக்கு அதைப்பற்றி அதிக விவரங்கள் கட்டாயம் தெரியும்.

தலைமை ஆசிரியர் வாஷிங்டனுக்கு தொடர்பு கொண்டார். ஆனால் பிரமாத மதிப்புள்ள தகவல்கள் எவையும் அவருக்குக் கிடைக்கவில்லை. தீவு ஆளற்றது என்பது உறுதிப்படுத்தப்பட்டது. அதில் குடியேறுவது சரியல்ல என்று காரணம் காட்டாமல் யோசனை கூறப்பட்டது. தலைமை ஆசிரியர் பட்டுத் தேறிய பேர்வழி. அமெரிக்க இராணுவக் காரியாலயம் அந்தத் தீவுக்கு ஆட்கள் போவதைத் தனக்கே உரிய தனிக் காரணங்களால் விரும்பவில்லை என்று அவர் முடிவு செய்தார். அவர்கள் எக்கேடும் கெட்டுப்போகட்டும்! அவருடைய திட்டத்தை இராணுவத்தினர் மோப்பம் காண்பதற்குள் மெல்வின் விக்ஃபீல்டு திரும்பி விடுவான்.

பயண வழியைத் தீர்மானிப்பது பாக்கி இருந்தது. இதில் ஒன்றும் கஷ்டம் இல்லை. விமானத்தில் மெல்போர்ன் போவது (யாவற்றிலும் அதிகச் செலவு இதில்தான்), அங்கிருந்து ரெயிலில் டவுன் ஸ்வில், கப்பலில் மோர்ஸ்பி துறைமுகம்வரை பயணம், அப்புறம் வழிச்செல்லும் கப்பல்களில் யாத்திரை.

பிரிவு சொல்லும்போது தலைமை ஆசிரியர் கூறினார்:

"உங்கள் மேல் எனக்குப் பொறாமை உண்டாகிறது, தம்பீ. தென் கடல்களில் பயணம் செய்ய வாழ்நாள் முழுதும் எனக்கு அடங்காத ஆசை. ஆனாலும் ஹோனலூலு கடற்கரையைத் தாண்டி அப்பால் போக இதுவரை வாய்க்கவில்லை."

"நீயாவது பயணம் செய்ய ஆசைப்படுவதாவது, சைத்தான்! இது உன் சுபாவத்துக்கே ஒவ்வாதது ஆயிற்றே" என்று எண்ணிக் கொண்டான் ஜானி.

இந்தப் பயணம் ஜானிக்கு மனநிறைவு அளித்ததா? சந்தேகம் இல்லாமல். காலை நேர மனநிலை அனேகமாக மறைந்துவிட்டது. இப்போது அவனுக்குப் பெருத்த வாய்ப்பு கிட்டிவிட்டது போல் இருந்தது. தென் கடல்களில் பயணம், அயல்நாட்டு அனுபவங்கள், இயற்கையின் அழகுகள் - எல்லாம் இப்போது அவனுக்கு வாய்த்து விட்டன. தீவில் ஒரு மாதம் கடினமான, துணிகர வாழ்க்கை நடத்த வேண்டும். இந்தக் கெடு பெரியதே அல்ல. அற்புதமான

கட்டுரைகள், எல்லோரையும் வசீகரிக்கும் புத்தகம். பெஸ்ஸியை மணந்துகொண்டு, தோட்டம் சூழ்ந்த வசதியான பங்களாவில் வசிக்கலாம். ஐரோப்பாவுக்குப் பயணங்கள் செய்யலாம். அவன் வெற்றிகர எழுத்தாளன் ஆகிவிடுவான், புலிட்ஸர் பரிசு பெறுவான்.

இதோ அவன் "டார்னாடோ" என்னும் கப்பலின் மேல் தட்டில் நின்று கொண்டிருந்தான். சூறாவளி என்று பொருள்படும் இந்தப் பெயரைக் கொண்டிருந்தபோதிலும் கப்பல் பெரியது அல்ல. எடை ஆயிரம் டன், வேகம் மணிக்கு எழுபது கடல் மைல்கள், அவ்வளவே. "டார்னாடோ" பாப்புவாவிலிருந்து பிலிப்பைன் செல்வதாயிருந்தது. இந்தச் சுற்றுவழிக்கான கட்டணத்தைப் பத்திரிகைக் காரியாலயம் செலுத்திவிட்டது. ஆரம்ப நாட்களில் அலைகள் கப்பலை உக்கிரமாக அசைத்தாட்டின. ஆயினும் ஜானிக்குக் குமட்டல் எடுக்கவில்லை. கடலின் கொந்தளிப்பு அவனைப் பாதிக்கவில்லை. இதனால் ஜானிக்கு உற்சாகம் பொங்கியது.

இன்று மாகடல் உண்மையாகவே அமைதியாக இருந்தது. பைந்நீல நீர் தளும்புவது பட்டுத் துணி மெல்லென அசைவது போல் காட்சி அளித்தது. வானம் இளநீலமாக ஒளிர்ந்தது. ஆயிரமாயிரம் வெயிலொளிக்கீற்றுகள் நீரில் மினுமினுத்தன. கப்பித்தான் மேடைக்கு இட்டுச் செல்லும் ஏணியின் பாலிஷ் செய்யப்பட்ட தாமிரக் கைப்பிடிக் கம்பிகள் கண்கள் கூசும்படிப் பளிச்சிட்டன. பறக்கும் மீன்கள் அடிக்கடி மேல்தட்டில் விழுந்தன. அங்கிருந்து அவை நேரே வாணலிக்கு எடுத்துச் செல்லப்பட்டுப் பொரியல் செய்யப்பட்டன. கப்பலின் வலப்புறம் பவளத்தீவுகள் காட்சி தந்தன. செழும் தாவரங்கள் தொலைவிலிருந்து ஒரே நீலமாகத் தோற்றம் அளித்தன. சுருங்கச் சொன்னால் எல்லாமே கற்பனைக் கதையில் வருவன போல் இருந்தன. ஜானி அதிசயக் குறிக்கோளை நெருங்கிவிட்டான்.

ஒலியாய் தீவைச் சேர்ந்த உவாத்தா என்ற பெயர் உள்ள ஒரு போலினேஷிய மாலுமியிடம் ஜானி பேச்சுக் கொடுத்தான். இவன் இளமை கடந்த மனிதன். மிக்ரோனேஷியாவில் நிறையக் கப்பல் பயணம் செய்தவன். ஆளற்ற தீவான பூவா-தூ-தஹீயை அவன் அறிந்திருந்தான்.

"கெட்ட தீவு, கெட்ட மண், மிஸ்டர்" என்று சிதைந்த ஆங்கிலத்தில் சொன்னான் உவாத்தா.



"எதனால் கெட்டது?"

"தேங்காய் கெட்டது, பறவை, வண்டு, மீன் கெட்டது."

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?"

"என் தகப்பனார் ரொம்ப ரொம்பக் கிழவர். பூவா-தூ-தஹீயில் தூப்பே-இயோ அஹூ என்ற கெட்ட தேவதை உள்ளது என்று என் அப்பா சொன்னார்."

"தலைகால் புரியவில்லையே."

உவாத்தா ஒன்றும் பேசாமல், காதிலிருந்து சிகரெட்டை எடுத்துப் பொருத்திப் புகைத்தான். அப்புறம் சொன்னான்:

"நான் நாகரிகம் உள்ளவன், மிஸ்டர். நான் பள்ளிக்கூடம் போயிருக்கிறேன். தேவதைகள் கிடையாது, கிறிஸ்துவும் கன்னி மரியம்மையும்தான் உண்டு என்பது எனக்குத் தெரியும். ஆனால் இந்தத் தீவு கெட்டது, ரொம்பக் கெட்டது. நான் நிறையக் கப்பல் பிரயாணம் செய்திருக்கிறேன், ஆனால் பூவா-தூ-தஹூக்குப் போனதே கிடையாது."

"நான் இப்போது அங்கே ஒரு மாதம் வசிக்கப் போகிறேன்."

"நீங்கள் ரொம்பத் துணிச்சல் உள்ளவர், மிஸ்டர். கெட்ட பறவை, கெட்ட மீன். என் தகப்பனார் சொல்லியிருக்கிறார்."

விந்தையான உரையாடல். புகழ்ச்சியால் ஜானிக்கு உச்சி குளிர்ந்துபோயிற்று. ஆனால் இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? தர்க்கரீதியாகச் சிந்தனை செய்தால், ஒருவரும் வசிக்காத தீவு பற்றி, குடியில்லா வீடு பற்றிக் கிளம்புவதுபோலப் பற்பல கட்டுக்கதைகள் பரவுவது சகஜமே. அதில் பேய்கள் கட்டாயம் குடிபுகும். ஆனால் தீவில் ஆட்கள் வசிக்காதது ஏன்? "கெட்ட" என்ற சொல் காரணத்தைக் குறிக்கிறதா, வினைவையா? எது எப்படி இருந்தாலும் விஷயம் வரவர அதிகக் கவர்ச்சி உள்ளது ஆகிக்கொண்டு போகிறது. நம் காலத்தில் ஆளற்ற தீவு என்பது மெய்யாகவே புதிர்தான்.

"ஆனால் நான் இந்தப் புதிரை அவிழ்த்தே தீருவேன்" என்று ஜானி தீர்மானித்தான். தனக்குள் இன்பக் கிளர்ச்சி பரவுவதை அவன் உணர்ந்தான். அவன் நிருபராய் இருந்தது வீண்போக வில்லை.

இதற்கு மூன்று மணி நேரத்தில் கப்பல் தலைவன் தொடு

வானத்துக்கு மேல் மிதந்த மேகத்தைச் சுட்டிக்காட்டி, "அதோ, உங்கள் தீவு, மிஸ்டர் மெல்வின்" என்றான்.

"என்ன, வானத்திலா?"

"வேண்டுமானால் அப்படியே வைத்துக்கொள்ளுங்கள். மேகத்தில் பசிய வண்ணச் சாயல் தெரிகிறதா? தீவருகே உள்ள காயலின் நீரை அது பிரதிபலிக்கிறது. காயல் ஆழமில்லாதது. அதன் நீர் சுற்றுப்புற நீரைவிட அதிகப் பசுமையானது."

அன்று மாலையில்தான் கப்பல் தீவை அணுகிற்று. பூமத்திய ரேகைக்கு அருகே விரைவாக இருட்டிவிடும். தாரகைகள் வானில் சிதறின, மறுகணமே முழு ஒளியுடன் மினுமினுக்கத் தொடங்கின.

கப்பல் காயலில் புகுந்து நங்கூரம் பாய்ச்சியது. ஜானியின் சாமான்கள் எல்லாம் வெகு நேரத்துக்கு முன்பே கட்டப்பட்டுத் தயாராய் இருந்தன. ஆனாலும் அன்று இரவு அவன் அனேகமாகத் தூங்கவே இல்லை. அவன் கிளர்ச்சி அடைந்திருந்தான். மர்ம நிகழ்ச்சிகளை எதிர்கொள்ள அவன் ஆவல் கொண்டிருந்தான்.

மறுநாள் காலை, "டார்னாடோ"விலிருந்து இறக்கப்பட்ட படகு அவனைத் தீவில் கரை சேர்த்தது.

### தீவில் ஆட்கள் வசிக்காதது ஏன்?

முரட்டுத் தோல் போர்த்த எலும்புக்கூடு
கிடக்குது உணர்வின்றி, எண்ணமின்றி,
மரத்தைப் போலும் இல்லை, விலங்கையோ,
மனிதனையோ போலும் இல்லை அது.

வானக்கோள்கள் அதன் மேல் சுழலும்,
வட்டமிட்டிடும் பேரண்டம்.
ஆனால் உணர்ச்சி மட்கிட்டதனால்
அறியாது சிரிப்பும் துயரும் அது.

மரக்கட்டை போல் அண்டவெளி நடுவே
மஞ்சள் கபாலம் குமிழ்த்திருக்கும்.
இரவும் பகலும் ஒன்றே அதற்கு
எல்லாமே மாறுதல் அற்றனவே.



என்ன செய்தான் அவன், யாரவன்தான்
என்பது முக்கியம் அற்ற சேதி.
இறைவன் குருடன், செவிடன், ஊமை,
இங்கே பிறப்பதன் முன்போலே.

வில்லி பாட்டன்

தீவு அற்புதமாக அமைந்திருந்தது. முன்னூறு அடிக்கு மேற்படாத உயரமுள்ள சிறு மலை செழுமையான தாவரங்கள் அடர்ந்து நின்றது. பளிங்கு போன்ற காயல் நீர் மலையின் அடியை வருடியது. காயலின் இரு மருங்கிலும் அரண் செய்து நின்றன பவளப் பாறைகள். ஆனால் அதன் புகு முகம் திறந்திருந்தது. சிறு கப்பல் குறுங்குடாவில் எளிதாகப் புக முடிந்தது.

கரைக்கு அருகே குன்றிலிருந்து பெருகிய ஓடையின் பக்கம் தன் கூடாரத்தை அடித்துக் கொண்டான் ஜானி. நிபந்தனைகளை நேர்மையுடன் நிறைவேற்றினான். உணவுப்பண்டச் சேமிப்புகள் எவையும் இல்லாமலே அவன் கரையில் இறங்கினான். "டார்னாடோ" கப்பலின் தலைவன் எழுத்துமூலம் இதைப் பிரமாணப்படுத்தியிருந்தான். எனவே கரை இறங்கியதுமே ஜானி உணவைப் பற்றிக் கவலை எடுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று.

முதலில் பழங்கள். ஜானி காட்டுக்குள் சென்றான். அடர்ந்த புதர்களை வெட்டி வழி செய்து கொண்டு போக வேண்டியிருக்கலாம் என்று எண்ணிக் கோடரியை உடன் எடுத்துப்போனான். அடர் புதர்கள் இல்லை. மரங்களின் நேரான அடிகள் ஒன்றுக்கொன்று இடைவிட்டே நின்றன. சூரிய கிரணங்கள் மேலிருந்து புகுந்தன. காடு விசாலமான இடப்பரப்பும் அமைதியும் கொண்டிருந்தது. மலை மேல் காடு படிப்படியாகவே உச்சிக்குச் சென்றிருந்தது.

ஆழ்ந்த நிசப்தம் நிலவியது. பட்சிகள் பாடவில்லை. அவை மௌனமாகக் கிளைக்குக் கிளை பறந்தன. தரையில் வளர்ந்திருந்தது வழக்கத்துக்கு மாறான செந்நிறம் உள்ள மென்மையான புல். படர்கொடிகள், ஆர்க்கிடுகள், வாழை, பலா முதலிய வெப்பமண்டலத் தாவரங்களைப் பாப்புவாவிலேயே ஜானி கண்டிருந்தான். இங்கே அவை ஒன்றும் இல்லை. விந்தையான காடு.

தாவரவியலை இன்னும் நன்கு அறிந்திருந்தால் உபயோக மாயிருக்கும். என்ன மரங்கள் இவை? மீன் செதில்கள் போன்ற மரப்பட்டை விந்தையானது. பழங்கள் எங்கே?

இன்னும் நூறு கெஜ தூரம் சென்றதும் குட்டையான சில மரங்கள் ஜானிக்கு எதிர்ப்பட்டன. பேரிக்காய்களை ஒத்த மஞ்சள் நிறப் பழங்கள் அவற்றில் தொங்கின. இவற்றைத் தின்னலாமா? எடுத்த எடுப்பிலேயே வயிற்றைக் கெடுத்துக் கொள்ளக் கூடாதே!

ஜானி சில பழங்களைப் பறித்தான். அவை மெதுவாகவும் பிசுபிசுப்பாகவும் இருந்தன. அவற்றில் ஒன்று கடிபட்டிருந்தது. சிவந்த சதையில் கூரிய சிறு பற்களின் தடங்கள் பதிந்திருந்தன.

"அணில் இதைத் தின்கிறது என்றால் நானும் உண்ணலாம்" என்று எண்ணினான் ஜானி.

கத்தியால் தோலைச் சீவிவிட்டுப் பழத்தை மேலாகக் கடித்து ருசி பார்த்தான். சுவை விசித்திரமாக இருந்தது. எலுமிச்சம் பழச் சாறு கலந்த சூயிங்கம் வெகு நேரம் வாயில் இருந்தால் ஏற்படுவது போன்ற சிறு புளிப்பு உள்ள சுவை. மட்டமான பழம். நல்ல அன்னாசிப்பழம் கிடைத்தால் எவ்வளவோ மேல்!

ஆனால் வேறு பழங்கள் தென்படவில்லை. தொங்கு பையில் பிசுபிசுப்புப் பழங்களை நிறைத்துக் கொண்டு ஜானி மேலே நடந்தான். நிசப்தம் அவனுக்கு எரிச்சல் உண்டாக்கிற்று.

அவன் நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். காடு ஏதோ தனி வகைப்பட்டதுதான். விஷயம் என்ன என்று புரிந்துகொள்ள வேண்டும்.

நிறங்கள் அசாதாரணமானவை. புல் இளஞ்சிவப்பு, பெரும்பாலான மரங்கள், செடிகளின் இலைகள் என்ன காரணத்தினாலோ நீலச் சாயல் கொண்டவை.

ஜானி ஓர் இலையைப் பறித்தான். அதன் வடிவம் அவனுக்கு வியப்பு உண்டாக்கிற்று. நுண்ணிய மயிர் அடர்ந்த நெட்டிலை மாறி மாறிக் குறுகியும் அகன்றும் இருந்தது. தவிர, இங்கே அட்டைகள் இல்லை. பாப்புவாவில் அவை எப்படித் தொல்லை கொடுத்தன! அசிங்கம்! எறும்புகளும் ஈக்களும் கொசுக்களும் வேறு.

தன்னை எதுவும் இன்னும் கடிக்கவில்லை என்பதை ஜானி



சட்டென உணர்ந்தான். சிறு பூச்சிகள் மெல்லிய ரீங்காரத்துடன் தலைக்குமேல் சுற்றிச் சுற்றிப் பறக்கத்தான் செய்தன. பக்கத்துக் கிளையில் உட்கார்ந்தது கன்னங்கரிய நிற வண்ணத்திப் பூச்சி.

விசித்திரமான வண்ணத்திப் பூச்சி! இதற்கு எத்தனை சிறகுகள்? மிக நிறையப் போல் காண்கிறது. தனிப்பட்ட முறையில் வளர்க்கப்பட்ட இரட்டைப்பூ தனது இயற்கை வடிவிலிருந்து எப்படி வேறுபடுகிறதோ அப்படியே இந்த வண்ணத்திப் பூச்சி சாதாரண வண்ணத்தியிலிருந்து வேறுபட்டிருந்தது.

ஜானி தக்கைத் தலைக்காப்பால் அதை மூடினான். பின்பு பூச்சியை எடுத்துக் கவனமாக ஆராயத் தொடங்கினான். அம்மாதிரி எதையும் அவன் ஒருபோதும் கண்டதில்லை. வண்ணத்திப் பூச்சியின் உடல் வண்டின் சிறகு மூடிபோலக் கடியதாய் இருந்தது. அது அளவில் கணிசமாகப் பெரியது. அதன் சிறகுகள் மூன்று அங்குலம் வரை விரிந்தன. அதற்குக் கால்கள் நான்கு, சிறகுகளோ - ஆறு!

வண்ணத்தி திடீரென்று அவன் விரல்களில் அசைந்தது. ஜானிக்கு ஊசியால் குத்துவது போலச் சுரீரென்று வலித்தது. அவன் பூச்சியை விட்டுவிட்டான். அது மேலே பறந்து பார்வைக்கு மறைந்தது.

"வண்ணத்திப் பூச்சி கடிக்கிறதே! விஷம் உள்ளதாய் இராது என்று நம்புகிறேன்."

ஜானி எரிச்சலுடன் திட்டி, கடிபட்ட விரலைச் சப்பத் தொடங்கினான். வலி விரைவில் அகன்றுவிட்டது.

ஆயினும் அவன் உற்சாகம் மங்கிவிட்டது. திரும்பி நடந்தான். கடற்கரையில் அமைதி கொலுவீற்றிருந்தது. கடற்காற்று வீசியது. இங்கே எல்லாம் வழக்கம்போல, சாதாரணமானவையாகப் பட்டன. தென்னை போன்ற சில மரங்கள் துருத்தி நின்றன. காய்கள்தாம் எட்டாத வெகு உயரத்தில் தொங்கின.

"கொசுக்களும் அட்டைகளும் இல்லாதது எனக்கு வருத்தம் அளிக்கவில்லை. ஆனால் எப்படியும் சாப்பிடாமல் முடியாதே!"

கிழவன் போர்ட்டர் கற்றுத்தந்தபடி மீன்பிடிக்கத் தொடங்கினான் ஜானி. விரைவில் கயிறு சுண்டி இழுக்கப்பட்டது. தூண்டில் வளைந்தது. முதல் இரண்டு மீன்கள் நீரிலேயே பிய்த்துக் கொண்டு போய்விட்டன. அப்புறம் பிடிபட்ட ஒரு

மீனை ஜானி வெளியே இழுத்துப் போட்டான். பெருத்த அளவும் எடையும் கொண்டிருந்தது அது. இது மீன்தானா? நீல மணி போன்ற இளநீல நிறத்துடன் சுமார் இரண்டு அடி நீளம் இருந்தது அது. அதன் உடல் குறுகியது. நீந்து துடுப்புக்களின் இடத்தில் விலங்குகளின் கால்களை ஒத்த விந்தையான நீட்சிகள். மேலே மூன்றும் கீழே மூன்றுமாக. அவற்றின் நுனிகளில் மெல்லிய முட்களுக்கு இடையே பிசுவாகப் பரந்த, அனேகமாக ஒளிபுகும் சவ்வுகள் இருந்தன. "நல்ல வேடிக்கைதான்! வெப்பமண்டல நீர்நிலைகளில்தான் எத்தகைய விசித்திரப் பிராணிகள் காணப் படுகின்றன!"

இந்தப் பிராணிக்குச் செதில்கள் இல்லை. தவளைக்கு உள்ளது போன்ற மெல்லிய, மிருதுவான தோல் மட்டுமே இருந்தது. ஜானி அதை ருசி பார்க்கத் தீர்மானித்தான். அதை வகிர்ந்து குடல்களை அகற்றினான். அதன் எலும்புகள் சாதாரண மீன்களின் எலும்பு களிலிருந்து அதிகமாக வேறுபடவில்லை. இறைச்சி டிரௌட்டினதுபோல இளஞ்சிவப்பாக இருந்தது.

ஜானிக்குக் கடும் பசி. நெருப்பு மூட்டி குழம்பு வைத்தான். குழம்பு அவ்வளவு நன்றாக வாய்க்கவில்லை. மீன் குழம்பைவிடக் காய்கறிக் குழம்பையே அதிகமாக ஒத்திருந்தது. ஒரு மீன் துண்டை மென்று விழுங்கினான். ருசியே இல்லாமல் சப்பென்று இருந்தது. சாப்பாடு மகா மட்டந்தான். ஆனாலும் ஒன்றும் குடி முழுகிவிடவில்லை. வேறு ஏதேனும் சுவையானது கிடைக்காமல் போய்விடாது.

ஜானிக்குக் களைப்பாய் இருந்தது. கூடாரத்தில் படுத்துக் கொள்ளத் தீர்மானித்தான். வெக்கையும் வீழலைகளின் ஒரு சீரான ஓசையும் அவனை விரைவில் உறக்கத்தில் ஆழ்த்திவிட்டன. அவன் கண்விழித்தபோது நன்றாக இருட்டிவிட்டிருந்தது.

"ஆக, முதல் நாள் கழிந்துவிட்டது. இன்னும் இருபத்தொன்பது நாட்கள் சென்றதும் எனக்காகக் கப்பல் வரும். அகாதப் பசி வதைக்கிறது. காலைவரை பொறுத்திருப்பது தவிர வேறு வழி இல்லை."

நிலவு அற்ற இரவு. விண்மீன்கள் சலனமற்ற காயல் நீரில் பிரதிபலித்தன. கரையில் பவள மணலில் இளம்பச்சையான வெளிறிய புள்ளிகள் பளிச்சிட்டன. இவை என்ன புதிதாக?

"இவை" கரையோடு மெதுவாக ஊர்ந்த நீண்ட வெண்



புழுக்கள் என்று தெரியவந்தது. மட்கிய மரச் சிம்புகள் போல அவை ஒளிர்ந்தன.

ஜானிக்குத் தலை சுற்றியது. கரிய வானம், கரிய நீர், கரிய தாவரங்கள், ஒலியற்ற நீர், சந்தடியற்ற தாவரங்கள். பளிச்சிடும் புழுக்கள் வேறு.

அங்கே, உலகின் மறு கோடியிலோ, விளம்பர விளக்குகள், மோட்டார்களின் இரைச்சல். கிளர்ச்சியூட்டும் ஜாஸ் இசையொலி. இங்கே அவன் தனியன். தன்னந்தனியன், புழுக்களின் நடுவே. ஆளற்ற தீவு என்பது இதுதான். ஜன்னல் வெளிக்குறட்டில் தன் புறாக்களின் அகவலைக் கேட்க அவன் இப்போது என்ன வேண்டுமானாலும் கொடுத்திருப்பான்.

நீரிலும் ஏதோ பளிச்சிடும் பிராணி நீந்தியது. மினுங்கு ஒளித் தடம் சற்று நேரம் நிலைத்திருந்துவிட்டு அப்புறம் சிதறிப் போயிற்று.

அடுத்த நாள் தென்னை மரங்களின் அடியில் சில காய்கள் அவனுக்குக் கிடைத்தன. அதிகப் பழக்கமான வடிவம் உள்ள ஏதோ ஒரு மீனையும் அவன் தூண்டில் போட்டுப் பிடித்தான். ஆனால் இந்த உணவும் எவ்விதச் சுவையும் அற்றதாக இருந்தது. ஏதோ காகிதத்தைச் சுவைப்பது போல. நண்டுகளோ, உண்ணக் கூடிய மெல்லுடலிகளோ இல்லவே இல்லை. ஜானியை ஓயாப்பசி வாட்டியது.

ஆனால் ஓடை நீர் குளுகுளுவென்று ருசியாக இருந்தது. காயலில் நீந்திக் குளிப்பதிலும் அபாயம் எதுவும் இல்லை என்று தெரியவந்தது. சுறாமீன்கள் அதில் இல்லை. அருவருப்பு தந்த புழுக்கள் சூரிய வெளிச்சத்தில் மறைந்துவிட்டன.

காட்டில் மறுபடி புகுந்து சென்றான் ஜானி. இம்முறை புதியவை அரிதாகவே கிடைத்தன. நீல பெர்ரிப் பழங்களைக் கண்டான் அவன். அவை சிறிது கசப்பாயிருந்தன. உண்ணத் தகுந்தவை போலவே தோன்றின. கரு வண்ணத்திப் பூச்சிகள் பறந்தன. வண்டுகளுக்குப் பதில் மென்மையான, நுண்மயிர் மூடிய உடலினவான நான்கு கால்பூச்சிகள் தரையில் ஊர்ந்தன. கொசுவோ ஈயோ எதுவும் இம்முறையும் அவனைக் கடிக்கவில்லை.

ஆம், ஒரு பாம்பு அவனைக் கடித்தது. அவன் அதைத் தற்செயலாக மிதித்துவிட்டான். அது அவனுடைய கணுக்காலுக்கு மேல் கூரிய பற்களைப் புகுத்திவிட்டது. அது குட்டையான,

தடித்த பாம்பு. அதன் சாம்பல் நிற உடல்மீது ஊதா நிற வட்டப் புள்ளிகள் இருந்தன. அவனைக் கடித்துவிட்டு எட்டிப் பிடிக்க முடியாத விரைவுடன் ஓடி மறைந்துவிட்டது.

ஜானியின் நெற்றியில் குளிர்ந்த வியர்வை குப்பென்று துளித்தது. அவன் பெருந்திகில் அடைந்தான். பெரிய முக்கோணத் தலை - சந்தேகமின்றி விஷப் பாம்புதான் அது.

ஜானி சட்டையைக் கிழித்துக் காலில் இறுக்குப் பின்னல் கட்டு போட்டான். வலியால் பற்களை நெறுநெறுத்து வைது நொறுக்கியவாறு கடிவாயைக் கத்தியால் கீறிவிட்டான். இரத்தம் தாரையாகப் பெருகியது.

சில நிமிடங்கள் சென்றதும் அவனுக்கு ஒரே சோர்வாய் இருந்தது. கண்கள் இருண்டன. புல்லில் சாய்ந்து முடிவை எதிர் பார்க்கலானான். பெஸ்ஸியும் தலைமை ஆசிரியரும் மாலுமி உவாத்தவும் அவன் உணர்வில் பல்வடிவங்காட்டியில் போல ஒருவர் பின் ஒருவராகச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். "கெட்ட பட்சி, கெட்ட மீன்" என்ற சொற்கள் அவனுக்கு நினைவு வந்தன. வண்ணத்திப் பூச்சிக்கு எத்தனை கால்கள்? இப்போது அவன் அறிவான், நான்கு என்று. எதற்காக இதைத் தெரிந்துகொள்ள வேண்டும்? அவனோ சாகப் போகிறான். அவன் அடி மடையன். தலைமை ஆசிரியரின் ஆசைகாட்டலுக்கு மயங்கிவிட்டானே!

ஹாக்லண்டை - உளநெகிழ்ச்சி கொண்ட அந்த தீர்க்கதரிசியை - கழுத்தை நெரித்துக் கொன்றுவிட வேண்டும் என்ற அடங்காத ஆவல் உண்டாயிற்று ஜானிக்கு. அப்புறம் அவன் கூச்சலிட்டு உதவிக்கு வரும்படி ஆட்களை அழைத்தான். இரட்டைக் குழல் துப்பாக்கியைப் பலமுறை சுட்டான்.

இதற்கிடையே அவனுடைய சோர்வு தொடங்கியது போலவே விரைவாக அகன்றுவிட்டது. கால் சாதாரணமாக வலித்தது, ஆனால் கத்திக் கீறல் காரணமாகவே. இரத்தப் பெருக்கு அனேகமாக நின்றுவிட்டது. அவன் பிழைத்துவிட்டானா என்ன?

உண்மையாகவே விஷம் அவனைப் பாதிக்கவில்லை. தன் அதிர்ஷ்டத்தை ஜானியால் இன்னும் நம்ப முடியவில்லை. பெருமை அவனுக்குள் ஊற்றெடுத்துப் பொங்கியது: அவன் நிதானம் இழந்து விடவில்லை, தேவையானவை எல்லாவற்றையும் செய்தான், யாருடைய உதவியும் இன்றித் தானே தன்னைக் காப்பாற்றிக் கொண்டான். எழுதுவதற்கு விஷயம் கிடைத்து



விட்டது! அன்று மாலைவரை அவன் உளம் மகிழ்ச்சி நிறைந்திருந்தது. பசியைக்கூட அவன் பொருட்படுத்தவில்லை.

இரவில் மழை பெய்தது. மறுநாள் காலை மலையும் காடும் புகைவதுபோல இருந்தது. கறுப்புச் சிறகுகள் கொண்ட ஒரு பறவையை ஜானி சுட்டு வீழ்த்தினான். தொலைப் பார்வைக்கு அது சாதாரணக் கரிச்சானை ஒத்திருந்தது. ஆனால் அதன் அலகு நீலப் புள்ளிகளுடன் ரோஜா நிறமாய் இருந்தது. அலகிற்குள் இருந்தன பற்கள் - கூரியவை, சிறியவை.

இந்தப் பறவை வழக்கமானதுபோல் இல்லை. தாவரங்களும் மீன்களும் பூச்சிகளும் புழுக்களும் - எல்லாமே விசித்திரமாக இருந்தன. விந்தையான தீவு...

சிவப்புப் புல், பற்கள் உள்ள பறவை, கடிக்காத பூச்சிகள், இவற்றின் தீய அர்த்தத்தை ஜானி திடுமென உணர்ந்தான். இவை எல்லாமே அளவுகடந்து அசாதாரணமாய் இருந்தன.

ஆனால் எல்லாவற்றிலும் மோசமாய் இருந்தது உணவு. பழங்களும் மீனும் பறவையும் ஒரேமாதிரிச் சப்பென்று ரப்பர், காகிதம் அல்லது மரத்தூள் போல இருந்தன. ஜானி ஓயாப் பசியால் வாதைப்பட்டான். வயிறு வலித்தது. கன்னப் பொருத்துக்களில் விண் விண்ணென்று தெறித்தது. அவன் நிறைய உறங்கினான். கனவில் அவனுக்கு முன் தோன்றின விந்தைப் பிராணிகள் - மயிர் மூடிய மென்மையான மேனிகள் கொண்ட போலினேஷிய தேவதைகள்.

"உவாத்தா இவற்றை என்ன பெயரால் குறிப்பிட்டான்? எனக்கு நினைவில்லை. ஏதோ மாயை. நானோ எதையுமே நம்புவதில்லை. கடவுள் மேலும் எனக்கு நம்பிக்கை கிடையாது, சைத்தான் மேலும் கிடையாது. ஆனாலும் இது பேய்த்தீவு. நான் பயப்படுகிறேனா என்ன? மாயத் தோற்றமா என்ன? இந்தப் பிரகிருதி ஹாக்லண்டு நிதானம் இழந்திருக்க மாட்டார் போலும். இங்கே உண்ணத்தக்க தாவரம் கட்டாயம் இருக்கும். எனக்குத்தான் அவை என்ன என்று தெரியவில்லை. அட இன்னும் இருபத்தைந்து நாட்கள் தாமே பாக்கி! அப்படி நீண்ட காலம் ஒன்றும் இல்லை."

ஆறாவது நாள் பசி மந்தித்துவிட்டது. தீவுக்குக் குறுக்காக மறுகோடிக்குச் செல்லத் தீர்மானித்து ஜானி காட்டுக்குள் போனான். முன்னால் அவன் அதைச் சுற்றி வந்திருந்தான்.

கழியை ஊன்றியவாறு அவன் மெதுவாக நடந்தான்.

பலவீனமாய் இருந்தது. ஆனால் கால் நன்றாகத் தேறிவிட்டது. காயம் வியப்பூட்டும் விரைவுடன் ஆறிவிட்டது.

விசாலமான காட்டின் ஊடாக அவன் நடந்தான். மரஞ்செடிகள் அற்ற மொட்டைப் பாறைகள் அவனுக்கு எதிர்ப் பட்டன. அப்பால் அடர்ந்த புதர் அவன் வழியைத் தடுத்தது. அதைச் சுற்றிக் கொண்டு மேலே போக முயன்றான். அப்படியே செய்தும் விட்டான். சுற்று வழியில் சாதாரணக் குன்றின் மேல் ஏற நேர்ந்தது. சோர்வைப் பொருட்படுத்தாமல் ஜானி சுமார் முப்பது அடி உயரக்குன்றின் மேல் ஏறி அதன் உச்சியை நெருங்கினான். அதன்மேல் ஏறி மறுபுறம் சென்றவன் கீழே ஓடை நீர் இசையைக் கேட்டான். ஓடையை நோக்கி இறங்கிப் போய், புதர்கள் சூழ்ந்த சிறு பீடபூமியை அடைந்தான். முகடுபோல் கவிந்திருந்த பாறையின் அடியில் வெள்ளையாக ஏதோ தெரிந்தது.

அது ஒரு கூடாரம். ஜானி கல்லாய்ச் சமைந்துவிட்டான். ஆகா, ஆளற்ற தீவின் மர்மம் இதுதான் போலும்!

எச்சரிப்புடன் நோட்டமிட்டான். தார்ச்சீலை ஒரேயடியாகச் சாயம் போயிருந்தது. ஆனால் மட்கவில்லை. புதர்களின் அடியில் பாறைகள்மேல் கிடந்தன துருப்பிடித்த காலி உணவு டப்பாக் களும் சாம்பல் நிறக் காகிதத் துண்டுகளும். கூடாரத்தில் சந்தடி இல்லை. ஜானி வாயில் திரையை விலக்கி உள்ளே சென்றான்.

மடக்குக் கட்டில்மேல் கிடந்தது பிணம். வெள்ளையன் ஒருவரின் வறண்டு மஞ்சள் பாரித்த பிணம். அவனது உடையும் சாயம் போயிருந்தது, ஆனால் கெடாமல் இருந்தது. அது பிணம், எலும்புக்கூடு அல்ல. சரியாகச் சொன்னால் உலர்ந்த உடல். நோய்ப் புன்னகை செய்வதுபோலப் பற்களை இளித்துக்கொண்டிருந்தது அது. அதன் விழிகள் மூடியிருந்தன. முகத்தில் செம்பட்டைக் கட்டை மயிர்கள் அடர்ந்திருந்தன.

மடக்கு மேஜையும் நாற்காலியாகப் பயன்பட்ட மரக்கட்டையும் கூடாரத்தில் இருந்தன. ஒரு மூலையில் அடைப்பான்களால் இறுக மூடிய கண்ணாடிப் பாத்திரங்கள் வரிசையாக வைக்கப் பட்டிருந்தன. அவற்றில் இருந்தன சுக்காய் உலர்ந்த பூச்சிகள்: கறுப்பு வண்ணத்திப் பூச்சிகளும் மெல்லுடல் கொண்ட வண்டு களும் இன்னும் எவை எவையோ விகிருதிகளும். கூடாரத்தில் வேறு சாமான்களும் இருந்தன, ஆனால் ஜானி அவற்றை விவரமாகப் பார்வையிட விரும்பவில்லை. அவன் மேஜையை நெருங்கினான்.



மேஜை மேல் சில புத்தகங்களும் நீல மெழுகுத்துணி அட்டை போட்ட நோட்டும் சங்கிலி இணைத்த பெரிய பழங்காலப் பைக் கடிகாரமும் கிடந்தன. ஜானி நோட்டை ஆவலுடன் எடுத்தான்.

அது நாட்குறிப்புப் புத்தகம். மிக மிக அண்மையில்தான் எழுதப்பட்டதுபோல் இருந்தது. காகிதம் மஞ்சள் பாரிக்கவோ, ஒட்டிக்கொள்ளவோ இல்லை. ஜானி அதை நடுவிலிருந்து படிக்கத் தொடங்கினான்:

"18 ஏப்ரல், 1914.

"இந்தத் தீவு விலங்கியல் அறிஞனுக்குச் சுவர்க்கம்தான்! தெரிந்த விலங்கினம் ஒன்றுகூட - மறுபடி சொல்லுகிறேன், ஒன்றுகூட - இங்கே எனக்கு எதிர்ப்படவில்லை. ஏராளமான புதிய இனங்கள். இனங்கள் மட்டுமே அல்ல, தொகுதிகளாக இருப்பதும் பெரிதும் சாத்தியமே. இவற்றுக்குப் பெயர்களை அப்புறம் புனைந்து இட்டுள்ளேன். நான் அறிய முடிந்தவரையில் தாவரங்களுக்கும் இந்த உண்மை பொருந்தும். இங்குள்ள விலங்கினங்களும் தாவர வினங்களும் இதுவரை அறியப்பட்டுள்ள எவற்றையும் போல் இல்லை. இவை தற்காலத்தவையையும் ஒத்திருக்கவில்லை, பாசில் களையும் ஒத்திருக்கவில்லை.

"மாபெரும் கண்டுபிடிப்பைச் செய்யும் பேறு எனக்கு வாய்த்திருக்கிறது. ஒரு விஞ்ஞானியின் வாழ்க்கையில் இவ்வாறு நேர்வது அரிதாகவே. நான் பாக்கியசாலி. புகழ் வேட்கை என் இயல்புக்குப் பொருந்தாதது. எனினும், என் ஆய்வுரையும் சேகரிப்புக்களும் லண்டனில் எத்தகைய உளப்பதிவை ஏற்படுத்தும் என்று எண்ண இன்பமாக இருக்கிறது..."

"20 ஏப்ரல், 1914.

"கடற்கரையில் சில சங்குகள் எனக்குக் கிடைத்தன. இவை Rissoa costata போன்றவை, ஆனால் அளவில் இன்னும் சிறியவை, எதிர்ப்பக்கம் திருகுவரிகள் உள்ளவை..."

"21 ஏப்ரல், 1914.

"பற்கள் உள்ள பறவைகள் தொல்காலக்கைச்சிறகிகளான ஆர்க்கியோப்டெரிக்ஸ் வகையின அல்ல. இது புதிய வகுப்பு. நான்கு கால்கள் கொண்ட பூச்சிகளையும் -Insecta quadrupeda -

புதிய வகுப்பாகவே கருத வேண்டும்..."

"25 ஏப்ரல், 1914.

"சுறாக்கள் பூவா-தூ-தஹீ காயலுக்குள் வருவதில்லை. ஏனெனில் இந்த மீன்களை அவை உண்பதில்லை."

நாட்குறிப்புப் புத்தகத்தை ஜானி மளமளவென்று புரட்டினான். நிருபருக்கு இயல்பான மோப்பத் திறன் காரணமாக, இந்தப் பூச்சி நிபுணன் இறந்த மர்மத்திற்கு விளக்கம் கிடைத்து விடும் என அவன் உணர்ந்தான்.

"20 ஆகஸ்டு, 1914.

"இரண்டு வாரங்களுக்கு முன் எனக்காகப் படகு வந்திருக்க வேண்டும். என்ன நேர்ந்ததோ, விளங்கவில்லை. நான் சங்கடத்தில் மாட்டிக்கொண்டுவிட்டேன் என்று தோன்றுகிறது. என் உணவுச் சேமிப்புக்கள் தீரும் நிலையில் இருக்கின்றன. இந்தத் தீவில் உள்ள பழங்களும் மீன்களும் பறவைகளும் மெல்லுடலிகளும் சுவை அற்றவை, ஊட்டச் சத்து குறைந்தவை. ஆகவே உணவுக் கையிருப்பை வெகு நாட்களுக்கு வரும்படி அளவாகப் பங்கீடு செய்து கொள்வது அவசியம். என்ன பிரமாதம். இன்னும் மோசமான தொல்லைகளை முன்பும் நான் அனுபவிக்க நேர்ந்தது உண்டுதான். எப்படியும் என்னைத் தேடிக்கொண்டு ஆட்கள் வரத்தானே போகிறார்கள்..."

"13 செப்டம்பர், 1914.

"உணவுப்பொருள்கள் தீர்ந்துபோயின. இன்று கோதுமை மாவை ஒரு துணுக்கு விடாமல் சுரண்டித் தின்றேன். வெற்று உணவு டப்பிகளை இன்னொரு தரம் வழித்து நக்கினேன். நல்ல வேளையாகத் தண்ணீர் இருக்கிறது. வேட்டையாடிக் கிடைப்பவற்றையே இனி தின்று ஆக வேண்டும். உடல்நிலை மகா மோசம். நான் ஒரேயடியாக மெலிந்து போனேன்.

"இங்கே எதுவும் அழுகுவதோ புளிப்பாவதோ கெடுவதோ இல்லை. ஆச்சரியந்தான்! மழை காலத்தில் கூட எதுவும் ஊசுவதில்லை. அழுகச் செய்யும் நுண்ணுயிர்கள் அறவே கிடையாதது பெருவியப்பு அளிக்கிறது.



"கடற்கரையிலும் குன்றின் உச்சியிலும் முறையாக நெருப்பு மூட்டுவது என்று தீர்மானித்திருக்கிறேன். போலினேஷியர்களோ ஜெர்மானியர்களோ அதைக் கண்டு கொள்ளக்கூடும்.

"புதிய கண்டுபிடிப்பான கம்பியில்லாத் தந்தி இப்போது எனக்கு எவ்வளவு பயன்பட்டிருக்கும்!"

"20 செப்டம்பர், 1914.

"பட்டினியால் தளர்வு அடைவதை உணர்கிறேன். ஒரு வாரமாக முழுப்பட்டினி கிடக்கிறேன். இன்னும் நீண்ட காலம் அரைப்பட்டினி. எதார்த்தத்தில் உணவே இல்லை இங்கே. பழங்களும் மீன்களும் ஊட்டச் சத்தே இல்லாதவை.

"பளிச்சிடும் உருண்டைப் புழுக்கள் இனப்பெருக்கக் காலத்தில் கரைக்கு வருகின்றன. அவற்றின் முட்டைகள் அலையேற்றப் பகுதியில் ஒரு பாறைக்கு அடியில் எனக்குக் கிடைத்தன."

அப்புறம் கடைசிக் குறிப்பு:

"8 அக்டோபர், 1914.

"இன்று நான் இறந்துபோவேன் என்று தோன்றுகிறது. என்னால் அசையவே முடியவில்லை.

"என் சேகரிப்புக்களையும் குறிப்புக்களையும் லண்டன் ராயல் சொஸைட்டியிடம் சேர்த்துவிடும்படி வேண்டுகிறேன். நடந்தவற்றை 21, சான்ஸரி ரோட், எடின்பராவில் என் மனைவி திருமதி. ஆன் விண்ட்ஹாமுக்குத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். என் குடும்பத்தைக் கவனித்துக் கொள்ளும்படி ராயல் சொஸைட்டியை வேண்டுகிறேன். எல்லோரிடமும் விடை பெற்றுக்கொள்கிறேன். எது குறித்தும் எனக்கு வருத்தம் இல்லை.

மார்ட்டின் விண்ட்ஹாம்."

இதோடு முடிவு பெறாத கடிதம் ஒன்றும் இருந்தது:

"அன்பார்ந்த ஆன்னி, உனக்கு இவ்வளவு துயர் விளைவித்ததற்காக என்னை மன்னித்துக்கொள். என் சாவு வீணானது அல்ல.

சென்ற சில மாதங்களில் விஞ்ஞானத்துக்கு வளம் கூட்ட எனக்கு வாய்த்தது என்று எண்ணுகிறேன். உன்னை நான் எப்போதும் காதலித்து வந்தேன், நம் மகனை நேசித்தேன். அவன் பெரியவன் ஆனதும்..."

இங்கே கடிதம் இடை நின்றுவிட்டது.

ஜானியின் மூளை இயந்திர வேகத்தில் வேலை செய்தது - உண்மையில் பரபரப்பு ஊட்டும் செய்தி எதிர்ப்படும்போது வழக்கமாகச் செய்வதுபோல. எல்லாம் புரிகிறது! விண்ட்ஹாம் ஆங்கிலேயன். கரோலினா தீவுகள் 1914இல் ஜெர்மனிக்குச் சொந்தமாய் இருந்தன. விண்ட்ஹாமை அழைத்துச் செல்ல ஒருவரும் வராததற்குக் காரணம் யுத்தம் மூண்டுவிட்டதுதான். அவனை இட்டுச் செல்லக் கப்பல் வந்திருக்கும், அதை ஜெர்மானியர் மூழ்க அடித்திருப்பார்கள். விண்ட்ஹாமை ஏற்றிக் கொண்ட பிறகு கப்பல் எதிரியின் தாக்குதலுக்கு உள்ளாகியது என்று பிரிட்டனில் அதிகாரிகள் நினைத்திருக்க வேண்டும்.

ஆனால் இது மெய்யாகவே பரபரப்பு ஊட்டும் நிகழ்ச்சி ஆயிற்றே! விஞ்ஞானியின் சேகரிப்புக்களும் நாட்குறிப்பும் சேதமில்லாமல் இருக்கின்றன. அவன் பிணமும் கெடாமல் இருக்கிறது. அழுகவோ மட்கவோ செய்யும் நுண்ணுயிர்கள்தாம் இங்கே கிடையாதே!

சபாஷ், மெல்வின்! இந்தத் துயர்தரும் கண்டுபிடிப்பு பயணத் திட்டம் முழுவதையும் நியாயப்படுத்திவிடும். இதில் வரிக்கு ஒரு டாலர் வீதம் கொடுப்பதில் தலைமை ஆசிரியர் இசுகு பிசுகு செய்யமாட்டார்!

தன் உடல் தளர்வை ஜானி அறவே மறந்துவிட்டான். பிணத்தின் பக்கம் குனிந்து அதன் பைகளைத் துழாவித் தேடலானான். ஆனால் துருவேறிய பேனாக்கத்தி தவிர வேறு எதுவும் அவனுக்கு கிடைக்கவில்லை.

திடீரென்று ஜானி நேரே நிமிர்ந்து கண்களை பரக்க விழித்தவாறு மலைத்து நின்றுவிட்டான். தன் தாடை தொங்கிப் போய்விட்டதை அவன் உணர்ந்தான். பாம்பு கடித்தபின் நிகழ்ந்தது போலவே விளங்காத திகில் அவனை ஆட்கொண்டு விட்டது. செப்டம்பர், 1914ல் விண்ட்ஹாமுக்கு எதிர்ப்பட்டதை விடத் தன் நிலைமை சிறிதும் மேற்பட்டது அல்ல என்பது



அவன் அறிவில் பட்டது. அவன் பட்டினி கிடந்து சாக நேருமே! அழுகவோ மட்கவோ முடியாத அவனது பிணத்தை அப்புறம் யாரேனும் காண்பார்கள்.

பாம்பின் நஞ்சு அவனைப் பாதிக்காதது அவன் உரிய நேரத்தில் தடுப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டதால் அல்ல, இந்த நரகத் தீவில் எல்லாமே இயல்புக்கு மாறாய் இருப்பதால்தான் இங்கே நச்சுப் பாம்புகள் தீங்கற்றவை, பிணங்கள் அழுகுவதில்லை, மீன்களும் பழங்களும் உண்ணத்தகாதவை.

"கெட்ட மண்" என்றான் உவாத்தா. "நீ துணிச்சல்காரன்" என்றான் உவாத்தா.

அட கடவுளே, துணிச்சலாவது காரனாவது! அவன் சாகத்தான் போகிறான், சில நாட்களில் மரிக்கப் போகிறான் - மீள வகையின்றி!

முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு பொத்தென்று குப்புற விழுந்தான் ஜானி. புன்னகைக்கும் உலர் பிணத்தின் பக்கத்தில் கிடந்தபடி, சிறுவன்போலத் தேம்பி அழுதான்.

**நிலைக்கண்ணாடியில் அமினோ அமிலங்கள்**

ஏறுக்கு மாறாகும் வாழ்க்கை அங்கே,
எல்லாம் தலைகீழ், உள்வெளியாம்.
கூரைக்கு மேலே பறக்கும் எலி,
கூழ்ப்பழம் ஜாடிக்குள் போகாதே.

இரவியைவிடப் பெரிது எலெக்ட்ரான்,
மின்னேற்றம் அற்றதுதான் எனினும்.
மரத்திலிருந்து ஆப்பிளுக்குப் பதில்
மாமேதை நியூட்டன் தாமே விழுவார்.

என் உள்ளம் விழையும் அங்கே செல்ல,
இன்பம் ஒன்றே அங்கு, துன்பம் இல்லை.
நன்னீர் பெருகிடும் மேலே நோக்கி,
நல வானமாய்த் திகழும் கடலே.

**வில்லி பாட்டன்**

தண்ணீர் மட்டும் இருந்தால் மனிதன் உணவு இல்லாமல் ஒரு மாதத்துக்கு மேல் உயிர் வாழமுடியும். கப்பல் விபத்துக்கு ஆளானவர்கள் அல்லது தைகாக் காட்டில் வழி தவறியவர்கள் இதைவிடக் குறுகிய காலத்திலேயே மடிந்துவிடுகிறார்கள் என்பது உண்மைதான். ஆனால் அவர்கள் சாவது பட்டினியால் அல்ல, பயத்தினால். ஜானி மெல்வின் ஒரேயடியாகக் கிலிபிடித்துப் போயிருந்தான். எனவே பூவா-தூ-தஹூ தீவில் அவன் இரண்டு வாரங்களுக்கு மேல் தாக்குப் பிடித்திருப்பது அரிதே. மஞ்சள் பாரித்த உலர் பிணம், பற்கள் உள்ள பறவைகள், மினுமினுக்கும் புழுக்கள், எல்லாமே அவனுக்குத் திகில் ஊட்டின. நாள் முழுதும் கூடாரத்திலேயே படுத்துக்கிடப்பான். தண்ணீர் குடிப்பதற்காக மட்டுமே எழுந்திருப்பான். அமைதியற்ற உறக்கத்தில் ஆழ்வான், ஒரே நிராசையுடன் கண் விழிப்பான்...

அன்று இரவு அவன் பயங்கரக் கனவு கண்டான். மாலைக் கருக்கலில் அவன் தனியே தெருவில் நடக்கிறான். அது விக்ஃபீல்டு நகரம் போலவும் இருக்கிறது, விக்ஃபீல்டு இல்லை போலவும் இருக்கிறது. விந்தை நகரம். முற்றிலும் வெறுமையானது. வீட்டு ஜன்னல்கள் இருளடித்துக் கிடக்கின்றன. எங்குமே வெளிச்சம் இல்லை. ஜானி தெரு மூலையில் திரும்பினான். முன்னே இரண்டு சிவப்பு விளக்குகள் சுடர்ந்தன. அவன் நெருங்க நெருங்க அவற்றின் ஒளியும் அளவும் அதிகரித்தன. திடீரென்று அவை சயாமியப் பூனையின் கண்கள் என்பதை அவன் கண்டான். பூனை பற்களைக் காட்டியவாறு முதுகை வளைத்துக்கொண்டு அவனைப் பார்த்தது. அவன் அருகே போய் அதைத் தடவிக் கொடுக்க விரும்பினான். பூனை சடக்கெனத் திரும்பி ஓட்டமாக ஓடிவிட்டது. ஜானி அதன் பின்னே ஓடியவன் தன்னையும் ஆட்கள் துரத்துவதை உணர்ந்தான். புரியாத கட்டைக் குரல்கள் கேட்டன. அவனுக்கு ஒரு வார்த்தைகூட விளங்கவில்லை. ஒரே யடியாகத் திகிலடித்துப் போனான். மேலும் மேலும் ஓடினான். குரல்கள் நெருங்கின. ஒழிந்தோம் என்று தெரிந்து கொண்டவன், திடுக்கிட்டுக் கண் விழித்தான்.

பகல் ஆகிவிட்டது. நெருங்கி வரும் குரல்கள் காதில் ஒலித்தன. அவன் நம்பவில்லை. இது கனவின் தொடர்பு, மாய உணர்வு என்று எண்ணினான். ஆனால் எவனோ கூடார வாயில் திரையை விலக்கினான்.

இவ்வாறு வந்தது அவனுடைய மீட்சி. நன்னீர் நிறைத்துக்



கொள்ள வந்த சிறு இந்தோனேஷியக் கப்பலின் மாலுமிகள், ஜானியைப் பரிவுடன் தேற்றி உணவு ஊட்டினார்கள்.

வயிறு நிறைந்ததும் ஜானி களிப்பு அடைந்தான். அவன் மூளை மறுபடி வேலை செய்யத் தொடங்கியது. மாதக் கெடு முடிவதற்கு இன்னும் பத்தொன்பது நாட்கள் பாக்கி இருந்தன. ஆயினும் நிபந்தனையைப் பூர்த்தி செய்வதுபற்றிய பேச்சுக்கே இனி இடமில்லை. தனது கண்டுபிடிப்பை நிறையப்பணம் பெற்றுக் கொண்டே விற்பது என்று ஜானி தீர்மானித்தான். விண்ட்ஹாமின் உலர் பிணத்தையும் அவனுடைய சேகரிப்புக் களையும் கப்பலில் ஏற்றிக்கொள்ளும்படிக் கப்பித்தானிடம் பேசி இணங்க வைத்தான். விண்ட்ஹாமின் நாட்குறிப்பை அவன் தன் பெட்டியில் ஒளித்துவைத்துக்கொண்டான். அதுதான் அவனுடைய முக்கியமான துருப்புச் சீட்டு. உண்ணத்தகாத பழங்கள், நீல மீன்கள் ஆகியவற்றின் மாதிரிகளைப் போதிய முன்யோசனையோடு உடன் எடுத்துச் சென்றான் ஜானி. அவற்றை ஸ்பிரிட்டில் போட்டு வைத்திருக்கவேண்டும். ஆனால் கப்பலில் ஸ்பிரிட் இல்லை. இருந்தாலும் விந்தை என்னவென்றால் பூமத்திய ரேகைக் கடல்களில் நெடுநாட் பயணத்தின்போது அவை உலரத்தான் செய்தனவே தவிரக் கெடவில்லை.

ஜானி எண்ணியது தவறாகவில்லை. தலைமை ஆசிரியர் அவன் பேசி முடிக்குமுன்பே விஷயத்தைப் புரிந்துகொண்டார். "விக்ஃபீல்டு செய்திகள்" நிருபர் தனிச் சிறப்பு உள்ள, விஞ்ஞானத்துக்கு மிக முக்கியத்துவம் வாய்ந்த விவரங்களைக் கண்டறிந்தான். எனவே, அமெரிக்கப் பத்திரிகைக்காரனின் உயர் கடமையை நிறைவேற்றும் நோக்கத்துடன், பெருத்த சன்மானத்தை வேண்டாம் என்று நிராகரித்துவிட்டு, முதல் வாய்ப்பு கிடைத்ததுமே நிபந்தனையை மீறிவிட்டான். பணிவும் ஆழ்ந்த போக்கும் உள்ள ஜானி மெல்வினுக்கு இயற்கை விஞ்ஞானத்தின் வளர்ச்சியை இன்னும் இரண்டு வாரங்கள் தாமதப்படுத்த என்ன உரிமை இருந்தது?

இந்த வாதத்தில் காரண காரியப் பொருத்தம் என்னவோ இல்லைதான். தீவில் இருந்தவை எல்லாம் உண்ணத்தகாதவை என்றால் மெல்வின் அங்கே எப்படி உயிர் பிழைத்து இருக்க முடியும்? அவன் அபாயத்தைப் புரிந்து கொண்டுவிட்டான் என்றே எண்ணவேண்டும். இந்த விஷயத்தில் உயர் கடமை என்ற பேச்சே எழவில்லை என்றும் நிருபர் தன் உயிரைக் காப்பாற்றிக்

கொள்வதற்காக அந்த வஞ்சகத் தீவிலிருந்து தப்பி ஓட மட்டுமே செய்தான் என்றும் வைத்துக் கொள்வது அதிக எளிதல்லவா?

ஆயினும் இந்த எண்ணங்கள் "விக்ஃபீல்டு செய்திகளின்" வாசகர்களில் விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலருக்கே தோன்றின. விஷயம் செய்தித்தாளில் திறமையுடன், நம்பிக்கையூட்டும் விதத்தில் தரப்பட்டிருந்தது. நிருபர்கள் கூட்டத்திலோ, ஜானி தன்னையே விஞ்சிவிட்டான். தேவையானவை என்று தான் நினைத்தவற்றை எல்லாம் விவரித்தான், போட்டிச் செய்தித்தாள்களின் நிருபர்களுடைய நஞ்சு தோய்ந்த கேள்விகளைச் சமயோசித சாமர்த்தியத்துடன் தட்டிக்கழித்துவிட்டு, தன் உரையைப் பின்வருமாறு முடித்தான்:

"சீமாட்டிகளே, சீமான்களே, உங்களுக்கு நன்றி. முடிவில் ஒரு விஷயத்தை மீண்டும் அழுத்திக் கூற விரும்புகிறேன். நான் சாதாரண அமெரிக்க இளைஞன், செய்தித்தாளின் ஊழியன். நான் எந்தக் கண்டுபிடிப்பும் செய்யவில்லை. என்னுடைய அவதானிக்கைகளில் சில ஓரளவாவது விஞ்ஞான மதிப்புள்ளவை என்று தெரிந்தால் நான் மகிழ்ச்சி அடைவேன். விஞ்ஞானத்தில் கண்டுபிடிப்புக்களை விஞ்ஞானிகள்தாம் செய்கிறார்கள். பூவா-தூ-தஹீ தீவில் உள்ள தாவரவினங்களும் விலங்கினங்களும் தனிவகைப்பட்டவை என்பதை முதன் முதல் கவனித்து அறிந்தவர் டாக்டர் விண்ட்ஹாம் - கெய்ஸர் ஜெர்மனிக்குப் பலியான வீரர்.

"தீவை நுட்பமாக ஆராய்ந்ததன் வழியாக இந்த அற்புதமான மனிதரின் ஆராய்ச்சிக் குறிப்புக்களையும் சேகரிப்புக்களையும் உலகுக்கு ஒப்படைக்க எனக்கு வாய்த்திருப்பது குறித்து நான் பெருமைப்படுகிறேன். அவருடைய புதல்வர், தவத்திரு பிரெடெரிக் விண்ட்ஹாம் இன்னும் இரண்டு நாட்களில் விக்ஃபீல்டுக்கு விமானத்தில் வருவார். தம் தந்தையின் புனித உடலை அவர் இங்கிலாந்துக்கு எடுத்துச் செல்வார். அங்கே அது அடக்கம் செய்யப்படும். ஆகவே, சீமாட்டிகளே, சீமான்களே, மறைந்த பெரியாருக்கு இறுதி அஞ்சலி செலுத்த விரையுங்கள். அவருடைய உடல் அடங்கிய கண்ணாடிச் சவப்பெட்டி நம் கட்டிடத்தின் பனிரெண்டாவது மாடியில் வைக்கப்பட்டிருக்கிறது.

"டாக்டர் விண்ட்ஹாமின் நாட்குறிப்பைப் பொறுத்தவரை, அது விரிவான பொதுமக்களுக்குக் கிடைக்கும்படி செய்வது தன் கடமை என்று செய்தித்தாள் கருதுகிறது. நாட்குறிப்பு பகட்டான உருவநேர்படிப் பதிப்பாக வெளியிடப்படும். அதே சமயம், பெருந்தொகையில் மலிவுப் பிரசுரமாகவும் பதிப்பிக்கப்படும். மலிவுப் பதிப்பை ஐம்பது சென்டுகள் கொடுத்து யார் வேண்டுமானாலும் வாங்கிக்கொள்ளலாம். இந்தப் பதிப்புக்களில் என்னுடைய அற்பப் பங்கு தீவில் நான் கண்டவற்றையும், விண்ட்ஹாமை நான் எப்படித் தற்செயலாகக் கண்டுபிடித்தேன் என்பதையும் விவரிக்கும் கட்டுரை மட்டுமே. புத்தகம் மிக ஏராளமான பிரதிகள் விற்பனை ஆகும் என்று உறுதியாய்ச் சொல்லுகிறேன்!

"இன்னொரு முறை உங்களுக்கு நன்றி"

பெஸ்ஸி ஜானியை ஆர்வத்துடன் முத்தமிட்டாள். சக நிருபர்கள் அதை ஆமோதித்துக் கைதட்டினார்கள்.

"விக்ஃபீல்டு செய்திகள்", பிற செய்தித்தாள்கள் ஆகியவற்றின் வாசகர்களில் சிந்திக்கும் திறன் உள்ளவர்கள் நிறைய இருந்தார்கள். பூவா-தூ-தஹீ தீவின் மர்மங்கள் துலங்குவதை அவர்கள் ஆவலே வடிவாய் எதிர்பார்த்தார்கள்.

தீவில் தனிவகைப்பட்ட விலங்கினங்களும் தாவரவினங்களும் இருப்பது ஏன்? அவற்றில் உண்ணத்தக்கவை எவையும் இல்லாதது ஏன்? விண்ட்ஹாமின் உடல் காற்றில் இருந்தபோதிலும் கெடாமல் உலர் பிணம் ஆனது ஏன்?

சுறாக்கள் இந்த விசித்திர மீன்களை ஏன் உண்பதில்லை? பாம்பு விஷமற்றதாக இருந்தது ஏன்? தீவில் உள்ள கொசுக்கள் ஏன் கடிப்பதில்லை? தீவிலிருந்து கொண்டுவரப்பட்ட பழங்களும் மீன்களும் கெட்டுப்போகாமல் வெறுமே உலர்ந்து போனது ஏன்?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடைகளைப் பேராசிரியர் ஹாக்லண்டிடமிருந்தே எதிர்பார்க்க வேண்டியிருந்தது. மெல்வின் கொண்டுவந்த சேகரிப்புக்களையும் குறிப்புக்களையும் செய்தித்தாள் அவரிடம் சேர்ப்பித்திருந்தது.

சரியாக மூன்று மாதங்களுக்குப் பின் ஜானி டிரான்ஸ் அட்லாண்டிக் விமானம் ஒன்றில் வசதியான இருக்கையில் அமர்ந்திருந்தான். இப்போது அவன் முன்னைவிடச் சற்று பருத்திருந்தான். தன்னம்பிக்கையும் நல்லெண்ணமும் அவனுக்குள் நிறைந்திருந்தன. பிரான்ஸில் க்ரெனோபிள் நகரில் நடக்கவிருந்த சர்வதேசப் பத்திரிகையாளர் மகாநாட்டுக்கு அவன் புறப்பட்டிருந்தான். தான் அங்கே முக்கியஸ்தனாக விளங்கப்போவது அவனுக்குத் தெரிந்திருந்தது.

சுவையான காலையுணவு சாப்பிட்டு முடிந்தது. மணம் கமழும் சுருட்டைப் புகைத்தவாறு, வேறு வேலை இல்லாமையால் "ஸயன்டிஃபிக் அமெரிக்கன்" என்ற சஞ்சிகையின் புதிய இதழைப் புரட்டினான் ஜானி. அறிமுகமான ஒரு பெயர் அவன் கவனத்தை ஈர்த்தது. அது ஹாக்லண்டின் கட்டுரை. ஜானி படிக்கலானான்.

"முற்றிலும் தனி வகைப்பட்ட, ஓர் இடத்துக்கு மட்டுமே உரிய விலங்கினங்களும் தாவரவினங்களும் பிரதான நிலப்பரப்பிலிருந்து போதிய அளவு நீண்ட காலமாகத் தனிப்பிரிந்துள்ள பல தீவு களில் காணப்படுவது சகஜமே. "பீகிள்" என்ற கப்பலில் பயணம் செய்கையில் டார்வின் முதன்முதலாக இந்த விவரத்தைக் கவனித்தார். ஈக்வடோரைச் சேர்ந்த கலாப்பகோஸ் தீவுக் கூட்டத்தில் தாம் கண்ட விலங்கினங்களை அவர் விவரமாக வருணித்திருக்கிறார். ஃபிஞ்சு வகையைச் சேர்ந்த தனிப்பட்ட பறவை இனங்களை டார்வின் அங்கே கண்டுபிடித்தார். அவை அவர் பெயரால் டார்வின் ஃபிஞ்சுகள் என்றே இன்றும் அழைக்கப்படுகின்றன. இந்தத் தீவுகளில் பிரமாண்டமான ஆமை வாழ்கிறது. அது வேறு எங்கும் காணப்படுவதில்லை. தனி இனத்தைச் சேர்ந்த உடும்பையும் அவர் அங்கே கண்டுபிடித்தார்.

"மற்ற உதாரணங்கள் நன்கு ஆராயப்பட்டுள்ளன. ஊப்பாலூட்டிகளும் வாத்தலகி என்னும் நிலநீர்ப் பிராணியும் எகித்னா என்ற முள்ளடர் விலங்கும் கொண்ட ஆஸ்திரேலியா, சிறகுகள் இல்லாத கீவி என்னும் பறவையும் தொன்மை ஊர்வனவற்றின் எஞ்சிய இனமான ஹாட்டேரியாவும் வாழும் நியூஜீலாந்து ஆகியன ஆராய்ந்து அறியப்பட்டுவிட்டன. ஆனால் பூவா-தூ-தஹீ தீவுக்கு மட்டுமே உரிய இனங்கள் முன்னர் அறியப்பட்டுள்ளவற்றிலிருந்து வெகுவாக வேறுபடுகின்றன. முதலாவதாக இங்கே சில இனங்கள் மட்டுமே அல்ல, வகுப்புகளும் தொகுதிகளுமேகூட அந்தத் தீவுக்கே உரியவையாகப் பல்கியுள்ளன. இரண்டாவதாக நுண்ணுயிர்கள் முதல் பாம்புகள், பறவைகள் ஈறாக இந்தத் தாவர, விலங்கினங்கள் பூமியில் வாழும் மற்ற உயிரினங்களுடன் ஒத்து வாழத்தக்கவை அல்ல.

"இதற்கெல்லாம் என்ன அர்த்தம்?"

"உயிர் வாழ்க்கையின் அஸ்திவாரம் அல்புமென்களே. அமினோ அமிலக் கணுக்கள் கொண்ட நீண்ட சங்கிலித் தொடர்க் கணுக்கள் இவை. உலகத்தில் உள்ள அல்புமென்கள் எல்லாம் இருபது வகை அமினோ அமிலங்களால் ஆனவை.



அல்புமென்களை ஆக்கும் அமினோ அமிலங்களின் வியப்பூட்டும் சிறப்பியல்பு அவற்றின் சமச்சீரின்மையே. இருபது அமினோ அமிலங்களில் பத்தொன்பது சமச்சீரற்ற கூட்டணுக்களே. இதன் அர்த்தம் என்னவென்றால் அவற்றில் ஒவ்வொன்றும் இரண்டு வடிவங்களில் - வலமாகவும் இடமாகவும் - வலக்கையும் இடக்கையும் போல ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டு - நிலவமுடியும் என்பதே.

ஆனால் உயிருள்ள அங்கஜீவிகளில் அமினோ அமிலங்கள் இடமாக மட்டுமே உள்ளன. வாழ்க்கை, அதன் கூட்டணு அடிப்படையிலிருந்து தொடங்கி, சமச்சீர் அற்றதாகவே இருக்கிறது. அங்கஜீவிகள் இடது அமினோ அமிலங்களை மட்டுமே தன்மயமாக்கிக்கொள்ள வல்லவை. அல்புமென்களில் உள்ள வலது எதிர்நிலைகள் சேர்த்துக் கொள்ளப்படுவதில்லை.

"லூயிஸ் கரோல் இயற்றிய 'அலீஸ் நிலைக்கண்ணாடியில்' என்னும் அற்புதமான கதையில் கதாநாயகி கேட்கிறாள்: 'நிலைக் கண்ணாடிப் பாலைக் குடிக்க முடியுமா?' என்று. இப்போது நாம் அதைக் குடிக்க முடியும், ஆனால் அதனால் பயன் இல்லை. நிலைக்கண்ணாடிப் பால் ஊட்டத்தன்மை இல்லாதது.

"உயிரிகளின் சமச்சீரின்மைபற்றிய ஆராய்ச்சி முதன்மையாக மாபெரும் பாஸ்டியரின் பெயரோடு தொடர்பு கொண்டது. அவருக்கு வெகுகாலத்துக்குப் பின் சோவியத் விஞ்ஞானி வெர்னாத்ஸ்க்கிய் இவ்விஷயம் குறித்து ஆழ்ந்த கருத்துக்களை வெளியிட்டார். 1940ஆம் ஆண்டில் இன்னொரு சோவியத் விஞ்ஞானி காவுஸே என்பவர் 'புரோட்டோபிளாஸங்களின் சமச்சீரின்மை' என்னும் மிக அக்கறைக்குரிய நூலைப் பிரசுரித்தார்.

"உயிர் வாழ்க்கை சமச்சீர் அற்றதாக இருப்பது ஏன்?"

"தொடக்க அங்கஜீவிகள் உயிரற்ற பொருள்களிலிருந்தே தோன்றின என்று இப்போது நாம் உறுதியாக நம்புகிறோம். நவீன இயற்கை விஞ்ஞானத்தில் பொதுவாக ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ள இந்தச் சித்தாந்தத்தைப் பின்னும் ஒரு சோவியத் விஞ்ஞானி ஒபாரின் விரிவுபடுத்தினார்.

"உயிரற்ற பொருள்களிலிருந்து உயிர்கள் தோன்றியபோது வலதுவாகானவையும் இடதுவாகானவையும் ஆகிய அமினோ அமிலங்கள் உற்பத்தியாவதற்கு ஒரே மாதிரியான வாய்ப்புகள் உண்டு. ஆயினும் அங்கஜீவிகளில் இடது அமினோ அமிலங்கள்

மட்டுமே தன்மயமாக்கப்படுவானேன்? இடதுவாகானவையும் வலதுவாகானவையும் சமமான எண்ணிக்கையில் உட்கிரகிக்கப் படாதது ஏன்?

இடதுவாகுக் கூட்டணுக்கள் தற்செயலாகச் செறிந்திருந்த இடங்களில் உயிர் தோன்றியதே இதன் காரணம் என்று நினைக்க வேண்டும். பிறகு உயிர் பரிணாமப் பாதையில் வளர்ச்சி அடையத் தொடங்கி, வலதுவாகுக் கூட்டணுக்களிலிருந்து இடதுவாகுக் கூட்டணுக்களை மேலும் மேலும் அதிகத் துல்லியத்துடன் தனிப்பிரித்து எடுத்துக் கொள்கிறது. சமச்சீர் அற்ற அங்கஜீவிகள் சமச்சீர் உள்ளவற்றைக் காட்டிலும் உயிரியல் நோக்கில் அதிகத் தகவமைப்புத் திறன் கொண்டவை என்பதற்கு ஆதரவாகப் பல வாதங்களைக் கூறமுடியும்.

"பூவா-தூ-தஹீ தீவின் தாவரங்களிலும் விலங்குகளிலும் உள்ள அல்புமென்கள் இடதுவாகு அமினோ அமிலங்களால் அல்ல, வலதுவாகு அமினோ அமிலங்களால் ஆனவை என்று ஆராய்ச்சி வாயிலாகத் தெரிய வந்திருக்கிறது! உயிர்மண்டலத்தின் எஞ்சிய பகுதியைச் சேர்ந்த அமினோ அமிலங்களின் கண்ணாடிப் பிரதிபலிப்பு இது.

"வெகு காலத்துக்குமுன் 'வலதுவாகு' வாழ்க்கையும் தொடங்கியது என்று எண்ணலாம். குறிப்பிட்ட தீவு (ஒருவேளை நாம் இன்னும் அறியாத வேறு இடங்களிலும்) தவிர மற்றப்பகுதிகளில் எல்லாம் 'இடதுவாகு' உயிர்கள் 'வலதுவாகு' உயிர்களை வென்று அகற்றி விட்டன. ஆனால் பூவா-தூ-தஹீ தீவில் உயிரினங்கள் சுதந்திரமாக வளர்ச்சி அடைந்தன. 'வலதுவாகுத்' தொகுதியைச் சேர்ந்த போதிய அளவு பல்வகைப்பட்ட உயிரினங்கள் தோன்றியதும் அவை பாதுகாப்பான நிலையை அடைந்தன. 'வலதுவாகு' உயிர்கள் நிலைத்து வாழ்வதற்கான ஒரே நிபந்தனை அந்த அங்கஜீவிகள் எண்ணிக்கையில் நிறைய இருக்க வேண்டும் என்பதே. அப்போதுதான் அவை ஒன்றையொன்று உணவு ஆக்கிக் கொள்ளமுடியும். அத்தகைய நிலைமையில் பரிணாமம் தனிப்பாதையில் வளர்ச்சி அடைந்தது. எடுத்துக்காட்டாக நான்கு காலிப் பூச்சிகளை அது தோற்றுவித்தது.

"பூவா-தூ-தஹீ தீவின் உலகம் தனி வகையான எதிர்-உலகம். ஆனால் எஞ்சிய உலகின் பிராணிகள் எதிர்ப்படும்போது அது அழிந்துவிடுவதில்லை. மாறாக, கண்ணுக்குப் புலப்படாத தடை வேலியால் அது எஞ்சிய உலகிலிருந்து தனிப்பிரிக்கப் பட்டிருக்கிறது. அது எந்தப் பிராணிக்கும் தீங்கு செய்வதில்லை, தானும் பாதுகாப்பான நிலையில் இருக்கிறது. இந்தப் பாதுகாப்பு சார்புத் தன்மை கொண்டதுதான். மனிதன் அந்த உலகை எளிதில் அழித்துவிட முடியும்..."



ஜானி கொட்டாவிவிட்டு, சஞ்சிகையை ஒருபுறம் வைத்தான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஹாக்லண்டு எழுதியது எதையும் அவன் நம்பவும் இல்லை.

அவன் அனுபவித்த பயங்கரங்களுக்கு எவையோ அமினோ அமிலங்கள் காரணமாய் இருக்க முடியாது. அப்புறம் அவன் முடிவில் அடைந்த பிரபலமும் வாழ்க்கை வசதிகளும்! ஒன்று மட்டும் தெளிவு: விஞ்ஞானிகளைக் கண்டாலே தூர விலகிவிட வேண்டும். ஜானி சாதாரண மனிதன், அவர்களோ தங்களைப் பற்றி மட்டுமீறி நிறைய எண்ணிக்கொள்கிறார்கள்!

விமானத்தின் அடியில் மேகங்கள் தென்துருவ மண்டலம் போலக் கிடந்தன. இன்னும் கீழே வெகு தொலைவில் கண்ணுக்குப் புலப்படாத மாகடலில் மீன்கள் நீந்தின. நீர்ப்பூண்டுகள் அசைந்தாடின. விமானத்தின் ஜெட் எஞ்சின்கள் ஒருசீராக இரைந்து அவனைத் தாலாட்டின.



அரியாத்நா க்ரோமவா (பிறப்பு 1916) - மொழி இயல் அறிஞர், மக்களால் விரும்பப்படும் விமர்சகர், எழுத்தாளர். அவர் இயற்றிய விஞ்ஞானக் கற்பனைக் கதைகள் விரிவாகப் பிரபலம் அடைந்தன. "தன்னுடன் துவந்துவம்" (1963), "ஒளி வட்டத்தில்" (1965), "நீயும் நானும் ஒரே உதிரம் படைத்தவர்கள்" (1967) ஆகிய நவீனங்களும் பல சிறுகதைகளும் அவரது படைப்புக்கள். இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ள "மர்மப் பகைவர்கள்" என்னும் கதை பல அயல் மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ளது.

# மர்மப் பகைவர்கள்

அரியாத்நா க்ரோமவா

**வீ**க்தர் ராக்கெட்டின் மேல் கதவைத் திறந்து, படிகள் மேல் நின்று, பாதி உடம்பை வெளியே நீட்டினான். தெளிந்த பச்சை வானத்தில் பெரிய வெண் சூரியன் காட்சி தந்தது. விண்வெளி விமானி உடை விரைவாகச் சூடேறிவிட்டது. ஒரே வெக்கையாக இருந்தது. "இந்தக் காப்பு உடைகள் இல்லாமலே இங்கே சமாளிக்கலாமே. இந்த ஓட்டுக்கு உள்ளே முட்டைக் கருபோல



வேக நேரிடும் போல் இருக்கிறதே..." என்று எரிச்சலுடன் எண்ணமிட்டான் அவன். ராக்கெட்டுக்குள் திரும்ப நினைத்தவன் சமவெளியில் வெகு தூரத்தில் இயங்கிய கரும்புள்ளி ஒன்றைக் கண்டான். உதட்டைக் கடித்தவாறு கடைசிப் படிமேல் மெதுவாக ஏறினான். "ஜீப்தான், சந்தேகம் இல்லை. இவ்வளவு சீக்கிரம் ஏன் திரும்பி வருகிறார்கள்? அதுவும் தலைதெறிக்கும் வேகத்தில் வருகிறார்கள் போலிருக்கிறதே..." என்று நினைத்தான். ஏதோ விபத்து நேரும் என்று தான் இவ்வளவு நேரமும் சுய உணர்வு இன்றியே எதிர்பார்த்தது சட்டென அவன் அறிவில் பட்டது. அமைதியான இந்த இனிய கிரகத்தினிடமிருந்து கீழ்த் தரமான சூழ்ச்சிகளை அவன் எதிர்பார்த்தான். "இனியது, அமைதியானது, உயிர் அற்றது. மிக நேர்த்தியான பிணம். காண இதயம் களிக்கிறது" என்று ஜீப்பின் பக்கம் நோக்கியவாறு முணுமுணுத்தான்.

எவ்விதக் குற்றமும் இழைக்காத, மிகவும் ஆக்கம் கெட்டதாகக் காணப்படும் இந்தக் கிரகத்தின்மேல் தான் ஆத்திரப்படுவது ஏன் என்று அவனுக்கே புரியவில்லை. இவ்வளவு எழிலும் அமைதியும் வாய்ந்த கிரகம் உயிர் அற்றதாக இருந்ததே அவனுக்கு எரிச்சல் ஊட்டியிருக்கும். இதை உயிர் அற்றது என்பதைவிட நசித்துப் போனது எனச் சொல்வதே சரியாய் இருக்கும். எதனால், எப்படி நசித்தது என்பது புரியவில்லை. அவர்களது ராக்கெட் இறங்கியிருந்த சமவெளியைச் சூழ்ந்திருந்தன மலைகள். அவற்றுக்கு அப்பால் குடியிருப்புக்கள் இருந்தன. சற்று தூரத்தில் இருந்தது பெரிய பட்டணம். அது அரசின் தலைநகரம் போலும். சிறிது காலத்துக்கு முன்வரை அங்கே வாழ்ந்தார்கள் பூமிவாசி மனிதர்கள் போன்றே பகுத்தறிவுள்ள ஜீவர்கள். அவர்கள் கணிசமாக உயர்ந்த நாகரிகத் தரத்தை எட்டியிருந்தார்கள். கட்டிடங்களும் சுவரோவியங்களும் சித்திரங்களும் புத்தகங்களும் அழியாதிருந்தன. தொழிற்சாலைகளும் வீதிகளும் இயந்திரங்களும் பறக்கும் சாதனங்களும் எஞ்சியிருந்தன. இவை செவ்விய பொறிகள், ஆனால் பேணுவார் இன்றிப் பாழாகிக் கொண்டிருந்தன. நகரத்தில் கிடைத்த புத்தகங்களின் உதவியால் இந்த ஜீவர்களின் மொழியைப் பகுத்தாயவும் இவர்களது தோற்றத்தைக் கற்பனை செய்து கொள்ளவும் முடிந்தது. ஏழேழு விரல்களும் பெரிய கண்களும் கொண்ட இவர்கள் பூமிவாசிகளைக் காட்டிலும் மெல்லியவர்களாகவும் நொய்ந்தவர்களாகவும் காணப்பட்டார்கள். தேவைப்பட்டால் இவர்களுடன் கருத்துப்

பரிமாற்றம் செய்து கொள்ள முடியும்.

ஆனால் தேவைதான் ஏற்படவில்லை. இந்தக் கிரகத்தின் உயிர்ப் பிராணிகள் எல்லாமே போன சுவடு தெரியாமல் மறைந்து விட்டன. தளதளவென்று செழித்திருந்த தாவரங்கள் எஞ்சியிருந்தன. இவை ரோஜா, வெளிர் ஆரஞ்சு முதல் ஆழ்ந்த கருஞ்சிவப்பு வரை செவ்வண்ணத்தின் எல்லாச் சாயல்களும் கொண்டிருந்தன. குன்றுகளின் நடுவே இருந்த பெரிய ஏரியைச் சுற்றி இம்மாதிரி கருஞ்சிவப்பு மரங்கள் நெருக்கமாக அடர்ந்திருந்தன. எனவே ஏரி நீர் கரியதாகக் காணப்பட்டது. ஏரியிலிருந்து பெருகிய ஆறோ, பளிங்குபோலத் தெளிவாயிருந்தது. ஏரியில் இருந்தன நீண்ட கருமலங்குகள். ஆற்றிலும் அதன் கிளைப் பெருக்குகளிலுமோ, நூற்புக்கதிர் வடிவான, அனேகமாக ஒளிஊடுருவக்கூடிய மீன்கள் திரள் திரளாக நீந்தின. ஹெர்பர்ட் யூங் மலங்குகளையும் மீன்களையும் பிடித்து ஆராய்ந்தான். நிலநீர் வாழ்வன ஆகிய சில கரு ஊதா அரணைகளையும் அவன் பிடித்தான். "அவன்தான் என்ன செய்வான்? மீன்களும் அரணை களும் மட்டும்தானே இந்தக் கிரகத்தில் எஞ்சியுள்ளன? மனிதர் களோ, தரை விலங்குகளோ, பறவைகளோ இல்லவே இல்லையே!... முந்தாநாள் கரேல் ஏதோ ஒரு பிராணியை நகரத்தில் பிடித்தான் என்பது உண்மையே. ஒருவேளை இங்கே ஏதேனும் இடத்தில் பிராணிகள் இருக்கின்றன போலும்..." - இப்படி ஓடிற்று வீக்தரின் சிந்தனை. படிப்படியாகச் சரிந்து செல்லும் குன்றுகள் சூழ்ந்து அமைதி பொலிந்த சிவப்பு - ரோஜா நிறச் சமவெளிமீது அவன் நெடுகக் கண்ணோட்டினான். புள்ளிபோல் தோன்றிய ஜீப்பின் வடிவம் ராக்கெட்டை நெருங்க நெருங்க மளமளவென்று பெரிதாவதைக் கண்டான். "ஆமாம், முழு வேகத்துடன் வருகிறார்கள்... ஆகவே, ஏதோ... பாழ் கிரகம் இது!" என்று எரிச்சலுடன் நினைத்த வீக்தருக்கு உடனேயே நாணம் உண்டாயிற்று. "இந்தப் பறப்பில் உன்னையும் சேர்த்துக்கொள்ளும் படி நீதானே விடாப்பிடியாக மன்றாடினாய்? எந்தக் கிரகத்தை யாவது முதலில் அடைய வேண்டும், புது உலகைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டாயே. அறியாததைக் கண்டு அறியும் ஆர்வம் உன்னை உந்தியது. இதோ, உன் ஆர்வத்தின் பலன், அனுபவி. அல்லது, புதுமைக் கிளர்ச்சியும் வேண்டும் சௌகரியங்களும் குறையக்கூடாது என்று எண்ணினாயோ?" எனத் தன்னையே நொடித்துக்கொண்டான்.

காஸிமீரின் அலுவல் அறைக்குள் ஓடிப் புகுந்து, "காஸிமீர்! நம்மவர்கள் திரும்பி வருகிறார்கள்!" என்று கத்தினான்.

"கூச்சல் போடாதே!" என்று அடர்ந்த பொன் முடியைச் சிலுப்பியவாறு எரிந்து விழுந்தான் காஸிமீர். "என் எதுகையை எல்லாம் சீர்குலைக்கிறாயே... ஒரு கணம் பொறு! ஆகா, வேலை செய்கிறதா, சபாஷ்!" என்று திருப்தியுடன் தொண்டையைக் கனைத்துக்கொண்டான். பின்பு தலையை நிமிர்த்தி, "ஊம், நீ என்ன சொன்னாய், வீக்தர்?" என்று கேட்டான்.

அவனது பெரிய நீல விழிகள் வெளிறிய முகத்தில் பளிச்சிட்டன. காஸிமீர் திடமான தேக ஆரோக்கியமும் வலிய நரம்புகளும் உள்ளவன், ஸ்கீ ஓட்டத்தில் போலந்து நாட்டின் சாம்பியன் என்பதை வீக்தர் அறிந்திருந்தான். ஆனாலும் உள்ளொளி வீசும் விழிகளின் ஒளிர்வால் பிரகாசிக்கும் அந்த வெளிறிய, குறுகிய வதனத்தைக் காணுந்தோறும் அவனுக்கு வியப்பு உண்டாகும். அது கவிஞனின், உள்நோக்கு உடையவனின் முகம். உண்மையிலோ, காஸிமீர் படு மோசமான செய்யுட்கள் இயற்றினான், உள்நோக்குத் திறன் அவனுக்கு இருந்ததாகவே தெரியவில்லை.

"மறுபடியும் கிறிஸ்தினாவைப் பற்றிச் செய்யுள் புனைகிறாயோ? நம்மவர்கள் திரும்பி வருகிறார்கள் என்கிறேன். வெகு சீக்கிரம் வந்துவிட்டார்கள், புரிகிறதா? இந்தக் கிரகத்தில் ஏதாவது விபத்து நேரும் என்று எனக்கு முன்னமேயே தெரியும்" என்றான் வீக்தர்.

குட்டையாகக் கத்தரித்த கரு முடியைச் சிலுப்பியவாறு அறையில் குறுக்கும் நெடுக்கும் நடந்தான்.

"தொப்புத் தொப்பென்று நடக்காதே, என் காது அதிர்கிறது. என் சிந்தனையைக் குலைக்கிறாய். விபத்துதான் நேர்ந்திருக்கும் என்று நினைப்பானேன்? ஏதேனும் அக்கறைக்குரிய விஷயம் கிடைத்திருக்கலாம், அதனால்தான் திரும்பி வருகிறார்கள் போலும். காப்பு அறையிலிருந்து அவர்கள் வெளியே வந்ததும் எல்லாம் துலங்கிவிடும், பதறாதே" என்றான் காஸிமீர்.

கதவை முழு பலத்துடனும் அறைந்து சாத்திவிட்டு வெளியேறினான் வீக்தர். அந்தக் கதவை என்ன முயன்றாலும் தடாரென்று சாத்த முடியாது, நுண்துளைகளிட்ட இடைத்திண்டு இசைவாகப் பொருந்தும், கதவு ஓசையின்றி இறுக மூடிக் கொள்ளும் என்பது அவனுக்குத் தெரிந்ததுதான். ஆனாலும் ஆத்திரத்தை வெளிக்காட்ட விரும்பினான். காஸிமீரோ

தலையைத் திருப்பக்கூட இல்லை.

"செய்யுள் எழுத நல்ல வேளைதான் பார்த்தான்! இவன் சுபாவமே அலாதி!" - நடைவழியின் மென்மையான, ஸ்பிரிங் வைத்த தரையில் நடந்தவாறு சிடுசிடுப்புடன் இப்படி எண்ணினான் வீக்தர். உள்ளதைச் சொன்னால் காஸிமீரின் அமைதி அவனுக்குப் பொறாமை உண்டாக்கியது. தன் அசட்டுத் தனமான கலவரம் குறித்து அவன் வெட்கம் அடைந்தான். மெய்யாகவே கெடுதல் எதுவும் நேராமல் இருக்கலாமே...

ஆனால் நடைவழியின் திருப்பத்தில் விளாதிஸ்லாவ் தென் பட்டதுமே தான் கலவரப்பட்டது காரணத்துடனேயே என வீக்தர் உணர்ந்தான். ஈரத் தலையை கோதியவாறு விளாதிஸ்லாவ் அனேகமாக ஓடி வந்தான்.

"விளாதிஸ்லாவ்!" என்று கத்தினான் வீக்தர்.

விளாதிஸ்லாவ் அருகே ஓடிவந்தான். அவனது மங்கிய சாமள முகம் துவலைக் குழாயில் குளித்ததால் லேசாகச் சிவப்பேறி இருந்தது.

"தலானவ் உன்னை மருத்துவப் பகுதிக்கு வரச் சொல்கிறான்" என்றான்.

"என்ன நேர்ந்தது? யாருக்கு?" என்று பதைப்புடன் வினவினான் வீக்தர்.

"கரேல்... அவனுக்கு உடம்பு சரியாயில்லை பொறு. கரேலின் முன்னிலையில் அதிகம் பேசாமல் இருப்பதற்காக இங்கேயே உனக்கு எல்லாவற்றையும் விவரிக்கும்படி தலானவ் சொன்னான். கரேலுக்கு என்ன தெரியுமா..." என்று விரலால் நெற்றியைத் தட்டினான் விளாதிஸ்லாவ்.

"கரேலுக்கா?" என்று ஆச்சர்யத்துடன் கூவினான் வீக்தர்.

"ஆமாம், கேள். நாங்கள் நகரத்தில் இருந்தபோதே இது தொடங்கிவிட்டது. படிகள் வைத்த பெரிய வட்டச் சதுக்கத்தில் நாங்கள் போய்க் கொண்டிருந்தோம். அங்கே முட்டை வடிவான வெண் மாளிகை ஒன்று இருக்கிறது. அந்த இடத்தில் கரேல் எங்களிடமிருந்து பின்தங்க ஆரம்பித்தான். அப்புறம் படிமேல் உட்கார்ந்துவிட்டான். நான் அவன் அருகே போய், 'உன் உடல் நிலை சரியாய் இல்லையா?' என்று கேட்டேன். அவன் தலையை அசைத்தான். 'என்ன ஆளப்பா நீ, உட்கார்ந்துவிட்டாயே. போகலாம், வா!' என்றேன். அவன் எழுந்து நடந்தான். ஆனால் எதிலும் அக்கறை இல்லாதவனாக, இயந்திரம் போல நடந்தான். காரணம் எதுவும் இல்லாமலே வழியில் நின்றான். அவன் உடம்புக்கு என்ன என்று கேட்டோம். முதலில் ஒன்றுமில்லை என்றான். பிறகு கேள்விக்குப் பதில் சொல்லாமல் விசித்திரமாகப் புன்னகை செய்தான். நாங்கள் ராக்கெட்டுக்குத் திரும்பத் தீர்மானித்தோம். ஜீப்பில் எல்லாவற்றையும் முதல் தடவையாகப் பார்ப்பவன் போல வெறித்து நோக்கினான். இதெல்லாம் தனக்குக் கனவில் தோன்றுகிறது போலும் என்று பின்பு கூறினான்."

"எது கனவில் தோன்றுகிறதாம்? அவனுக்கு மாயக் காட்சிகள் தென்பட்டனவாமோ?"

"தென்படவில்லை என்று நினைக்கிறேன். நாங்கள் அவனுக்குக் கனவில் தோன்றுவதாகவும், ஜீப்பை அவன் கனவில் காண்பதாகவும் சொன்னான். ராக்கெட்டின் காப்பு முன்னறையில் 'நான் நானே அல்ல' என்று திடீரென அறிவித்தான். துவலைக் குழாயடியே நின்று, தன் உடம்பைத் தொட்டு, 'இல்லை, இது நான் அல்ல!' என்று திகிலுடன் கூறினான்."

"அப்படியா!" என்று சிந்தனை செய்தவாறு உதட்டை அதுக்கிக் கொண்டான் வீக்தர்.

சந்திர நிலையத்தில் வேலை ஏற்ற பின் இதுவரை அவன் இம்மாதிரி நிகழ்ச்சி எதையும் கண்டதில்லை. மூளை பிசகுவது சில வேளைகளில் நேர்ந்தது உண்டுதான். ஆனால் பெருத்த விபத்துக்கள், கேடுகள், நண்பர்கள் மாண்டதாலும் தனிமையாலும் சாவை எதிர்பார்ப்பதாலும் உண்டாகும் பாதிப்பு இவற்றின் விளைவாகத்தான் இவ்வாறு நேர்ந்தது. இங்கேயோ எவ்விதக் காரணமும் இல்லாமலே நிகழ்ந்திருக்கிறது மூளைக் கோளாறு... அதிலும் கரேலுக்கு இது நேர்வானேன்? எல்லோரிலும் அதிக நிதானமும் ஸ்திரபுத்தியும் உள்ளவன் ஆயிற்றே அவன்...

"நீ என்ன உணர்கிறாய்? பலவீனமா? தலைவலியா?" என்று கேட்டான் வீக்தர்.

"பலவீனமா? அறியேன். இல்லை... உடம்பு என்னுடையது அல்ல" என்றான் கரேல், உதடுகளை அரும்பாடு பட்டு அசைத்தவாறு.

"உன்னுடையது அல்லவாவது? பின்னே யாருடையதாம்?"

"அறியேன். இதோ நான் கையை அசைக்கிறேன். ஆனால்

"அது என்னுடையது அல்ல. அல்லது ஒருவேளை அது என்னுடையதுதான் போலும். அதை அசைப்பவன் தான் வேறு யாரோ."

"கரேல். இது வெறும் பிதற்றல் என்பது உனக்கேத் தெரியும்" என்று வெகு உற்சாகமாகக் கூறினான் வீக்தர்.

"எனக்குத் தெரியும். இப்படி இருக்கவே முடியாதுதான்" என்று இசைந்தான் கரேல்.

எதையோ உற்றுக் கேட்பவன்போல அவன் சற்று நேரம் பேசாதிருந்தான். பிறகு வீக்தரின் 'பக்கம் சட்டெனக் கையை நீட்டினான். கை வீக்தரின் தோளில் இடித்தது. கரேலின் முகத்தில் வியப்பா மனநிறைவா என்று சொல்ல முடியாத உணர்ச்சி தென்பட்டது.

"நீ என்ன?" என்று கேட்டான் வீக்தர்.

"நீ எனக்குக் கனவில் தோன்றுகிறாய் என்று நினைத்தேன்" என முணுமுணுத்தான் கரேல்.

"ஏன்?"

"அப்படித்தான்... எல்லாம் கனவுபோல் இருக்கிறது. அல்லது சித்திரத்தில் வரைந்ததுபோல."

மறுபடி அவன் வெகுநேரம் பேசாதிருந்தான். அப்புறம் திடீரெனப் படுத்து, சுவர்ப்புறம் திரும்பிக் கொண்டான். சுவரில் அமைந்த மருந்து அலமாரியின் செருகு கதவை வீக்தர் ஒரு புறம் நகர்த்தி, சற்றுத் தயங்கியபின் அதிலிருந்து சிறு மஞ்சள் மாத்திரையை எடுத்தான்.

"இந்தா, விழுங்கு கரேல்!" என்றான்.

கரேல் கீழ்ப்படிவுடன் சிறிது நிமிர்ந்து, மாத்திரையை விழுங்கிவிட்டு மறுபடி படுத்துக் கொண்டான். வீக்தர் பக்கத்து அறைக்குச் சென்றான். அங்கே தலானவ் உட்கார்ந்திருந்தான்.

"இந்த நிலைமையில் அவனுடன் பேசுவது சாத்தியம் இல்லை. கணப்போதில் அவன் களைத்துப் போகிறான். நான் அவனுக்கு ஆற்றல் தரும் எனெர்ஜின் மாத்திரை கொடுத்திருக்கிறேன். பத்து நிமிடங்களுக்கெல்லாம் அவன் அனேகமாக வழக்கமான நிலைமைக்கு வந்துவிடுவான். அதாவது தற்காலிகமாக" என்றான் வீக்தர்.



"இது என்ன நோய் என்று நினைக்கிறாய்?" என வினவினான் தலானவ்.

அவனுடைய உள்பதிந்த கரும்பழுப்புவிழிகள் வீக்தரைச் சோதிப்பவை போல நோக்கின. அவற்றில் அவநம்பிக்கை ததும்பியதாக வீக்தருக்குத் தோன்றியது. "ஊம், அதனால் என்ன, அவன் நினைப்பது சரிதானே" என்று மனக்கசப்புடன் எண்ணமிட்டான் வீக்தர். "இந்த விஷயத்தில் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. பறப்பில் மருத்துவப் பணிக்கு வேந்த்தை அழைத்து வராமல் என்னைக் கூட்டிக்கொண்டு வந்ததற்காக அவன் இப்போது வருந்துகிறான்... வேந்த் வயது முதிர்ந்தவன், தொலை தூரப் பறப்புக்களுக்கு ஏற்றவன் அல்ல என்பது உண்மையே. எனினும்..."

தலானவை விழிபொருந்த நேரிட்டு நோக்கி, "அறியேன். உளநோய் மருத்துவத்தில் நான் தேர்ச்சி பெற்றவன் அல்லவே. இது எல்லாமே எனக்கு விந்தையாகப்படுகிறது. முழு ஆரோக்கியமும் நிதானப் போக்கும் கொண்ட மனிதனுக்கு இப்படித் திடீரென்று நோய் வந்து மளமளவென்று முற்றுவது அதிசயந்தான்... அதிலும் முன்பு எவ்விதக் காயமும் படாதிருக்கும் நிலையில்..." என்றான்.

"கடுமையான அதிர்ச்சிகள் கூடக் கரேலை வெகுவாகப் பாதிக்கவில்லை. 'ஸிரியஸ்' பறப்பின்போது நான் அவனுடன் இருந்தேன். பேரென்ஸும் ஃபால்கோவ்ஸ்க்கியும் குறுங்கோளில் விபத்துக்கு உள்ளாகி மடிந்தபோது கரேல் அவர்களைத் தேடினானே, தெரியுமா, அந்தப் பறப்பில். விபத்து அவன் கண் எதிரே நிகழ்ந்தது. பேரென்ஸ் அவனுடைய உயிர் நண்பன், ஆனால் நண்பனுக்கு எவ்வகையிலும் உதவ அவனுக்கு இயல வில்லை. ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு இது நிகழ்ந்தபோது கரேலுக்கு மூளை பிசகவில்லை என்றால்..." என்று வாக்கியத்தை முடிக்காமலே விட்டான் தலானவ்.

"புரிகிறது. அவனிடம் போவோம் வா. எனெர்ஜின் மாத்திரை வேலை செய்யத் தொடங்கியிருக்கும்" என்றான் வீக்தர்.

கரேல் திகைப்புடன் சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"எனக்கு என்னதான் வந்துவிட்டது? நான் என்ன, நோய்ப்பட்டு விட்டேனா?" - கரேலின் குரலில் பதற்றம் இல்லை, அவனால்

அவன் கலவரம் அடைந்திருப்பது தெரிந்தது.

வீக்தர் கட்டிலில் அவன் அருகே அமர்ந்தான்.

"ஆமாம், லேசாக. இப்போது உடம்பு எப்படி இருக்கிறது?" என்று கேட்டான்.

"தேவலை. என்ன நோய் இது?"

"உனக்கு என்ன செய்தது, சொல்லு" என்று அவனையே திருப்பிக் கேட்டான் வீக்தர்.

கரேல் முகத்தைச் சுளித்தான்.

"சொல்வது எனக்குக் கடினம். தவிர... பயமாயிருக்கிறது" என்றான்.

"என்ன பயம்?"

"நான் விவரித்தேன் ஆனால் இந்த நோய் மறுபடி வந்துவிடும் என்று எனக்குத் தோன்றுகிறது."

வீக்தர் பெருமூச்சுவிட்டான்.

"சொல்லு" என்று கனிவாகத் திரும்பக் கூறினான். "விஷயம் என்ன என்று எங்களுக்குத் தெரிய வேண்டும். இல்லா விட்டால்..."

அவன் வாக்கியத்தை முடிக்கவில்லை. கரேலின் முகம் அச்சத்தால் விகாரம் அடைந்தது.

"இல்லாவிட்டால் என்ன ஆகும்? நான் இன்னும் நோயாளி தானா? குணமடையவில்லையா நான்?"

தலானவ் இப்போது குறுக்கிட்டான்: "கேள், கரேல். பதற்றப் படாமல் இருப்பது அவசியம். இதைவிட மோசமானவை உனக்கு நேர்ந்தன, அப்போதும் நீ மனம் கலங்கவில்லை. எல்லாருக்குந்தான் எல்லா விதத் துன்பங்களும் நேர்ந்திருக்கின்றன, இல்லையா?"

"ஆனால் இந்த மாதிரித் துன்பம் நேர்ந்ததில்லை" என்று நிச்சயத்துடன் சொன்னான் கரேல். "அவை எல்லாம் எனக்கு வெளியே நிகழ்ந்தன, புரிகிறதா? இதுவோ, உள்ளே நிகழ்கிறது. அதனால்தான் அஞ்சுகிறேன். தன் வசம் இழந்துவிடுகிறேன்."

"இதற்கு என்ன அர்த்தம், விளங்கும்படிச் சொல்லேன்."

"விளக்குவது எப்படி என்று எனக்குத் தெரியவில்லை." - கரேல் சற்று நேரம் பேசாதிருந்தான். "இதனாலெல்லாம், அதாவது நாம்



செய்வது எல்லாம் வீண் வேலை என்று முதலில் எனக்குத் தோன்றியது. எதிலும் எனக்கு அக்கறை இல்லாமல் போய் விட்டது. உங்கள் மேலும் சுற்றும் உள்ளவற்றின் மேலும் என்மீதுமே எனக்கு அக்கறை இல்லை. 'எழுந்திரு, நட, உட்கார்' என்று யாரேனும் சொன்னபோது நான் அப்படியே செய்தேன். ஆனால் அந்த மாதிரிச் செய்தது நான் அல்ல, எனக்கு உள் இருந்த வேறு யாரோ என்று பட்டது."

அவன் கலவரத்துடன் தோழர்களைப் பார்த்தான்.

"இது உளநோய், அல்லவா?" என்று வினவினான்.

"எனக்குத் தோன்றவில்லை. திடுதிப்பென்று உனக்கு உளநோய் எப்படி வரும்? விண்வெளியில் நீ பழகாதவன் அல்லவே" என்றான் வீக்தர்.

கரேலின் முகத்தில் கொஞ்சம் தெளிவு வந்தது.

"இது மெய்தான். அப்படியானால் இது என்ன கோளாறு, ஊம்? சுற்றும் உள்ளவை எதார்த்தமானவை அல்ல போல எனக்கு அப்புறம் தோன்றலாயிற்று. ஏதோ கனவு மாதிரி. அல்லது படங்களில் வரைந்த மாதிரி. எல்லாம் இயங்கின என்பதுதான் வித்தியாசம்" என்றான்.

"இதற்கு என்ன அர்த்தம்?" என்று கேட்டான் வீக்தர்.

"எனக்கேத் தெரியவில்லை. ம்ம், மோசமான படம். வண்ணங்கள் மங்கலானவை. நிறம் வெளிறிப் போனவை போல. மொத்தத்தில் படவரைவும் கவர்ச்சியானது அல்ல. தவிர, நானே வாடிச் சுருங்கிப் போய்விட்டேன் போல இருந்தது. எனக்கு உள்ளே யாரோ உட்கார்ந்திருப்பது போன்ற பிரமை." - கரேலின் முகம் அச்சத்தாலும் அருவருப்பாலும் கோணியது. "நான் நடக்கிறேன், ஆனால் நடப்பவன் நான் அல்ல, என் உடம்பு அல்ல. இல்லாவிட்டால், உடம்பு என்னதுதான், ஆனால் அதை நடத்திச் செல்பவன் வேறு ஒருவன். நானோ, எடையே இல்லாதவன் ஆகிவிட்டதுபோல் பட்டது..." - திடீரென்று அவன் அசைவின்றி விரைத்துப் போனான். அவன் விழிகள் ஒரே புள்ளியில் நிலைத்துவிட்டன. "அது மறுபடி தொடங்குகிறது... நான் பேசியிருக்கக்கூடாது! பேசுவது கூடாது என்பது எனக்கு முன்பே தெரியும்!" என்றான்.

வீக்தர் அவன் தோள் மேல் கையை வைத்தான். கரேலின்

பெரிய, வலிய உடல் முழுவதும் பயங்கரமான இறுக்கத்தால் விதிர்விதிர்ப்பதை உணர்ந்தான்.

"பதறாதே, கரேல்! இது சரியாகிவிடும்" என்றான்.

"சரியாகிவிடுமா? சரியாகிவிடும் என்று நினைக்கிறாயா? இது என்ன என்பதுதான் உனக்குத் தெரியாதே. ஒருவருக்குமே தெரியாதே. தெரியாதபோது ஏன் பேசுகிறாய்? இதோ, இதோ மறுபடி நான் என் வசம் இழந்துவிட்டேன். அங்கே, மீண்டும் வேறு யாரோ ஒருவன்!" - கரேலின் முகம் வெளிறிவிட்டது. "வீக்தர், நண்பர்களே, எனக்கு உதவுங்கள். நான் நோயாளி ஆயிற்றே. நான் உணர்வது சரியாக இருக்க முடியாது!" என்று கெஞ்சினான்.

படுத்து, தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டான். தலானவும் வீக்தரும் பேசாமல் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். வீக்தர் அலமாரியிலிருந்து வெள்ளை மாத்திரைகள் கொண்ட ஒளிபுகும் குழல் சீசாவை எடுத்தான்.

"இதை விழுங்கு, கரேல்" என்று கட்டளை இட்டான்.

கரேல் உட்கார்ந்து மாத்திரையை வாங்கி விழுங்கினான். அப்புறம் தன்னையே தொட்டுப் பார்த்துக்கொண்டான்.

"வீக்தர், மனச்சாட்சி அறியச் சொல்லு: நான் முன்போலவேதான் இருக்கிறேனா? ஊம், நான் குறுகிப் போய்விடவில்லையா?" என்று திடீரென வினவினான்.

வீக்தர் பெருமூச்செறிந்தான்.

"இல்லை. வெறுமே உனக்கு அப்படித் தோன்றுகிறது. நான் உனக்குத் தூக்க மருந்து கொடுத்திருக்கிறேன். நீ உறங்க வேண்டும், இளைப்பாற வேண்டும். தூங்கு, கரேல். நாங்கள் ஏதாவது உபாயம் தேடுகிறோம், கட்டாயமாக."

"உபாயம் செய்யுங்கள். இல்லாவிட்டால் என்னைக் கொன்று விடுங்கள். எப்படியும் இந்த மாதிரி உயிர் வாழ முடியாது. எனக்கு உள்ளே இருக்கிறானே, இன்னொருவன், அவன் என்ன விரும்புகிறான் என்பது எனக்குத் தெரியவில்லையே. என்னால் இப்படி வாழ முடியாது" என்று சோகத்துடன் சொன்னான் கரேல்.

"கரேல், இது வியாதி. உனக்கு உள்ளே ஒருவரும் இல்லை.



இதை நீயே அறிவாய். தூங்கு. முக்கியமானது என்னவென்றால், பயப்படாதே. நாங்கள் உன்னைக் குணப்படுத்துவோம்" என்று வீக்தர் தணிந்த குரலில் அமைதியாகக் கூறினான்.

"கரேலுக்காக நாம் செய்யக்கூடியது ஒன்றுதான்: மேற்கொண்டு தாமதப்படாமல் அவனைக் காத்து, பூமியில் சேர்ப்போம். அங்கே அவனது நோயைக் குணப்படுத்திவிடுவார்கள்" என்றான் யூங்.

"உயிர்ப்பதனமா?" என்று கேட்டான் தலானவ்.

"வேறு என்னவாம்?" என்று தோள்களைக் குலுக்கினான் யூங். "நாம் செய்வதற்கு வேறு ஒன்றும் இல்லை. கரேல் வேதனைப் படுகிறான். பறப்பின்போது அவன் நிலைமை இன்னும் மோசம் ஆகலாம். இது எதில் போய் முடியும் என்பதை நாம் அறியோம். சரிதானே?"

"வீக்தர், நீ என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டான் தலானவ்.

"அறியேன். என்ன நடந்தது என்று எனக்கு இன்னும் புரியவில்லை."

"ஆனால் உயிர்ப்பதனத்துக்கு நீ இசைகிறாயா?"

வீக்தர் சற்று யோசித்தான்.

"நாளைவரை தள்ளிப்போடு. இன்று மருத்துவப் பகுதியில் நான்தான் முறைவேலை பார்க்கப் போகிறேன்."

"இது அபாயம் அல்லவா?" என்று கேட்டான் யூங். "கரேலோ மிகவும் பலசாலி. ஏதேனும் நேர்ந்துவிட்டால்..."

"நான் அவனுக்குத் தூக்க மருந்து தருகிறேன்."

"நீ, யூங், இருவரும் முறைவேலை பாருங்கள். ஒருவர் மாற்றி ஒருவராக உறங்குங்கள்" என்றான் தலானவ்.

கரேல் மாலையில் உறங்கி விழித்தான். வீக்தர் அவனுக்கு எனெர்ஜின் மாத்திரை கொடுத்தான். பின்பு அவனுடன் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தான். இந்தத் தடவை எனெர்ஜின் மிகக் குறுகிய நேரத்துக்கே பாதிப்பு விளைவித்தது. கரேல் பயந்து நடுங்கினான். அவனை அடையாளம் காணவே முடியவில்லை. அவன் அளவில் குறைந்து விடவில்லைதான். ஆனால் அவன் முகம் ஒரேயடியாகச் சப்பி வெளிறிப் போயிருந்தது. எனவே அவன் முற்றிலும் வேறு மனிதனாகக் காட்சி அளித்தான். அவன்

கண்களோ, பகலில் இருந்ததைவிட இன்னும் விசித்திரமாக இருந்தன. வீக்தர் அவனைக் கூர்ந்து கவனித்து அவன் மாறுகண் போடுவதைக் கண்டான்.

"உனக்குக் கண் நன்றாகத் தெரிகிறதா?" என்று கேட்டான்.

"மங்கலாக. மிகவும் மங்கலாக" என்று உடனே பதில் அளித்தான் கரேல். "பனிமூட்டம், எல்லாம் இடைவிடாமல் பெருகி ஓடுகிறது. இதோ" என்று கையால் இடப்புறம் காட்டி, "ஏதோ மினுமினுக்கும் புள்ளி. நீயும் உருகி ஓடுகிறாய். உன்னை எனக்கு நன்றாகத் தெரியவில்லை" என்றான்.

எனெர்ஜினின் பாதிப்பு அகன்றுவிட்டது. கரேல் தணிவாக, முன்பின் தொடர்பு இல்லாமல் பேசலானான். தனக்கு உள் இருப்பவன் எவனுடையவோ குரலை அவன் எப்போதும் உற்றுக் கேட்பதுபோல் இருந்தது. வீக்தர் அவனுக்கு உறக்க மருந்தை கொடுத்தான்.

"இப்போதைக்கு நீ படுத்துத் தூங்கு" என்று யூங்கிடம் சொன்னான் வீக்தர்.

நான்கு மணி நேரத்துக்குப்பின் அவன் யூங்கை எழுப்பினான்.

"கரேல் விழித்துக்கொண்டால் அவனுக்கு மறுபடி உறக்க மருந்து கொடு" என்று சொல்லிவிட்டு அக்கணமே தூங்கி விட்டான்.

ஒரு நிமிடமே தூங்கியதாக அவனுக்குத் தோன்றியது. யூங் அவன் தோளைத் தொட்டான். வீக்தர் கண்களைக் கசக்கியவாறு துள்ளி எழுந்தான். கரேல் ஒரு சீராக ஆழ்ந்த மூச்சு விட்டவாறு நிமிர்ந்து படுத்திருந்தான். உறக்கம் காரணமாக அவன் முகம் லேசாகச் சிவந்திருந்தது. முற்றிலும் ஆரோக்கியசாலியாகத் தோன்றினான். வீக்தர் கடிகாரத்தைப் பார்த்தான். இரண்டு அடித்து இருபது நிமிடங்கள். அவன் முழுதாக இரண்டு மணி நேரங்கூட உறங்கவில்லை.

"என்ன நடந்தது, யூங்?" என்று வினவினான்.

யூங் பேசாதிருந்தான். ஒரேயடியாகக் குறுகிப் போய், கூனி உட்கார்ந்திருந்தான். எப்போதும் கச்சிதமாக வாரி விடப்பட்டிருக்கும் நேரான பொன் முடி அவன் நெற்றிமேல் கலைந்து விழுந்திருந்தது. திடீரென்று சவங்கிப்போய்விட்ட அவனுடைய வெளிர் முகத்தின்மேல் கண்ணோட்டிய வீக்தர்



உதட்டைக் கடித்துக் கொண்டான்.

"யூங், உனக்கு என்ன உடம்பு?" என்று மென்று விழுங்கிக்கொண்டு கேட்டான்.

யூங் வெளிர்நீல விழிகளை உயர்த்தி வீக்தரைப் பார்த்தான். அவ்விழிகளில் திகில் நிறைந்திருந்தது.

வீக்தர் அவன் அருகே போனான்.

"நானுந்தான்... கரேல் போலவே நானும் நோய்ப்பட்டுவிட்டேன். அவன் சொன்னானே, அதுவேதான்"- யூங் திடீரென்று இரு கைகளாலும் தலையைப் பிடித்துக்கொண்டான். "தலை பலூன் போல லேசாகிவிட்டது... பறந்துவிடும் போல... ஆமாம்... எல்லாமே கனவு மாதிரி..."

வீக்தர் அவன் அருகே போனான். யூங் ஒருபுறம் விலகி, முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டான்.

"உன்னால் தனியாய் இருக்க முடியுமா? நான் இதோ திரும்பி விடுகிறேன்."

"நான் பார்க்காதபோதே போய்விடு. நீ நடக்கும்போது என்னை ஊடுருவிச் செல்வதுபோல எனக்குப் பிரமை உண்டாகிறது" என்று ஒலிப்பற்ற குரலில் சொன்னான் யூங்.

அறையிலிருந்து வெளியே போகையில் வீக்தர் திரும்பிப் பார்த்தான். யூங் கண்களை இறுக மூடியவாறு தலையைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"கரேலின் விண் காப்பு உடை நேற்றுமுன்தினம் கிழிந்துவிட்டது. நான் சொல்லவே மறந்துபோனேன். கிழிசல் மிகச் சிறியதுதான்" என்றான் விளாதிஸ்லாவ்.

"விண் காப்பு உடை எப்படிக் கிழிந்தது? அது அவ்வளவு சுலபமா என்ன?" என்று கேட்டான் தலானவ்.

"நகரத்தில் ஒரு மிருகத்தைக் கண்டோம் என்று நான் சொன்னேனே உங்களிடம். யூங்குக்குக் கொடுப்பதற்காகக் கரேல் அதைப் பிடித்தான். அழகான பிராணி அது. பளபளக்கும் இளநீலத் தோல். பூனை போன்றது. மூஞ்சிதான் கூர்மையானது, நரியுடையதுபோல. விழிகள் பெரியவை, கரியவை. அந்தப் பிராணி திமிறிற்று. அதன் உகிர்கள் கூரியவை. அவற்றால் கரேலின் காப்பு

உடையின் தோள்பகுதியை அது பற்றிக்கொண்டது. கரேல் உடனே அதை அப்பால் எறிந்துவிட்டுக் காப்பு உடையைப் பழுது பார்ப்பதில் முனைந்தான்."

"அப்படியா சேதி? ஆகவே, இது தொற்றுநோய்" என்று அனேகமாக மனநிறைவுடன் உரைத்தான் தலானவ்.

அவன் மௌனமானான். மூவரும் ஒரே விஷயத்தைப் பற்றி எண்ணமிட்டார்கள்.

"இந்த நோயினால்தான் இந்த கிரகத்தின் மக்கள் எல்லோரும் மாண்டுபோனார்களோ, ஊம்? அப்படி என்றால்...." என இழுத்தான் விளாதிஸ்லாவ்.

தலானவும் காஸிமீரும் பேசாதிருந்தார்கள். இந்த நோய் மின் வேகத்தில் முற்றுகிறது என்பது தெரிந்தது. அடுத்தது யாருடைய முறை என்பது இப்போது முக்கியம் அல்ல. அவர்கள் எல்லோருக்குமே அதிகமாய்ப் போனால் இன்னும் இரண்டு, மூன்று நாட்களே எஞ்சியிருந்தன. அப்புறம் நோய். பின்பு சாவு. இந்த நிலையில் ராக்கெட்டைப் பூமிக்குச் செலுத்திப் போவது இயலாத காரியம்.

தலானவ் முதலில் பேசினான்.

"விளாதிஸ்லாவ், நீயும் நானும் இப்போது நகரத்துக்குப் போவோம். தரைக்கு அடியே ஆழத்திற்குச் செல்லும் வழிகளைச் சரிபார்ப்பது அவசியம் என்று எனக்குத் தோன்றுகிறது."

விளாதிஸ்லாவ் சட்டென்று அவனை ஏறிட்டுப் பார்த்தான்.

"நீங்கள் எதையேனும் கவனித்தீர்களோ?"

"நீயோ?"

"குறிப்பாக எதையும் இல்லை. ஆனால் நேற்று, கரேலுக்கு உடம்பு ஒரேயடியாக மோசமாவதற்கு முன் அவனும் நானும் மையச் சதுக்கத்தின் நிலவறைப் பகுதிக்கு இறங்கிப் போனோம்... ஊம். சுருங்கச் சொன்னால், அங்கே யாரோ இருக்கிறார்கள், யாரோ ஜீவர்கள். நான் உறுதியாகச் சொல்லுவேன். திட்டவட்டமாக என்னால் ஒன்றும் கூற முடியாதுதான், இருந்தாலும்..."

"இருந்தாலும்?" என்று ஊக்கினான் தலானவ்.

"யாரோ எங்களை வேவு பார்த்தார்கள். நான் அதைக் காணவில்லை, உணர்ந்தேன்."

"உடனே ஏன் சொல்லவில்லை?"

"கரேல் காரணமாக. அவனுக்கு இந்தக் கோளாறு தொடங்கிவிட்டது.... யாரோ வேவு பார்க்கிறார்கள் என்பதை அவனும் உணர்ந்தான். மேலே வந்ததும் நான் அவனிடம் கேட்டேன். நமக்குத்தான் அப்படித் தோன்றியதே தவிர வேறு அல்ல என்றுவிட்டான்."

"ஆமாம், அவனுக்குத்தான் எல்லாம் கனவு என்று தோன்றத் தொடங்கிவிட்டதே."

"அது சரிதான். ஆனால் இது அப்புறந்தானே. அந்தச் சமயத்தில் எனக்கும் வெறும் பிரமைதான் ஏற்பட்டது என்றே நான் எண்ணினேன்."

"இப்போது நீ அப்படி எண்ணவில்லையா?"

"இல்லை."

தலானவ் சிந்தித்தான்.

"காஸிமீர், அவர்கள் பாஷையில் சிறு கடிதம் எழுதித்தர உன்னால் முடியுமா? பெரிய குறிகளில் சில சாதாரணக் கேள்விகள் எழுதவேண்டும். எதற்கும் உதவியாய் இருக்கும்." என்றான்.

ஒளி வீசும் நீலக் கண்களைத் தலானவின் பக்கம் திருப்பினான் காஸிமீர்.

"முயற்சி செய்கிறேன். என்ன எழுத வேண்டும்? என் 'லிங்' இயந்திரம் விரைவில் எழுதிவிடும் என்று எண்ணுகிறேன்" என்றான்.

"லிங்" என்பது மொழிப் பகுப்பாய்வுக்கான மின்னணுப் பொறி. காஸிமீர் அதைச் செவ்வைப்படுத்தியிருந்தான். அதைப்பற்றி அவனுக்கு ஒரே பெருமை, மகிழ்ச்சி. முற்றிலும் புதிய மொழித் தொகுப்புக்களில் "லிங்கின்" திறனைச் சோதித்துப் பார்ப்பதற்குக் கிடைக்கவிருந்த அருமையான சந்தர்ப்பத்தை நழுவவிட மனம் வராமையால்தான் தன் காதலி கிறிஸ்தினாவை நீண்ட காலம் பிரிந்திருக்கக் காஸிமீர் இசைந்தான் என்பது எல்லோருக்கும் தெரிந்திருந்தது.

"இப்படி ஆரம்பிக்கலாம் என்று நான் நினைக்கிறேன்: 'நாங்கள் வெகு தொலைவில் இருந்து உங்கள் கிரகத்துக்கு வந்திருக்கிறோம்.' நாம் எங்கிருந்து வந்துள்ளோம் என்பதை இங்கே படம் போட்டுக் காட்ட வேண்டும். பூமியிலிருந்து இந்த கிரகம் வரை உள்ள பாதையைக் குறிக்க வேண்டும். ஆமாம், இவர்கள் தங்கள் கிரகத்துக்கு என்ன பெயர் இட்டிருக்கிறார்கள்?"

"இந்தப் பெயரைக் கேள்வி மூலம் புரிந்துகொள்ள முடியாது. இவர்களது ஒலி அமைப்பு முறை மிகவும் சிக்கலானது. ஒலியின் ஸ்தாயியையும் ஏற்ற இறக்கத்தையுமே பொறுத்திருக்கின்றன எல்லாம். 'எனிமேயென்' என்றோ 'இனிமீயின்' என்றோ இதற்குப் பெயர்..."

" 'லிங்' என்ன சொல்கிறது?"

"அதுதானே சிக்கல்! 'லிங்' பேசுவதில்லையே, எழுதத்தானே செய்கிறது!" என்று கூச்சத்துடன் சொன்னான் காஸிமீர். "அது இந்த நுட்பங்களை எல்லாம் விவரமாக விளக்குகிறது. ஆனாலும் உச்சரிப்பில் உள்ள தனித்தன்மைகள் எனக்குப் பிடிபடுவதில்லை. ஆட்கள் நேரில் பேசக் கேட்க முடிந்தால்..."

"ஆம், கேட்க முடிந்தால்!" என்று ஏளனப் புன்னகை செய்தான் தலானவ். "நல்லது, வாசகத்தைக் குறித்துக்கொள். மேற்கொண்டு இப்படி எழுது: 'உங்களுடன் உடனே பேச விரும்புகிறோம். நாங்கள் உங்களுடைய நண்பர்கள். நீங்கள் ஏன் ஒளிந்திருக்கிறீர்கள்?' அவ்வளவுதான். முதல் தடவைக்கு இது போதும். அதிலும் எங்கே, எப்படி அவர்களைச் சந்திக்கப் போகிறோம் என்பது தெரியவில்லை. நல்லது, இதை அவர்கள் பாஷையில் எழுது. 'லிங்குக்கு' என் வணக்கம். நான் வீக்தரிடம் போகிறேன்" என்றான்.

விளாதிஸ்லாவுக்கு நோயாளிகளை மறுபடி பார்க்க விருப்பம் இல்லை. தவிர, வீக்தர் அவர்களை ஒதுக்கறையில் தனிப்படுத்தி வைத்திருந்தான், ஒருவரையும் உள்ளே புக விடவில்லை. 'லிங்' பொறியின் வெள்ளை விசை மேஜையில் பச்சை, சிவப்பு விளக்குகள் மின்வேகத்தில் கண்சிமிட்டுவதை வேடிக்கை பார்க்கவும் விளாதிஸ்லாவுக்கு இஷ்டம் இல்லை. அவன் அறையிலேயே தங்கிவிட்டான். அவனுக்கு ஒரே களைப்பாய் இருந்தது. இருக்கையில் சாய்ந்துகொண்டான். "எப்பாடு பட்டாலும் எதுவும் செய்ய நமக்கு நேரம் பற்றாது. எதற்காக



இதெல்லாம்?" என்று எண்ணியவன், சட்டென அரண்டு போனான். அவனுக்கும் நோய் தொற்றிவிட்டதன் அடையாளமோ இந்த மனச் சோர்வு? அப்படியிருந்தால்? அவன் துள்ளி எழுந்து அறையில் விரைவாக நடை போடலானான். தன் உடம்பு வேற்றானுடையதாகத் தோன்றுகிறதா என்று சோதித்து அறியத் தீர்மானித்து உடற்பயிச்சி செய்யத் தொடங்கினான். கண்ணுக்குப் புலப்படாத இலக்கை விளாதிஸ்லாவ் கடுஞ்சீற்றத்துடன் தாக்கிக் கொண்டிருக்கையில் வந்து சேர்ந்தான் காஸிமீர். விளாதிஸ்லாவ் சட்டெனப் பயிற்சியை நிறுத்தினான். தன் முகம் சிவப்பதை அவன் உணர்ந்தான்.

காஸிமீரோ, அவனைக் கேலி செய்ய எண்ணத்தானும் இல்லை.

"தசைகளை பிகுவாக்கிக் கொள்கிறாயா? ரொம்ப சரி! நாம் மட்டும் நம் ஊர் ஸகொப்பானியில் இப்பொழுது இருந்தால்! வெண்பனி ஒளிரும், ஸ்கீகள் தாமாகவே சறுக்கிச் செல்லுமே!" என்று கனவுக் குரலில் கூறினான்.

"ஆமாம், இன்பமாய் இருக்குந்தான்" என்று இசைந்தான் விளாதிஸ்லாவ். "கடிதம் எழுதிவிட்டாயா?" என்று அப்புறம் கேட்டான்.

"எழுதாமல் என்ன? 'லிங்' ஒரே நொடியில்..."

தலானவ் உள்ளே வந்தான்.

"எங்கே, காண்பி. எப்படி இருக்கிறது என்று பார்ப்போம்" என்றான்.

"இதோ" என்று தடித்த காகிதம் ஒன்றை அவன்முன் நீட்டினான் காஸிமீர். புரியாத குறிகள் அதில் தீட்டியிருந்தன. பெரிய கோடு, அதற்கு மேலே அடர்த்தியான சிறு குறிகள். "இது அவர்களுக்குப் புரியும் என்று நம்புகிறேன். அதாவது, இது அவர்களுடைய பாஷையாக இருந்தால்..."

"வேறு யாருடையதாம்?" என்று வினவினான் தலானவ்.

"யார் கண்டது? நிலவறைகளில் வசிப்பவர்கள், இந்த கிரக வாசிகளைக் கொன்று ஒழித்திருக்கலாம் ஒருவேளை" என்று சிந்தனையுடன் பதில் அளித்தான் காஸிமீர். "அவர்கள் ஒளியை அஞ்சுகிறார்கள், வெறுக்கிறார்கள், எனவே ஒளியை விரும்புபவர்களை அவர்கள் கொன்றுவிட்டார்கள்..."

"அவலக் கற்பனை" என்றான் விளாதிஸ்லாவ்.

"நீ என்ன, ஏதேனும் மகிழ்ச்சி நிறைந்த சம்பவத்தைக் கற்பனை செய்துகொள்கிறாயோ?" என்று கேட்டான் காஸிமீர்.

தலானவ் யோசனையில் ஆழ்ந்தவனாகக் கடிதத்தைப் பார்வையிட்டான்.

"இவர்கள் இரட்டை வரிகளாக ஏன் எழுதுகிறார்கள்?" என்று கேட்டான்.

"சிறு குறிகள் கொண்ட மேல்வரி ஒலியின் ஸ்தாயியையும் ஏற்ற இறக்கத்தையும் காட்டுகிறது. இவர்களுடைய மொழியில் உயிரெழுத்துக்கள் நிறைய. அவற்றின் ஒலிப்பும் பல்வகைப் பட்டது. ஒலி பேதங்கள் சொல்லின் அர்த்தத்தை மாற்றி விடுகின்றன. இவர்களுடைய செவிப்புலன் நம்முடையதைக் காட்டிலும் கூரியது, நுட்பமானது. இந்த மேல்வரி இல்லாமல் முக்கியக் குறிகளால் என்ன எழுதியிருக்கிறது என்று புரிந்து கொள்ள முடியாது. ஆனால் முக்கியக்குறிகள் சிலவே."

"அபத்தம். முக்கியக் குறிகளைக் கொஞ்சம் அதிகமாக வைத்துக் கொள்வது இன்னும் சுளுவாய் இருக்குமே" என்றான் விளாதிஸ்லாவ்.

"நம்முடைய புவி மொழிகளிலுந்தாம் எத்தனையோ அபத்தங்கள் உள்ளன" என்று கூறினான் காஸிமீர்.

"நிலவறைகள் பற்றியும் நகருக்கு அடியே உள்ள தரைக்கீழ் வழிகள் பற்றியும் குறிப்புக்கள் அவர்களுடைய நூல்களில் எங்குமே உனக்குக் காணப்படவில்லையா?" என்று வினவினான் தலானவ்.

"இல்லை. தவிர, நான் படித்தது சொற்பந்தானே."

"நல்லது, போவோம், விளாதிஸ்லாவ்."

குன்றுகளின் இடையே சென்ற சாலை வழியே ஜீப்பை முழு வேகத்தில் செலுத்தியவாறு விரைந்தார்கள் அவர்கள். செங்குத்துச் சரிவுகளில் வளர்ந்திருந்த புதர் ரோஜாச் சிவப்பு நிறமான பிசுவுள்ள களைகளால் ஜீப்பின் சுவர்களில் சுளீரென்று அடித்தது. எதிரே தெரிந்தது நகரம். அதன் வீதிகள் புரிவடிவாக இருந்தன. ஜன்னல்களோ கதவுகளோ அற்ற கட்டடங்கள் முட்டை அல்லது வட்டவடிவாக அமைந்திருந்தன. அவற்றின் சுவர்கள் மீது தீட்டியிருந்த ஓவியங்கள் சற்றே மங்கலாக ஒளிர்ந்தன. செழித்து மண்டிக் காடாய் அடர்ந்திருந்த மரங்கள், புதர்கள், சுவர்கள்மேலும் கும்மட்ட முகடுகள்மீதும் ஏறிப் படர்ந்திருந்த கொடிகள் ஆகியவற்றுக்கு நடுவே உயர்ந்து நின்றன கட்டிடங்கள். அவற்றில் சில வெண்மையானவை, சில வான் போன்ற வெளிர் பச்சை நிறத்தவை, வேறு சில இளமஞ்சள் வண்ணம் உள்ளவை, பின்னும் சில வெண்கல நிறத்தவை. நகரம் முழுவதும் இரத்தப் பெருக்கில் ஆழ்ந்தது போலத் தோற்றம் அளித்தது. பெரிய சதுக்கத்தில் இது கருஞ்சிவப்பாகக் கெட்டியாகியிருந்தது. சதுக்கத்தின் நடுவில் இருந்தது வெண் நிறமான முட்டை வடிவக் கட்டடம். உருண்டை முகடும் சுவர் களும் கொண்டு மங்கலாக ஒளிர்ந்த அந்த மாளிகை பிரமாண்ட மான வெள்ளி முட்டை போலக் காட்சி அளித்தது. அதிலிருந்து சற்று தூரத்தில் வளர்ந்திருந்த மரங்கள் தங்கள் கருஞ்சிவப்புக் கிளைகளாலும் சித்திர வடிவமைந்த செவ்விலைகளாலும் மழமழப்பான உருண்டையாக ஒளிர்ந்த சுவர்களைத் தொட்டன. கீழே புதர் வரிசையிலிருந்து தொற்றும் செந்தளிர்கள் நீண்டிருந்தன. பழுதின்றி மழமழப்பான சுவர்கள்மேல் தொற்றிக் கொள்ள அவை வீணே முயன்றன. மரக்கிளைகளை எட்டியதும் அவற்றைச் சுற்றிச் சுருண்டு கொண்டன.

தலானவும் விளாதிஸ்லாவும் மையச் சதுக்கத்தில் ஜீப்பிலிருந்து இறங்கினார்கள்.

"ஆம். சந்தேகம் இல்லாமல் இந்தக் கதை எல்லாம் சமீபத்தில் தான் நடந்திருக்க வேண்டும்" என்று மரங்கள்மீதும் புதர்கள் மேலும் கண்ணோட்டியபடிக் கூறினான் தலானவ். "பூமியில் சம தட்பவெப்ப நிலையில் வளரும் வேகத்துடனேயே இங்குள்ள மரங்களும் புதர்களும் வளர்கின்றன என்று யூங் சொல்லுகிறான். ஆகவே இவற்றுக்கு ஐம்பது வயதுக்கு மேல் இராது, இல்லையா? கிடக்கிறது, நீ இதை எங்கே பார்த்தாய், காட்டு."

"உண்மையில் நான் எதையும் காணவில்லை" என்று முட்டை வடிவில் வளைந்து சென்ற அகன்ற படிகள் வழியே போனான். "எங்களை யாரோ வேவு பார்ப்பதாக எனக்குத் தோன்றியது, அவ்வளவுதான். எதனால் என்றுகூட எனக்குத் தெரியாது. நான் தான் சொல்லுகிறேனே, திட்டவட்டமாக ஒன்றும் இல்லை" என்றான் விளாதிஸ்லாவ்.

பிரகாசமான பெரிய ஹாலில் அவர்கள் புகுந்தார்கள். கிளைகளின் விசித்திரமான வளைந்த நிழல்கள் மங்கிய வெள்ளி நிறத் தரையில் விழுந்தன.

"கீழேதான் உனக்கு இந்த உணர்ச்சி ஏற்பட்டது. மேலே ஒன்றும் தோன்றவில்லை, அல்லவா?" என்று கேட்டான் தலானவ்.

"கீழே மட்டுந்தான். யாரோ எங்களைப் பார்வையிடுவதுபோல இருந்தது. அப்புறம் தொலைவிலிருந்து போல மிகவும் மந்தமான சரசரப்பு ஒலி கேட்டது. பார்த்ததோ, கிட்டத்திலிருந்து. இதை எப்படி விளக்குவது என்று தெரியவில்லை."

"கீழே போவோம்" என்றான் தலானவ்.

வழியின் முட்டை வடிவான திறப்பு ஹாலின் உள்கோடியில் இருட்டாகத் தெரிந்தது. அதன் முகடு அகற்றப்பட்டிருந்தது.

"இதை நீங்களா இப்படி வைத்தீர்கள்?" என்று வினவினான் தலானவ்.

"இப்படியேதான் இருந்தது. இல்லாவிட்டால் இந்த வழியை நாங்கள் கவனித்திருக்க மாட்டோம்" - விளாதிஸ்லாவ் சட்டென நின்றான். "சொன்னாற்போல... நினைவு இருக்கிறதா, நீங்களும் நானும் முதல் தரம் இங்கே சேர்ந்து வந்தோமே? நான் இந்த இடத்துக்கு அருகே வந்தேன், இப்போது இது எனக்கு நன்றாக நினைவு வருகிறது. நான் எதையும் கவனிக்கவில்லை."

"நிச்சயமாகவா?" என்று கேட்டான் தலானவ்.

"சந்தேகமில்லாமல்! கரேலும் என்னோடு இருந்தான்! ஆமாம், கரேல்.... என்னவாயினும் ஒருவேளை அவனுக்கு நினைவு இருக்கலாம்..."

"சரி, கீழே போவோம்."

மார்புடன் இணைக்கப்பட்டிருந்த டார்ச் லைட்டைப் பொருத்திவிட்டுப் படிகளில் இறங்க ஆரம்பித்தான் தலானவ். தரைக்கீழ்க் கூடத்தில் அவர்கள் சில அடிகள் நடந்தார்கள். விட்டத்திலும் சுவர்களிலும் பதித்திருந்த வெள்ளிப் பாளங்கள் இருட்டில் முன்னிலும் பிரகாசமாக ஒளிர்ந்தன. தலானவ் டார்ச் லைட்டை அணைத்துவிட்டான். அரை இருளுக்குப் பழகுவதற்காக அவர்கள் சற்று நின்றார்கள். திடீரென விளாதிஸ்லாவ் கிசுகிசுத்தான்:



"அவர்கள் மறுபடி நம்மை வேவு பார்க்கிறார்கள்..."

தலானவ் திரும்பி உற்றுக் கேட்டான்.

"உனக்குத்தான் பிரமையோ? எனக்கு எதுவும் காதில் படவில்லையே" என்று அவநம்பிக்கை தொனிக்கக் கூறினான்.

"எனக்குந்தான் காதில் படவில்லை. பார்வையை உணர மட்டுமே செய்கிறேன் நான்."

"நேற்றும் உனக்கு இந்த இடத்தில் தான் அப்படித் தோன்றியதோ?"

"ஆமாம், இங்கேதான் என்று நினைக்கிறேன்."

தலானவ் டார்ச்சைப் போட்டுச் சுவர்களைக் கவனமாக நோட்டமிடலானான். எங்கும் அவை ஒரே மாதிரி இருந்தன. டார்ச்சின் கூரிய ஒளியில் அவை லேசாக ஒளிர்ந்தன. சுவர்மேல் இருந்த பாளங்கள் ஓர் இடத்தில் இடை விட்டுவிட்டுப் பதிக்கப்பட்டிருந்ததாகத் தலானவுக்குத் தோன்றியது. அவன் முகத்தைச் சுவருக்குப் பக்கத்தில் கொண்டுவந்தான். யாரோ தன்னைப் பார்ப்பது போல அப்போது அவனுக்கும் பட்டது. தன்வசம் இன்றியே அவன் அப்பால் நகர்ந்தான். இந்த விந்தையான உணர்ச்சிக்கு என்ன காரணம் என்று புரிந்துகொள்ள அவன் முயன்றான். "இந்தப் பாழாய்ப் போகிற நோய் இப்படித்தான் தொடங்குகிறதோ ஒருவேளை?" என்று கலவரத்துடன் எண்ணினான். "இல்லை. கரேலுக்கும் யூங்குக்கும் இது தொடங்கியது வேறுவிதத்தில் ஆயிற்றே..." என்று தன்னைத் தேற்றிக்கொண்டான்.

"உங்கள் காதில் பட்டதா?" என்று கிசுகிசுத்தான் விளாதிஸ்லாவ்.

தலானவ் டார்ச்சை மறுபடி சுவற்றுக்குப் பக்கத்தில் கொண்டு போனான். அப்படியா விஷயம்! இதுதான் இந்த உணர்ச்சிக்குக் காரணம்! இந்தச் சுவற்றின் மறுபுறமிருந்து வந்தது பலவீனமான, குறுகிய ஒலி, இடை முறிக்கப்பட்டதுபோல. அது பெருமூச்சா, முனகலா என்று தீர்மானிக்க முடியவில்லை. யாரோ உயிருள்ளவர்கள் அங்கே இருந்ததாகப்பட்டது. தலானவ் சுவற்றைத் தட்டிப்பார்க்கலானான். ஆம், அங்கே வெறுமை புலப்பட்டது.

"நீங்கள் இதற்கு மேலே போனீர்களா?" என்று கேட்டான்.

"ஆமாம், ஆனால் கொஞ்ச தூரந்தான். அதோ, கிட்டதட்ட அந்த இடம் வரையில். அதற்குள் கரேலின் உடல்நிலை மிக மோசம் ஆகிவிட்டது."

டார்ச்சால் வெளிச்சம் காட்டிக்கொண்டு சுவற்றைத் தட்டிய வாறு தலானவ் முன்னே சென்றான். அப்பால் பாளங்கள் நெருக்கமாகப் பதிக்கப்பட்டிருந்தன. அதே சுவற்றைப் பிடித்தவாறு வலப்புறம், பக்கத்துப் பாதையில் திரும்பினான். சில அடிகள் சென்றபின் வெற்றிடத்தைக் குறிக்கும் அதிரொலி மறுபடி கேட்டது.

"நீ எதையாவது உணர்கிறாயா?" என்று கேட்டான் தலானவ்.

"ஆம். அவர்கள் இங்கேயும் இருக்கிறார்கள்" என்று உறுதியாகச் சொன்னான் விளாதிஸ்லாவ்.

தலானவ் டார்ச்சை ஆட்டியபடி சுவரின் அருகே நின்றான். இங்கே பாளங்களும் நெருக்கமாகப் பொருந்தியிருந்தன, சுவரும் இந்த இடத்தில் தரைக்கீழ் வழியின் மற்றப் பகுதிகளிலிருந்து வேறுபடவில்லை. இந்த வெற்றொலியும் விளாதிஸ்லாவின் விந்தையான உணர்ச்சியும் மட்டுமே வேறாயிருந்தன. "என்னுடைய உணர்ச்சியுந்தான். இது தற்பிரமை அல்ல என்றால்" என நினைத்துக் கொண்டான் தலானவ்.

பிரதானப் பாதைக்குத் திரும்பி வந்து, "அப்படியானால் நீங்கள் இந்த இடம்வரை வந்தீர்கள், இதற்குமேல் போகவில்லையாக்கும், ஊம்?" என்றான்.

"ஆம், இந்தத் திருப்பம்வரை வந்தோம்"

தலானவ் பாதையின் உட்புறம் டார்ச் அடித்தான். டார்ச்சின் வெள்ளிய ஒளிப்புள்ளி பளிச்சிடும் சுவர்கள் வழியாகவும் வெளிறிய மழமழப்பான தரை வழியாகவும் ஓடி, தொலைவில் எங்கோ கிளை வழிகளில் அமிழ்ந்தது. பிதுக்கத்தின் வட்ட வரையுரு, இடப்புறம் பாதை, வலப்புறம் பாதை. தலானவ் டார்ச்சை அணைத்துவிட்டான்.

"இன்னும் சற்று தூரம் போவோம்" என்று கடுகடுப்புடன் சொன்னான்.

தலானவ் மேலே போகப் பயந்தான். மறைவிலிருந்து தங்களை நோக்கும் இந்தப் புலப்படா ஜீவர்களை அவன் அஞ்சினான். திரும்பி ராக்கெட்டை அடையும் முன்பே தானும்



விளாதிஸ்லாவும் நோய்ப்பட்டுவிடலாம் என்ற அச்சம் அவனுக்கு உண்டாயிற்று. ஆயினும் மேலே இருந்ததைவிட இங்கே, தரைக் கீழ் வழியில், அவர்கள் புதிரின் விடைக்கு அதிகச் சமீபத்தில் இருந்தார்கள். சோதனை செய்யவும் தப்பிப் பிழைக்கவும் அவர்களுக்கு மிகக் குறுகிய நேரமே இருந்தது.

"கரேல் நோய்த் தொற்றுக்கு ஆளானது மேலேதான். நம்மீது நோயை ஏவியவர்கள் இவர்கள் தாம் என்றால், இவர்கள் மேலே போவது உண்டு என அர்த்தம் ஆகிறது. யார் இவர்கள்? முன்பு இங்கே வாழ்ந்தவர்கள் என்றால், தரைக்கு அடியில் ஏன் ஒளிந்து கொள்கிறார்கள்?" - சுவர்களையும் தரையையும் உன்னிப்பாக நோட்டமிட்டபடியே இவ்வாறு எண்ணமிட்டான் தலானவ்.

"அவர்கள் மறுபடி பார்க்கிறார்கள். அதோ, அங்கிருந்து" என்று கிசுகிசுத்து வலப்புறம் கண்களால் ஜாடை காட்டினான் விளாதிஸ்லாவ்.

தலானவ் விரைவாகச் சுவர் அருகே போய், டார்ச் வெளிச்சம் அதை ஊடுருவும்படி ஆட்டினான். அமிழ்ந்த முனகலும் லேசான சரசரப்பும் இப்போது மிகத் தெளிவாகக் கேட்டன. தலானவ் சுவற்றைத் தட்டினான். அது வெற்றாக ஒலித்தது.

"இப்போது புரிகிறது. இந்த இடங்களில் சுவர்கள் உள்ளேயிருந்து ஒளி ஊடுருவத் தக்கவை. அவர்கள் நம்மைக் காண்கிறார்கள், நம்மால் அவர்களைப் பார்க்க முடியவில்லை. சாமர்த்தியமான யுக்தி. இன்னொன்று: இந்த ஜீவர்கள் அரை இருளில் வசிக்கிறார்கள். பிரகாசமான ஒளி அவர்களுக்கு வலி உண்டாக்குகிறது. அதனால்தான் திடீரென்று அவர்கள்மேல் ஒளி வீசும்போது அவர்கள் தங்களைக் காட்டிக்கொள்கிறார்கள்" என்றான் தலானவ்.

"இப்போது நாம் என்ன செய்வது?" என்று கேட்டான் விளாதிஸ்லாவ்.

"யார் கண்டது? அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று பார்க்கவாவது முடிந்தால் நல்லது."

"அதில் என்ன வித்தியாசம்?"

"சுவருக்குப் பின்னே வெளவால்களோ அகழ் எலிகளோ போன்றவை இருக்கலாமே."

"ஆம்..." என்று வாய்க்குள் முணுமுணுத்தான் விளாதிஸ்லாவ்.

"சரிதான்... சுவற்றில் ஒளி ஊடுருவும் இந்த இடத்தில் நம் கடிதத்தைப் பொருந்தும்படி வைத்துப் பார்த்தால் என்ன? ஒருவேளை அவர்கள் படித்து எப்படியாவது பதில் தரலாமே?" என்றான்.

"சரியாய்ச் சொன்னாய். இப்போதே சோதித்துப் பார்ப்போம்... இது என்ன?"

பக்கப் பாதையிலிருந்து ஏதோ ஒன்று வெளியே பறந்து அரிதாகவே செவிக்கு எட்டிய மெல்லோசையுடன் பாளங்களின் மேல் விழுந்தது. தலானவும் விளாதிஸ்லாவும் பக்கப் பாதைக்குப் பாய்ந்து ஓடினார்கள். மினுமினுக்கும் விந்தை நிழலுரு சுவற்றின் ஓரமாக விரைவாக வழுகிச் சென்றதைக் கண்டார்கள். சுவற்றின் பளபளக்கும் பின்னணியில் அந்த உருவைத் தனிபிரித்துக் காண்பது அனேகமாக இயலாதிருந்தது. விந்தைப் பிராணி புதிய கிளைவழி ஒன்றின் வட்டமான பிதுக்கத்தின் மறுபக்கம் ஓசையின்றி வழுகிப் போய்விட்டது. தலானவும் விளாதிஸ்லாவும் திருப்பத்தை ஓடி அடைவதற்குள், ஒளிபுகும் இந்த உயிரற்ற மினுமினுப்பில் கரைந்து கலந்துவிட்டது போன்று மறைந்து விட்டது.

"நீ துலக்கமாகக் கண்டாயா?" என்று வினவினான் தலானவ்.

"ஆம். அதாவது முடிந்தவரை துலக்கமாக. அதுதான் அனேகமாய் பார்வைக்குத் தென்படாததாக இருந்ததே. அது மனிதனா மிருகமா என்றுகூட நான் புரிந்துகொள்ளவில்லை. கால்களையோ, கைகளையோ, தலையையோ எதையுமே நான் காணவில்லை.

"நான் கையைப் பார்த்தேன். அது கண நேரம் தோன்றி மறைந்தது. தலையையும் கண்டேன்... இல்லை, என் கருத்துப்படி இது மனிதன்தான். ஏதோ விந்தையான உடையில்."

"ஆமாம், வேவுவீரர்களின் உருமறை நீளங்கி போன்ற உடை அது. அப்படித்தான் இருக்கவேண்டும்" என்றான் விளாதிஸ்லாவ்.

தரைப் பாளங்களின்மேல் கிடந்தது மங்கிய பசிய நிறத் தகடு. அதன் மூலைகள் வட்ட வடிவாக்கப்பட்டிருந்தன. தலானவ் ஒரு முழங்காலை மடித்து உட்கார்ந்து அதைக் கவனமாக நோட்டமிட்டபின் கையில் எடுத்துக்கொண்டான்.

"அடே, இது அவர்களுடைய கடிதம், விளாதிஸ்லாவ்!



அவர்களே நமக்கு எழுதியிருக்கிறார்கள்!" என்றான்.

"அருமை! இப்போது என்ன செய்வது? உடனே ராக்கெட் திரும்புவோமா?"

தலானவ் வேண்டாம் என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான்.

"அவர்களுடைய கடிதம் நம்முடையதைவிட நீளமானது அல்ல. ஒருவேளை இதுவும் ஒரே கேள்விகள் நிறைந்தது போலும். அவர்களுக்கு நம் கடிதத்தைக் காட்ட வேண்டியதுதான்."

"காட்டினால் அவர்கள் குழப்பம் அடைவார்கள். யோசித்துப் பாருங்கள்: அவர்களுடைய மொழி நமக்குத் தெரியும், ஆனால் அவர்களது கடிதத்துக்குப் பதில் எழுத நம்மால் முடியாது என்றால்? இதை அவர்கள் எப்படிப் புரிந்துகொள்வார்கள்?" என்றான் விளாதிஸ்லாவ்.

"நமது கடிதந்தான் பதில். நாம் எங்கிருந்து வந்திருக்கிறோம் என்பது போன்ற கேள்விகளையே அவர்கள் கேட்டிருப்பார்கள். இதைப் பார்த்துக் கொள்ளட்டுமே."

தலானவ் சுவற்றில் தட்டிப் பார்த்து வெற்றிடத்தைக் கண்டு கொண்டு அந்த இடத்தில் கடிதத்தை வைத்து உள்ளங்கையால் அழுத்திக்கொண்டான். சுவற்றின் மறுபுறம் லேசான சரசரப்பு ஒலி கேட்டது. அப்புறம் தணிந்த அழைப்புக் குரல்களும் ராகத்துடன் கூடிய விரைந்த பேச்சும் ஒலித்தன. அந்தப் பேச்சு பட்சிகள் சிலம்புவதை ஒத்திருந்தது. தலானவ் உள்ளங்கையால் சுவற்றை அழுத்தியவாறு நின்று தனக்கு முன்னே நேரே நோக்கினான். தன் பக்கமிருந்து ஒளி புகாத மெல்லிய சுவற்றின் மறுபுறம் இருப்பவர்களைக் கண்ணெதிரே காண்பவன்போல் இருந்தது அவன் பார்வை.

சுவற்றின் மறுபுறம் சரசரப்பு அதிகரித்தது. அப்புறம் தணிந்த கிசுகிசுப்பு கேட்டது. ஒளிரும் வெண் சுவற்றின் மேல் மங்கிய சாம்பல்நிற வட்டங்களும் புள்ளிகளும் தென்பட்டன. அவை வரவரப் பெரிதாயின, ஒன்று கலந்தன... தலானவ் ஒருபுறம் விலகிக் காகிதத்தை நழுவவிட்டான். சுவர் ஒளி புகக்கூடியது ஆயிற்று.

"பார்த்தாயா, விளாதிஸ்லாவ்?" என்று தணிந்த குரலில் கேட்டான் தலானவ்.

"ஆம், அவர்கள் காப்பு அடுக்கை அகற்றுகிறார்கள்" என்று

விளாதிஸ்லாவும் கிசுகிசுத்தான்.

அவர்கள் இருவரும் அசைவதற்கு அஞ்சினார்கள். சுவற்றில் துலக்கமான சிறு முட்டைவடிவ வரைவு தோன்றியது. ஒளி ஊடுருவும் அந்தச் சாளரத்தை நெருங்கியது ஒரு முகம்... புருவங்களும் இமை மயிர்களும் அற்ற வட்டமான பறவைக் கண்கள் விண்வெளி விமானிகளை நேரிட்டு நோக்கின. மெல்லிய வளைந்த மூக்கும் பறவையின் அலகுபோல் இருந்தது. வாய் குறுகலாக, அனேகமாக உதடுகள் அற்றதாக இருந்தது.

மனித முகத்தை ஒரு சிறிதே ஒத்திருந்த அந்த விசித்திர முகத்தைத் தலானவும் விளாதிஸ்லாவும் வைத்த கண் வாங்காமல் நோக்கினார்கள். முகம் உயிரோட்டமும் அறிவுக்களையும் கொண்டிருந்தது.

“எப்படியும் இவர்கள் அவர்களேதாம்... மேலே வாழ்ந்தவர்கள் தாம். படங்களிலும் புத்தகங்களிலும் உள்ள அதே மாதிரி முகங்கள் இவை” என்று கிசுகிசுத்தான் விளாதிஸ்லாவ்.

தலானவ் ஆம் என்று தலையசைப்பால் தெரிவித்தான். ஒளி புகும் தடுப்புக்கு மறுபுறம் இருந்த ஜீவன் உயர்ந்த ஸ்தாயியில் ராகம் போட்டுக் கீச்சுக் குரலில் பேசிற்று, விளாதிஸ்லாவின் கையில் இருந்த பட்டயத்தைச் சுட்டிக் காட்டிற்று. விண்வெளி விமானிகள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

“ஒன்றா நாம் நமது கடிதத்தில் அவர்களுடைய கேள்விகளுக்குப் பதில் அளிக்கவில்லை, அல்லது அவர்கள் நம் கேள்விகளை முன்கூட்டியே ஊகித்து, பட்டயத்தில் அவற்றுக்கு விடை தந்திருக்கிறார்கள். அட சைத்தான்! இப்போது என்ன செய்வது?” என்றான் தலானவ்.

தடுப்புக்குப் பின் இருந்த முகம் மறைந்து அதன் இடத்துக்கு இன்னொரு முகம் வந்தது. இதுவும் முன்னது போலவே, ஆனால் சற்றுப் பருமனாக, ஆழ்ந்த நிறம் உள்ளதாக இருந்தது. தெளிவற்ற ஒளியில் அது பழுப்பு நிறமாகத் தென்பட்டது. தலானவ் பட்டயத்தில் எழுதுவதுபோலப் பாவனை செய்தான். சொல்ல விரும்புவதை எழுதித் தரும்படி சைகை காட்டினான். ஏழு விரல்கள் கொண்ட ஒரு கை திறப்புக்கு எதிரே காணப்பட்டது. அது வலமிருந்து இடமாக இருமுறை ஆட்டப்பட்டது.

“என்ன சொல்கிறார்களோ, ஒரு இழவும் புரியவில்லையே” என்று முணுமுணுத்தான் தலானவ்.



எழுதப்பட்ட தகடு ஒன்று மறுபுறமிருந்து தடுப்பு மீறி பொருத்தி வைக்கப்பட்டது. விண்வெளி விமானிகள் ஒருவரை ஒருவர் பார்த்துப் பெருமூச்செறிந்தார்கள். பின்பு தலானவ் விரலால் சாளரத்தைத் தட்டினான். தகடு மறைந்து, அதன் இடத்தில் ஒரு முகம் தென்பட்டது. எழுதப்பட்ட தகட்டை உடன் கொண்டு செல்ல விரும்புவதாகத் தெரிவிக்கும் முயற்சியில் தலானவ் தீவிரமாக ஜாடைகள் செய்தான். சுவற்றின் மறுபுறமிருந்த பிராணி இமையா வட்ட விழிகளால் அவனை உற்றுப்பார்த்தது. பின்பு அது மறைந்துவிட்டது. கீச்சுக் குரலில் உரையாடல் ஒலித்தது.

விண்வெளி விமானிகள் எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். திடீரென லேசான தட்டொலி கேட்டு ஏதோ உத்தரவுக்குக் கீழ்ப்படிபவர்கள் போல ஒரே நேரத்தில் திரும்பிப் பார்த்தார்கள். தரைமேல் கிடந்தது தகடு. இருவரும் பக்க வழிக்குப் பாய்ந்து ஓடினார்கள். விரைந்து வழுகிச் செல்லும் மினுமினுப்புள்ள உருவை இம்முறையும் கண்டார்கள்.

“இவர்கள் எதற்காக ஒளிந்துகொள்கிறார்கள்? தங்கள் விந்தையான மேலுடை இல்லாமல் இவர்கள் ஏன் வெளியே வருவதில்லை?” என்று தகட்டை எடுத்துக்கொண்டு முணுமுணுத்தான் தலானவ். “நாம் நாளைக்கு வருவோம் என்று இப்போது இவர்களுக்கு விளக்கியாக வேண்டுமே” என்றான்.

“இதோ படம் எழுதிக் காட்ட முயல்கிறேன். என்ன இருந்தாலும் இது லேசு ஆயிற்றே” என்றான் விளாதிஸ்லாவ்.

தலானவ் தலையைத் திருப்பி அவனைப் பார்த்து முறுவலித்தான். விளாதிஸ்லாவ் விண்வெளிக் காப்பு உடை அணிந்த இருவரை வரைந்தான். அவர்களுக்கு மேலே சூரியன் ஒளி வீசிற்று. அப்புறம் அடர்த்தியாகக் கோடுகள் இட்ட இருண்ட பட்டை. பின்பு விண்வெளிக் காப்பு உடையினர் இருவரும் சூரியனும்.

“புரிந்து கொள்வார்கள் என்று நினைக்கிறாயா?” என வினவினான் தலானவ்.

விளாதிஸ்லாவ் படத்தைச் சந்தேகத்துடன் பார்த்தான்.

“யார் கண்டது?” என்றான் விளாதிஸ்லாவ்.

ஆயினும் விந்தை ஜீவர்கள் புரிந்துகொண்டுவிட்டதாகவே

தோன்றியது. முட்டை வடிவச் சாளரத்தில் மறுபடி தென்பட்டது ஒரு கை. அது வலமிருந்து இடமாக ஆட்டப்பட்டது.

"இசைவு தெரிவிக்கிறார்களா அல்லது புரிந்து கொண்டார்களா, என்ன அர்த்தம் இதற்கு?" என்று கூறினான் தலானவ்.

சாளரத்தின் முதலில் ஒரு முகமும் பிறகு இன்னொரு முகமும் தோன்றின. அப்புறம் இரண்டும் மறைந்துவிட்டன. சாளரம் விரைவாக மங்கலாயிற்று. அதன் மேல் தகட்டுப் பாளம் இழுத்துப் பரப்பப்பட்டது. அது ஒளிபுகாதது ஆகி, சுவருடன் ஒன்றாகிவிட்டது.

"இன்றைக்கு இவ்வளவுதான் போலிருக்கிறது" என்று முடிவு செய்தான் தலானவ்.

"அனேகமாக எல்லாம் விளங்கிவிட்டது. முதல் தகட்டில் இருப்பது இது: 'நீங்கள் யார்? எங்கிருந்து வந்தவர்கள்? நண்பர்களா, பகைவர்களா? உங்களுடன் பேச விரும்புகிறோம். எங்களால் வெளியே வர முடியாது. பயப்படுகிறோம்..' இங்கேதான் விளங்கவில்லை, எதற்கு அவர்கள் பயப்படுகிறார்கள் என்று. இந்தச் சொல் 'கிளேக்' என்று ஒலிக்கவேண்டும். அவர்கள் கிளேகுகளுக்குப் பயப்படுகிறார்களாம். இந்தச் சொல் பன்மையில் இருக்கிறது" என்றான் காஸிமீர்.

"அவர்கள் ஆளுவோராய் இருக்கும். அல்லது போலீஸ் போலும்."

"கிளேகுகளைப்பற்றி நான் எங்கும் எதுவும் படிக்கவில்லை. அரசாங்கக் காவலர்களை அவர்கள் வேறு சொல்லால் - மினேன்கள் என்று - குறிக்கிறார்கள். அரசாங்கம் வெவ்வேறு விதங்களில் குறிக்கப்படுகிறது. ஆயினும் இந்தச் சொல்லால் அல்ல."

"அவர்களிடம் பாராளுமன்றம் போன்ற ஏதோ இருந்தது என்று சொன்னாயே?" என்று கேட்டான் தலானவ்.

"ஆம். அதேபோல, குடியரசுத் தலைவன் போன்ற ஒரு பதவியும் உண்டு. ஆனால் அவனுக்குச் சர்வாதிகார உரிமை உண்டு போலிருக்கிறது. இப்போது இரண்டாவது தகட்டைப் பார்ப்போம். அதில் எழுதியிருக்கிறது: 'கிளேகுகளை அஞ்சுகிறோம் என்று சொன்னோமே. கிளேகுகள் கருணை



அற்றவை. நாங்கள் வெளியே வரமுடியாது. எங்களைக் காப்பாற்றுங்கள்?' "

'ஒரு இழவும் புரியவில்லையே' என்று பெருமூச்சு விட்டான் தலானவ். "எங்களை என்றால் யாரை? இந்த கிளேகுகள் யார்? அவர்களை எப்படிக் கண்டுபிடிப்பது? ஊம், விடிந்தால் தெரியும் வெளிச்சம். போய் நோயாளிகள் எப்படியிருக்கிறார்கள் என்று பார்க்கிறேன்."

மருத்துவப் பகுதியின் முதல் அறைக்குள் அவன் புகுந்தான். அங்கே ஒருவரும் இல்லை. ஒதுக்கறைக் கதவைத் தட்டினான். எவரும் பதில் அளிக்கவில்லை. தலானவ் ஒதுக்கறைக்கு உள்ளே போனான். வீக்தரும் யூங்கும் கதவுக்கு முதுகைக் காட்டியவாறு கரேலின் கட்டிலின் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார்கள்.

தெளிவற்ற, உயிரற்ற குரலில் யூங் சொன்னான்: "நான் தூங்கினேன்.... அல்லது தூங்கவில்லை போலும், தூங்குவதாக நினைத்தேன் போலும்."

"கதிர்த் துப்பாக்கியை இங்கே எதற்காகக் கொண்டுவந்தாய்?"

"நான் முறை வேலை பார்க்க வந்தேன். நோய்ப்படுவேன் என்று நான் எண்ணவில்லை... அப்புறம் மறந்துபோனேன்."

"என்ன நடந்தது?" என்று கேட்டான் தலானவ். அவனுக்குக் குரல் எழும்புவதே கடினமாயிருந்தது.

வீக்தர் மெதுவாக அவன் பக்கம் திரும்பினான். அவனுடைய முகமும் யூங்கினது போன்றே சோர்ந்துபோயிருந்தது.

"கரேல்... தற்கொலை செய்து கொண்டுவிட்டான்."

தலானவ் கட்டிலை நெருங்கினான். கரேல் தலையைப் பின்னே சாய்த்தவாறு கிடந்தான். அவன் முகம் கொடிய வேதனையால் விகாரமாகி இருந்தது. பொத்தான்கள் கழற்றப்பட்டுத் திறந்திருந்த சட்டைக்கு அடியே மார்பின்மேல் கதிர்ச்சூட்டுப் புண் தழும்பு தெரிந்தது.

"சாம்பல்-பச்சைச் சட்டை... அவனுக்கு மிகவும் பிடித்த சட்டை, ரட்சை போல. இந்தச் சட்டையைப் போட்டுக்கொண்டு அவன் போகாத இடமே கிடையாது... பனிரெண்டு ஆண்டுகள் விண்வெளியில்... முன்னறியா கிரகங்களுக்கு ஐந்தாவது பறப்பு... முடிவில் இம்மாதிரி அசட்டுத்தனமான சாவு. அச்சத்தால்...

தன்மீதே கொண்ட அச்சத்தால்...." இவ்வாறு சிந்தித்தபடி தலானவ் தலை குனிந்து நின்றான். அவனுக்குத் துயரம் உண்டாகவில்லை. குளிரும் தாங்க முடியாத களைப்புமே உண்டாயின. எது எப்படி ஆனாலும் ஒன்றுதான் என்று தோன்றும் சோர்வு. இது நோயின் தொடக்கம் என்று அவன் மறுபடி எண்ணினான். உணர்ச்சி மரப்பை உதறிப் போக்குவதற்காகச் சித்தத்தை உறுதிப்படுத்திக் கொண்டான்.

வீக்தர் பெருமூச்சா, முனகலா என்று சொல்ல முடியாத ஓர் ஒலியைச் செய்தான். தலானவ் சிரமத்துடன் அவன் பக்கம் தலையைத் திருப்பினான். வீக்தர் மிகவும் வெளிறிப் போய் இருந்தான். அவன் முகம் அனேகமாகக் கரேலின் முகம் போலவே வெளிறடைந்திருந்தது. உதடுகள்கூட இரத்தம் செத்துக் காணப் பட்டன.

"உன் உடம்பு சரியாய் இருக்கிறதா?" என்று கலவரத்துடன் கேட்டான் தலானவ்.

"இப்போதைக்குச் சரியாய் இருக்கிறது. கரேலை எங்கேயாவது வேறு இடத்துக்குக் கொண்டு போகவேண்டும்" என்று தயங்கித் தயங்கிப் பதில் சொன்னான் வீக்தர்.

"இதோ விளாதிஸ்லாவைக் கூப்பிடுகிறேன்."

"நாம் இருவருமே சமாளித்துவிடலாம். ஒருவரையும் அழைக்க வேண்டாம். நீங்கள்.... நீங்களோ, ஒதுக்கறைக்கு வந்துவிட்டீர்கள். மேலங்கியும் கையுறைகளும் சல்லாத்துணி முகமூடியும் மட்டும் அணிந்து கொள்ளுங்கள்."

"யூங்?"

ஹெர்பர்ட் யூங் தலையை அசைத்தான்.

"நான் தற்கொலை செய்துகொள்ள மாட்டேன். எனக்கு மனைவி மக்கள் இருக்கிறார்கள். நான் குணமடைவது அவசியம். கரேல்...."

"ஆமாம், சந்தேகம் இல்லாமல்" என்று அவசரமாகக் கூறினான் தலானவ். "இருந்தாலும் உன்னைத் தனியாக விடாமல் இருப்பதே மேல் அல்லவா?"

"இல்லை, கவலைப்படாதீர்கள்..." என்று தணிந்த குரலில் சொன்னான் யூங். "எனக்குத் தூக்க மருந்து கொடு, வீக்தர்.



அவ்வளவுதான்..." எதையோ நினைவு படுத்திக்கொள்ள முயல்பவன் போல் இருந்தது அவன் தோற்றம். "தூக்க மருந்து கொடு..."

தூக்கமருந்தை விழுங்கிவிட்டு யூங் சுவர்ப்புறம் முகத்தைத் திருப்பியவாறு படுத்துக் கொண்டான். வீக்தரும் தலானவும் கரேலை அவனுடைய வெற்று அறைக்குக் கொண்டுபோய்ப் படுக்கையில் கிடத்தினார்கள்.

"சவத்தை அறுவை செய்து பார்க்க வேண்டும்" என்று இருவரும் திரும்பியதும் பேசத் தொடங்கினான் வீக்தர். "கரேல், யூங், இருவரது இரத்தத்தையும் நான் பகுத்தாய்ந்தேன். எதுவும் எனக்குத் தென்படவில்லை. பல குறிகளில் இந்த நோய் நமது நரம்பு நச்சு நோய்களை ஒத்திருக்கிறது. நச்சுக்கிருமிகள் இரத்தத்தின் வழியே அன்றி நரம்பு நார்கள் வழியாகப் பரவுகின்றன போலும் - பைத்தியத்தில் போல. ஆகவே மூளையை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.... ஆராய்ந்து பார்க்க வேண்டும்... கட்டாயமாக..."

அவன் உயிரற்றக் கட்டைக் குரலில் பேசினான். தலானவ் நின்று அவன் தோள் மேல் கையை வைத்தான்.

"வீக்தர், நீ நோய்ப்பட்டுவிட்டாயா? உள்ளதைச் சொல்லு!"

"நான் ஆரோக்கியமாய் இருக்கிறேன்" என்று வேறு பக்கம் பார்த்தவாறு மறுத்துரைத்தான் வீக்தர். "கரேல் காரணமாகத்தான் இப்படி..... மொத்தத்தில்..."

"புரிகிறது" என்று நம்பிக்கை இன்றிச் சொன்னான் தலானவ். "நீ இளைப்பாறு. உனக்குப் பதில் காஸிமீர் வேலை செய்வான்" என்றான்.

"எனக்கு இளைப்பாறத் தேவை இல்லை. நேரம் இல்லை அதற்கு காஸிமீர் எனக்கு ஒத்தாசை செய்யட்டும். இதற்கிடையே, தூக்கம் ஊட்டும் மின்பொறியை விளாதிஸ்லாவ் சரிப்படுத்தட்டும்" என்று முன்போன்றே உயிரற்ற குரலில் மொழிந்தான் வீக்தர்.

இன்னும் சில அடிகள் நடந்தபின் அவன் நின்றான். தலானவ் கலவரத்துடன் அவனைப் பார்த்தான். வீக்தர் மிகுந்த சிரமத்தோடு சொன்னான்:

"நான் மிகவும் களைத்துப்போய்விட்டேன்... தவிர, உயிர்ப் பதனம் செய்வதுபற்றி யூங் சொன்ன யோசனையை நான்

கேட்டிருந்தால் கரேல் பிழைத்திருப்பான்..."

"அட, யாருக்குத் தெரியும்?" என்று உறுதியாக மறுத்துரைத்த தலானவ், திடீரென்று தடுமாறினான்.

சுற்றும் உள்ளவை எல்லாம் பாய்ந்து பெருகும் பல்வண்ண மூடுபனியால் சூழப்பட்டுவிட்டன. பொருள்களின் உருவவரைகள் தெளிவை இழந்துவிட்டன. அவை மங்கி இரட்டையாய்த் தெரியலாயின. வீக்தரின் முகமும் உருகி வெள்ளை மூடுபனிப் புள்ளி ஆகிவிட்டது. தலானவ் பற்களை நெறுநெறுத்து, "அதுதான் தொடங்குகிறது" என்று எண்ணினான். வீக்தர் தன்னை உன்னிப்பாக நோக்குவதை அவன் காணாவிட்டாலும் ஊகித்து உணர்ந்தான்.

"நீங்களே நோய்ப்பட்டுவிட்டீர்கள்!" என்ற சொற்கள் கனவில் போல அவனுக்குக் கேட்டன.

வீக்தர் அவனைக் கைத்தாங்கலாகப் பிடித்துக் கொண்டான். "என்ன ஆகும்?" என்று சோர்ந்த அச்சத்துடன் நினைத்தான் தலானவ். பல்வண்ண மூடுபனியின் ஊடாக நடந்து, தான் அறியாமலே ஒதுக்கறைக்குள் வந்துவிட்டான். வீக்தர் கரேலின் கட்டிலிலிருந்து விரிப்பை அகற்றுவதைக் கண்டான். அப்புறம் தான் அந்தக் கட்டிலில் படுத்திருப்பதை உணர்ந்தான். சுற்றும் இருந்தவை எல்லாம் படிப்படியாக அதிகத் துலக்கமும் நிலைப்பும் உள்ளவை ஆயின. ஆனால் அவற்றின் எதார்த்தத் தன்மை மங்கி மறைந்துவிட்டது. பிறகு வழக்கமான நிறங்கள் தென்படலாயின. விட்டத்து விளக்கின் வெண் நிறம் உயிரற்றதாக இன்றி மறுபடி எப்போதும்போல, பிரியமானதாகக்கூட, தோற்றம் அளித்தது. தலானவ் அப்பாடா என்று ஆழ்ந்த பெருமூச்சுவிட்டு, கட்டிலில் உட்கார்ந்தான்.

வீக்தர் சுவரில் அமைந்த மருந்து அலமாரியிலிருந்து திரும்பிப் பார்த்து, "ஆ, அதற்குள் வேலை செய்யத் தொடங்கிவிட்டதா!" என்றான்.

வீக்தர் தனக்கு எனெர்ஜின் மாத்திரை கொடுத்ததைத் தலானவ் அப்போதுதான் ஓரளவு புரிந்துகொண்டான். ஓரளவு நினைவு படுத்திக் கொண்டான். அச்சத்தினால் அவன் கண்கள் மீண்டும் இருண்டன. ஆராய்ச்சிப் பயணக் குழுவின் தலைவனான அவன் நோய்ப்பட்டுவிட்டான்! வீக்தரும் அப்படித்தான் போலும். நல்ல வேளை, விளாதிஸ்லாவ் நலத்துடன் இருக்கிறான். அவன்



அனுபவம் உள்ள விண்வெளி விமானமோட்டி, ராக்கெட்டை பூமிக்குக் கொண்டு சேர்த்துவிடுவான். ஆனால் அவனும் நோயுற்றுவிடுவானே... அப்போது... அப்போது அவர்கள் எல்லோரும் மடிந்து போவார்கள். இந்த நோயின் விளைவுகள் என்னவோ, யாருக்குத் தெரியும்? பைத்தியமா? தற்கொலையா?

"உங்களுக்கும் தூக்க மருந்து கொடுக்க வேண்டியதுதான். அறுவைச் சோதனைக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டேன். இதோ காஸிமீரை அழைத்துவரப் போகிறேன். உங்கள் உடம்பு எப்படி இருக்கிறது?" என்றான் வீக்தர்.

"எல்லோரையும் போலத்தான். இது எப்படிப்பட்டது என்பது தான் உனக்குத் தெரியுமே" என்று வேண்டா விருப்பாகப் பதிலளித்தான் தலானவ்.

வீக்தர் பேசாமல் அவனை ஏறிட்டுப் பார்த்தான். தலானவுக்கு இந்தச் சிறுவன்மீது திடீரென்று உளமார்ந்த இரக்கம் பொங்கி வந்தது. ஒடிசலான, சிறுவன் போன்று லேசான மேனியும் தெளிவாக ஒளிரும் வதனமும் கொண்ட வீக்தர் இருபத்தாறு வயது வாலிபனாக அன்றிச் சிறுவனாகத் தோற்றம் அளித்தான். நல்ல பையன். தன் முதல் தொலைதூரப் பறப்புக்கு எப்படி ஆவலோடு முன்வந்தான்! இந்த முதல் பறப்பே அவனுடைய கடைசிப் பறப்பும் ஆகிவிடுமோ? ஏற்கனவே அப்படி நேர்ந்ததும் உண்டே. விண்வெளியில் எல்லாவித நிகழ்ச்சிகளும் நேர்ந்துள்ளனவே.

"தூக்கமருந்து கொடு" என்றான் தலானவ்.

மாத்திரையை விழுங்கிவிட்டுப் படுத்து, கண்களை மூடிக் கொண்டு பூமியைப் பற்றி நினைத்தான். உறங்குவதற்கு முன்பு பழுப்பு-மஞ்சள் மணல்மேடுகளையும் வெள்ளிப்-பச்சைக் கடலையும் ஒளி திகழும் வானத்தையும் கண்டான். சமமட்டமான மணற்கரை மேல் விழுந்து பரவும் அமைதியான அலைகளின் ஒரு சீரான மோதலையும் சீறலையும் கேட்டான். கடல், ஊசியிலைகள், பால்டிக் பிரதேச இளவெயிலில் காய்ந்த மணல் ஆகியவற்றின் நறுமணத்தை நெஞ்சார முகர்பவன் போன்று இன்பமாக முறுவலித்தவாறு தலானவ் தூங்கிப் போனான்.

"முகமூடி எனக்கு இடைஞ்சலாய் இருக்கிறது. தவிர எதற்காக இது? இந்த விண்வெளிப் பறப்பு உடையுந்தான் எதற்காக? நாம் எல்லோருமே நோய்த் தொற்றுக்கு ஆளாகிவிட்டோம். நோய்ப்

படவில்லை என்றால் இயல்பாகவே நோய்த்தடுப்பு நம்மிடம் இருக்கிறது என்று அர்த்தம்" என்றான் காஸிமீர்.

"அசட்டுப் பிசட்டென்று பேசாதே. உனக்கும் விளாதிஸ்லாவுக்கும் நோய்த்தொற்று ஒருவேளை மிகக் குறைந்த அளவே ஏற்பட்டிருக்கலாம். அதனால்தான் நீங்கள் ஆரோக்கியமாக இருக்கிறீர்கள். இன்னும் சொல்ல வேண்டும் என்றால்... யூங் கரேலுடன் ஒரே அறையில் வசித்தான்."

"தலானவோ?"

"எல்லோரும் ஒரே மாதிரி நோய்த்தொற்றால் பாதிக்கப் படுவதில்லை. தவிர, நான் முதல் தடவை கரேலைச் சோதனை செய்தபோது தலானவ் அருகே உட்கார்ந்திருந்தான். இது நுண் தொற்றுபோலும், நமக்குத் தெரியாதே. பேச்சை வளர்த்துவானேன்? முரண்டு பிடிக்காதே, காஸிமீர். ஜென்ஷன் வயலெட் புட்டியை எடுத்துக்கொடு. அதோ, இடமிருந்து மூன்றாவது. நல்லது. இப்போது சோதனைக்குழாய் நவம்பர் 6ல் உள்ள மருந்துக் கலவையைத் தயார் செய். ஜாக்கிரதை, காஸிமீர்! போதும் - தொற்றுத் தடுப்பு மருந்து லிஸோல் உள்ள பாத்திரத்துக்கு மேலே, நினைவு வைத்துக்கொள்!"

"இந்த ரீதியில் போனால் பைத்தியம் பிடித்துவிடலாம்" என்று முகமூடிக்குள் சிடுசிடுத்தான் காஸிமீர்.

"சிணுங்காதே" என்று தணிந்த குரலில் சொன்னான் வீக்தர்.

காஸிமீர் கலவரத்துடன் அவனைப் பார்த்தான்.

"நீ முழுமையாக நோய்ப்பட்டுவிட்டாய். படுத்துக்கொள். என்ன, எப்படிச் செய்வது என்று விளக்கு. நானே சமாளித்துக் கொள்கிறேன்."

வீக்தர் நெற்றியில் துளித்திருந்த வியர்வையை மேலங்கிக் கையால் துடைத்துக்கொண்டான்.

"நீ சொல்வது சரிதான் போலும். நான் படுத்துக்கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு மேஜையிலிருந்து அப்பால் நகர்ந்தவன், தள்ளாடினான்.

சுற்றும் இருந்தவை எல்லாம் கணகணக்கும் இருளால் போர்த்தப்பட்டு அகாதத்தில் பாய்ந்து விழுந்தன. குளிர் எடுத்த தால் அவன் சுய நினைவை அடைந்தான். காஸிமீர் அவன்மேல்



தண்ணீர் தெளித்ததே இதன் காரணம். "காஸிமீர் முகமூடியை அகற்றிவிட்டான்'' என்று உள்ளார்ந்த கலவரத்துடன் நினைத்தான் வீக்தர். ஆனால் உதடுகளை அசைக்க அவனால் முடியவில்லை.

"உனக்கு என்ன கொடுப்பது, சொல்லு!" என்று அவன் அருகே குனிந்து வினவினான் காஸிமீர்.

"மேலிருந்து இரண்டாவது தட்டில்... ஊசி மருந்துச் சிமிழ்..." வீக்தர் காஸிமீரின் புறமிருந்து சிரமத்துடன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். "இல்லை, ஊசி போட உன்னால் முடியாது... எனக்கு எனெர்ஜின் மாத்திரை கொடு... மூன்றாம் தட்டில், வெள்ளைப் புட்டி...." என்று வேறுபக்கம் பார்த்தபடிக் கூறினான்.

"எதற்காக எனெர்ஜின்?'' என்று கேட்டான் காஸிமீர். அவனுடைய நீல விழிகள் அகன்று கருமை படர்ந்தன. "உனக்குத் தான் இந்த நோய்..."

வீக்தர் அவனை இடைமறித்து, "கவலைப்படாதே. எனெர்ஜின் ஊக்கம் தரும் மருந்து, வேறு ஒன்றும் இல்லை. தவிர, இப்போதே முகமூடியை அணிந்துகொள். முட்டாள்தனம் பண்ணாதே" என்று உற்சாகமாகப் புன்னகை செய்ய முயன்றான். ஆனால் அது பரிதாபப் புன்னகை என்பதைத் தானே உணர்ந்தான்.

எனெர்ஜின் விரைவாக வேலை செய்தது. வீக்தர், சிரமத்துடன் தான் என்றாலும், எழுந்தான். ஊசிக் குழாயையும் மருந்துச் சிமிழையும் ஆயத்தம் செய்தான். காஸிமீர் வேதனையுடன் முகத்தைச் சுளித்தவாறு அவனுக்கு ஊசி போட்டான்.

"ஆமாம், என்ன உடம்பு உனக்கு? இருதயக்கோளாறா?" என்று கேட்டான் காஸிமீர்.

"இருக்கலாம். ரொம்பக் களைத்துப்போனேன். அதுதான்..."

"சரி, படுத்துக்கொள். அறுவையின்போதே உன்னைப் பார்த்து அரண்டுபோனேன். இதோ விழுந்துவிடுவாய் என்று நினைத்தேன். உன் முகம் ஒரேயடியாகப் பச்சை பாரித்துப் போயிற்று."

"உன் முகமுந்தான் அப்படி இருந்தது"

"நானாவது பழக்கம் இல்லாததனால் அப்படி. நீயோ..."

"நான் மட்டும் என்ன? ஓயாமல் நண்பர்களின் சவங்களை அறுத்துச் சோதித்துக்கொண்டிருந்தேன் என்று நினைக்கிறாயா?"

"அதுவும் சரிதான்" என்று மறுபுறம் பார்வையைத் திருப்பியபடி முணுமுணுத்தான் காஸிமீர். "நல்லது சொல்லு, இப்போது என்ன செய்ய வேண்டும்?"

சோதனைக் குழாய்களை வைத்திருந்த தாங்கி, உருப்பெருக்கி ஆகியவற்றின் அருகே ஒருமுனைப்புள்ள தோற்றத்துடன் ஏதோ செய்துகொண்டிருந்தான் காஸிமீர். கட்டிலில் படுத்தபடி அவனைப் பார்த்தவாறு வீக்தர் எண்ணமிடலானான்: "இந்த மாதிரியாவது நெடுநேரம் தாக்குப் பிடிக்க என்னால் முடியுமா என்று தெரிந்தால் நன்றாயிருக்குமே. மொத்தத்தில் இது எல்லாம் எதில் போய்முடியும்? கரேலுக்கு என்னதான் நேர்ந்தது? வலது முன்மண்டைப் பகுதியில் இந்தச் சீழ்கட்டு அவனுக்கு எப்படி வந்தது? மண்டையோட்டில் அவனுக்கு முன்பே காயம் பட்டிருந்தால், அவன் விண்வெளிப் பறப்புக்கு எப்படி அனுமதிக்கப்பட்டான்? தனக்கு நேர்ந்திருந்தது என்ன என்று அவன் அறிந்திருந்தால்... இல்லை, ஒன்றும் தெரியவில்லை... இங்கேயே பகுப்பாய்வு செய்யும் யோசனை எனக்கு உண்டானது வீணே. எல்லாவற்றையும் தகுந்தபடி தொற்றுநீக்கம் செய்வது முடியாது. கட்டிலை எறிந்துவிட வேண்டியதுதான்... ஆனால் எங்கே? அதை நடைபாதை வழியே தூக்கிச் செல்வதற்குள் ஏகப்பட்ட நச்சுக்கிருமிகள் அங்கே பரவிவிடும். இல்லை. இங்கே, முதல் அறைக்குள்ளும் ஒருவரும் வராதபடித் தடை செய்துவிட வேண்டியதுதான். ஆனால் நான்... அப்போது என்ன செய்வது? இல்லை, விண்வெளி உடையும் முகமூடியும் கையுறைகளும் அணிந்துகொண்டு காஸிமீர் இங்கே வரத்தான் வேண்டியிருக்கும். என்னதான் நேர்ந்தாலும் விளாதிஸ்லாவைப் பாதுகாக்க வேண்டும். எனெர்ஜின் எனக்கு நல்ல பயன் விளைக்கிறது. இன்று நான் மட்டுமீறி அதை உட்கொண்டுவிட்டேன். அதுதான் நினைவு தப்பியதற்குக் காரணம்... இருதயத்தை உரப்படுத்திக் கொள்ளவேண்டும், இல்லாவிட்டால் எனெர்ஜின் இன்றி என்னால் சமாளிக்கவே முடியாது..."

"நல்லது, இந்தப் பொருளை... இது வெள்ளி உப்பா என்ன?... உள்ளே செலுத்திவிட்டேன். இப்போது என்ன செய்ய வேண்டும்? நீ எதற்காக எழுந்திருக்கிறாய்?" என்றான் காஸிமீர்.

"அவசியம் இருப்பதால்தான்" என்று உதடுகளைக் கெட்டித்துக் கொண்டான் வீக்தர். அவன் கால்கள் பஞ்சுப் பற்றைகள்போல இருந்தன. "நானே பார்த்தாக வேண்டும், வேறு எதுவும் செய்வதற்கு



இல்லை. தவிர எனக்கு உடம்பும் எவ்வளவோ தேவலை" என்றான்.

"நல்லது, பார்" என்று எச்சரிக்கையுடன் சொன்னான் காஸிமீர்.

"அதுதான் பார்க்கிறேனே. அதுதான் பார்க்கிறேனே" என்று உருப்பெருக்கிக் கண்ணாடி வழியே நோக்கியவாறு முணுமுணுத்தான் வீக்தர்.

"நீ அளவுமீறிக் களைத்துப்போனாய் என்பது தெளிவு."

"தெளிவு, சந்தேகம் இல்லாமல்..." என்று திருப்பிச் சொன்னான் வீக்தர்.

இருக்கை முதுகில் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டான். மூடிய விழிகளுக்கு முன்னே மிதந்தன மெல்லிய, சற்று நெளிந்த பின்னல்கள். தான்னின் சாற்றில் ஊறி உப்பி, உப்புப் படிவால் மூடப்பட்டிருந்த நிலையில் எலெக்ட்ரான் உருப்பெருக்கிக் கண்ணாடி வழியே பார்த்தபோதுகூட அவை நொய்ந்தவையாக, லேசாக, ஆதரவற்றவையாகக் காணப்பட்டன. ஆயினும் நரம்பணுக்கள் அவற்றின் பாதிப்பினால் உருகி, சிதைந்து மறைந்தன. சிறிய, நுண்ணிய, கருணையற்ற, பேராசைபிடித்த, விரைந்து பல்கும் ஒட்டுண்ணிகள் அவை. மனித உடலின் சிக்கலான அமைப்பு முழுவதிலும் அவற்றுக்கு வேறு எதிலும் அக்கறை இல்லை. அவை பிடிவாதமாக, இலக்குத் தவறாமல் மூளைக்குச் சென்று அங்கே தங்களுக்கு மிகவும் ஏற்ற பகுதியைத் தெரிந்தெடுத்துக்கொண்டு நரம்பணுக்களுக்குள், அவற்றின் கருக்களுக்குள் புகுந்து அங்கே தம் விருப்பப்படி ஆட்சி செலுத்தத் தொடங்கின. அல்புமென்கள் நிறைந்து, சிக்கலான, சேமித்து வைக்கப்பட்டதுபோன்ற உற்பத்தி இயந்திர அமைப்பு கொண்ட உயிருள்ள, முறையாக இயங்கும் நரம்பணு அவற்றுக்குத் தேவைப் பட்டது. பலவீனமான, நோயுற்ற நரம்பணுவில் அவை நோயுற்றன. உயிரற்றுச் சிதைந்த நரம்பணுவில் அவை மடிந்தன. ஆனால் சாகுமுன் அவை ஏராளமான சந்ததிகளை ஈன்றன. இளம் நச்சுக் கிருமிகள் அக்கம்பக்கத்து நரம்பணுக்கள்மீது படையெடுத்தன. போகும் வழியில் புதிய, முன்னிலும் விரிவான அழிவை ஏற்படுத்திச் சென்றன.

"காஸிமீர், இவற்றைப் பார்க்க விரும்புகிறாயா?" என்று கண்களைத் திறக்காமலே கூறினான் வீக்தர்.

"எவற்றை?" என்று வியப்புடன் கேட்டான் காஸிமீர்.

"கரேலுக்கு உள்ளே உட்கார்ந்திருந்தனவே, அவற்றை. தலானவ், யூங் இருவருடையவும் மூளைகளில் புகுந்து கொண்டிருக்கின்றனவே, அவற்றை. அறிமுகம் செய்துகொள். ஏதேனும் நேர்ந்தால் எவற்றுடன் போராட வேண்டும் என்பதைத் தெரிந்துகொள்வாய்."

காஸிமீர் மூச்சை அடக்கிக்கொண்டு உருப்பெருக்கி வழியே பார்த்தான்.

"இதோ இந்த... நெளிசல் குச்சிகளா?" என்று கேட்டான்.

"அவையேதாம். நரம்பு நச்சுக்கிருமிகள். நரம்பணுக்களைக் கொல்லுபவை."

காஸிமீர் மெதுவாக நிமிர்ந்தான். அவன் முகம் ஏக்கம் அடைந்தது, கண்கள் இருண்டன, அவற்றின் ஒளிர்வு மறைந்தது.

"விஷயம் தெரிந்திருக்கும்போது இவற்றைப் பார்ப்பதே கஷ்டமாயிருக்கிறது..." என்று கையை உதறினான்.

"சோதனைக் குழாய் நம்பர் ஏழிலிருக்கும் கலவையைத் தயாரி. அதற்குள் நான் விளைவுகளைக் குறிக்கிறேன்." - வீக்தர் அலமாரியிலிருந்த பாக்டீரியவியல் தகவல் நூலை எடுத்து, அதன் பக்கங்களைப் புரட்டி, நோட்டில் குறிக்கலானான்: "பார்வை மேட்டின் உயிரணுக்களை ஜென்ஷின்-வயலெட்டால் நிறமேற்றிய பின் பாக்டீரியவியல் முறையில் ஆராய்ந்து பார்த்தபோது உயிரணுக்களின் விரிவான சிதைவு காணப்பட்டது. அவை உருகி, கணிகங்களாகச் சிதைந்து மறைந்தன. முன்னர் ஆராயப்பட்ட, செங்கருக்களும் கறுப்புச் சத்தும் உள்ள உயிரணுக்களில் இத்தகைய மாறுதல்கள் இல்லை. தான்னினையும் வெள்ளி உப்புக்களையும் கொண்டு வினைப்படுத்தியபின் எனக்குத் தெரியாத வகை நச்சுக்கிருமிகள் (வெய்ஸூம் ஸெலிறான்ஸ்க்கியும் தொகுத்த தகவல் நூலில் இத்தகைய நச்சுக்கிருமிகள் இல்லை) காணப்பட்டன." அவன் பேனாவை ஒரு புறம் வைத்தான். "சந்தேகமின்றி இவை பார்வைமேட்டின் உயிரணுக்களில் மட்டுமே இல்லை. இன்னும் சரியாய்ச் சொன்னால் இவை மூளையின் பிற்பகுதிகளில் இடம் கொண்டிருக்கின்றன.... நல்லது, வலது முன்மண்டைப் பகுதியில் சீழ்க்கட்டின் பக்கத்திலிருந்து எடுக்கப்பட்ட இந்தக் கலவையைப் பரிசீலனை செய்வோம்..."

"தயாரா, காஸிமீர்?"



"நீ பார்க்கலாம்."

வீக்தர் மறுபடி குறிப்பு எழுதினான்: "வலது முன்மண்டைப் பகுதியில், காயத்துக்குப்பின் ஏற்பட்ட சீழ்க்கட்டின் அருகிலும், அதைச் சுற்றியுள்ள பகுதியிலும் நச்சுக் கிருமிகளால் விளைவிக்கப்பட்ட விரிவான அழிபாடுகள் காணப்பட்டன. சில இடங்களில் இந்த அழிபாடுகள் நிணநீர் சுவறிய வீக்கத்துடன் நெருக்கமாகச் சேர்ந்திருக்கின்றன..." அவன் யோசனையில் ஆழ்ந்தான். "ஆம், கொடிய வேதனை, தாங்கமுடியாத வலிதான் கரேலை எதிர்நோக்கி இருந்தது. அவனுக்கு எவ்வித நம்பிக்கையும் இல்லை..." அவன் இதை அறிந்திருந்தான் என்றால்... அல்லது என்னவாயினும் உயிர்ப்பதனம் செய்திருந்தால்..." இப்படி நினைத்தபோது அவனுக்கு நெஞ்சு பகீர் என்றது. "இல்லை, இல்லை, இது தவிர்க்க முடியாத நிகழ்ச்சி. பூமியில் அறுவையின்போதோ அதன் பிறகோ அவன் இறந்திருப்பான். தன்னையே தேற்றிக் கொள்ளாதே. இது என்ன மட்டமான கோழைத்தனம்! உரிய வேளையில் உயிர்ப் பதனம் செய்யத் தயங்கினாய், அப்புறம் எச்சரிக்கையுடன் கண் காணிக்காமல் விட்டாய்..."

"எனக்கு ஒரே தாகமாய் இருக்கிறது! தொண்டை வறண்டு ஒட்டிக்கொள்கிறது. வலிக்கக்கூடச் செய்கிறது" என்று முனகினான் காஸிமீர்.

"இங்கே நீர் பருகக்கூடாது, பொறுத்துக் கொள், காஸிமீர். இன்னும் கொஞ்சம். பஞ்சுப்பற்றை ஒரு துண்டு எடுத்துச் சல்லாத்துணியால் சுற்றி லிஸோலில் நனைத்து அறையில் எல்லா வற்றையும் நன்றாகத் துடை. பிறகு விண்வெளி மேலங்கியை இங்கே வைத்துவிட்டு நேரே துவலைக்குழாய் அறைக்குப் போய்க் குளி. இளைப்பாறி உணவு கொண்ட பிறகு இங்கே வா."

"நீயோ? உன்னைத் தனியே விட்டுப் போக அஞ்சுகிறேன்" என்று ஈன சுரத்தில் கூறினான் காஸிமீர்.

"கவலைப்படாதே. எல்லாம் ஒழுங்காய் இருக்கும். நான் சொன்னதை நினைவு வைத்துக்கொள்: விளாதிஸ்லாவின் பக்கத்தில் நெருங்காதே. முகமூடி அணிந்துகொண்டே அவனுடன் பேசு. அவனும் முகமூடி அணிந்துகொள்ளட்டும். உங்கள் அறையில் சல்லாத்துணி இருக்கிறது. நீ வேறு அறையில் படுத்துத் தூங்கு. லிஸோல் எடுத்துப் போ. அங்கு உள்ளவற்றை எல்லாம் நன்றாகத் துடை - குறைந்தது தலானவின் அறையிலாவது.

துடைப்பாயா?" என்றான் வீக்தர்.

"துடைப்பேன், கட்டாயம்" என்று ஏக்கத்துடன் சொன்னான் காஸிமீர். "இது என்னவோ சைத்தானுக்கே வெளிச்சம்! விளாதிஸ்லாவ் இசையமாட்டான்."

"விளாதிஸ்லாவ் அனுபவம் உள்ள விண்வெளி விமானி. அவன் எல்லாவற்றையும் நன்கு புரிந்துகொள்வான். நீ விஷயத்தை உள்ளபடி புரிந்துகொள்: இது நமது கடைசி வாய்ப்பு. இதை நழுவ விட்டால் நாம் எல்லோருமே தொலைந்தோம்."

வீக்தர் தனியே சற்று உட்கார்ந்திருந்தான். பின்பு எழுந்து, தள்ளாடி நடந்து ஒதுக்கறைக்குள் சென்றான். தலானவ் உறங்கிக் கொண்டிருந்தான். யூங் முதுகைக் கூனிக்கொண்டு, கோர்த்த கைகளை முழங்கால்களுக்கு இடையே தொங்கவிட்டவாறு கட்டில்மேல் உட்கார்ந்திருந்தான். வீக்தர் உள்ளே வந்தபோது அவன் அசையவே இல்லை.

"உன் உடம்பு எப்படியிருக்கிறது, யூங்?" என்று கேட்டான்.

யூங் மெதுவாகத் தலையை நிமிர்த்தித் தன் வெண் நீல விழிகளால் வீக்தரை நோக்கினான். இப்போது அவன் மாறுகண் போடவில்லை, ஆனால் அவன் பார்வை விசித்திரமாக, வெறுமையாக இருந்தது.

"அறியேன். எல்லாவற்றையும் தெளிவாகக் காண்கிறேன். வழக்கப்படி அங்கங்களை அசைக்கவும் நடமாடவும் என்னால் முடிகிறது. நோய்விட்டுவிட்டது போல் இருக்கிறது. ஆனால் நான் முற்றிலும் மாறிவிட்டேன் என்பதை உணர்கிறேன்."

"எப்படி மாறிவிட்டாய்?"

"முற்றிலும் வேறு ஆளாக. உனக்கு எப்படி விளக்குவது என்று தெரியவில்லை. நடப்பதை எல்லாம் நான் புரிந்துகொள்கிறேன், ஆனாலும் எனக்கு ஒன்றிலும் பிடிப்பு இல்லை. நான் ஏனோ தானோ என்று இருக்கமுடியுமா? இதோ தலானவ் நோய்ப்பட்டு விட்டான். எல்லோரும் நோய்ப்படுவோம், நாம் எல்லோருமே மடிந்து போகவும் கூடும். ஆனாலும் எனக்கு உங்களைப் பற்றியோ என்னைப் பற்றியோ வருத்தம் உண்டாகவில்லை. மனைவியையும் குழந்தைகளையும் குறித்தும் நான் வருந்தவில்லை. அவர்களை நான் எவ்வளவு நேசித்தேன், உனக்குத்தான் தெரியுமே." - யூங் நிதானமாக, ஒருசீராக, உணர்ச்சியின்றிப் பேசினான்.



"நமக்கு என்ன நேரும் என்பதைப் பற்றி நான் வேண்டுமென்றே சிந்தித்தேன். எல்லா விவரங்களையும் எண்ணிப் பார்த்தேன். அப்படியும் எனக்கு வேதனை உண்டாகவில்லை. என் உணர்ச்சிகள் யாவும் மாய்ந்துபோயின. சாப்பிடவோ, பருகவோ, உறங்கவோ, எதற்குமே எனக்கு விருப்பம் இல்லை."

"அதனால் என்ன? இது சௌகரியங்கூடத்தானே" என்று கேலி செய்ய முயன்றான் வீக்தர்.

யூங் பதிலே பேசவில்லை.

வீக்தர் பெருமூச்செறிந்து, "எங்கே, நான் உன்னைச் சோதித்துப் பார்க்கிறேன்" என்றான்.

யூங் உடல்நலம் உள்ளவன் போலவே இருந்தான். அவனது உடலின் உயிரூக்கம்தான் சிறிது குறைந்திருந்தது. இருதயம் தளர்வுடன் இயங்கியது. இரத்த அழுத்தம் முறையான அளவுக்குக் கொஞ்சம் குறைவாக இருந்தது. தசைநாண்களின் மறிவினைகள் பலவீனமாகி இருந்தன. "நோயின் கடுமை குறைந்துவிட்டது என்று தெரிகிறது" என்று யூங்கைப் பார்த்தவாறு எண்ணமிட்டான் வீக்தர். "இந்த நோய்தான் எவ்வளவு விரைவாக முற்றுகிறது! நோய் முதிர்காலம் இரண்டு நாட்களுக்கு மேல் இல்லை போலும். நோயின் கடுமையும் இரண்டே நாட்கள்தான் நீடிக்கிறது. நச்சுக்கிருமிகள் மூளையை அடைந்து தங்களுக்குப் பிடித்த இடங்களில் நிலையாக வசிக்கத் தொடங்கிவிட்டன. மேற்கொண்டு என்ன? சாவா? பைத்தியமா? அரைகுறைத் திறன் இழப்பா? தரைக்கடியில் வாழ்வோரும் அவர்களுடைய மர்மப் பகைவர்களும் உள்ள இந்த இனிய, அமைதி திகழும் கிரகத்திடம் நாம் எதை எதிர்பார்ப்பது?" மிகச் சமீபத்தில், ராக்கெட்டின் மேல் திறப்புக்கு வெளியே இருந்து அமைதி நிறைந்த சிவப்பு ரோஜா நிறச் சமவெளிமீது பார்வை செலுத்திய வாறு தான் எண்ணிய எண்ணங்கள் அவன் நினைவுக்கு வந்தன. அப்போது அவன் புதுமைக் கிளர்ச்சியையும் அசாதாரண நிகழ்ச்சிகளையும் வேற்று உலகங்களில் வாழும் பகுத்தறிவுள்ள ஜீவர்களையும் பற்றிக் கனவு கண்டானே. இப்போதோ? "நான் முற்றிலும் மாறிவிட்டேன்" என்று யூங்கின் சொற்களைத் திருப்பிச் சொல்லிக்கொண்டான் வீக்தர். "மேலே என்ன நடக்குமோ, யார் கண்டது? தற்போதைக்கு... தற்போதைக்கு நான் வயதில் முதிர்ந்துவிட்டேன். ஆம், இந்த நிலையை அப்படிக் குறிப்பிடலாம்...." தன் வாழ்வின் இருபத்தாறு ஆண்டுகள்

முழுவதிலும் அனுபவித்ததைவிட அதிகத் துயரத்தையும் பயங்கரத்தையும் சோர்வையும் கடந்த இரண்டு மூன்று நாட்களில் அவன் அனுபவித்துவிட்டான். இப்போது அவன் பராக்கிரமச் செயல்கள் பற்றிக் கனவு காணும் உருவத்தில் பெரிய சிறுவன் அல்ல, கடும்போரில் ஈடுபட்டுள்ள மனிதன். அவன் நோய்ப்பட்டு, கடுமையாகக் களைத்துச் சோர்ந்திருந்தான். ஆனாலும் தோழர்களின் பொறுப்பு தன்மேல் சார்ந்திருந்தபடியால் கடைசி மூச்சுவரை தாக்குப்பிடிக்கத் தனக்கு இயலும் என்று அறிந்திருந்தான். யூங் மருத்துவனாய் இருந்தால், பொறுப்பு உணர்ச்சி அவனையும் அடித்து ஊக்கியிருக்கும், தான் செயலாற்ற வேண்டும் என்று அவன் உணர்வால் இல்லாவிடினும் அறிவால் புரிந்துகொண்டிருப்பான். அப்போது அவனுக்கு நோயின் கடுமை இவ்வளவு உறைந்திராது என்றும் வீக்தர் நினைத்தான்..."வெறுங் கற்பனை!" என்று தன் சிந்தனையை இடைமறித்தான் அவன். "எல்லாம் மூளையில் ஏற்பட்ட அழிவைப் பொறுத்திருக்கிறது. உனக்கே என்ன நேருமோ, யார் அறிவார்? உனக்கு வந்திருக்கும் நோய் கடுமை குறைந்தது என்பதில் சந்தேகம் இல்லை. தவிர, எனெர்ஜின் உன் உடம்பில் மற்றவர்களின் உடம்புகளில்விட அதிகப் பயன் விளைவிக்கிறது... கரேல், கரேல்.... அவனுக்கு என்ன தான் நேர்ந்தது? காயத்துக்குப் பின் ஏற்பட்ட சீழ்க்கட்டு... அல்லது, ஒருவேளை காயத்துக்குப்பின் ஏற்பட்டது இல்லையோ இது? இல்லை, இந்த நச்சுக்கிருமிகளால் இது முடியாது..."

"யூங், நினைவுபடுத்திக்கொள்ள முயற்சி செய். நீ கரேலுடன் எத்தனையோ ஆராய்ச்சிப் பயணங்கள் செய்திருக்கிறாய். அவன் மண்டையில் காயம்பட்டதாக நீ கேள்விப்படவில்லையா?" என்று மென்மையாக, ஆனால் வற்புறுத்தும் முறையில் கேட்டான் அவன்.

யூங் நிமிர்ந்து பார்த்தான்.

"பட்டது. பட்டது காயம். கரேல் என்னிடம் சொன்னான்" என்று எவ்வித உணர்ச்சியும் இல்லாமல் கூறினான்.

"எப்போது? எப்போது சொன்னான்?"

"சாவதற்குச் சற்று முன்பு" என்று அதே அசட்டையுடன் விடையிறுத்தான் யூங். "இதற்கு முந்திய விண்வெளிப் பறப்பின் போது விண்கல்திரள் ஒன்றுடன் அவர்களுடைய விமானம் மோதியதாம். அவர்கள் கடுமையாக உலுக்கப்பட்டார்களாம். அவன் இயக்குவிசைப் பீடத்தின்மேல் தலையை இடித்துக்



கொண்டானாம். அவனுக்கு நினைவு தப்பிவிட்டதாம்."

"இதை அவன் ஏன் சொன்னான்? முன்பு ஏன் இதைப்பற்றிப் பேசாதிருந்தான்?"

யூங் ஒரே மாதிரியாக, நிதானமாகப் பேச்சைத் தொடர்ந்தான்:

"தனக்குக் கடுமையான தலைவலி அடிக்கடி ஏற்படத் தொடங்கியிருப்பதாக அவன் சொன்னான். இந்த மாதிரி வலி தொடங்கியதுமே மருத்துவமனை சென்று அறுவை செய்து கொள்ள வேண்டும் என்று மருத்துவர்கள் அவனிடம் முன்பே சொல்லியிருந்தார்களாம். இல்லாவிட்டால் பைத்தியமும் மரணமும் சம்பவிக்கும் என்று எச்சரித்திருந்தார்களாம்."

"அதனால்தான் அவன் காத்திருக்க விரும்பவில்லையோ? ஆனால் நீ ஏன் உடனே இதை எங்களுக்குத் தெரிவிக்கவில்லை?"

"மெய்யாகவே அவன்தான் இதைச் சொன்னான் என்பது இப்போதுதான் எனக்குப் புரிகிறது. அவன் சொன்னதாக எனக்குத் தோன்ற மட்டுமே செய்தது என்றே முன்பு நினைத்திருந்தேன்."

"அவன் நோயாளி என்றால், அவனைப் பறக்க எப்படி அனுமதித்தார்கள்? சந்திர நிலையத் தோழர்களிடமிருந்து இதை மறைக்க அவனால் எப்படி முடிந்தது? அவனது விவரச் சீட்டில் காயத்தைப் பற்றிய குறிப்பு எதையும் காணோமே" என்று தனக்குத் தானே பேசிக்கொள்ளும் பாவனையில் சொன்னான் வீக்தர்.

"அவன் விண்வெளிப் பறப்பில் பங்குகொள்ள விரும்பியிருப்பான்" என்றான் யூங்.

"ஆமாம், அதில் சந்தேகமே இல்லை... என்ன ஆயினும் கரேலின் தற்கொலை நச்சுக்கிருமி நோயின் விளைவு அல்ல. நாமோ பயந்தோம்..."

"இந்த நோய் தற்கொலை முயற்சிக்குத் தூண்ட முடியாது என்று தெரிகிறது" என நிதானமாகக் கூறினான் யூங். "தொடக்கத்தில் இது திகைக்க வைக்கிறது. திகிலூட்டுகிறது ஆனால் தன் உடம்பின்மீதும் அங்க அசைவுகள் மீதும் மனிதனுக்கு உள்ள ஆதிக்கத்தைப் பறித்துவிடுகிறது. கரேல் தற்கொலை செய்துகொள்ள முடிந்ததற்குக் காரணம், அதற்குச் சற்று முன்பு நீ அவனுக்கு எனெர்ஜின் மாத்திரை கொடுத்ததுதான் அப்புறம்... அப்புறம் எல்லாம் ஒன்றுதான் என்ற மனப்பான்மை வந்துவிடுகிறது..."

யூங் கிளர்ச்சி இன்றி இவ்வாறு கூறினான். ஆனால் வீக்தருக்கோ இரைந்து அலற வேண்டும் போல அவ்வளவு பயங்கரமாய் இருந்தது.

சொத்துச் சொத்தென்று கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. தட்டப்படுவது மருத்துவப் பகுதியின் கதவு என்பதை வீக்தர் சட்டெனப் புரிந்துகொள்ளவில்லை.

"என்னை உள்ளே விடு! நான் முன்னேற்பாடுகள் செய்து கொண்டுவிட்டேன்!" என்று வெளியே இருந்து கத்தினான் காஸிமீர்.

வீக்தர் கதவைத் திறந்தான். காஸிமீர் முகமூடியும் லேசான காப்பு மேலுடையும் அணிந்திருந்தான்.

"இங்கிருந்து துவலைக்குழாய் அறைக்கு, நீ கோருவதுபோலவே. அங்கே என்னையும் காப்பு மேலுடையையும் தொற்று நீக்கம் செய்து கொள்கிறேன். துவலைக்குழாய் அறைப் பக்கமே நெருங்காமல் இருக்கும்படி விளாதிஸ்லாவிடம் சொல்லி விட்டேன். இடையறையிலேயே குளித்துக்கொள்ளட்டும். அவ்வளவுதான்!"

"நீ ஏன் உறங்கவில்லை?" என்று இருக்கையில் சிரமத்துடன் உட்கார்ந்துகொண்டு கேட்டான் வீக்தர்.

"எனக்குக் களைப்பாய் இல்லை. நான் குளித்து, குடித்து, உணவு அருந்தியாயிற்று. எல்லாம் சரியாய் இருக்கிறது. விளாதிஸ்லாவும் நானும் நகரத்துக்குப் போய் இந்தத் தரைக்கீழ் வாசிகளிடம் பேச விரும்புகிறோம். கை அகராதியும் இலக்கணப்புத்தகமும் நான் தயாரித்துவிட்டேன்."

"இவ்வளவு சுருக்காகவா?" என்று வியந்தான் வீக்தர்.

"இல்லாவிட்டால் 'லிங்' எதற்காகவாம்? அது எப்பேர்ப்பட்ட இயந்திரம் தெரியுமா? நல்லது, தலானவின் ஆசியைப் பெற்று வரும்படி விளாதிஸ்லாவ் என்னை அனுப்பினான் - தலானவ் தடை சொல்ல மாட்டான்தான், இருந்தாலும்."

"அவன் தூங்குகிறான். தவிர அவன் நோயுற்றிருக்கிறான். போய் வாருங்கள், அவசியம். இந்த நோய் என்ன, இதன் விளைவு என்ன, இது எப்படித் தொற்றுகிறது, என்பவற்றை எல்லாம் அவர்களிடம் கட்டாயமாகக் கேட்டு அறிய முயலுங்கள். இந்த நோயைப் போக்கும் மருந்து அவர்களிடம் இருக்கலாம்" என்றான் வீக்தர்.



"நிச்சயம் அறிந்து வருவேன். சுவரின் வழியே கடிதப் பரிமாற்றம் எப்படிச் செய்துகொள்ளப் போகிறோம் என்பதுதான் எனக்கு விளங்கவில்லை."

"அவர்கள் ஏன் வெளியே வரமாட்டோம் என்கிறார்கள்?"

"கிளேகுகளை அஞ்சுகிறார்கள், அதனால்தான். இந்த கிளேகுகள் யார், எப்படித் தோற்றம் அளிக்கிறார்கள் என்பதுகூட நமக்குத் தெரியாது. நாமும் அவர்களை அஞ்ச வேண்டுமோ என்னவோ. நீ என்ன செய்யப் போகிறாய்?"

"நான் தூங்கப்போகிறேன். நீ திரும்பி வந்ததும் எழுப்பு. எனக்கு ஒரேயடியாகத் தூக்கம் வருகிறது" என்றான் வீக்தர்.

"ஆமாம், தூங்கு. மிகவும் களைத்துப்போய் விட்டாய் நீ" என்று உடனே சொன்னான் காஸிமீர்.

காஸிமீர் தன்னைக் கலவரத்துடன் நோக்குவதை வீக்தர் கவனித்தான். ஆனால் அவனுக்கு எதுவும் அக்கறைக்கு உரியதாய் இல்லை. சற்று நேரமாவது உறங்காவிட்டால் தன்னால் தாக்குப் பிடிக்கமுடியாது என்று அவன் அறிந்திருந்தான்.

"போ. எல்லாம் சரியாய் இருக்கிறது. பயப்படாதே" என்றான்.

கால்களை நகர்த்த மாட்டாமல் நகர்த்தியவாறு அவன் ஒதுக்கறைக்குத் திரும்பினான். யூங் முன்போன்றே தரையைப் பார்த்தபடி அசையாமல் உட்கார்ந்திருக்கக் கண்டான்.

"யூங், நான் படுத்து உறங்கினால், மூன்று மணி நேரத்துக்குப்பின் என்னை எழுப்புவாயா?" என்று தணிந்த குரலில் சொன்னான் வீக்தர்.

"கட்டாயம்" என்று கடிகாரத்தைப் பார்த்தான் யூங். "மூன்று மணி நேரத்துக்குப் பின், அதாவது பத்து அடித்துப் பனிரெண்டு நிமிஷத்தில் நான் உன்னை எழுப்புவேன். நீ தூங்கலாம்."

"நீ இப்படியேதான் உட்கார்ந்திருக்கப் போகிறாயா? உடம்பு சரியாய் இருந்தால் குறிப்புக்களை எழுதேன். அவற்றை ஒழுங்கு படுத்த விரும்பினாயே" என்று படுத்துக்கொண்டு கூறினான் வீக்தர்.

யூங் பேசாமல் எழுந்து மேஜை அருகே சென்றதை அவன் கண்டான். பிறகு சட்டென உறங்கிப்போனான்.

இந்தத் தடவை உரையாடுவது முன்னிலும் எளிதாய் இருந்தது. அங்கே சுவற்றுக்குப் பின்னால் அவர்களது வருகையை எதிர் பார்த்து முன்னேற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பெரிய சாளரம் ஒளிபுகக்கூடியது ஆக்கப்பட்டிருந்தது. அதன் மறுபுறம் நின்றார்கள் நால்வர். வெண்மையாக மினுமினுக்கும் அரை இருளுக்குக் கண்கள் பழகியதும் காஸிமீர் சொன்னான்:

"இல்லை, இவர்கள் வெவ்வேறானவர்கள். இவர்கள் நம்மிலிருந்து வெகுவாக வேறுபட்டவர்கள் ஆதலால் ஒரே மாதிரித் தோற்றம் உள்ளவர்கள் போல நமக்குத் தென் படுகிறார்கள் - எல்லா ஜப்பானியர்களும் சீனர்களும் ஐரோப்பியர்களின் கண்களுக்கு ஆரம்பத்தில் ஒரே மாதிரியாகத் தென்படுவதுபோல. பார். அதோ உயரமாய் இருக்கிறானே, அவன் கிழவன். ஆனால் பின்னே இருப்பவன் மிகவும் இளையவன்... அல்லது, இல்லை, அவள் பெண்பிள்ளை... ஆம், நிச்சயமாகப் பெண்!"

"அட நீ ஒன்று!" என்று சந்தேகம் தெரிவித்தான் விளாதிஸ்லாவ்.

தடுப்பின்மேல் அழுத்தி வைக்கப்பட்டிருந்த அவர்களுடைய கடிதத்தைப் படித்துக்கொண்டிருந்தவர்களின் விந்தையான பறவை முகங்களைத் தொடர்ந்து பார்வையிட்டபடி, "கவனித்துப் பார்!" என்றான் காஸிமீர்.

படித்து முடித்துவிட்டு அவர்கள் மும்முரமாக விவாதிக்கத் தொடங்கினார்கள். அவர்களுடைய சைகைகளும் முகபாவங் களும் மிகவும் தனிவகைப்பட்டவையாய் இருந்தமையால் அவர்கள் சந்தோஷப்படுகிறார்களா, வருத்தப்படுகிறார்களா என்று புரிந்துகொள்ள முடியவில்லை. எதனாலோ அவர்கள் கோபம் அடைந்திருப்பதாகக் காஸிமீருக்குத் தோன்றியது. சுவரின் மறுபுறம் உக்கிரமான விவாதம் நடப்பதாக அப்புறம் அவன் முடிவு செய்தான். விவாதித்தவர்களில் ஒருவன் விண்வெளி விமானிகள் பக்கம் திரும்பி ஏதோ ஆவேசத்துடன் சொல்லத் தொடங்கியவன் சட்டென்று திறந்த வாயுடன் மௌனமாகி விட்டான்.

"பதில் எழுதும்படி நாம் கேட்டது அவன் நினைவுக்கு வந்திருக்கும்" என்று ஊகித்தான் காஸிமீர்.

"நீ மிகவும் கூரிய மதி உள்ளவன்தான். உள்நோக்கு உடையவன் என்றே சொல்லலாம்" என்றான் விளாதிஸ்லாவ்.



"இந்தச் சில நாட்களில் நான் படித்த அத்தனை புத்தகங்களைப் படித்திருந்தாயானால் நீயும் கூர்மதி உள்ளவன் ஆகியிருப்பாய்... அதோ அவர்கள் எழுதத் தொடங்கிவிட்டார்கள்... சந்தேகம் இல்லாமல் அவள் பெண்தான்! என்ன சிரிக்கிறாய்? இங்கே மாதர்கள் உயரமான தலையணியும் ஆண்களைவிட அதிகம் பளிச்சிடும் நிற உடைகளும் அணிகிறார்கள்."

"ஆனால் இந்தச் சீமாட்டியின் தோற்றம்..." என்று இழுத்தான் விளாதிஸ்லாவ்.

காஸிமீர் ஏளனப் புன்னகை செய்தான்.

"அவளுக்கு நாம் எவ்வளவு குரூபிகளாகப்படுவோம் என்பதை யோசித்துப் பார். நம் தடித்த மூக்குகளும் உதடுகளும், சிறு விழிகளும், பெரிய, பாந்தமற்ற உடல்களும்... அடே, அவர்கள் கடிதம் எழுதி முடித்துவிட்டார்களே."

தடுப்பின்மேல் கடிதம் பொருத்தி வைக்கப்பட்டது. காஸிமீர் அகராதியை அவ்வப்போது பார்த்தவாறு முனைப்புடன் கடிதத்தைப் படித்தான். விளாதிஸ்லாவோ, தடுப்பின் மறுபுறம் நின்றவர்களை நோட்டமிட்டான். அவர்கள் வெவ்வேறு முகத்தோற்றம் உள்ளவர்கள் என்பதை இப்போது அவனும் கண்டான். அவர்களுடைய கண்கள்கூட ஒரேமாதிரி இல்லை. கிழவனுடையவும் மாதினுடையவும் விழிகள் பெரியவை, சற்றே பளிச்சிடுபவை, கரும் பச்சை அல்லது கரும் பழுப்பானவை. மற்ற இருவருடைய கண்களுமோ அனேகமாகக் கரியவை. இமைகள் அவர்களுக்கு இருக்கத்தான் செய்தன. அவை சவ்வு போல மெல்லியவை, பொதுவாக முகத்தின் நிறத்தைவிட ஆழ்ந்த வண்ணம் கொண்டவை. ஆனால் பறவை-மனிதர்கள் விழிகளைத் தாழ்த்தியபோதுதான் அவற்றைக் காண முடிந்தது. விளாதிஸ்லாவ் முதன் முதல் காணும் பகுத்தறிவுள்ள வேற்று ஜீவர்கள் இவர்களே. அறியா கிரகங்களுக்கு முதல் இரண்டு பறப்புக்களில் அவன் ஓணான்களையும் மீன்களையும் மட்டுமே கண்டிருந்தான். இங்கும் அவைதாம் இருக்கும் என்று நினைத்தான். பறவை-மனிதர்களும் அவன் மீது கண்ணோட்டினார்கள். அவர்களுடைய உன்னிப்பான, கூர்ந்த பார்வை அவனுக்குக் கூச்சம் உண்டாக்கியது.

"கேள் அவர்கள் எழுதியிருப்பதை. இல்லை, பொறு. நான் ஒன்றைச் சரிபார்த்துக்கொள்கிறேன்" என்றான் காஸிமீர்.

கடிதத்தில் ஒரு சொல்லின் அடியில் கோடிட்டு, தடுப்பின்மீது கடிதத்தைப் பொருத்தி, தன் விண்வெளிக் காப்புடையைச் சுட்டிக் காட்டினான். தடுப்பின் மறுபுறம் இருந்தவர்கள் கைகளை வலமிருந்து இடமாக இருமுறை ஆட்டினார்கள்.

"நான் நினைத்தது சரிதான்" என்று திருப்தியுடன் சொன்னான் காஸிமீர். "கேள்: 'எங்களிடம் காப்பு உடைகள் இல்லை. காப்புடை அணிந்திருந்தால் கிளேகுகளை அஞ்ச வேண்டாம். ஆனால் எச்சரிக்கையாய் இருங்கள். நீங்கள் இங்கே திரும்பி வந்து, கிளேகுகளை ஒழிக்கும் சாதனத்தைத் தந்தீர்களானால் எங்களுக்கு உதவ உங்களால் முடியும். எப்போது திரும்பிவர உங்களுக்கு இயலும்?"

"மிகவும் காரியரீதியான கடிதம். இந்த கிளேகுகள் யார், எம்மாதிரிச் சாதனங்கள் அவர்களை ஒழிக்கப்பயன்படும் என்பது மட்டுமே தெளிவுபடுவது பாக்கி. ஒருவேளை அணுவாயுதங்களோ?" என்றான் விளாதிஸ்லாவ்.

"இது ஒன்றுதான் இவர்களுக்குக் குறை!" என்று மிக ஆழ்ந்த முறையில் சொன்னான் காஸிமீர். "ஆம், கிளேகுகள் என்ன என்று எனக்கு விளங்கிவிட்டதுபோல் இருக்கிறது. ஆனாலும் கேட்டுத் தெரிந்துகொள்வோம். என் கேள்வி அவர்களுக்குச் சிரிப்பு மூட்டலாம், அதனால் பரவாயில்லை."

"ஆமாம், இவர்களால் சிந்திக்க முடியுமா?"

"நிச்சயம். பகுத்தறிவு உள்ள ஜீவர்கள் நகைச்சுவை இல்லாதவர்களாக இருப்பது சாத்தியமா? இல்லவே இல்லை."

காஸிமீர் காகிதத்தில் மளமளவென்று ஏதோ எழுதி அதைத் தடுப்பின் மேல் வைத்தான்.

" 'கிளேகுகள் பார்வைக்கு எப்படி இருப்பார்கள்? அவர்களை எங்கே காணலாம்?' என்று நான் கேட்டேன். அதோ அவர்கள் சிரிக்கிறார்கள், பார்த்தாயா?" என்று விளாதிஸ்லாவிடம் சொன்னான்.

"ஆச்சரியப்படுகிறார்கள் என்று சொல்லு. நீ அவர்களைத் திகைக்கவைத்துவிட்டாய்" அகலத் திறந்த பறவை வாய்களை விளாதிஸ்லாவ் உற்றுப் பார்த்தான். "இவர்களுக்குப் பற்கள் கிடையாது போலிருக்கிறது" என்றான்.

"தாடை ஓரங்களில் ஒரு மொத்தமான எலும்புத் தகடு. கொஞ்சந்



தான் துருத்தியிருக்கிறது."

"மயிர் இருக்கிறதா?"

"இருக்கிறது, ஆனால் நம்முடையது போல அல்ல. தலை மேலும் முதுகிலும் குட்டையான, பளபளக்கும் முடிகள். முகத்தில் ரோமம் வளர்வதில்லை. என்ன, முகத்தைச் சுளிக்கிறாய்? நீ தலை மயிரை வெட்டிக்கொள்ளவும் முகத்தை மழித்துக் கொள்ளவும் வேண்டியிருப்பதால் நீ தெய்வீக அழகு உள்ளவன் போலும்! பிரமாதச் சாதனைதான் போ. சந்தோஷமாயிரு. ஆகா, பதில் எழுதிவிட்டார்களா? ஊம், அப்படித்தான் நினைத்தேன்! நேற்று நான் உருப்பெருக்கி வழியே பார்த்தேனே கிருமிகள், அவையே தாம் கிளேகுகளாம்!"

"நச்சுக்கிருமிகளா?"

"ஆமாம். இந்த நச்சுக்கிருமிகளிடமிருந்து தப்புவதற்காகவே இவர்கள் தரைக்கடியில், இந்தத் தடைச்சுவரின் மறுபுறம் வசிக்கத் தொடங்கியிருக்கிறார்கள் என்று தெரிகிறது. ஆனால் இந்த கிளேகுகள் எங்கிருந்து வந்தன? வேறு கிரகங்களிலிருந்து கொண்டுவரப்பட்டனவா என்ன? அவை இங்கே உள்ளவைதாம் என்றால் இதற்குள் இவர்கள் அவற்றுக்குப் பழகவும் தங்களை இசைவித்துக்கொள்ளவும் வேண்டுமே. இதோ அவர்களிடம் கேட்கிறேன்."

காஸிமீர் குறிப்பு எழுதிச் சுவர்மேல் வைத்தான். " 'கிளேகுகள் பற்றிய எல்லா விவரங்களும் எங்களுக்குத் தெரிய வேண்டும். இல்லாவிட்டால் எங்களால் உதவ முடியாது' என்று எழுதியிருக்கிறேன்" என்றான்.

"மொத்தத்தில் நாம் இவர்களுக்கு எப்படி உதவமுடியும்?"

"நம்மால் முடியவே முடியாது. பூமிக்குத் திரும்பிப் போய்ச் சேர்வோமா என்பதே நமக்குத் தெரியாதே. போய்ச் சேர்ந்தோமானால் அங்கே நம்மவர்கள் இந்த கிளேகுகளை ஆராய்வார்கள். வெறிநாய்க்கடி, இளம்பிள்ளைவாதம், குளிர் காய்ச்சல் ஆகிய நோய்களை நாம் ஒழித்துவிடவில்லையா? குளிர் காய்ச்சல் நச்சுக்கிருமிகள் அளவு சங்கையில்லாமல் இருந்தனவே. ஒரு இருபது ஆண்டுகளுக்கு முன்புகூட இந்தக் குளிர்காய்ச்சல் என்ன பாடு படுத்திற்று என்பதைப் படித்திருக்கிறாயா? தொற்று நோய்கள் ஒன்றுக்குப் பின் ஒன்றாகப் பரவிய வண்ணமாய் இருந்தனவாம். எப்படியும் நாம் பூமி போய்ச் சேர்ந்துவிட்டால்

போதும். சந்திர நிலையத்தில் தொற்றுத் தடுப்புப் பகுதியில் கொஞ்ச காலம் இருப்போம். நம் நோயாளிகள் குணமாக்கப்பட்டு விடுவார்கள்...."

"பெரிய நம்பிக்கைவாதி நீ! எல்லோருமே நோய்ப்பட மாட்டோம் என்று ஏன் எண்ணுகிறாய்?" என்றான் விளாதிஸ்லாவ்.

"நோய் முதிர் நேரம் மிகக் குறுகியது. நீயும் நானுமோ, இன்னும் நடமாடிக்கொண்டிருக்கிறோம். ஒருவேளை நாம் இயல்பான தொற்றுக்காப்புத் திறன் உள்ளவர்கள்போலும். நீ ராக்கெட்டைச் செலுத்து, நானும் வீக்தரும் நோயாளிகளைக் கவனித்துக் கொள்வோம், மற்ற வேலைகளையும் பார்த்துக் கொள்வோம். எனக்கென்னவோ வீக்தரும் நோய்ப்பட்டுவிட்டான், எப்படியோ தாக்குப்பிடிக்கிறான் என்று தோன்றுகிறது. ஒருவேளை அவனுக்கு வந்திருப்பது லேசான வகைபோலும்."

விளாதிஸ்லாவ் முகத்தைச் சுளித்துக்கொண்டு "வீக்தர் நோய்ப்பட்டுவிட்டானா? வெகு நாட்களாகவா?" என்று திகைப்புடன் கேட்டான்.

"நான் நேற்றே கவனித்தேன். இன்று அவன் நினைவு இழந்தான். ஒருவேளை இது கிளேகுகளின் தொற்றாய் இராது, வேறு எதாவதாக இருக்கும்."

"வேறு எதுவாம்? வீக்தர் திடமான ஆரோக்கியம் உள்ளவன், புத்திளைஞன் ஆயிற்றே."- விளாதிஸ்லாவ் சற்று மௌனமாய் இருந்தான். "இவர்கள் வெகுநேரம் ஆலோசனை செய்கிறார்கள்.... இல்லை, நாம் பூமியை அடைந்தே தீருவோம். நாம் அடைந்து தீர வேண்டும். இங்கேதான் நாம் விரைவில் திரும்பமாட்டோம் போலிருக்கிறது. பத்து ஆண்டுகளுக்குப் பின்புதான் திரும்புவோம். நாமோ வேறு யாரேனுமோ, எல்லாம் ஒன்றுதான். இவர்கள் எவ்வளவு காலமாகத் தரைக்கீழ் வாழ்க்கை நடத்துகிறார்கள்?"

"கேட்டு அறிவோம். ஊம், அவர்கள் சுருக்கமான, ஆனால் காரியப்பாங்கான கடிதம் எழுதியிருக்கிறார்கள். 'இரண்டு ஸினேமிகள் கழிந்ததும்..' இது அவர்களுடைய நேரம். ஸினேமி என்பது சுமார் நாற்பது, நாற்பத்தைந்து நிமிடங்களுக்குச் சமம். அதாவது ஒன்றரை மணி கழிந்தபின்... 'கடிதம் இருக்கும் இடத்திலேயே புத்தகம் இருக்கும், எடுத்துக்கொள்ளுங்கள்' இது பக்க நடைவழியில், இல்லையா? 'புத்தகத்தில் எல்லாம் விவரிக்கப்



பட்டிருக்கும்.' ஆகா, அருமை!"- அவன் கையை வலமிருந்து இடமாக இருமுறை ஆட்டினான். தடுப்பின் பின் இருந்த ஜீவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துவிட்டு வாயை அகலத் திறந்தார்கள். "இவர்கள் சிரிக்கும்விதம் இது, உறுதியாய்ச் சொல்லுகிறேன். அல்லது புன்னகை செய்கிறார்கள். எதையாவது அவர்களிடம் கேட்போம் இதோ!" வெற்றுக் காகிதத்தை எடுத்து, "எவ்வளவு காலமாக நீங்கள் தரைக்கு அடியில் வசிக்கிறீர்கள்?" என்று எழுதினான் காஸிமீர்.

"முக்கிய விஷயத்தைக் கேள். நோயாளிகளுக்கு என்ன நேர்கிறது? மரணமா, மூளைக்கோளாறா, அல்லது என்ன? நோய் எப்படிப் பரவுகிறது?" என்று நினைவுபடுத்தினான் விளாதிஸ்லாவ்.

"நீ சொல்வது சரியே" என்ற காஸிமீர் தயங்கினான். "கேட்கவே பயமாய் இருக்கிறது... இதோ, எழுதிவிட்டேன்" என்றான்.

தனக்கும் திகில் உண்டாவதை விளாதிஸ்லாவ் உணர்ந்தான். நெடிய கிழவன் தகட்டில் மெல்லிய வெண் எழுத்தாணியால் குறிகள் கீறுவதைப் பார்த்தவாறு இருவரும் பதைபதைப்புடன் காத்திருந்தார்கள். "எழுத்தாணி வெள்ளை, ஆனால் குறிகள் கருஞ்சிவப்பு... சீக்கிரம் எழுதி முடித்தானானால் நன்றாய் இருக்குமே..." - இவ்வாறு எண்ணமிட்டான் விளாதிஸ்லாவ்.

தகடு தடுப்பில் ஒட்டினாற்போலப் பொருத்தி வைக்கப்பட்டது. காஸிமீர் மொழிபெயர்க்கத் தொடங்கினான்.

"தரைக்கடியில் இவர்கள் கொஞ்ச காலமாகத்தான் வாழ்கிறார்களாம். நம் கணக்குப்படி சுமார் ஏழு ஆண்டுகளாக, இவர்களுடைய ஆண்டு நம்முடையதைவிடக் குறுகியது. நோயைப்பற்றி இவர்கள் எழுதியிருப்பது எல்லாம் எனக்குப் புரியவில்லை. தங்களுக்குத் திட்டவட்டமாகத் தெரியாது என்கிறார்கள், என்ன காரணத்தினாலோ. 'முன்பு பலவீனமானவர்களும் கிழவர்களும் மட்டுமே இறந்தார்கள். இப்போது வேறு விதமாய் இருக்கலாம், அறியோம். இருந்தாலும் இது சாவை விடக் கொடியது. புத்தகத்தில் நீங்கள் எல்லா விவரங்களையும் காண்பீர்கள். நான் கடிதத்தை அதற்குள் வைக்கிறேன்.' பார்த்தாயா, கிழவன் உட்கார்ந்து எழுதுகிறான். இதோ இன்னொரு வாக்கியம் 'கிளேகுகள் மூச்சுடன் சேர்ந்து உடம்பில் புகுகின்றன.' அதாவது நுண்தொற்று."

"தரைக்கடியில் இவர்கள் நிறையப் பேர் இருக்கிறார்களாமா?

அங்கே கிளேகுகளின் தொற்றிலிருந்து இவர்கள் காக்கப்பட்டிருக்கிறார்களாமா? மொத்தத்தில் வாழ்க்கை எப்படி இருக்கிறதாம்? இவர்கள் யாராம், அரசாங்க உறுப்பினர்களா அல்லது வேறா? இவற்றை எல்லாம் கேள்."

இந்தத் தடவை மாது பதில் எழுதினாள். கிழவன் கேள்விகளைப் படித்துவிட்டு, தான் முன் எழுதிக்கொண்டிருந்ததைத் தொடர்ந்தான்.

"அவர்கள் ரொம்ப நிறையப் பேராம். ஒரே நெரிசலாய் இருக்கிறதாம். மேலும் மேலும் புதிய நடை வழிகள் தோண்டுகிறார்களாம், தரைக்கீழ் நகரங்கள் கட்டுகிறார்களாம். கிளேகுகள் இங்கே புகுவதில்லையாம், ஆனால் மேலே வாழ்க்கையிலேயே பலர் நோய்ப்பட்டுவிட்டார்களாம். புத்தகம் கொண்டுவருபவன் நோய்ப்பட்டவனாம். இந்த நோயின் விளைவை அவனைப் பார்த்து நாம் தெரிந்துகொள்ளலாமாம். தரைக்கடியில் எல்லாம் கஷ்டமாம். பார்வை கெடுகிறதாம். ஊட்டமற்ற உணவு, தூய காற்று போதாமை, இவற்றால் பலர் நோயுற்று மடிகிறார்களாம். இவர்கள் அரசாங்கத்துக்குத் தெரியாமல் நம்முடன் பேசுகிறார்களாம், விஞ்ஞானிகளாம். இவர்களுடைய மார்பில் இருக்கும் இந்த மூன்று இணை வளையங்கள் நூலறிவுச் சின்னம். இதைப்பற்றி நான் படித்தேன். கிளேகுகளை ஒழித்து கிரகத்தைத் தூய்மைப்படுத்திவிட்டால் எல்லோரும் வெளியே வருவார்களாம். அரசாங்கம் எதிர்த்தால் மக்கள் கிளர்ச்சி செய்து அதைக் கவிழ்ந்துவிடுவார்களாம். நம்மால் உதவி செய்ய முடியுமா, எப்போது திரும்பிவருவோம் என்று மறுபடி கேட்கிறார்கள். என்ன பதில் எழுதுவது?"

"உள்ளது உள்ளபடியே எழுது. நாம் நோய்ப்பட்டிருக்கிறோம். பூமி திரும்பிச் சேர முடியும் என்று நம்புகிறோம். கிளேகுகளை ஒழிக்கும் சாதனம் அங்கே நம்மவர்கள் கண்டுபிடித்துவிடுவார்கள். விரைவில் இல்லாவிடினும் கட்டாயமாக இங்கே திரும்பி வருவோம். இப்படி எழுதிவிட்டு, கிளேகுகளின் தொற்றுக்கு இயல்பான காப்பு உண்டா என்று கேள்."

"தொற்றுக் காப்பு என்பதற்கு இவர்கள் மொழியில் என்ன சொல் என்பது எனக்குத் தெரியாது. நல்லது, எப்படியாவது எழுதிவிடுகிறேன்." - காஸிமீர் அகராதியைப் பார்த்துக் குறிகள் வரையலானான்.



விளாதிஸ்லாவ் சுவரில் சாய்ந்து தொலைவில் வெண்மையாக மினுமினுத்த தரைக்கீழ் கடப்பு வழியில் பார்வை செலுத்தினான். "இதெல்லாம் எதில் போய்முடியும் என்று தெரிந்தால் நல்லது... நினைக்கவே விந்தையாக இருக்கிறது. கரேல் மட்டும் அந்த மிருகத்தை எதிர்ப்பட்டிராவிட்டால்! இந்தப் பாழாய்ப்போகிற கிளேகுகளுக்குப் பயந்து இப்படி எல்லாவற்றையும் போட்டுவிட்டுத் தரைக்கு அடியே வந்திருக்கிறார்களே இந்த ஜீவர்கள்... எங்கிருந்துதான் வந்தன கிளேகுகள்- மர்மக் கதையாய்த்தான் இருக்கிறது. ஊம், பரவாயில்லை. விரைவில் தெரிந்துகொள்வோம்."

அவன் மறுபடி தரையடிவாசிகளை நோக்கினான். பெருவிழிகளும் ஏழு விரல்களும் கொண்ட இந்த ஜீவர்கள் இப்போது அவனுக்கு அதிகக் கவர்ச்சி உள்ளவர்களாகத் தோற்றம் அளித்தார்கள். "இவர்களுக்குப் பழக்கமாவது முடியக்கூடியதுதான். கறுப்புத் தோலுக்கும் சுருட்டைக் கம்பளி மயிருக்கும் கூட ஆரம்பத்தில் பழக்கப் படுத்திக்கொள்ள வேண்டியிருந்ததே. ஆனாலும் லூன்ஸ் ம்போங்கே சொந்தச் சகோதரன் போலத் தோன்றும் அளவுக்கு நான் அவனுடன் பழகவில்லையா?... கடிதத்தைப் படிக்கிறார்கள். அந்த மாது தலையைச் சாய்த்தவாறு கைகளை மார்பின்மேல் கட்டிக்கொண்டாளே. ஏமாற்றமா? துயரமா? நான் ஏன் அப்படி நினைக்கிறேன்? அடே, ஆமாம். படபடப்பைக் காட்டும் சைகை... தவிர, நம் கடிதத்தின் விஷயம் இவர்களுக்கு மகிழ்ச்சியூட்டுவது இல்லையே. மற்றவர்கள் முகங்களும் மாறிவிட்டன. ஆ, எழுதுகிறார்கள்... என்ன எழுதுகிறார்கள்?"

காஸிமீர் மொழிபெயர்த்தான்: "உங்களுக்கு நோய் வந்திருப்பது எங்களுக்குக் கொடுந்துன்பம். இது எப்படி நேர்ந்தது? காப்புடைகள் தொற்றைத் தடுப்பது இல்லையா என்ன? நீங்கள் பூமி சென்று திரும்புவீர்கள் என்று எதிர்பார்ப்போம், நம்புவோம். உங்கள் வருகைக்குக் காத்திருப்போம். கிளேகுகளின் தொற்று சிலரைப் பாதிப்பது இல்லைதான். ஆனால் அத்தகையவர்கள் மிகக் குறைவு. உங்களுக்கு இன்பம் உண்டாக விழைகிறோம்!"

விண்வெளி விமானிகள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

சற்று பேசாதிருந்தபின் விளாதிஸ்லாவ் சொன்னான்: "ஊம். என்ன செய்வது? நம்புவோம், எதிர்பார்ப்போம். வேறு ஒன்றும் செய்வதற்கில்லை. இவர்கள் புத்தகத்தைச் சீக்கிரம் கொண்டுவந்து

கொடுத்தால் நல்லது. வீக்தருக்கு உடம்பு ஒரேயடியாக மோசம் ஆகிவிட்டால்..."

"அட சைத்தான்!" என்று முணுமுணுத்தான் காஸிமீர். "மெய்யாகவே... ஆனால் புத்தகம் இல்லாமல்..."

"இல்லை. காத்திருக்க வேண்டியதுதான்... இவர்களுக்கு அந்த மிருகத்தைப்பற்றித் தெரிவி. அதைத் தெரிந்துகொள்வது இவர்களுக்கு உபயோகமாயிருக்கலாம்."

காஸிமீரின் குறிப்பைப் படித்ததும் அந்த மாது மறுபடியும் புகலின்மையைக் காட்டும் சைகை செய்தாள். கிளர்ச்சி பொங்கும் கீச்சுக்குரல்கள் கேட்டன. அப்புறம் தடுப்பின்மீது பின்வரும் குறிப்பு பொருத்தி வைக்கப்பட்டது: "இது ஸூன்னிமி என்னும் மிருகம். அது பயந்துவிட்டது. ஸூன்னிமி பற்றிப் புத்தகத்தில் காண்க."

"ஸூன்னிமி என்றால் அப்படியே இருக்கட்டும். அது மிரண்டு போய்க் காப்பு உடையைக் கிழித்து விடும் என்று யாருக்குத் தெரியும்? ஐயோ, கரேல், கரேல்... ஆமாம், இவர்களிடம் காப்பு உடைகள் இருக்கின்றன என்று தெரிகிறது. மொழியில் இந்தச் சொல் இருக்கிறதே. விண்வெளிப் பறப்பு இங்கே எந்த நிலையில் இருக்கிறது என்று கேள். இவர்கள் ஒருவேளை பறந்திருப்பார்கள் அல்லது வெளி உலகிலிருந்து இவர்களிடம் யாரேனும் வந்திருப்பார்களோ?" என்றான் விளாதிஸ்லாவ்.

விண்காப்பு உடைகளும் அதிக லேசான காப்பு அங்கிகளும் தங்களிடம் உண்டு என்றும், ஆனால் அவை எல்லாம் ஆளுவோர் வசம் இருப்பதால் மற்றவர்கள் அவற்றைப் பெற முடியாது என்றும் பதில் குறிப்பில் கண்டிருந்தது. வேறு கிரகங்களிலிருந்து எவரும் அவர்கள் கிரகத்துக்கு வரவில்லை. அவர்கள் தரைக்கு அடியில் வாழத் தொடங்கிய பின் யாரேனும் வந்திருந்தாலும் வந்திருக்கலாம். அவர்களே விண்வெளிப் பறப்புக்கு ஆயத்தம் செய்துகொண்டிருந்தார்கள். ஆனால் கிளேகுகள் தோன்றியதுமே இந்த ஏற்பாடுகள் எல்லாம் இடைமுறிந்துவிட்டன. - இவ்வாறு குறிப்பு தெரிவித்தது.

"தோன்றியதுமே! அப்படியானால் முன்பு அவை இருக்கவில்லை என்று ஆகிறது. எங்கிருந்து தோன்றின அவை?" என்றான் காஸிமீர்.

"அதோ சுவற்றுக்கு மறுபுறம் யாரோ புதியவன் வந்திருக்கிறான்.



அதோ புத்தகமும் வந்துவிட்டது. பெரியது! நீ நிறைய வேலை செய்ய வேண்டியிருக்கும், காஸிமீர்!"

"நான் அல்ல, 'லிங்'. அது சமாளித்துவிடும், கவலைப்படாதே!"

புத்தகத்துடன் வந்தவன் தடுப்பை ஒட்டினாற்போல நிறுத்தப்பட்டான். மற்றவர்களிலிருந்து அவன் எதிலும் வேறுபடவில்லை. அவன் உடைமட்டுந்தான் மற்றவர்களின் உடையை விடக் குட்டையாக, சிவப்பும் கறுப்புமாக இருந்தது. அவன் மார்பில் பெரிய வெண் தகடு பொருத்தப்பட்டிருந்தது. ஏதோ குறிகள் பொறித்த வில்லைபோல் காணப்பட்டது அது.

"இவன் சமூகத்தின் கீழ் வகுப்புக்களைச் சேர்ந்தவன் என்பதை இது குறிக்கிறது போலும். தொழிலையும் வேலை செய்யும் இடத்தையும் குறிக்கும் வில்லை இவன் உடையில் பொருத்தப்பட்டிருக்கிறது" என்று விளக்கினான் காஸிமீர்.

"இனிய பழக்கம், ஊம்? பாசிஸ வாடை வீசுகிறது இதில்" என்றான் விளாதிஸ்லாவ்.

"ஆமாம். இங்கே வாழ்க்கை கிளேகுகள் இல்லாமலே அழுதுதான் வடிந்திருக்கிறது... ஊம், பார்வைக்கு இவன் முற்றிலும் உடல்நலம் உள்ளவனாகவே காண்கிறான். ஏதோ சுரத்து இல்லாதவன்போல் இருக்கிறான். பார், அவர்கள் அவனை என்ன செய்கிறார்கள்?"

கருஞ்சிவப்பு உடையணிந்த ஜீவன் ஆடி அசைந்தான். பின்பு லேசாக வாயைத் திறந்தவாறு பொம்மைபோல உணர்ச்சியின்றி உட்கார்ந்தான். அந்த மாதின் கட்டளைகளுக்கு அவன் கீழ்ப்படிவதை விண்வெளி விமானிகள் கண்டார்கள். கிழவன் அக்கம் பக்கம் நிகழ்வதைக் கவனிக்காமல் உட்கார்ந்து கடிதம் எழுதிக்கொண்டிருந்தான்.

கருஞ்சிவப்பு ஜீவன் ஒரு சமயம் விரைப்பாக நிமிர்ந்து அசையாது இருந்தான். மறு சமயம் உத்தரவுப்படி பலவித அங்க அசைவுகள் செய்தான். விளாதிஸ்லாவ் தனக்குப் புல்லரிப்பதை உணர்ந்தான்.

"இதுதான் விளைவு... சாவைவிடக் கேடானது, ஆம்... இவன் வெறும் கைப்பாவை ஆகிவிட்டான்" என்று கிசுகிசுத்தான்.

கருஞ்சிவப்பு ஜீவன் வாயைத் திறந்து கைகளைச் சட்டென மேலே உயர்த்தி அசையாது இருந்தான். பின்பு உத்தரவு

இடப்பட்டதும் முன்னே குனிந்து விரல்களைத் தரையில் ஊன்றிக் கொண்டு மறுபடி அசைவற்றுவிட்டான்.

"இவன் என்ன உணர்கிறான்? என்ன நினைக்கிறான்? அல்லது இவனிடம் பகுத்தறிவு இல்லவே இல்லையோ?'' என்று எண்ணமிட்டான் விளாதிஸ்லாவ். அவன் காஸிமீரைப் பார்த்தான். காஸிமீரோ வெளிறிப் போயிருந்தான். அவனுடைய நீல விழிகள் அகன்று சுடர் வீசின.

"நாம் அவசரமாகப் போகவேண்டும் என்று இவர்களுக்கு எழுது. போதும் இந்த நாடகம். நாம் மறுமுறை வருவது சந்தேகம் தான் என்று தெரிவி. புத்தகத்தை பூமிக்கு எடுத்துப்போகலாமா என்று கேள்" என்றான் விளாதிஸ்லாவ்.

இந்தக் கடிதத்தைப் படித்ததும் தடுப்புக்கு மறுபுறம் இருந்தவர்கள் கைகளை வலமிருந்து இடமாக விரைவாக ஆட்டினார்கள். கருஞ்சிவப்பு ஜீவனும் கையை ஆட்டினான். பின்பு புத்தகத்தில் கடிதத்தை வைத்து அதை மறுபடி கருஞ்சிவப்பனிடம் ஒப்படைத்தார்கள். சற்று நேரத்தில் அவன் பக்க வழியாக வந்து விண்வெளி விமானிகளிடம் புத்தகத்தை நீட்டினான். விளாதிஸ்லாவ் அதை வாங்கிக்கொண்டான். அது உண்மையிலேயே கனமாக இருந்தது. விண்வெளி விமானிகள் சுவரின் மறுபுறமிருந்து அனுப்பப்பட்டவனைத் திகிலுடனும் இரக்கத்துடனும் நோக்கினார்கள். அகன்ற நீளங்கி முழங்கால்வரை தொங்கியது. அங்கியின் கைகள் குட்டையாயிருந்தன. புரிவடிவான சிவப்பு, கறுப்புப் பட்டைகளால் அது வண்ணம் தீட்டப்பட்டிருந்தது. வெட்டுத் தழும்புகள் போன்ற எவையோ உள்ள விந்தையான குறுக்குக் கோடுகள் கொண்ட மெலிந்த, பழுப்பு நிறமான கழுத்து திறந்திருந்தது. தலை மூடப்படவில்லை. மண்டையையும் தலையோடு நெருக்கமாக இணைந்திருந்த கூரிய சிறு காதுகளையும் பின் கழுத்தையும் ஒருசீராக மூடியிருந்த பளிச்சிடும் சிவப்பு மயிரை விளாதிஸ்லாவ் ஆச்சரியத்துடன் பார்த்தான்.

"மனிதர்களைவிட, பறவைகளையும் மிருகங்களையுமே இவர்கள் அதிகமாக ஒத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்" என்றான்.

"நாமும்தாம் பெரிதும் குரங்குகளைப்போல் இருக்கிறோம். குறை சொல்வது பாவம். ஆ யூங்கோ வீக்தரோ இங்கு இல்லாமல் போனார்களே. இந்த ஆளைக் கவனமாகப் பார்வையிடுவது அவர்களுக்கு நம்மைவிட அக்கறைக்கு உரியதாகவும் பயன் உள்ளதாகவும் இருந்திருக்குமே!" என்றான் காஸிமீர்.

தடுப்புக்கு மறுபுறம் இருந்தவர்களிடம் அவன் பார்வையால் அனுமதி கோரினான். அவர்கள் புரிந்துகொண்டதாக அவனுக்குத் தோன்றியது. அப்போது அவன் கருஞ்சிவப்பனை நெருங்கி அவனை ஜாக்கிரதையாக ஏற இறங்க நோட்டமிட்டு, அவன் உடம்பைத் தொட்டுப் பார்த்தான். கட்டமைப்பில் கருஞ்சிவப்பன் மனிதனை மிகவும் ஒத்திருந்தான். சாதாரண மனிதனைவிட அதிக ஒல்லியாக, நொய்ந்தவனாக, தசை வளர்ச்சி குறைந்தவனாக, அதிகக் குறுகலான மார்புக்கூடு உள்ளவனாக இருந்தான் என்பதுதான் வித்தியாசம்.

"கவனித்தாயா, இவன் உடம்பு முழுவதும் ஏதோ பூசிவிட்டது போல் இருக்கிறது. எல்லாம் மழமழப்பாக, நேராக இருக்கிறது. நமக்கு உள்ளவைபோன்ற மூட்டுக்கள் இல்லை. மார்புக்கூடு முன் எழும்பி இருக்கவில்லை. இடை தென்படவில்லை. இதோ பார், கைகளும் கால்களும் எப்படி ஒரு சீராக, எங்கும் ஒரே மாதிரியாக குழல்போல் இருக்கின்றன! இவை எங்கே மடங்குகின்றன என்பது கூடத் தெரியவில்லை." - இப்படிச் சொல்லிக் கருஞ்சிவப்பனின் கையை மடக்கினான். அவன் எதிர்ப்பின்றிக் கீழ்ப்படிந்தான்... "ஆகா, பார்த்தாயா, நம் கைகள் மடங்கும் அதே இடத்தில்தான், கிட்டதட்ட. ஆனால் தெரியவில்லை. நல்லவேளையாக இவர்கள் நம்மை விண்காப்பு உடைகள் அணிந்த நிலையில்தான் பார்க்கிறார்கள். இல்லாவிட்டால் நாம் இவர்களுக்கு விகிருதிகளாகத் தென்பட்டிருப்போம்!" என்றான்.

"அட கிடக்கிறார்கள் இவர்கள்!'' என்று ஏளனமாக நகைத்தான் விளாதிஸ்லாவ். "வடிவழகர்கள்தான் போ. சும்மா சொல்லப்படாது. தோல் முழுவதும் கிழவர்களுடையது போலச் சுருக்கம் கண்டிருக்கிறது. அப்புறம் இந்தக் கம்பளி மயிர்... சே!" என்றான்.

காஸிமீருக்கு இது பிடிக்கவில்லை. "தத்துப்பித்தென்று உளறாதே! இது என்ன குறுகிய பார்வை! இவர்களுடைய தோல் மென்மையானது, தொட இதமானது. ரோமம் பூனைமயிர்போலப் பட்டு இழைகளை ஒத்து இருக்கிறது. அட தடவித்தான் பாரேன், விசித்திரமே!" என்றான்.

விளாதிஸ்லாவ் கருஞ்சிவப்பனின் பின் கழுத்தை ஜாக்கிரதையாகத் தடவிவிட்டுச் சட்டெனக் கையை அகற்றி விட்டான்.

"பார், அவர்கள் சிரிக்கிறார்கள்!" என்று எரிச்சலுடன் சொன்னான். தடுப்புக்கு மறுபுறம் இருந்தவர்கள் எல்லோரும் உண்மையாகவே வாயைத் திறந்து கொண்டிருந்தார்கள். "இந்த விவகாரத்தை முடி. நாம் துரிதப்படுத்தவேண்டும்" என்றான் விளாதிஸ்லாவ்.

"ஆமாம், சரிதான்" என வருத்தத்துடன் இசைந்தான் காஸிமீர். "ஆனால், விஷயம் என்ன தெரியுமா? நான் இப்போதுதான் முதல் முறை..."

"நானும் முதல் தடவையாகப் பார்க்கிறேன். இம்மாதிரி எதையும் வேறு எங்கேயும் நான் கண்டதில்லை. வா, விடை பெறுவோம்."

காஸிமீர் எழுதினான்: "நாங்கள் போகிறோம். விடை கொடுங்கள். விரைவில் திரும்பி உங்களுக்கு உதவ எல்லா வகையிலும் முயல்வோம்" தடுப்பின் மறுபுறம் இருந்தவர்கள் எல்லோரும் கைகளைத் தலைகளுக்கு மேல் உயர்த்தி, உள்ளங்கைகள் வெளிப்புறம் இருக்கும்படி அவற்றைச் சேர்த்துக் கொண்டார்கள்.

"இது பிரிவு சொல்லும் முறை" என்று தானும் அதே சைகையைச் செய்தான் காஸிமீர்.

விளாதிஸ்லாவும் கைகளைத் தலைக்கு மேல் உயர்த்தி ஒன்று சேர்த்தான்.

"இரு. இவனை என்ன செய்வது?" என்று கருஞ்சிவப்பனைச் சுட்டிக்காட்டினான். அவனோ அசையாமல் பக்கத்தில் நின்றான். "இவன் ஏன் போகமாட்டேன் என்கிறான்?" என எழுதினான் காஸிமீர்.

தடுப்புக்கு மறுபுறம் இருந்தவர்கள் கலந்தாலோசித்தார்கள். அப்புறம் கிழவன் எழுதினான்: "இவன் வேறொரு வழியாய் வரவேண்டும். அங்கே கிளேகுகள் கொன்று ஒழிக்கப்படும். நீங்கள் விரும்பினால் இவனை உடன் அழைத்துப் போகலாம். இவன் உங்களுக்கு உதவியாய் இருப்பான்."

"உடன் அழைத்துப் போவதா?" என்று வியந்தான் விளாதிஸ்லாவ்.



"அதுவும் நல்ல யோசனைதான். கிளேகுகள் இவனைப் பாதிக்க மாட்டா. இவன் முற்றிலும் கீழ்ப்படிதல் உள்ளவன், எதற்கும் அஞ்சுவதில்லை. எதனாலும் ஆச்சரியப்படுவதில்லை" என்றான் காஸிமீர்.

"நீ எப்படிக் கண்டாய்? ஒருவேளை வெளிக்குத்தான் அப்படித் தோன்றுகிறதோ என்னவோ. இவன் மனிதன் ஆயிற்றே, அல்லது மனிதன் போன்றவன் ஆயிற்றே."

"இல்லை. நாம் மறுக்கக்கூடாது!" என்று உறுதியாய்ச் சொன்னான் காஸிமீர். "நமக்கு என்ன நேருமோ, யார் கண்டது? எல்லோருமே நோய்ப்பட்டாலும் படலாம்."

"அப்போது இவன் என்னத்திற்கு ஆவான்?"

"அப்போது சரிதான்... ஆனால் எல்லோரும் நோய்ப்பட்டு விட்டால் இவன் பயன்படுவான். நீ ஒருவன் மட்டும் நலத்துடன் இருந்தாலும் போதும்."

"நீ சொல்வது சரியாய் இருக்கலாம்" என்று சிந்தனையுடன் முணுமுணுத்தான் விளாதிஸ்லாவ். "இவர்கள் உதவியை எதிர்பார்க்கிறார்கள்... நாம் இசைகிறோம் என்று சொல்லு. இவனை என்ன செய்வது என்பதுதான் எனக்கு விளங்கவில்லை. இவனுக்கு எழுதப்படிக்க வருமா, பொதுவாக என்ன தெரியும் என்று கேள்."

அவனுக்கு எழுதப் படிக்க வரும் என்றும் சிக்கலற்ற எந்த வேலைக்கும் அவனைப் பழக்கமுடியும் என்றும் அவன் நினைவு வைத்துக்கொண்டு கீழ்ப்படிவான் என்றும் பதில் கிடைத்தது. அவன் பெயர் ஈன்னி. சாப்பிடவும் பருகவும் வேலை செய்யவும் தூங்கவும் அவனுக்கு உத்தரவிட வேண்டும். இல்லாவிட்டால் எப்போது என்ன செய்யவேண்டும் என அவன் அறியான். எனவே அவன் பட்டினியால் சாகக்கூடும் என்று தெரிவிக்கப்பட்டது.

"இவனுக்கு என்ன உணவு கொடுப்பதாம்?"என்று திகைப்புடன் கேட்டான் விளாதிஸ்லாவ்.

"இதை நடப்பில்தான் தெரிந்துகொள்ளவேண்டும் என்று நினைக்கிறேன்" என்று பெருமூச்சுவிட்டான் காஸிமீர். "ஆம், இந்த வேலை சுளுவல்லதான், ஆனால் துணிந்து மேற்கொள்ளத் தக்கது. தவிர, பூமியில் இவன் குணமாக்கப்படலாம்" என்றான்.

"அப்போது இவன் பயத்தாலேயே உயிரைவிட்டுவிடுவான்.

வேற்று உலகில் சுய உணர்வுக்கு வருவான்... சரி, போவோம் வா!" என்றான் விளாதிஸ்லாவ்.

தரைக்கீழ் வாழ்வோரிடம் அவர்கள் இன்னொரு தடவை விடை பெற்றுக்கொண்டார்கள். கிழவன் ஏதோ கத்தி, கையை வீசி ஆட்டினான். கருஞ்சிவப்பன் சைகையால் இசைவு தெரிவித்து விட்டு விண்வெளி விமானிகளைத் தொடர்ந்தான்.

"இவன் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை, கவனித்தாயா? இவனுக்கு எல்லாம் ஒன்றுதான். எப்படியிருக்கிறது?" என்றான் விளாதிஸ்லாவ்.

அவர்கள் வெற்று நகரின் பளிச்சிடும் திருகு வளை பாதை வழியே மீண்டும் வளைந்து வளைந்து சென்றார்கள். ரோஜாச் சிவப்பும் கருஞ்சிவப்புமான மரக்கிளைகள் சலசலத்தன. ஜீப்பின் கண்ணாடிகளைப் பிறாண்டின, காப்பாற்றும்படி மௌனமாக வேண்டிக்கொண்டு அதில் ஒட்டிக்கொள்பவைபோலத் தோற்றம் அளித்தன.

"விளாதிஸ்லாவ், எனக்கென்னவோ நாம் இவர்களைச் சங்கடத்தில் தவிக்க விட்டுவிட்டு ஓடுவதாகத் தோன்றுகிறது. இப்படி நினைப்பது அசட்டுத்தனம்தான். இருந்தாலும்..." என்று இழுத்தான் காஸிமீர்.

"சந்தேகம் இல்லாமல் அசட்டுத்தனம். இதில் 'இருந்தாலும்' என்பதற்கே இடம் இல்லை. இது நூலகம் போலிருக்கிறதே. இறங்கிப் பார்ப்போமா?" என்று கேட்டான் விளாதிஸ்லாவ்.

தங்கநிற வட்டவடிவக் கட்டிடம், படிப்படியாகக் குறுகியவாறு மேல்நோக்கிச் சென்றிருந்தது. எல்லாவற்றுக்கும் உயரே இருந்த வட்ட மேடைமீது ஒன்றில் ஒன்று கோர்த்த மூன்று பல்வண்ண வளையங்கள் ஒளிர்ந்தன.

"உபயோகமான நூல் எதுவும் எடுத்த எடுப்பில் அனாயசமாக எனக்குக் கிடைத்துவிடாது. போன தடவை நான் கைக்கு வந்த சில நூல்களை எடுத்து, அதிக விளக்கப்படங்கள் உள்ளவையாகப் பொறுக்கிக்கொண்டேன், அவ்வளவுதான்" என்றான் காஸிமீர்.

"இந்த... ஈன்னியைக் கூட அழைத்துப் போ."

"அதுவும் சரியான யோசனைதான்!" என்று ஆமோதித்தான் காஸிமீர். அவனுக்கு ஓரளவு உற்சாகம் வந்துவிட்டது. தன்னந்தனியே போக அவன் விரும்பவில்லை என்பது தெரிந்தது.



"ஈன்னி!" என்று அழைத்தான். .

ஈன்னி பணிவாக ஜீப்பிலிருந்து இறங்கிக் காஸிமீரின் பின்னே நடந்தான். குழல்கள் போன்று ஒருசீராயிருந்த அவனுடைய கால்கள் நடுவில் எங்கோ மடங்குவதை விளாதிஸ்லாவ் கவனித்தான். ஈன்னி இதோ முறிந்து விழுந்துவிடுவான் என்று அவனுக்குத் தோன்றியது. ஈன்னியோ, கட்டிடத்தைச் சுற்றி அமைந்திருந்த படிகளில் காஸிமீரின் பின்னே ஏறி முட்டை வடிவான சுழல்கதவின் மறுபுறம் மறைந்துவிட்டான்.

விளாதிஸ்லாவ் சுற்றுமுற்றும் கண்ணோட்டினான். இந்த வேற்று உலகில் முதன்முறையாக அவன் தனியனாய் நின்றான் - வழக்கமாக அவர்கள் பாதுகாப்பின் பொருட்டு இணை சேர்ந்தே செல்வார்கள். நிசப்தமாக, முற்றிலும் சந்தடியின்றி, கதகதப்பாக இருந்தது. வானம் முழுதும் ஒளிபுகக் கூடியதாக, அனேகமாய் நிறமற்றதாகக் காட்சி தந்தது. தொடுவானின் அருகே ஓரங்களில் மட்டுமே பளிச்சிடும் பச்சை நிறம் அடர்ந்திருந்தது. விளாதிஸ்லாவ் ஜீப்பின்மேல் சாய்ந்து கொண்டான். உறுதியான, நம்பகமான எஃகுத் தகட்டை முதுகால் தொடும் உணர்ச்சி இதமாய் இருந்தது. நூலகத்தை அகன்ற மேகலை போன்று சூழ்ந்திருந்த தளதளப்பான செம்புதர்களையும் சதுக்கத்தின் மருங்கில் இருந்த மழமழப்பான வளைவுள்ள ரோஜா-ஆரஞ்சு நிறக் கட்டிடங்களையும் அவன் நோக்கினான். கூரிய பறவை முகங்களும் பெரிய விழிகளும் கொண்ட ஜீவர்கள், வெளிச்சத்தில் நடமாடும் பழக்கத்தை இழந்து தரைக்கு அடியில் வளைய வருவதையும், தாங்கள் உயிருடன் அடக்கம் செய்யப்பட்டுவிட்ட விசாலமான சவப்பெட்டியின் மூடிபோன்று மேலே கவிந்துள்ள வளை விட்டங்களின் கனத்தை இடைவிடாது உணர்ந்த வண்ணம் காலங்கழிப்பதையும் கண்முன்னே காண்பதுபோல அவனுக்குப் பிரமை உண்டாயிற்று. "இது நாசமாய்ப் போக! இப்போது அதைப் பற்றி நினைப்பதில் என்ன அர்த்தம்? சீக்கிரம் பூமிக்குத் திரும்பி, இங்கே உதவி அனுப்பவேண்டும். அவ்வளவுதான்... நினைத்து மாய்வதில் என்ன அர்த்தம்?" என்று எரிச்சலுடன் தனக்குள் சொல்லிக்கொண்டான்.

வீக்தர் ஒதுக்கறைக் கதவை நோட்டமிட்டான்.

"இவனை நேரே துவலைக்குழாய் அறைக்கு இட்டுப்போ. இந்தத் தொளதொளா மேலங்கியையும் காலணிகளையும் தொற்று நீக்கம் செய்து காற்றுப் புகாத அலமாரிக்குள் வைத்துப் பூட்டு. நம்

உடைகள், காலணிகளில் தக்கவற்றைப் பொறுக்கி இவனுக்கு அணிவி. இவன் மிகவும் ஒல்லி, உயரமற்றவன், ஆகையால் நம் உடைகள் எல்லாமே இவனுக்குத் தொளதொள என்றுதான் இருக்கும்... இப்போதைக்கு இவனை உன் அறையில் தங்கவை. மொழி கற்பி, நம் விருப்பப்படி செய்யப் பயிற்று. என் அறைக்கு நீயே வா." - அவன் மறுபடி கதவுப் பக்கம் பார்த்தான். யூங்குக்கு இங்கே எட்டிப் பார்க்கும் எண்ணமே வராது. அவன் நோய் முற்றிவிட்டது. தலானவ்தான்... மொத்தத்தில் இவனை அவர்கள் பார்க்கக்கூடாது, புரிகிறதா?..." என்றான்.

"நீ மட்டும் பார்க்கலாமோ?" என்று அவனை நோக்கியவாறு எண்ணமிட்டான் காஸிமீர். வீக்தரின் கண்கள் கோணலாகப் பார்த்தன. எல்லா நோயாளிகளிடமும் காணப்பட்ட அதே நீலம் பாரித்த வெளிறல் அவன் முகத்திலும் படர்ந்திருந்தது.

"என்ன பார்க்கிறாய்? நன்றாயிருக்கிறதா என் முகம்?" என்று கோணலாக முறுவலித்தான் வீக்தர்.

"உனக்கும் வந்துவிட்டதா?..."

"எனக்குந்தான், எனக்குந்தான்!" என்று வெடுக்கெனக் கூறினான் வீக்தர். பின்பு அமைதி அடைந்து நிதானமாகச் சொன்னான்: "எனக்கு வந்திருப்பது கடுமை குறைந்த வகை போல் இருக்கிறது. எனெர்ஜின் உட்கொண்டு நான் தாக்குப்பிடிப்பேன். யூங் இப்போது எனக்கு உதவமுடியும். அவன் முன்போலவே கச்சிதமாக வேலை செய்கிறான், எல்லாவற்றையும் நினைவு வைத்திருக்கிறான். இங்கே அவன் தொடங்கிய குறிப்புக்களைச் சீர்படுத்தக்கூட அவன் ஆரம்பித்துவிட்டான்."

"அப்படியா? இது மிகவும் நல்லதாயிற்றே!" என்று வியப்புடன் கூறினான் காஸிமீர்.

"நல்லதுதான்... விஷயம் என்ன என்றால், நான் சொன்னேன், அவன் அதன்படி செய்தான் என்பதுதான். இல்லாவிட்டால் அவனாக இதைச் சிந்தித்திருக்கவே மாட்டான். அவனது தொழில் முறைத் திறமைகளுக்கு ஒரு தீங்கும் நேரவில்லை என்று காண்கிறது. அவன் செய்ததை நான் மேற்பார்த்தேன். நல்ல வேகத்துடன், கச்சிதமாக, முன்யோசனையோடு வேலை செய்கிறான். ஆனால் இதில் அவனுக்கு அக்கறை எதுவும் இல்லை. சொன்னால் வேலை செய்வான், சொல்லாவிட்டால் கைகளைக் கட்டிக்கொண்டு குந்தியிருப்பான். 'சாப்பிடு!' என்று சொல்லா



விட்டால் பட்டினி கிடப்பான்."

"ஆம், அதே நோய்க் குறிகள்..." காஸிமீரின் தொண்டை வறண்டுவிட்டது. எச்சிலை விழுங்கினான்.

"மிக விசித்திரமான நோய். உன் 'லிங்' எப்போது வேலையை முடிக்கும்?"

"சீக்கிரம்" என்று கடிகாரத்தைப் பார்த்தான் காஸிமீர். "இதோ நான் புதியவனைக் குளிப்பாட்டிப் புத்துடை அணிவிக்கிறேன், அதற்குள் 'லிங்' எல்லாவற்றையும் தயாராக்கி வைத்திருக்கும். அதாவது முக்கியமானவற்றை. விளங்காத இடங்களை நான் சரிபார்த்துத் திருத்துவேன். அப்புறம் படிக்கமுடியும். நானும் ஸினாதிஸ்லாவும் பாதிப் புத்தகம் படித்ததும் உன்னிடம் எடுத்து வருகிறேன். ஆமாம், தலானவ் எப்படி இருக்கிறான்? ரொம்ப வேதனைப்படுகிறானோ?"

"அவன் அதிக நேரம் உறங்கும்படி செய்ய நான் முயன்று வருகிறேன். நல்லவேளை, மின் தூக்கப்பொறி இருக்கிறது. உணவு கொடுப்பதற்காக மட்டுமே அவனை எழுப்புகிறேன். மொத்தத்தில் அவன் உடல்நிலை மோசமே. கண் அனேகமாகத் தெரியவில்லை. தட்டித் தடவி நடக்கிறான். நான் நடமாடும்போது கண்களை மூடிக்கொள்கிறான். தன் உடம்பின் வலது பாதி உலர்ந்து எடை அற்றது ஆகிவிட்டதாகச் சொல்லுகிறான். தனக்கு உள்ளே யாரோ உட்கார்ந்திருப்பதாக அவனும் உணர்கிறான். இது நோய் என்பது அவனுக்கு நன்றாகப் புரிகிறது. ஆனாலும் அதனால் ஆறுதல் எதுவும் கிடைத்துவிடாது என்று உறுதியாய்ச் சொல்லுகிறேன்." வீக்தர் புன்னகை செய்ய வலிந்து முயன்றான். "நல்லது, போ... நூலை ஆவலாக எதிர்பார்க்கிறேன்." என்றான்.

"போவோம்!" என்று ஈன்னியைப் பார்த்துக் கூறினான் காஸிமீர். "இவனுக்குப் புரியவில்லை. இவர்களுடைய சொற்களை எப்படி உச்சரிப்பது என்று எனக்குத் தெரியவில்லை. ஊம், சரிதான்."

அவன் சட்டெனக் கையை ஆட்டினான். ஈன்னி பணிவுடன் எழுந்தான்.

"அரைமணி நேரமாக இங்கே உட்கார்ந்திருக்கிறான், ஆனாலும் ஒரு தரங்கூட அக்கம் பக்கம் கண்ணோட்டவில்லை. இவனுக்கு எதிலும் அக்கறை இல்லை. எல்லாம் அப்படியே யூங் போலவே... எனக்கும் கிட்டதட்ட இதே போன்ற அசட்டை உண்டாகத் தொடங்குகிறது. இவனைப் பார்க்கையில், இவனுடன்

எப்படிப் பழகுவது, இவனால் என்ன உதவி செய்ய முடியும் என்றே எண்ணமிடுகிறேன். சிறிது காலம் முன்போ, வேறொரு கிரகத்தின் அறிவுள்ள வாசியைக் காண்கிறோம் என்ற உணர்ச்சியால் களிவெறிகொண்டு துள்ளியிருப்பேன்... இல்லை, மொத்தத்தில் இப்போதும் நான் மகிழ்கிறேன். களைத்துப் போய் விட்டேன், அவ்வளவுதான். போ, போ, காஸிமீர். நேரத்தை வீணாக்காதே" என்றான் வீக்தர்.

அவர்கள் வெளியே போனபின் வீக்தர் இடைச்சுவரை ஆதரவாகப் பற்றியவாறு ஒதுக்கறை சென்று எனெர்ஜின் மாத்திரையை எடுத்துக்கொண்டான். மாத்திரையைக் கையில் வைத்தவாறு உட்கார்ந்தான். "இன்னும் கொஞ்ச நேரம் பொறுக்கிறேன். எனெர்ஜின் இல்லாவிட்டால் என்ன நேரும் என்று பார்க்கவேண்டும்" என்று சொல்லிக்கொண்டான். கண்களை மூடி, இடைச் சுவர்மேல் சாய்ந்தான். "நோய்க் குறிகள் அவையேதாம்... எல்லாம் ஒத்திருக்கின்றன. அப்படியானால் வேறுபாடு எனெர்ஜினின் விளைவுதானா? என் உடம்பு அதை அதிக முழுமையாக ஏற்கிறது என்று கொள்வதா? அப்படியானால்... அப்படியானால் என் அண்மை வருங்காலம் இதுதான்... யூங்கும் இந்தப் பேதை ஈன்னியும்... வேண்டாம், எனக்கு வேண்டாம்!" என்று அவன் அனேகமாக வாய்விட்டுக் கத்தி, கண்களைத் திறந்தான். "மறுபடி இந்தப் பாழாய்ப்போகிற பலநிறப் பனிமூட்டம்... ஒன்றுமே கண்ணுக்குத் தெரியவில்லை... தலானவ் அசைகிறான் போலிருக்கிறதே..."

வீக்தர் பரபரப்புடன் எனெர்ஜின் மாத்திரையை விழுங்கினான். வேறு யாரோ ஒருவன் தன் கையை உயர்த்தி, வாயருகே கொண்டு போனது போலவும், தன் உடம்பின்மேல் ஆட்சி செலுத்திய எவனோ ஒருவன் மாத்திரையை விழுங்கியதுபோலவும், தான் உடம்பிலிருந்து தனியாக ஒருபுறம் ஒதுங்கியிருப்பது போலவும், லேசாக, எடை அற்றவனாக, முற்றிலும் திராணி அற்றவனாக மாறிவிட்டது போலவும் அவனுக்கு விந்தையான, அச்சமூட்டும் உணர்ச்சி ஏற்பட்டது.

"வீக்தர்! நீ எங்கே இருக்கிறாய், வீக்தர்? என் கண்களுக்கு நீ தெரியவில்லையே" என்று குரல் கொடுத்தான் தலானவ்.

வீக்தர் எழுந்திருக்க முயன்றான், ஆனால் அவனால் முடியவில்லை. அறைச் சுவர் தன் முன்னே நெருக்கமாய் நிற்பது போலவும் தான் எழுந்து நின்றால் சுவற்றுக்குள் போய்விடுவான்



போலவும் அவனுக்குத் தோன்றியது. தனக்குக் கால்களே இல்லை போல அவனுக்குப் பட்டது. ஒன்றும் பார்வைக்குத் தென்படாவிடினும், யூங் உட்கார்ந்திருக்க வேண்டிய பக்கம் திரும்பி, தன் மீந்த சக்தியை எல்லாம் ஈடுபடுத்தி, "யூங், தலானவிடம் போய் அவனைக் கவனித்துக்கொள். என்னால் இப்போது முடியாது" என்றான்.

யூங் எழுந்திருந்ததை அவன் பார்வையால் அன்றி ஊகத்தால் கண்டுகொண்டான். தாரைகளாகப் பெருகிச் செல்லும் வரைகள் கொண்ட கரிய நீள்வட்டப் புள்ளி ஒன்று அறையில் மண்டியிருந்த பல்வண்ணப் பனிமூட்டத்தின் நடுவே மிதந்து வந்து வீக்தரை ஊடுருவிச் சென்றது. அவன் கண்களைச் சுரித்து, இருக்கையின் முதுகில் தடாலெனச் சாய்ந்தான். "என்ன ஆகும்? நானும் கதியற்றவன் ஆகிவிடுவேனோ?" என்று எண்ணமிட்டான்.

"வீக்தர், நீ ஏன் வரவில்லை? இவன் யூங் அல்லவா? உனக்கு என்ன நேர்ந்தது?" என்று கலவரத்துடன் வினவினான் தலானவ்.

"இதோ, ஒரு நொடியில் வந்துவிடுகிறேன். எல்லாம் நலம். நான் ஊசிக் குழாயைத் தயார் செய்கிறேன்" என்றான் வீக்தர்.

விழிகளைத் திறக்கவே அவன் அஞ்சினான். ஆனால், திறந்ததும் அப்பாடா என்று பெருமூச்சுவிட்டான். எனெர்ஜின் அதற்குள் வேலை செய்யத் தொடங்கிவிட்டது. எல்லாப் பொருள்களும் துலக்கமாக, நிலைத்தவையாக, நம்பகமானவையாகத் தென்படலாயின. உள்ளே இருந்தவன் அகன்றுவிடவில்லைதான், எனினும் ஆழத்தில் போய் மறைந்துகொண்டான் போலிருந்தது. வீக்தர் எழுந்து தலானவிடம் சென்றான். கைவிரல்களை அசைத்து, தலையைக் குலுக்கியவாறு இன்பத்துடன் நடந்தான். சுற்றும் உள்ள நிறமற்று வெளிறிய பொருள்கள் மீண்டும் உரிய வண்ணங்கள் பெறுவதைக் கண்ணுற்றான். நோய் மீண்டும் பின்வாங்கிவிட்டது என்பதைப் புரிந்து கொண்டான். தன்னால் அதை எதிர்த்துப் போராட முடியும், போதிய வலு இருக்கும்வரை தான் அவ்வாறு போராடி ஆகவேண்டும் என்று உறுதி பூண்டான். "அதோடு, போதிய அளவு எனெர்ஜின் மாத்திரைகள் இருக்கும்வரை" என்று கைப்புடன் ஏளனப் புன்னகை செய்தான் வீக்தர்.

"வீக்தர், நீயும் நோய்ப்பட்டுவிட்டாயா? இது உன் கைதானே? இது என் கை, அல்லவா? உனக்கு உடம்பு சரியாய் இல்லையா?"

என்று வீக்தரின் கையைப் பற்றி, கலவரத்துடன் தொட்டுப் பார்த்தவாறு கேட்டான் தலானவ்.

"நான் நோய்ப்படவில்லை. கொஞ்சம் களைத்துப்போனேன். அவ்வளவுதான்" என்று அமைதியும் அன்பும் ததும்பக் கூறினான் வீக்தர்.

அவன் தலானவின் கையைப் பிடித்து கிளர்ச்சியுடன் விரைவாக அடித்த நாடித் துடிப்பைக் கணக்கிட்டவாறே அவனது முகத்தை உற்றுப்பார்த்தான். உயர்ந்த நெற்றியும் அகன்ற தாடைகளும் சித்த உறுதியைக் காட்டும் பெரிய வாயும் ஆழத்தில் பதிந்த பழுப்பு விழிகளும் கொண்டது அந்த முகம். முன் ஒரு காலத்தில் மாபெரும் புரட்சியை நிறைவேற்றி, வெளிநாட்டினரின் ஆக்கிரமிப்பை முறியடித்து, உலகிலேயே முதலாவது சோஷலிஸ அரசுக்கு அடிக்கல் நாட்டிய இனத்தைச் சேர்ந்த ருஷ்யத் தொழிலாளிப் புரட்சி வீரனைத் தலானவ் ஒத்திருப்பதாக வீக்தர் எப்போதும் கருதிவந்தான். ஒருமுறை அவன் தலானவிடமே இதைச் சொன்னான். தலானவுக்கு உச்சி குளிர்ந்துவிட்டது. அவன் பேசாமல் புன்னகை செய்தான்.

இப்போதோ, பார்வை இன்றிக் கோணிய விழிகளால் அவன் முகத்தை நோக்க முயன்றவாறு, "இது மெய்தானா, வீக்தர்? யூங்குக்கு என்ன நேர்ந்தது? அவன் ஏன் பேசாதிருந்தான்?" என்று கேட்டான் தலானவ்.

"நாளையே நீயும் இதில் அக்கறை கொள்வதை நிறுத்திவிடுவாய். நாளை உனக்கு எல்லாம் தென்படும், எல்லாம் புரியும். ஆனால் எதைப் பற்றியும் நீ கேட்கமாட்டாய்..." என்று மனக்கசப்புடன் நினைத்துக்கொண்டான் வீக்தர்.

"நான் உடல் நலத்தோடுதான் இருக்கிறேன். முற்றிலும். நீங்கள் கவலைப்படாதீர்கள். யூங் படிப்படியாக குணமடைந்து வருகிறான். உங்கள் நிலைமைதான் அவனுக்குக் கலவரம் அளிக்கிறது. நீங்கள் சீக்கிரம் குணம் அடைய வேண்டும் என்று நாங்கள் எல்லோரும் விரும்புகிறோம்" என்றான்.

"குணம் அடைய முடியுமா?" என்று நம்பிக்கையும் கலவரமும் தொனிக்கக் கேட்டான் தலானவ். "வீக்தர், எனக்கு எனெர்ஜின் மாத்திரை கொடு. நான் சுற்றும் பார்த்து, என்ன, எப்படி என்று உருவகப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன். யூங்கையும் பார்க்க ஆசைப்படுகிறேன்" என்றான்.



"அதனாலேயேதான் உனக்கு எனெர்ஜின் மாத்திரை கொடுக்க மாட்டேன்" என்று நினைத்துக் கொண்டான் வீக்தர்.

"எனெர்ஜின் இந்த நோயின் போக்கை நீட்டிச் சிக்கலாக்குகிறது என்று நான் திண்ணமாகத் தெரிந்துகொண்டேன். பொறுத்துக் கொள்வதே மேல். நீங்கள் சாப்பிடுங்கள். பின்பு நான் மின்தூக்கப் பொறியை இயக்குகிறேன். இன்னும் நிறையத் தூங்குவது உங்களுக்கு நல்லது" என்று மென்மையாகக் கூறினான்.

"நல்லது, நீ என்னைவிட நன்றாக அறிவாய்" என்று பணிவும் சோர்வும் தோன்ற இணங்கினான் தலானவ். நாளைக்கு இவன் இப்படியே பணிபவன் ஆகிவிடுவான் என்று எண்ணியபோது வீக்தருக்கு நெஞ்சு கனத்தது. "நீ அருமையான பையன், வீக்தர். பறப்பில் உன்னைச் சேர்த்துக்கொண்டதற்கு மகிழ்கிறேன். இது அசட்டுத்தனம் - மகிழ்வதற்கு இங்கே என்ன இருக்கிறது?... விளாதிஸ்லாவ்? காஸிமீர்? அவர்கள் எப்படி இருக்கிறார்கள்?" எனத் திடீரென்று கலவரத்துடன் கேட்டான் தலானவ்.

"அவர்கள் முற்றிலும் ஆரோக்கியமாய் இருக்கிறார்கள்" என்று உறுதியாகச் சொன்னான் வீக்தர். இந்தத் தடவையாவது பொய் சொல்லவேண்டி வரவில்லை என்பது அவனுக்கு மகிழ்ச்சி அளித்தது.

தலானவ் உட்கார்ந்து கண்களை மூடிக்கொண்டான்.

"நான் ஒருவேளை எல்லாவற்றையும் குழப்பிக் கொண்டிருக்கிறேன். நான் நோய்ப்பட்டு வெகுநாட்கள் ஆயினவா?" என்று தணிந்த குரலில் வினவினான்.

"நேற்று முதல். இன்று இரண்டாம் நாள்."

"இந்த... தரைக்கடியில் வாழ்கிறார்களே, அவர்களிடம் நீங்கள் மறுபடி போனீர்களா?"

"ஆமாம் காஸிமீரும் விளாதிஸ்லாவும் போனார்கள். ஒரு புத்தகத்தைக் கொண்டுவந்திருக்கிறார்கள். 'லிங்' இயந்திரம் அதைப் படித்துக் கொண்டிருக்கிறது. அப்புறம் நாமும் படிப்போம். கிளேகுகள் பற்றிய எல்லா விவரங்களும் இந்தப் புத்தகத்தில் உள்ளன. கிளேகுகள் என்பவை நச்சுக்கிருமிகள். அவைதாம் இந்த நோயை உண்டாக்குகின்றன."

"அப்படியா... இவற்றிடமிருந்துதான் அவர்கள் ஒளிந்து கொண்டிருக்கிறார்களா? நான் தூங்குவதே நல்லது, வீக்தர்.

எனக்கு உடம்பு மிகவும் மோசமாய் இருக்கிறது" என்று முணுமுணுத்தான் தலானவ்.

"அதாவது அவர்களேதான் இதைத் திட்டமிட்டுச் செய்தார்களாமா? தாங்களே கிளேகுகளைத் தங்கள் மேல் ஏவிவிட்டுக்கொண்டு, அவற்றுக்கு அஞ்சித் தரைக்கு அடியில் வாழ்கிறார்களாமா? சூழ்ச்சிக்காரர்கள்!" என்றான் விளாதிஸ்லாவ்.

"ஆம். தங்கள் பயங்கரச் சோதனைக் கூடங்களில் கிளேகுகளை உற்பத்தி செய்து, ஊட்டி வளர்த்து, மனித உடலில் என்ன செய்ய வேண்டும், எங்கே குடிபுக வேண்டும் என்று அவற்றுக்குப் போதித்துப் பயிற்றினார்களாம். கிளேகுகளைப் பழக்கப்படுத்தி இணங்கவைத்தாகிவிட்டது என எண்ணி, குப்பியிலிருந்து பேயை வெளியே விடுவதுபோல அவற்றை வெளியே விட்டுவிட்டார்களாம்!"

"தடுப்பு மருந்து? தடுப்பு மருந்து தயாரிக்கப்பட்டதாகப் புத்தகத்தில் எழுதியிருக்கிறதே!"

"மேலே படி. தொடக்கத்தில் எல்லாம் அவர்கள் விரும்பிய படியே நடந்ததாம். தானியங்கி-அடிமைகள் கூட்டம் உருவாயிற்றாம். இந்த அடிமைகள் கொஞ்சம் மெதுவாக வேலை செய்தார்களாம், கொஞ்சம் குறைந்த காலம் உயிர் வாழ்ந்தார்களாம். ஆனால் தன்னிச்சை அற்றவர்களாக, எதற்கும் கீழ்ப்படிபவர்களாக இருந்தார்களாம். கோபமோ வியப்போ அவர்களுக்கு ஒருபோதும் உண்டாகவில்லையாம். தங்களுக்குக் கஷ்டமாய் இருப்பதாக அவர்கள் குறை சொல்லவே இல்லையாம். சோர்ந்து விழும்வரை உழைத்தார்களாம். இன்பப் பொழுதுபோக்கோ, இயற்கையோ, காதலோ அவர்களுக்குத் தேவைப்படவே இல்லையாம்! ஆதர்ச அடிமைகள்! வேண்டாம், விளாதிஸ்லாவ், என் கிட்டே நெருங்காதே! முகமூடியையும் கழற்றாதே! நீ ஈன்னியைப் பார்த்தாய் அல்லவா? என்ன நேரும் என்பது தெரிகிறதா? நாங்கள் எல்லோரும் உன்னையே நம்பியிருக்கிறோம்!"

"சரி, மேலே சொல்லு. இங்கே இந்த நோயின் நீண்ட வருணனை காணப்படுகிறது. இது இல்லாமலே இப்போது நான் போதிய அளவு அறிவேன். விவரங்களை வீக்தர் வேண்டுமானால் தெரிந்துகொள்ளட்டும். உரக்கப்படி."

"இதோ படிக்கிறேன். இல்லை, நானும் 'லிங்'கும் சேர்ந்து இங்கே ஒரே சேறாய்க் குழப்பியிருக்கிறோம். இதைப் படிப்பதைவிட நானே விவரிக்கிறேன். சோதனைக் கூடங்களிலிருந்து விடுபட்டதும் கிளேகுகள் பல்கிப் பெருகி, பயின்ற பண்புகளை இழந்து, தடுப்பு மருந்தை அலட்சியம் செய்யத் தொடங்கிவிட்டனவாம். அதாவது அவர்கள் இப்படி எழுதுகிறார்கள். உண்மையில் தடுப்பு மருந்து அவர்கள் கணக்கிட்டதைவிட மிகக் குறைந்த காலத்துக்கே தொற்றுக் காப்பு அளித்தது. அதனால்தான் ஆளுவோர் தங்களுக்கு கிளேகுகளை உற்பத்தி செய்துதந்த விஞ்ஞானிகளை அவ்வளவு விலங்குத்தனமாகத் தண்டித்திருக்கிறார்கள்."



"எப்படி? பொறு, நான் இந்தப் பகுதியைப் படித்து முடிக்கவில்லை!"

"கிழவனின் கடிதத்தை நீ படிக்காமல் விட்டுவிட்டாய். இந்தப் புத்தகம் - அரசாங்கத்தால் தடைவிதிக்கப்பட்ட இரகசியப் புத்தகம் - எவ்வாறு இயற்றப்பட்டது என்று அவன் விவரிக்கிறான். கிளேகுகள் பற்றிய சோதனைகள் நடத்திய எல்லா விஞ்ஞானிகளும் காற்று புகாதவாறு அடைக்கக்கூடிய அறைக்குள் சிறை வைக்கப்பட்டார்களாம். கொடிய அபாயம் விளைவிக்கும் அளவுக்கு கிளேகுகள் அந்த அறைக்குள் விடப்பட்டனவாம். பிறகு அறையை மூடி, விஞ்ஞானிகளை மூன்று-நான்கு மணி நேரம் அதற்குள் வைத்திருந்தார்களாம். தூய காற்று போதாமையால் அவர்களுக்கு மூச்சுமுட்டத் தொடங்கியதாம். விஞ்ஞானிகளுக்கு விஷயம் என்ன என்று தெரியாதாம். தங்கள் மூச்சை நெரித்துக்கொல்ல முயற்சி நடப்பதாக எண்ணி அவர்கள் அறைக் கதவை இடித்தார்களாம். அப்போது அவர்கள் வெளியே விடப்பட்டார்களாம். அவர்கள் எல்லோருமே கிளேகன்னிகள்- ஈன்னி போன்றவர்கள் இவ்வாறு அழைக்கப்படுகிறார்கள் - ஆகிவிட்டார்களாம். அவர்கள் ஆளுவோரிடம் சாதாரணப் பணியாளர்கள்போல் தொண்டு புரியும்படி நிர்ப்பந்திக்கப்பட்டார்களாம். மற்றவர்களின் சித்தத்தை எதிர்க்கும் திறனைத்தான் அவர்கள் முற்றிலும் இழந்து விட்டார்களே. ஆனால் எல்லாவற்றையும் அவர்கள் புரிந்து கொள்கிறார்கள், நினைவு வைத்திருக்கிறார்கள். துக்கப்படும் தன்மையையும் அவர்கள் இழந்துவிட்டார்கள் என்பது உண்மையே இருந்தாலும்..."

"என்ன கோரம்!" என்றான் விளாதிஸ்லாவ்.

"ஆயிற்றா. அவர்களில் ஒருவன் இந்தப் புத்தகத்தை எழுதினானாம். விஞ்ஞானிகள் - தண்டனைக்கு உள்ளானவர்கள் அல்ல, வேறு விஞ்ஞானிகள் - அவனை இரகசியமாகக் கடத்திச் சென்று மறைத்துவிட்டு, அவன் மடிந்துபோனதாகத் தெரிவித்து விட்டு, அவன் வெளித் தோற்றத்தை மாற்றிவிட்டார்களாம். அவன் இந்த நூலை எழுதும்படி அவர்கள்தாம் செய்தார்களாம். அவன் இந்த வரலாறு முழுவதையும் நன்கு அறிந்திருந்தானாம். நினைவு வைத்திருந்தானாம்."

"எனக்கு என்னமாய் வருகிறது தெரியுமா?" என்று தலையை அசைத்தான் விளாதிஸ்லாவ். "இந்த ஆளுக்கு உணர்ச்சிகளே அற்றுப்போய் விட்டன என்று தெரிகிறது. இதெல்லாம் தனிப்பட்ட முறையில் இவனைப் பற்றியவை என்று நான் எண்ணி இருக்கவே மாட்டேன்... இவன்மேல் எனக்குப் பிரமாத இரக்கம் உண்டானதாக என்னால் சொல்ல முடியாது. மக்களுக்கு எதிராக அரசாங்கம் செய்த மிகக் கொடிய தீச்செயலில் இவன் ஊக்கத்துடன் ஏதோ ஒரு வகையில் பங்காற்றியிருக்கிறான். ஆனால் இவனைப் பற்றி எண்ணவே பயங்கரமாய் இருக்கிறது. அடைத்த அறையில் உருமாற்றப்பட்ட முகத்துடன் உட்கார்ந்து அவன் எழுதுகிறான். எல்லாம் அவனுக்கு நினைவு இருக்கிறது. அனால் தனக்காகவோ அல்லது தன்னால் பாழாக்கப்பட்ட மற்றவர்களுக்காகவோ அழுவதற்குக்கூட அவனுக்குத் திறன் இல்லை. ஏராளமானவர்களை இவன் நாசம் செய்தான், அடிமைகள் ஆக்கினான், மற்றவர்களைத் தரைக்கீழ் வாழும்படி விரட்டினான். வெயிலும் காற்றும் அவர்களுக்குக் கிடைக்காத வாறு செய்தான். அச்சத்தால் இடையறாது வதைபடப் புரிந்தான் அல்லவா?"

"இதெல்லாம் மெய்தான். ஆனால் பிரச்சினையின் மறு பக்கத்யையும் பற்றி நான் சிந்தனை செய்கிறேன். இவர்கள் - அதாவது மக்கள், விஞ்ஞானிகள், ஆளுவோர் எல்லோருமே - அளவு கடந்த கிலி அடைந்துவிட்டார்கள் என்று உனக்குத் தோன்றவில்லையா? இவர்களைத் தரைக்கீழ் விரட்டியவை கிளேகுகள் அல்ல, அவர்களுடைய சொந்தத் திகில்தான் என்று நீ எண்ணவில்லையா? இவர்கள் போரிடாமலே சரண் அடைந்து விட்டார்கள்." என்றான் காஸிமீர்.

"ஒருவேளை, மக்கள் கிலி அடைவதே ஆளுவோருக்கு நலமாய் இருந்திருக்கலாம். எதிர்ப்புக் கிளர்ச்சி பற்றிய எண்ணத்தையே மக்கள் மனத்திலிருந்து அகற்றுவதற்காக ஆளுவோர் அவர்களைத் தரைக்கு அடியில் வாழும்படி திட்டமிட்டு விரட்டியிருக்கலாம் அல்லவா? கிளேகுகள் பற்றிய இந்தச் சதிகாரத் திட்டத்தைக் கைவிடுமாறு கோரி மக்கள் தொடக்கத்தில் கிளர்ச்சி செய்ததாகவும் அரசாங்க மாளிகையையே கூடத் தாக்கியதாகவும் இங்கே எழுதியிருக்கிறதே."

"ஆம் இப்படியும் கட்டாயம் நடந்திருக்கும். ஆனாலும் மக்கள் போராடியிருக்கலாம். அவர்களிடம் சக்தி இருந்தது, எங்கும் கிளைகள் உள்ள இரகசிய ஸ்தாபனம் இருந்தது என்று நீயுந்தான் படித்தாயே. அதனால்தான் ஆளுவோர் கிளேகுகளை அவசரப் பட்டுப் பிரயோகித்துவிட்டார்கள். தடுப்பு மருந்து எவ்வளவு காலத்துக்குத் தொற்றிலிருந்து காப்பு அளிக்கிறது என்பதை நடைமுறையில் சரி பார்க்க விஞ்ஞானிகளுக்கு அவர்கள் அவகாசம் அளிக்கவில்லை. புரட்சி இதோ தொடங்கிவிடும் என்று அவர்கள் அறிந்திருந்தார்கள். எனவே, மக்கள் எப்படி... அட, பேசிப் பயனென்ன? மேலே படிப்போம்."

சற்று நேரம் இருவரும் மௌனமாகப் படித்தார்கள். பின்பு விளாதிஸ்லாவ் சொன்னான்:

"கேள், காஸிமீர். எனக்கு அக்கறைக்குரிய ஓர் எண்ணம் உதயமாகியிருக்கிறது. தரைக்கு அடியில் கிளேகுகள் அவர்கள் இருக்குமிடத்தில் புகமுடியாது. புதிதாக நோய்ப்பட்டவர்கள் யாரும் இல்லை. அப்படியானால் எங்கே வாழ்கின்றன இந்த கிளேகுகள்? நான் அறிந்தவரை நச்சுக்கிருமிகள் வேற்று உடலுக்கு வெளியே உயிர்வாழ முடியாது. அவைதாம் ஒட்டுண்ணிகள் ஆயிற்றே. மக்கள் தரைக்கு அடியே செல்லுமுன் கிளேகுகள் தங்குமிடம் இல்லாதவாறு ஒழிக்கும் நோக்கத்துடன் எல்லா விலங்குகளையும் பறவைகளையும் கொன்று அழித்துவிட்டார்கள் என்று புத்தகத்தில் எழுதியிருக்கிறதே. இவ்வாறு செய்யும்படி கண்டிப்பான உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்ததாமே, இல்லையா?"

காஸிமீர் சிந்தித்தான். "ஆம்... இது என் மனத்தில் படவில்லை. இரு! கரேலின் காப்பு உடையைக் கிழித்ததே ஒரு மிருகம், அதுவோ? அது என்ன மிருகம் என்று அவர்கள் அறிந்திருந்தார்களே. ஸுன்னிமி என்று அதன் பெயரைக் கூடச் சொன்னார்களே, நினைவிருக்கிறதா? நான் புத்தகத்தை மேலெழுந்த வாரியாகத்தான் பார்த்தேன். 'லிங்' விட்டுவிட்ட வெற்றிடங்களை மட்டுமே பூர்த்தி செய்தேன். ஸுன்னிமி என்ற

இந்தச் சொல்லை எங்கே இடைப் புகுத்தினேன் என்பது நினைவில்லை. அதிலும் பல தடவைகள்." - அவன் புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டலானான். "ஆகா! இதோ.... ஊம், இது மிகவும் விந்தையான சேதி. கேள்: "ஆனால் தலைமை ஆட்சியாளரின் காதல் மனைவி..." - இவர்களிடையே பல தார மணம் வழக்கில் இருக்கிறதா என்ன? நல்லது, இந்தக் காதல் மனைவி தன் பிரியமான ஸுன்னிமியை மார்போடு அணைத்துக் கொண்டு இரவு முழுவதும் கண்ணீர் பெருக்கியவாறு இருந்தாளாம். அப்படியானால் இது பூனை போன்ற வளர்ப்புப் பிராணி போலும். அப்புறம் இந்த ஸுன்னிமி எங்கோ காணாமல் போய்விட்டதாம். அது தப்பி ஓடிவிட்டது என்று அவள் அறிவித்தாளாம். அப்புறம் இன்னும் இரண்டு மூன்று ஸுன்னிமிகள் காணாமல் போயினவாம். எல்லோரும் தரைக்கு அடியில் வாழத் தொடங்கியபோது இந்த நிலைமை அதிகமாய்ப் போனால் இரண்டொரு வாரங்களுக்கே நீடிக்கும் என்று நினைத்தார்களாம். ஆனால் கிளேகுகள் தொடர்ந்து உயிர் வாழ்கின்றன என்பது தெரியவந்ததாம். எங்கே? ஸுன்னிமிகள் உடல்களில். ஸுன்னிமிகள் காலி வீடுகளில் இடம் பிடித்துக் கொண்டு தன்னிச்சையாக வாழ்ந்து இனப்பெருக்கம் செய்யத் தொடங்கினவாம். அவை பூச்சி புழுக்களையும் தாவரங்களையுமே உணவாகக் கொள்கின்றன ஆதலால் பட்டினி அபாயம் அவற்றுக்கு இல்லையாம். கிளேகுகள் மனிதர்களுக்கு விளைவிப்பதுபோன்ற கேட்டை அவற்றுக்கு விளைவிப்பது இல்லையாம். அவற்றின் நோய் எளிதில் தீர்ந்துவிடுகிறதாம். விசேஷமான கெட்ட விளைவுகளும் ஏற்படுவது இல்லையாம். ஆனால் அவை கிளேகுகளை அழிய விடாமல் காக்கின்றனவாம். சிலர் ஸுன்னிமிகளை வேட்டையாடுவதற்காக மேலே வந்தார்களாம். ஆனால் அவை மனிதர்களைக் கண்டு அஞ்சப் பழகிவிட்டனவாம், தந்திரமாக ஒளிந்து கொண்டனவாம். போயும் போயும் கரேல் இந்த ஸுன்னிமியைப் பிடிக்க வேண்டுமா, கஷ்ட காலம்!... எப்படித்தான் அவனால் பிடிக்க முடிந்ததோ? அவை புத்திக் கூர்மையும் நுண் உணர்வும் உள்ள பிராணிகளாமே! இந்த ஸுன்னிமிகள் இப்படித் தப்பி ஓட விடப்பட்டதே எனக்கு விந்தையாகப்படுகிறது. சுற்றிலும் காவலும் கட்டுப்பாடும் ரோந்துப் படைகளும் சுகாதாரக் காப்பு அரண்களும் இருந்திருக்குமே... எல்லாக் காவல் நிலையங்களையும் காப்பு அரண்களையும் தாண்டி ஸுன்னிமிகளை வெளியே கடத்தி வந்தவர்கள் யார், எதற்காக? இந்தப் பிராணிகள் ஆடைகளுக்குள் மறைத்து வைத்துக் கொள்ளும்படி அவ்வளவு சின்னவையும் அல்லவே..."

"அப்படியானால் நீ என்ன நினைக்கிறாய்?"

"இது ஆளுவோரின் கயமை நிறைந்த சூழ்ச்சி என்று நினைக்கிறேன். மக்களைத் தரைக்கு அடியில் அதிகக் காலம் வைத்திருக்க அவர்கள் விரும்பியிருக்கிறார்கள். காதல் மனைவியையும் பிரியமான ஸுன்னிமியையும் பற்றிய உளமுருக்கும் கட்டுக்கதை இதற்காகவே பரப்பப்பட்டிருக்கும்."

"இருக்கலாம்..." என்று நீட்டினான் விளாதிஸ்லாவ். "முற்றிலும் நடந்திருக்கக் கூடியதே இது."

"நல்லது, இன்னும் கொஞ்சம் படிப்போம். பின்பு படித்த பகுதியை நான் வீக்தரிடம் கொண்டு கொடுக்கிறேன்... ஆமாம், போராடும் வாய்ப்பைப் பற்றி ஒரு வார்த்தை. வீக்தர் தானே நோய்ப்பட்டிருந்தும், தனக்கு என்ன நேரும் என்று அறிந்திருந்தும், மற்ற நோயாளிகளுக்கிடையே எவ்வளவு சித்த உறுதியுடன் வளையவருகிறான்! நீ பார்த்திருந்தால் வியப்பு அடைந்திருப்பாய். தன் விஷயத்தில் அவனுக்கு இங்குள்ளவர்கள் போன்று அச்சமும் இரக்கமும் உண்டாகவில்லை என்று நினைக்கிறாயா? எப்படி உண்டாகாமல் இருக்கும்? தற்காப்புக்காகப் போராட இந்த கிரகவாசிகளிடம் அதிக வாய்ப்புகள் இருந்தன. இவர்கள் பேடித்தனமாக அஞ்சி ஒடுங்கி விட்டார்கள் என்பது தெளிவு. தங்களுக்கே துரோகம் செய்து கொண்டார்கள். இப்போது வேற்றுலகினரான நம்மிடம் 'எங்களை எங்களவர்களிடமிருந்தே காப்பாற்றுங்கள்!' என்று முறையிடுகிறார்கள். நாம் இவர்களுக்கு உதவக் கட்டாயம் முயல்வோம், சந்தேகம் இல்லை. ஆனாலும் எனக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வருகிறது, மெய்யாகவே!"

கால் மணி நேரம் கழிந்ததும் காஸிமீர் துள்ளி எழுந்தான்.

"போகிறேன்! அங்கே வீக்தர் எப்படி இருக்கிறானோ என்று கவலையாயிருக்கிறது..."

"ஒரு நிமிடம் பொறு! கிளேகுகளின் இந்தத் தொல்லை நேர்வதற்கு முன் இவர்கள் நன்றாகவே வாழ்ந்திருக்கிறார்கள் என்று தெரிகிறதே. கணிசமாக உயர்ந்த வாழ்க்கைத் தரம், இல்லையா?"

"ஆம். மிகவும் வளர்ச்சி பெற்ற ஜீவரசாயனத்தின் உதவியால் நான் அறிந்தவரை இந்தத் துறையில் இவர்கள் பூமிவாசிகளை முந்தி விட்டார்கள். உதாரணமாக, சேமித்து வைக்கப்பட்டிருக்கும் தானியங்களைக் கணக்கில் எடுத்துக்கொள்ளாவிட்டால், இப்போது கூட அவர்கள் இயற்கை உணவுப் பொருள்கள் இல்லாமலே எளிதில் வாழ்க்கை நடத்துகிறார்கள். இதுவும் நேரடித் தேவை காரணமாக அல்ல, ஆட்சியாளர்களின் கணக்கீட்டின்படியே செய்யப்படுவதாகத் தோன்றுகிறது. மக்களை முற்றிலும் அடிப்படுத்தி வைத்திருக்கவும் எல்லா சப்ளைகளையும் தங்கள் விருப்பப்படி கட்டுப்படுத்தவும் ஆட்சியாளர்களுக்கு இதனால் முடிகிறது அல்லவா? வயல்களையும் காய்கறித் தோட்டங்களையும் தொடர்ந்து பண்படுத்திச் சாகுபடி செய்ய அவர்களால்தான் முடியுமே. கிளேகன்னிகள்தாம் அவர்களிடம் ஏராளமானவர்கள் இருக்கிறார்களே கிளேகன்னிகளை மேற்பார்க்க வேண்டிய தேவையோ கிடையாது. கொடுத்த உத்தரவை அப்படியே நிறைவேற்றுவார்கள் அவர்கள். மீன்கள் பிடிக்கலாம். அவை நச்சுக்கிருமிகளால் தொற்றப்படுவதில்லை. தொற்று நீக்கி அறைகள் அவர்களிடம் உள்ளன. கிளேகன்னிகள் நகரத்துக்குப் போகிறார்கள், புத்தகங்களையும் இரசாயனக் கலவைகளையும் பிறவற்றையும் எடுத்து வருகிறார்கள்... மொத்தத்தில் இதுவும் ஒரு வாழ்க்கையா, விளாதிஸ்லாவ்! சுதந்திரம் இல்லை, மகிழ்வு இல்லை, அச்சத்தையும் ஏக்கத்தையும் தவிர எதுவுமே இல்லை. தவிர இவர்கள் தங்கள் நாட்டையே அல்லவா பாழாக்குகிறார்கள். தொழிற்சாலைகளும் விவசாயப் பண்ணைகளும் எல்லாம் கேட்பாரற்று விடப்பட்டிருக்கின்றன. மக்கள் செயற்கை நிலைமைகளில் வாழ்கிறார்கள், நோய்ப்பட்டு நலிகிறார்கள். இவர்கள் குழந்தைகளும் பெறுவார்கள். தரைக்கு அடியில் பிறக்கும் குழந்தைகளின் கதி என்ன என்று எண்ணிப் பார். தவிர, புத்திளமைப் பருவத்தினரான ஏராளமான ஆண்கள் வாழ்க்கையுடன் தொடர்பு இல்லாதவாறு துணிக்கப்பட்டு விட்டார்கள்."

"ஏன்? நச்சுக்கிருமிகள் சந்ததிகளுக்கும் தரப்படுகின்றனவோ?" என்று வியப்புடன் கேட்டான் விளாதிஸ்லாவ்.

"தரப்படுவதில்லைதான். ஆனால் கிளேகன்னிகளுக்குச் சந்ததிகள் இருக்க முடியாது. இனப்பெருக்க இயல்பூக்கம் அவர்களிடம் குன்றித் தேய்ந்துவிடுகிறது. தற்காப்பு உணர்வும் அவ்வாறே. அவர்களுக்கு அச்சமோ, விழைவோ, பசியோ, தாகமோ



ஏற்படுவதே இல்லை. அவர்களை அழிவிலிருந்து எச்சரித்துக் காப்பது எதுவும் கிடையாது... இரு!... ஊம், அதுதானே. வலியையும் அவர்கள் உணர்வதில்லை. மயக்கமருந்து கொடுக்காமலே அவர்கள் உடல்களில் எவ்வித அறுவை வேண்டுமானாலும் செய்யலாம். அவர்கள் முணுக்கென்பது கூட இல்லை. யாரும் கண்காணிக்காவிட்டால் அவர்கள் உயிரோடு நெருப்பில் எரிந்தோ நீரில் மூழ்கியோ பட்டினியால் மடிந்தோ போகலாம். அடே, நினைவு வருகிறது. ஈன்னிக்கு உணவு அளிக்கும் வேளை வந்துவிட்டது. இவர்கள் என்ன சாப்பிடுகிறார்களோ, அறியேன். இந்தப் புத்தகத்தில் இதைப்பற்றிய விவரம் கிடைக்காவிட்டால் வழியில் நூலகத்திலிருந்து எடுத்துவந்த புத்தகங்களைப் பார்க்க வேண்டும்."

"சோதனை முறையில் உணவு ஊட்டிப் பார்த்தாலோ?"

"நானும் முதலில் அப்படித்தான் நினைத்தேன். ஆனால் அவன்தான் கொடுத்ததை எல்லாம் சாப்பிடுவானே. அப்புறம் அவன் நோய்ப்படலாம். அவர்களது உடலில் உள்ள வேறுபாடுகள் என்ன, வழக்க பழக்கங்கள் என்ன என்பது யாருக்குத் தெரியும்?"

விளாதிஸ்லாவ் கதவருகே பேசாமல் உட்கார்ந்திருந்த ஈன்னியின் பறவை முகத்தை நோக்கினான். ஈன்னி யூங்கின் உடையை அணிந்திருந்தான். அது அவனுக்கு மட்டுமீறிப் பெரிதாயிருந்தது. அவனுக்கு ஏற்ற காலணிகள் கிடைக்காமையால் காஸிமீர் அவனுடைய ஜோடுகளையே கவனமாகத் தொற்று நீக்கம் செய்து அவனுக்கு அணிவித்திருந்தான். இந்தச் சிவப்பு ஜோடுகளின் கூர்த்த நுனிகள் சிறிது மேலே வளைந்திருந்தன. அந்த விந்தை ஜீவன் கைகளைத் தொங்கவிட்டு, உணர்ச்சியற்ற விழிகளால் முன்னே நோக்கியவாறு உட்கார்ந்திருந்தான்.

"எனக்கு இவனைப் பார்க்கவே பயங்கரமாய் இருக்கிறது, காஸிமீர்."

"சந்தேகம் இல்லாமல். ஒன்று மட்டும் சொல்கிறேன்: யூங்கைப் பார்ப்பது இன்னும் எவ்வளவோ பயங்கரமாய் இருக்கவேண்டும். அவன் நம் நண்பன் ஆயிற்றே! வீக்தர் ஓயாமல் அவனோடு இருக்கிறான். தனக்கும் இந்தக் கதிதான் நேரும் என்றும் அறிந்திருக்கிறான்."

"வீக்தரை இந்தப் பறப்பில் உடன அழைத்துச் செல்வதா

வேண்டாமா என்று தலானவ் தயங்கினானே, அதை நினைத்தாலே வேடிக்கையாய் இருக்கிறது."

"இது புரியக் கூடியதே. தலானவுக்கு வேந்த்துடன் பறந்து பழக்கம். இந்த நிலைமைகளில் வேந்த் தாக்குப்பிடித்திருக்க மாட்டான், திண்ணமாகச் சொல்லுகிறேன். நீயும் நானும் மீசை அரும்பாத இளங்கன்றுகளாய் இருந்தபோது வீரனாகத் திகழ்ந்த வேந்த் இல்லை இப்பொழுது. அவனுக்கு வயது நாற்பத்தாறு ஆகிவிட்டது. இவ்வளவு நீண்ட வேலைக்காலமும் இத்தகைய அனுபவங்களும் உள்ள விண்வெளி விமானிக்கு இது முதுமைப் பருவம் என்றே சொல்லலாம்."

"அப்படியானால் உனக்கும் எனக்கும் சுமார் பதினைந்து ஆண்டு வாழ்வுதான் மிச்சமா? கேட்கவே ஏக்கமாய் இருக்கிறதே" என்றான் காஸிமீர்.

"இது சரி அல்ல. வேந்த் ஒரு கால் நூற்றாண்டுக் காலமாக விண்வெளிப் பறப்புக்கள் செய்துவருகிறான். நீயோ, இப்போதுதான் முதல் தடவையாக நெடுந்தூரப் பறப்புக்குப் புறப்பட்டிருக்கிறாய். உனக்கு வயதோ இருபத்தெட்டேதான். வேளை வருமுன்பே ஏன் சிணுங்குகிறாய்? கிளேகுகளுடன் ஏற்பட்ட இனிய பரிச்சயத்துக்குப் பின் மேற்கொண்டு பறக்கவே நீ விரும்பாமல் போகலாமே."

"அவற்றுடன் மட்டுமீறி நெருங்கிய பரிச்சயம் செய்து கொள்ளாதிருந்தாலே போதும்! எப்படியும் மறுபடி இங்கே வந்து, இந்தத் தரைக்கீழ் வாசிகள் குதூகல வாழ்க்கை நடத்த வகை செய்ய விரும்புகிறேன்..."

"எனக்கு ஓர் எண்ணம் தோன்றுகிறது. இவர்களுடைய கிரகம் முழுவதிலும் ஒரே நாடும் ஒரே அரசாங்கமும்தானா இருக்கும்? இவர்களுடைய கிரகம் பூமியைவிட மிகவும் சிறியது என்பது மெய்தான். இருந்தாலும்? மற்ற நகரங்களிலும் கிராமங்களிலும் என்ன நடக்கிறது?" என்றான் விளாதிஸ்லாவ்.

காஸிமீர் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினான்.

"இந்த கிளேகன்னி விஞ்ஞானி தங்கள் நாட்டில் நடந்தவற்றை மட்டுமே விவரித்திருக்கின்றான் என்று தோன்றுகிறது... இல்லை, இன்னும் ஏதோ இருக்கிறது... பொறு, இங்கே எனக்கு விளங்கவில்லை.... மிகவும் தெளிவின்றி எழுதப்பட்டிருக்கிறது. எத்தனையோ இடுகுறிப் பெயர்களும் முன்பு எனக்கு



எதிர்ப்படாத, 'லிங்' தராத சொற்களும் இங்கே உள்ளன. வேறு ஒரு நாடு இருப்பதாகவே தோன்றுகிறது... ஒன்று செய்கிறேனே. ஈன்னியைக் கேட்டுப் பார்க்கிறேன்."

காஸிமீர் ஈன்னியின் அருகே உட்கார்ந்தான். அவனோ, அசையவே இல்லை. காஸிமீர் தன் கேள்வியை ஒரு காகிதத்தில் எழுதி, அதை ஈன்னியிடம் கொடுத்து, படிக்குமாறு சைகையால் கட்டளை இட்டான். ஈன்னி மிக விரைவில் படித்துவிட்டுத் தணிவான கீச்சுக் குரலில் பதில் சொல்லத் தொடங்கினான். காஸிமீர் சைகையால் அவன் பேச்சை நிறுத்தி, எழுதுகோலை அவனிடம் கொடுத்து, காகிதத்தைக் காட்டினான். ஈன்னி பணிவுடன் எழுத ஆரம்பித்தான். விளாதிஸ்லாவ் இந்தக் கடிதப் பரிமாற்றத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். இனந்தெரியாத ஏக்கம் அவன் உள்ளத்தில் பொங்கியது.

"இல்லை, இது நம்ப முடியாத பயங்கரம்! இந்த ஆட்சியாளர்கள் தாங்களே எந்த கிளேகுகளையும்விட மோசமானவர்கள்! அவர்கள் என்ன செய்தார்கள் என்று கேள், அப்போது சொல்வாய்! திரும்பிவந்து என் கையாலேயே இவர்கள் எல்லோரையும் சுட்டுக் கொன்றுவிடுகிறேன். ஆணையிட்டுச் சொல்கிறேன்!" என்று சிறிது நேரத்தில் காஸிமீர் கத்தினான்.

"ஆணையிடாதே. நம்முடைய வேலை கிளேகுகளை ஒழிப்பது. மற்ற விஷயங்களை இங்குள்ளவர்களே கவனித்துக் கொள்வார்கள். உறுதியாக நம்பு. நம் பூமியிலுந்தான் இதைவிடக் கேடான விஷயங்கள் இருந்தன. ஆனாலும் மக்கள், பெருத்த தியாகங்கள் புரிந்து எல்லாவற்றையும் சீர்படுத்திவிட்டார்கள் அல்லவா?" என்றான் விளாதிஸ்லாவ்.

"அணு யுகத்தைப் பற்றிச் சொல்லுகிறாயா?"

"அதைப் பற்றி மட்டும் அல்ல. புவியில் என்னென்னவோ நடந்தது."

"சரிதான். இருந்தாலும் இங்கே நடந்த பயங்கரம் எண்ணிப் பார்க்கவே முடியாதது. தரைக்கு அடியில் செல்கையில் இந்த ஆட்சியாளர்கள் வேறொரு நாடு தங்கள் நாட்டைத் தாக்கும் என அஞ்சுவதாக அறிவித்து அந்த நாட்டின் மேல் கிளேகுகளை ஏவினார்களாம்... அதாவது பாக்டீரிய குண்டுகள் போன்றவற்றை அங்கே எறிந்திருப்பார்கள். அந்த நாட்டிலோ, தடுப்பு மருந்தோ, தரையடிக் காப்பிடங்களோ, எவ்விதப் பாதுகாப்போ

கிடையாதாம். தெரிந்ததா? அந்த நாட்டார் என்ன ஆனார்கள் என்று ஈன்னிக்குத் தெரியாதாம். எல்லோரும் கிளேகன்னிகளாக மாறி, எவ்வித உதவியும் பாதுகாப்பும் இன்றி மெதுவாக மடிந்து கொண்டிருப்பார்கள், கட்டாயம். கிளேகன்னிகள் குழந்தைகளைக் காட்டிலும் நிர்க்கதியானவர்கள் ஆயிற்றே."

"அட கோரமே!" என்று அச்சமும் அருவருப்பும் தோன்றக் கூறினான் விளாதிஸ்லாவ். "இவர்கள் விதியின் தான்தோன்றித் தனத்துக்கு இரை ஆகும்படி விட்டுவிட்டு நாம் போகிறோம் என்று இப்போது எனக்கும் படுகிறது..."

"பார்த்தாயா...."

"ஆனாலும் இது அசட்டுத்தனமான உணர்ச்சி. நாம் என்ன செய்ய முடியும்? கேள் காஸிமீர். இவர்களுடைய நகரங்களுக்கும் நாடுகளுக்கும் இடையே தொடர்பு முற்றிலும் துண்டிக்கப்பட்டு விட்டதாமா? தரைக்கடியில் வானொலியை இவர்களால் பயன்படுத்தவே முடியாதுதான்... ஆனால் தொலைபேசி, தந்தி, வேறு தகவல் தொடர்புச் சாதனங்கள் முதலியவை இவர்களிடம் இருந்தனவா? ஈன்னியிடம் கேள்!"

"ஈன்னிக்கு எல்லா விஷயங்களும் தெரியாது" என்று அவனுடன் கடிதப் பரிமாற்றத்தை முடித்தபின் காஸிமீர் சொன்னான். "அதாவது, இவனுடைய படிப்பு சாதாரணமானது தான். கிளேகன்னி ஆகிவிட்ட பின்போ, அவன் சுற்றிலும் நடந்தது எதிலும் அக்கறை கொள்ளவில்லை, முந்திய அறிவுத் தரத்திலேயே உறைந்துபோனான். இவர்களிடம் தொலைபேசி, உருக்காட்டித் தொலைபேசிகூட இருந்ததாம். தந்தியைப் பற்றி எனக்குப் புரியவில்லை, அல்லது ஈன்னி என்னைப் புரிந்துகொள்ளவில்லை. தரைக்கு அடியில் இவற்றில் எதுவும் கிடையாதாம்."

"ஆட்சியாளர்கள் வேண்டுமென்றே இந்த நிலையை ஏற்படுத்தியிருக்கிறார்கள்" என்று உறுதியுடன் சொன்னான் விளாதிஸ்லாவ்.

"இருக்கலாம். எப்படியோ, இப்போது இவர்களுக்குத் தங்கள் கிரகத்தைப் பற்றி, தங்கள் நாட்டையே பற்றிக் கூட, தெரிந்தது சொற்பமே. இது, நாம் எண்ணியது போலவே, தலைநகரமாம். இதற்கு அடியில் பண்டைக்காலத் தரைக்கீழ் வழிகளும் இருப்பிடங்களும் இருந்தனவாம். தரைக்கீழ் நகர் அவசரமாக விரிவாக்கப்பட்டதாம். தொற்றிலிருந்து தக்க தருணத்தில் தனி



ஒதுக்கப்பட்டவர்கள் அங்கே குடியேற்றப்பட்டார்களாம். ஏற்கனவே நோய்பட்டுவிட்ட கிளேகன்னிகளும் அங்கே அனுப்பப் பட்டிருப்பார்கள். பிறகு அருகில் உள்ள நகரங்களில் வசித்தவர்கள் இங்கே வந்து, ஒதுக்குப் பகுதியில் தங்கி தொற்று நீக்கப்பட்டார்களாம்..."

"மற்ற இடங்களில் என்ன நடக்கிறது என்று தெரிந்துகொள்ள இவர்கள் முயலவில்லையா என்ன? இது எப்படி முடியும்? எனக்கு விளங்கவே இல்லை."

"உண்மை என்னவோ சைத்தானுக்கே வெளிச்சம்!" என்று எரிச்சலுடன் சொல்லிவிட்டு ஈன்னியோடு மறுபடி கடிதப் பரிமாற்றம் செய்யலானான் காஸிமீர். "ஒருவேளை விஞ்ஞானிகள் நீ நினைப்பதுபோல அவ்வளவு குற்றவாளிகள் இல்லைபோலும். பேராற்றின் அக்கரையில் மலைகளில் யாரோ ஜனங்கள் வசிப்பதாக ஈன்னி சொல்லுகிறான். இந்த நாட்டைச் சேர்ந்தவர் களும் அவர்களில் இருக்கலாமாம். அவர்கள் யாரையும் தங்களிடம் வர விடுவதில்லையாம். அவர்களும் கிளேகுகளை அஞ்சுகிறார்கள் போலிருக்கிறது. தங்கள் பிரதேசத்துக்குள் புகும் ஒவ்வொருவனையும் கொன்றுவிடுகிறார்களாம். தலைநகரில் இருந்த சில விஞ்ஞானிகள் காப்பு உடைகளை யாரும் அறியாமல் எடுத்துக்கொண்டு மலைப் பிரதேசத்துக்குப் போனார்களாம். அவர்களில் பலர் அங்கேயே கொல்லப்பட்டார்களாம், மற்றவர்கள் வேறு வழியின்றித் திரும்பிவிட்டார்களாம். இங்கே அவர்கள் கிளேகன்னிகளாக மாற்றப்பட்டுவிட்டார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அப்புறம் இம்மாதிரிச் செய்ய எவரும் முற்படவில்லையாம்...." - காஸிமீர் பெருமூச்செறிந்தான். பின்பு புத்தகத்தின் பக்கங்களை மெதுவாகப் புரட்டலானான்.

"இந்த ஏழு ஆண்டுகளில் கிளேகுகளை ஒழிக்கும் முறைகளை இவர்கள் கற்றுக்கொள்ளவில்லையாமா?" - சற்று நேரம் பேசாதிருந்த பின் விளாதிஸ்லாவ் கேட்டான்.

"இல்லை என்றே நினைக்க வேண்டியிருக்கிறது. கிளேகுகளை உற்பத்தி செய்த நுண்ணுயிரியல் விற்பன்னர்கள், நான் உனக்குச் சொன்னதுபோல, உடனேயே கிளேகன்னிகள் ஆக்கப்பட்டு விட்டார்கள். தவிர கிளேகு ஒழிப்பு வேலைகளுக்கு அரசாங்கம் நிதியுதவி செய்யாததோடு அவற்றுக்குத் தடையும் விதித்திருக்கிறதாம். வெளிப் பகட்டுக்காக இந்தத் துறையில் ஏதோ செய்யப்படுகிறதாம், ஆனால் அது மிகக் குறைவாம்.

ஆட்சியாளர்கள் கிளேகுகளுக்குக் கேடு செய்ய விரும்ப வில்லையாம். இது புத்தகத்திலும் எழுதப்பட்டிருக்கிறது. ஈன்னியும் அப்படியே எழுதுகிறான்..." - பார்வைக்குத் தெரியாத நூலாம்படையைப் போக்குபவன் போலக் காஸிமீர் கண்களைத் துடைத்துக் கொண்டான்.

"நான்தான் சொன்னேனே. கிளேகுகளுக்கு எதிராகவா, ஆட்சி யாளர்களுக்கு எதிராகவா, இங்கே யாருக்கு எதிராக முதலில் போராடுவது என்று புரியவே இல்லை" என்றான் விளாதிஸ்லாவ்.

காஸிமீர் நெடுநேரம் பேசாதிருந்தான். பின்பு, "சைத்தானுக்கே வெளிச்சம். எப்படியும் இந்த ஆட்சியாளர்களே... அவர்களும் மனிதர்கள் தாமே.... மற்றவர்கள் போலவே, இல்லையா? இருட்டில், தரைக்கு அடியில் இருப்பது அவர்களுக்குந்தானே கஷ்டம்? ஏழு ஆண்டுகள், ஊம்?" என்று தணிந்த குரலில் சொன்னான்.

விளாதிஸ்லாவ் ஏளனமாகச் சிரித்தான்.

"நீ என்ன, திடீரென்று அவர்களுக்காகக் கவலைப்படத் தொடங்கிவிட்டாய்? மற்றவர்கள் எல்லோரையும்விட அதிக வசதியாக அவர்கள் ஏற்கனவே ஏற்பாடு செய்து கொண்டிருப்பார்கள். இட விசாலமும் வெளிச்சமும் அவர்களுக்குக் கட்டாயமாக அதிகமாய் இருக்கும்..."

"அதிகமோ, குறைவோ. இருந்தாலும் கட்டிப்போட்டாற்போல, வெயில் இன்றி, காற்று இன்றி... ஆனாலும் அங்கே வசிக்கிறார்கள், மற்றவர்களையும் வைத்திருக்கிறார்களே."

"தரைக்கீழ் வாழ்க்கையைக் காட்டிலும் தங்கள் மக்களை அவர்கள் அதிகமாக அஞ்சுகிறார்கள் என்று இதற்கு அர்த்தம். உயிரோட்டம் உள்ள சக்திகளை எல்லாம் நசுக்கி ஒடுக்குவது இருளில் அதிகச் சுலபம் என்று எண்ணியிருப்பார்கள்.... ஆம், இந்த ஜீவர்கள் சொன்னது சரிதான் போலும். உதவி இல்லா விட்டால் இவர்கள் பாடுமோசந்தான். நாம் சீக்கிரம் திரும்பி வர வேண்டும்."

காஸிமீர் பேசாமல் எங்கோ ஒரு புறம் பார்த்தான்.

"விளாதிஸ்லாவ், ராக்கெட்டைச் செலுத்த நீண்ட நேரம் முன்னேற்பாடுகள் செய்ய நேருமா உனக்கு?" என்று அப்புறம் கேட்டான்.



"இல்லை. நாளைக்கே வேண்டுமானாலும் பறக்க என்னால் முடியும். கணக்கீடுகள் செய்ய வேண்டும், அவ்வளவுதான். அரேலுக்குச் செய்து முடிக்க நேரம் இல்லை...."

"நாம் இனி இங்கே தாமதிக்க எந்தக் காரணமும் இல்லை... எவ்வளவு சீக்கிரம் முடியுமோ கிளம்ப வேண்டியதுதான். சரி, நான் வீக்தரிடம் போகிறேன்" என்று எழுந்தான் காஸிமீர்.

"நீ மட்டுமீறி மனம் கலங்காதே. பார், உன் முகங்கூட மாறி விட்டது..." என்று ஆறுதலாகக் கூறிய விளாதிஸ்லாவ் "உன் உடம்புக்கு ஒன்றும் இல்லையே?" என்று தயக்கத்துடன் கேட்டான்.

காஸிமீர் உடனே பதில் சொல்லவில்லை.

"எனக்கு என்னவோ... எதற்கும் நான் வீக்தரிடம் போக வேண்டும்" எனப் பிறகு கூறினான்.

"நான் உன்னைக் கொண்டுவிடுகிறேன்" என்று விளாதிஸ்லாவ் எழுந்து அவன் பக்கம் நகர்ந்தான்.

காஸிமீர் துள்ளித் தாவிக் கதவை நோக்கி ஓடினான். அவன் முகம் வெளிறியிருந்தது. கண்மணிகள் அகலமாகிவிட்டமையால் விழிகள் அனேகமாகக் கறுப்பாய்த் தோன்றின.

"என் அருகே நெருங்காதே! உனக்கு மூளை புரண்டுவிட்டதா? எல்லாம் உன்னையே சார்ந்திருக்கிறது!" என்று கத்தினான்.

"நல்லது, நான் பின்னாலேயே வருகிறேன். போ."

அவர்கள் இடைவழியில் நடந்தார்கள். நண்பன் வரவர அதிகத் தளர்ச்சி அடைந்து தள்ளாடுவதை விளாதிஸ்லாவ் கவனித்தான். மருத்துவப் பகுதியின் அருகுவரை சென்றதும் காஸிமீர் தடுமாறிச் சுவற்றை ஆதரவாகப் பிடித்துக் கொண்டான். அக்கணமே விளாதிஸ்லாவ் பக்கம் திரும்பி, "வராதே! என்னை நெருங்காதே! நானாகவே போய்க்கொள்கிறேன்! திரும்பிப் போ! உனக்கு நோய் தொற்றிவிடும்! திரும்பு!" என்று கத்தினான்.

அவன் கண்களைத் திறக்காமல் பதற்றத்துடன் சுவற்றோடு ஒட்டி நிற்பதை விளாதிஸ்லாவ் கண்டான். அவன் முகத்தை மூடியிருந்த வெள்ளைச் சல்லாத்துணி கத்தலால் படபடத்து வாய்க்குள் புகுந்துகொண்டு பேச்சைத் தடை செய்தது.

"நான் உன்னை நெருங்கமாட்டேன், கவலைப்படாதே. எனக்காக

நீ இவ்வளவு அஞ்சினால் சுவர்ப்புறம் முகத்தைத் திருப்பிக் கொண்டு நில். நான் அருகாக ஓடி வீக்தரைக் கூப்பிடுகிறேன், உன்னை அழைத்துப் போவதற்கு" என்றான் விளாதிஸ்லாவ்.

"வீக்தர் நிலைமை இன்னும் மோசம்" என்று அமைதியாகச் சொன்னான் காஸிமீர். பின்பு வலி உள்ளவன்போல முகத்தைச் சுளித்துக்கொண்டு கண்களைத் திறந்தான். "போய்விடு. நீ நோய்ப் படக்கூடாது. இதைப் புரிந்துகொள்" என்றான்.

"நீ ரொம்பத்தானே மிகைப்படுத்துகிறாய். ஏன் கூடாது? கிரகப் பாதையைக் கணக்கிடுகிறேன், ராக்கெட்டைச் செலுத்துகிறேன், அப்புறம் ராக்கெட் தானே இயங்குமாறு விசைகளைப் போட்டு விடலாமே. வீக்தர்தான் நோய்ப்படக்கூடாது, நான் அல்ல."

"வீக்தர் ஏற்கனவே நோய்ப்பட்டுவிட்டான்'' என்று முணுமுணுத்துவிட்டு, சுவற்றைப் பிடித்துக் கொண்டு மிகுந்த சிரமத்துடன் முயன்று நடந்தான் காஸிமீர். "அட சைத்தான், எல்லாம் இயங்குகிறது, உருகி ஓடுகிறது, கேள், நான் சரியாக நடக்கிறேனா?"

"சரியாகத்தான் நடக்கிறாய். சுவற்றைப் பிடித்துக்கொள்."

"சுவற்றின் ஊடாகச் செல்வதுபோல எனக்குத் தோன்றுகிறது. இனி கிட்டேதான்."

"வலப்புறம் திரும்பு, இங்கே, அருகாமையில் இருக்கிறது."

திருப்பத்தின் அருகே காஸிமீர் "நெருங்காதே!" என்று கத்திய வாறு வெகு நேரம் தள்ளாடி நின்றான். முடிவில் கடும் முயற்சி செய்து வலப்புறம் அடி எடுத்து வைத்தான். மருத்துவப் பகுதியின் கதவு சற்றே திறந்தது. வீக்தர் காஸிமீரை நோக்கினான். பேசாமல் அவன் பக்கத்தில் போய் அவனைத் தழுவிக்கொண்டான். இந்த இரண்டு மூன்று நாட்களில் வீக்தரின் முகம் எப்படிப் பயங்கரமாக மாறிப் போயிருந்தது என்பதைக் கண்டு விளாதிஸ்லாவ் அதிர்ச்சி அடைந்தான். வெளிர் நீலம் பாரித்து, ஒட்டிப்போய், ஆழத்தில் பதிந்துவிட்ட சோர்ந்த விழிகளுடன் இருந்த அந்த முகத்தில் இளமையும் பளபளப்பும் இப்போது இல்லவே இல்லை. வீக்தர் விளாதிஸ்லாவைக் கண்டுகொண்டு பெருமூச்செறிந்தான்.

"நீ இங்கே வந்திருக்கக்கூடாது. எப்போது வந்துவிட்டாயோ, சற்று பொறு. நான் இதோ திரும்பி வருகிறேன்" என்று தணிந்த குரலில் கூறினான்.



விரைவிலேயே அவன் திரும்பி வந்து, மருத்துவப் பகுதிக் கதவைச் சாத்திவிட்டு, அதன்மேல் முதுகு படும்படிச் சாய்ந்து கொண்டான். அவனும் சல்லாத்துணி முகமூடி அணிந்திருந்தான்.

"சீக்கிரம் ராக்கெட்டைக் கிளப்பவேண்டும்" என்று பீடிகை ஏதுவும் இன்றிச் சொன்னான்.

"நாளை. அதற்கு முன் கணக்கீடு செய்ய என்னால் முடியாது."

"நல்லது.. உடம்பு மோசமாயிருப்பதாகத் தோன்றினால் உடனே என்னிடம் வா. இந்த இவனை... ஈன்னியையும் அழைத்து வா."

"நான் நோய்ப்படக்கூடாது. அப்புறம் செல்பாதையைக் கணக்கிடுவது யார்?"

"நோய் தொடங்கிவிட்டால் உன்னால் கணக்கீடு செய்ய முடியாது. உனக்குக் கண் தெரியாது."

"அப்போது என்ன ஆகும்?"

"நாளைவரை பொறுப்போம். நாளை தலானவால் இதைச் செய்யமுடியும்... ஆணையிடப்பட்டால்..."

வீக்தரின் குரலில் துயரம் தொனித்தது. விளாதிஸ்லாவுக்கு பகீரென்றது. பற்களை நெறுநெறுத்தான். "தலானவ்... விண்வெளி வீரன்... நான் பள்ளி மாணவனாய் இருக்கையிலேயே என் மேஜைக்கு உயரே அவன் உருவப்படத்தை மாட்டியிருந்தேன். அந்தத் தலானவ் கிளேகன்னியா..."

"நீயோ?" என்று சிரமத்துடன் கேட்டான்.

"நான்... ஊம், நான் தாக்குப்பிடிக்க முயல்கிறேன் இப்போதைக்கு.. விஷயம் என்னவென்றால் நாம் இருவரும் உயிர்ப் பதனத்துக்கு ஆயத்தம் செய்யவேண்டும்... நீ ஆரோக்கியமாய் இருந்தால் உன்னையும் என்னையும் தவிர எல்லோருக்கும், இல்லாவிட்டால் நம்மால் சமாளிக்க முடியாது. அவர்கள் மடிந்து போவார்கள்."

"உனக்குந்தான் உயிர்ப்பதனம்... தேவை..." - விளாதிஸ்லாவ் மென்று விழுங்கிக்கொண்டு சொன்னான்.

"நீ ஒருவனாகச் சமாளிப்பது மட்டுமீறிக் கடினமாய் இருக்கும்... இந்த ஈன்னியை. இவனைப் பேசவும் புரிந்துகொள்ளவும் பயிற்றலாம்தான். ஆனால் காஸிமீர் இல்லாமல் இது அதிகச்

சிரமமாய் இருக்கும்."

"நான் தனியே சமாளித்துக்கொள்கிறேன், கவலைப்படாதே."

"ராக்கெட் கிளம்பியபின் உனக்கு நோய் வந்துவிட்டாலோ?"

விளாதிஸ்லாவ் திகில் அடைந்தான். பேசாவாயனும், உலகில் எதிலுமே அக்கறை அற்றவனுமான வேற்றுலகவாசியுடன் தான் மட்டும் தனியாய் இருப்பதாக அவன் எண்ணிப் பார்த்தான். பின்பு அவன் நோய்ப்படுவான். தொடக்கத்தில், தனக்கு நேரப் போவது என்ன என்பதை நன்கு அறிந்து கொடிய வேதனைக்கு உள்ளாவான். அப்புறம் இந்த ஜீவன்போலவே அக்கறை அற்றவனாய், அரை உயிராய், நிர்க்கதியாய்ப்போய்ப் விடுவான்... இந்த நடை பிணம் தவிர வேறு ஒருவரும் பக்கத்தில் இருக்க மாட்டார்கள்... பல நீண்ட மாதங்களுக்கு... எல்லாம் புரியும், எல்லாம் பார்வைக்குத் தெரியும்... "இல்லை. என்னால் தாங்க முடியாது! சாவதே மேல்! ... ஆம், ஆனால் சாவது கூடாது. நீ சாகக்கூடாது. முதலில் ராக்கெட்டைக் கிரகப் பாதையில் செலுத்தி ஆக வேண்டும் நீ குறைந்த பட்சம். அப்புறம்..."

"நீதான் நோய்ப்பட்டுவிட்டாயே!" என்று வீக்தரை ஏக்கத்துடன் பார்த்துப் பற்களைக் கடித்துக்கொண்டு சொன்னான்.

"எனக்கு வந்திருப்பது கடுமை குறைந்தவகை. இதன் விளைவும்... மற்றவர்களுக்கு நேர்ந்ததுபோல இராது போலும். தவிர நான் மருத்துவன். நான் தாக்குப் பிடிக்கவேண்டும்."

அவன் தலையை நிமிர்த்தினான். அவனுடைய சாம்பல் நிறமான, தெளிந்த, ஒரேயடியாகச் சோர்வு ததும்பிய விழிகளை நோக்கிய விளாதிஸ்லாவ் பேசாதிருந்தான். அவன் தொண்டை தழுதழுத்தது.

முடிவில் அவன் சொன்னான்: "வீக்தர், நீ சொன்னபடியே எல்லாம் செய்கிறேன், நீயும் நானும் சேர்ந்தே எல்லாம் செய்வோம்." - சற்றுநேரம் மௌனமாய் இருந்துவிட்டு அவன் கூறினான்: "மறுபடி பறக்க நமக்கு வாய்த்தால் விண்வெளிப் பயணத்தை எப்போதும் உன்னுடன் சேர்ந்தே செய்ய விரும்புவேன்."

"நன்றி, விளாதிஸ்லாவ். நாம் இன்னும் விண்வெளிப் பயணங்கள் செய்வோம். மெய்தானே?" என்று தணிந்த குரலில் மொழிந்தான் வீக்தர்.



அவர்கள் நின்று ஒருவரை ஒருவர் பார்த்தார்கள். சல்லாத்துணி முகமூடிகள் அவர்களுடைய முகங்களை அனேகமாக முழுவதும் மறைந்திருந்தன. இந்த வெளிறிய, உயிரற்ற பின்னணியில் அவர்களுடைய விழிகள் மட்டுமே உயிர்ச்சுடர் வீசின. விழிகள் எல்லாவற்றையும் கண்டன, புரிந்து கொண்டன.



**இலியா வர்ஷாவ்ஸ்க்கிய்** (பிறப்பு 1908) "ரூஸ்க்கிய் டீஸல்" என்னும் லெனின்கிராத் தொழிற்சாலையில் பொறிஇயல் அமைப்பாள ராகக் கடந்த கால் நூற்றாண்டுக் காலமாகப் பணியாற்றி வருகிறார். விஞ்ஞானக் கற்பனைக் கதைகள் 1963இல்தான் எழுதத் தொடங்கினார் உடனேயே சோவியத் யூனியனிலும் வெளிநாடு களிலும் பிரபலம் அடைந்தார். "கூட்டணு உணவுவிடுதி", "எதிருலகைக் கண்ட மனிதன்", கதிரவன் தொனோமாகில் மறைந்தான்" முதலிய அவருடைய அழகிய சிறுகதைகளும் நையாண்டிப் போலிக் கதைகளும் பிரசுரங்களும் வாசகர்களிடையே அவருக்கு நிலையான மதிப்பையும் கவர்ச்சியையும் ஏற்படுத்தித் தந்தன. மனிதனும் இயந்திரமும், இலியா வர்ஷாவ்ஸ்க்கியின் படைப்புக்களின் முக்கிய விஷயங் களில் ஒன்றாகும். அவர் நகைச்சுவைக் கற்பனைக் கதைகளும் எழுதுகிறார். இந்த வகையைச் சேர்ந்த "இருவர் போர்", "வேற்று உலகினர்" என்னும் இரண்டு கதைகள் இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.

# வேற்று உலகினர்

இலியா வர்ஷாவ்ஸ்க்கிய்

"மீஷாவின் பனாமா தொப்பியைப் போட்டுக் கொள். பகல் சாப்பாட்டு வேளைக்குத் திரும்பிவிடு. அப்புறம் நெடுஞ்சாலையில் தயவு செய்து ஜாக்கிரதையாக இரு" என்றாள் மனைவி.

அப்படியே செய்வதாக அவளுக்கு வாக்குக் கொடுத்துவிட்டு, அவள் சமையலறை சென்ற நேரம் பார்த்து நான் வெறுந் தலையுடன் நழுவிவிட்டேன்.



இருபது நிமிடங்களுக்கெல்லாம் நான் நகர்ப்புறத்தில் சைக்கிளை ஓட்டிச் சென்றேன்.

சைக்கிள் விடுபவர்களுக்கு மோட்டார் ஓட்டுபவர்கள் மேல் உள்ள வெறுப்பைப் படிப்படியாக அதிகரிக்கும் விதத்தில் வரிசைப்படுத்துவதானால், மிகவும் தேய்ந்த கியர்பாக்ஸ் உள்ள லாரிகள் முதல் இடத்தில் இருக்கும். அவை நெருங்குவதை எதார்த்த அபாயம் தோன்றுவதற்கு வெகுநேரம் முன்பே கேட்க முடியும். தவிர சாலையின் நடுவே செல்கின்றன, சைக்கிள்காரனைச் சாலை விளிம்புக்கு நெருக்கித் தள்ளுவது இல்லை. லாரி ஓட்டிகள் ஆழ்ந்த போக்கு உள்ளவர்கள். பொழுது போக்குக் காரோட்டிகள் சைக்கிள்காரர்கள் விஷயத்தில் வழக்கமாகப் பண்ணும் குறும்பு களைச் செய்யும் அளவுக்கு அவர்கள் ஒருபோதும் இழிந்து விடுவதில்லை. நகர்ப்புற பஸ்கள் பற்றியும் இதையே சொல்லலாம்.

ஆனால் உல்லாசப் பயணிகளை ஏற்றிச் செல்லும் பஸ்கள் விஷயம் சற்று வேறானது. களிபொங்கும் நங்கையர் பஸ் ஜன்னல் களிலிருந்து நம் மேல் எறியும் ஆப்பிள்கள் அவ்வளவு இனிய பொருள்கள் அல்ல.

டீஸல் லாரிகளும் பஸ்களும் இருவகை உணர்ச்சிகளை ஏற்படுத்துகின்றன. ஒருபுறத்தில், அவற்றின் புகையாவி வெளியேற்றம் உரத்த சத்தம் கொண்டது, ஆகவே சைக்கிள்காரன் உரிய நேரத்தில் சாலையோரமாக ஒதுங்கிக்கொள்ளமுடியும். ஆனால் மறுபுறத்தில், சைக்கிள்காரன் சிறிது சுணங்கினாலும் போயிற்று, அவன் முகமெல்லாம் அரைகுறையாக எரிந்த எரிபொருள், எண்ணெய்த் துளிகளால் புள்ளிக்கோலம் இடப்பட்டுவிடும். உடையில் புகையாவியின் விந்தை நெடி வெகு காலத்துக்கு வீசிக்கொண்டிருக்கும்.

வெறுப்பு வரிசையில் இன்னும் ஒரு படி மேலே இருப்பவை "மஸ்க்வீச்" கார்கள். அவை ஓசையற்றவை, குயுக்தி நிறைந்தவை. ஆனால் பெருத்தகேடு விளைவிக்க அவற்றால் முடியாது. "மஸ்க்வீச்" ஓட்டுபவர்கள் வழக்கமாக நரம்புத்தளர்ச்சி உள்ளவர்கள். ஆபத்தான குறும்புகள் செய்ய அவர்கள் அரிதாகவே முற்படுவார்கள்.

உண்மையான விபத்து "வோல்கா" கார்கள். சைக்கிள் பின் சக்கரத்தின் பக்கத்தில் நீண்ட கருஞ் சிறுத்தை தோன்றியதுந்தான் காற்றியக்க விதிகளின் முழு ஆற்றலையும் நாம் புரிந்துகொள்ளத்

தொடங்குகிறோம். இந்தக் காற்றுப் பெருக்கின் பாதையிலிருந்து விலகி ஓட முடியாதவன் பாடு ஆபத்துதான்!

யாரோ குறி தவறாமல் முகத்தில் எறிந்த ஆரஞ்சுத் தோல்கள் நிறைந்த பையால் ஏற்பட்ட திகைப்பிலிருந்து நான் விடுபடுவதற்குள் இழுவண்டி இணைத்த லாரிகளும் உள்ளன என்பதை விதி எனக்கு நினைவுபடுத்தியது. நான் ஓரக்கிடங்கில் போய் விழுந்தேன். எனக்குப் போதும் போதும் என்று ஆகி விட்டது. இனிமேல் நெடுஞ்சாலையில் சைக்கிள் விடுவதில்லை என்று கிடங்கில் கிடந்தபடியே உறுதியாகத் தீர்மானித்துக் கொண்டேன்!

நான் திரும்பிய ஒற்றையடிப் பாதை நீளமான மரச்சட்ட வேலியை ஒட்டினாற்போலச் சென்றது. வேலியின் உட்புறம் மரங்கள் தெரிந்தன. அகன்ற வாயிற் கதவுகள் பருத்த தொங்கு பூட்டால் பூட்டப்பட்டிருந்தன. கழன்ற வேலிச் சட்டம் ஒன்றை ஒரு புறம் நகர்த்தினேன். கவனிப்பாரற்ற தோட்டம் எனக்குத் தென்பட்டது. பழங்கால நிலப்பிரபுவின் பண்ணைத் தோட்டத்தையே அது எனக்கு நினைவுபடுத்தியது. தோட்டத்தின் நடுவில் சுண்ணப்பூச்சு உதிர்ந்த தூண்கள் கொண்ட வீடு - பள்ளிக்கூடச் சித்திரவரைவு ஆசிரியர்களில் ஒருவரான பிரசித்தியற்ற கட்டிடச் சிற்பியின் நினைவுச் சின்னம் - இருக்கும் என்பதில் எனக்குச் சந்தேகமே உண்டாகவில்லை. இப்போது அங்கே கூட்டுப்பண்ணை நிர்வாக அலுவலகமோ விலங்கு மருத்துவ நிலையமோ இருக்கலாம். எப்படி ஆயினும், ஞாயிறன்று அங்கே ஆட்கள் இருப்பது சந்தேகந்தான்.

எனக்கு நிழலில் குந்த மிகவும் ஆசையாய் இருந்தது. எனவே, இரண்டாவது சட்டத்தையும் ஒருபுறம் இழுத்து நகர்த்தி, சைக்கிளை இடுக்கு வழியே உள்ளே புகுத்தினேன்.

காற்சட்டையையும் பனியனையும் கழற்றிவிட்டு, கச்சத்துடன் மர நிழலில் படுத்துப் புத்தகம் படிக்க ஒருவிதமாக வாய்த்ததே என்று மகிழ்ந்தேன்.

உயரமாக வளர்ந்த புல்லில் ஏதோ கணகணத்தது, சிலம்பிற்று, கிரீச்சிட்டது, நொய்யென்று ரீங்காரம் செய்தது. மெல்லிளங் காற்று என் சூடேறிய மேனியை இதமாக வருடியது. பத்து பக்கங்கள்போலப் படித்ததும் நான் உறக்கத்தில் ஆழ்ந்து விட்டேன்.



யாரோ என் தலையைக் கொஞ்சங்கூட மரியாதை இன்றித் தொட்டுத் தடவிப் பார்த்ததை உணர்ந்து விழித்துக் கொண்டேன். கண்களைத் திறந்ததும் நான் எதிரே கண்ட காட்சி என்னைத் துள்ளி எழுந்து நிற்க வைத்தது.

என் முன்னே நின்றன மூன்று ரொபாட்டுகள், விஞ்ஞானக் கற்பனைக் கதைகளில் வழக்கமாக வருணிக்கப்படும் இயந்திர மனிதர்கள் வகையானவை. நீளுருளை வடிவ உடல், கீல்கள் வைத்த கால்கள், காதுகளுக்குப் பதில் ஒலிபெருக்கிகளும் மிகுந்த இயக்கம் கொண்ட, உணர்ச்சியே அற்ற இரண்டு கண்ணாடிக் கண்களும் உள்ள உருண்டைத் தலை, ரப்பர் உறிஞ்சு குழல் விரல்கள் அமைந்த கீல்வைத்த கைகள், விந்தையான முறுமுறுப்பும் சீழ்க்கையும் கொண்ட ஒலிகள் (இவை, மனிதர்களுக்கு வயிறு இருக்கும் இடத்தில் பொருத்தப்பட்ட ஒலி பெருக்கியிலிருந்து வந்தன) - இவற்றைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். அதோடு, அமைதியான தூக்கத்திலிருந்து திடீரென விழித்துக்கொண்டதும் இம்மாதிரி விகிருதிகளைக் கண்டேன் என்பதையும் சேர்த்துக்கொள்ளுங்கள். அப்போது என் மலைப்பை நீங்கள் புரிந்துகொள்வீர்கள்.

சில நிமிடங்கள் தங்களுக்குள் கலந்தாலோசித்த பின்னர் அவை நொடிப்போதில் என் கண்களை என் பனியனாலேயே கட்டி, என்னைத் தோட்கள்மேல் தூக்கி எங்கோ கொண்டு சென்றன. நான் அவற்றின் எஃகுப் பிடியிலிருந்து திமிற மௌனமாக முயன்றேன். ஆனால் மலைப்பாம்பின் சாவுப் பிடியிலிருந்து விடுவித்துக்கொள்ள முயல்வதுபோல் இருந்தது அது.

ஆனால் இந்த நிலை சற்று நேரமே நீடித்தது. விரைவிலேயே நான் ஏதோ பலகை பாவிய தரைமேல் தடாலென விழுந்து தலையையும் முழங்கால்களையும் வலியெடுக்கும்படி மோதிக் கொண்டேன்.

கடைசியில் கண் கட்டைச் சுண்டிக் கழற்ற எனக்கு வாய்த்தது.

பந்தல் ஒன்றின் பாதி மட்கிய தரைமேல் நான் கிடந்தேன். சற்று தூரத்தில், வட்டமாகக் குழுமியிருந்தன ஐந்து ரொபாட்டுகள். இன்னோசையுடன் முறுமுறுத்தவாறு அவை எதையோ பற்றி ஆலோசனை செய்தன. என்னை அவை திரும்பிக் கூடப் பார்க்கவில்லை.

நான் எழ முயன்றேன். ஆனால் என்னைச் சிறைபிடித்த

ரொபாட்டுகளில் ஒன்று என் பக்கம் துள்ளி வந்து என் மார்பில் ஓர் உதைவிட்டது. நான் மல்லாக்க விழுந்தேன். அப்புறம் அது மறுபடி தன் தோழர்களிடம் போய்ச் சேர்ந்து கொண்டது.

சிறிது நேரத்தில் ஆறாவது ரொபாட் வந்தது. அதன் ஒரு கையில் என் சைக்கிளும் இன்னொரு கையில் புத்தகமும் இருந்தன.

இப்போது ரொபாட்டுகளின் கவனம் எல்லாம் சைக்கிள்மீது லயித்துவிட்டது. மறைக்க முடியாத ஆவலுடன் அவை பெடலைச் சுழற்றின, டயரைத் தொட்டுப் பார்த்தன, சீட்டில் ஏறி உட்காரக் கூட முயன்றன. ஆனால் சைக்கிள் அவற்றுக்கு விரைவில் அலுத்துப் போயிற்று. அவை புத்தகத்தைப் புரட்டிப் பார்க்கலாயின. அதன் பயன் என்ன என்று புரிந்துகொள்ள அவை முயல்வதுபோல் இருந்தது.

பிறகு ஒரு ரொபாட் புத்தகமும் கையுமாக என்னிடம் வந்து, என் தலைமயிரைப் பிடித்துத் தூக்கி நிறுத்தி என் கையில் புத்தகத்தைத் திணித்தது. இதற்கெல்லாம் என்ன அர்த்தம் என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

படாரென்று விழுந்த அறை என் சிந்தனையை இடைமுறித்தது. நான் உரக்க வாசிக்கவேண்டும் என்று ரொபாட் விரும்பியது போலும். இயந்திரக் கயவர்களிடம் ஒருபோதும் அடி வாங்காதவர்கள் ரொபாட்டின் விருப்பத்தை நான் அவ்வளவு துடியாக நிறைவேற்றியதை ஒருவேளை புரிந்துகொள்ள மாட்டார்கள்.

ஆக, நான் படிக்கத் தொடங்கினேன். ரொபாட் திருப்தியுடன் உறுமி, தன் கைவிரல்களை என் தலைமேல் வைத்தது. இது நிரம்ப இதமாய் இல்லைதான், ஆனால் அந்தக் கையை அகற்ற நான் முயன்றதற்குப் பிரதியாகக் கழுத்தில் பலமான அடி விழுந்தது. நான் பெருமூச்சுவிட்டு, கீழ்ப்படிந்தேன்.

நான் ஒவ்வொரு வாக்கியம் படித்து முடித்ததும் ரொபாட் தன் தோழர்களிடம் எதையோ கறுமுறுத்தது. அவையோ, நான் படித்த நேரம் முழுவதும் சற்றும் கிளர்ச்சி அடையாமல் இருந்தன.

இந்த வேதனை சுமார் ஒரு மணி நேரம் தொடர்ந்தது. நான் சற்று இளைப்பாறுவதற்கு முயன்ற ஒவ்வொரு தடவையும் ரொபாட் தன் உறிஞ்சு குழல் விரல்களால் பயங்கர வலிமையுடன் என் தலையை அழுத்திற்று.



ரெமார்க்கின் புத்தகத்தைப் படிப்பது இத்தகைய தலை வேதனையாய் இருக்க முடியும் என்று நான் முன்பு ஒருபோதும் எண்ணியதில்லை.

இன்னும் ஒரு மணி நேரம் கழிந்தது. புத்தகத்தின் பாத்திரங்கள் கவர்ச்சியான பெயர்கள் உள்ள பானங்களை அதற்குள் ஐந்தாவது தடவை பருகிவிட்டார்கள். நானோ, குளிர்ந்த நீர் ஒரு மடக்காவது குடிக்கக் கிடைக்காதா என்று ஏங்கியவனாக மேலும் மேலும் படித்துக்கொண்டே இருந்தேன். இடைவிடாது உரக்கப் படித்ததால் என் தொண்டை வறண்டு போயிற்று, நாக்கு துருவல் கருவிபோன்று சுரசுரப்பாகிவிட்டது.

திடீரென்று ரொபாட் என் பின் மண்டையில் விரல்களால் குட்டி, திக்கித் திக்கிப் பேசலாயிற்று:

"த-த-தலையால்.... அ-அ-அதிகம்.... பா-பா-பார்க்கவேண்டும்."

எதிர்பாராமையால் நான் ஆவென வாயைத் திறந்தேன். ரொபாட்டுகள் என் குரல் ஒலிகளை வெறும் வேடிக்கையாகக் கேட்க மட்டும் செய்யவில்லை. உரக்கப் படிப்பது, அவற்றின் மனிதப் பேச்சுப் பயிற்சியுடன் தொடர்பு கொண்டிருந்தது எனத் தெரிந்தது.

என்ன ஆயினும் மேற்கொண்டு படிக்க என்னால் முடியவில்லை.

புத்தகத்தை எறிந்துவிட்டு, "குடிக்க விரும்புகிறேன். தாகமாய் இருக்கிறது" என்று தம்ளரை வாயருகே கொண்டுபோவதுபோலச் சைகை செய்தேன்.

"கால்வாடோஸ்" என்றது ரொபாட்.

"இல்லை, தண்ணீர், தண்ணீர்" என்றேன்.

ரொபாட் புரிந்ததுபோலத் தலை ஆட்டிவிட்டுப் பந்தலுக்கு வெளியே போயிற்று.

துர்ப்பாக்கியவசமாக, நான் படித்த நூறு பக்கங்களில் புத்தகத்தின் பாத்திரங்கள் ஒருதரங்கூடத் தண்ணீர் பருகவில்லை. இல்லாவிட்டால் ரொபாட் தண்ணீருக்குப் பதில் ஒரு கொத்துப் புற்களைப் பிடுங்கிக்கொண்டு வந்திருக்காது. நான் வேண்டாம் என்ற பாவனையில் தலையை அசைத்தேன். அதுவோ ஒரு கையால் என் பின் மண்டையைப் பிடித்துக்கொண்டு இன்னொரு

கையால் புல்லை என் வாய்க்குள் திணிக்கத் தொடங்கிற்று.

இது என்னால் தாங்கக்கூடிய எல்லைக்கும்மேலே போய் விட்டது. நான் ரொபாட்டின் கையை வெடுக்கென்று கடித்து புற்களுடன் இரண்டு உறிஞ்சு குழாய்த் துண்டுகளை அருவருப்புடன் துப்பினேன். சற்று நேரம் அது என்னையும் தன் கையையும் விளங்காமையுடன் மாறி மாறிப் பார்த்தது. சற்று நேரம் யோசித்தபின் தன் தோழர்களிடம் சென்றது. அவை தணிந்த குரலில் ஆலோசனை செய்தன. பிறகு கடிபட்ட விரல்கள் கொண்ட ரொபாட் மறுபடி என் அருகே வந்தது.

"நாங்கள், வெகு தூர.... நட்-நட்சத்-திரத்திலிருந்து ப-பறந்து வந்திருக்கிறோம்" என்று ஒவ்வொரு சொல்லையும் நிதானமாக யோசித்துக் கூறியது.

"அட கடவுளே! இது ஒன்றுதான் குறையாய் இருந்தது!" என்று நினைத்துக் கொண்டேன். எனக்கு மூளை புரண்டுவிடும் என்றே எண்ணினேன்.

ரொபாட் பேச்சைத் தொடர்ந்தது:

"நாங்கள்... எல்லா... மனி-மனிதர்களையும் அழித்துவிட... போகிறோம். சாவுக்.. கதிர்.. நீ எங்களுக்கு.. உதவு.. கொல்லப்படாத. மனிதர்களைத்.... தேடிக்... கண்டுபிடிக்க... நாங்கள்... உனக்கு.. நிறைய... கால்வாடோஸ்... கொடுப்போம்..."

கற்பனை நவீனங்களின் கதாநாயகன் ஆகும் தகுதி எனக்குக் கிடையாது போலும். இதற்கு வேண்டிய கற்பனையோ துணிச்சலோ எனக்குப் போதாது. என் இடத்தில் வேறொருவன் எப்படி நடந்து கொண்டிருப்பானோ, அறியேன். நானோ, பட்ட அறையால் இன்னமும் காந்திக்கொண்டிருந்த கன்னத்தைத் தடவியவாறு, உணர்வு மரத்துப்போய் அந்த வேற்றுலகினரை வெறித்து நோக்கினேன்.

எல்லாவற்றிலும் விளங்காதது என்னவென்றால் இந்தப் பயங்கர நாடகக்காட்சி மோட்டார்ச் சாலைக்கு நூறே மீட்டர் தொலைவில் நடந்து கொண்டிருந்ததுதான். மிக அருகே எங்கோ ஜனங்கள் நகர்ப்புறம் சென்றுகொண்டும், நீர்நிலைகளின் கரைகளில் இளைப்பாறிக்கொண்டும், அன்றாட அலுவல்களைக் கவனித்துக்கொண்டும், தங்களுக்கு நேரவிருந்த பெரு விபத்தைப் பற்றி ஏதும் அறியாதவர்களாய் இருந்தார்கள்.



எந்தவிதச் சாவுக் கதிர்களையும் பற்றி எனக்கு ஒன்றுமே புரியவில்லை. இது என் வேலையும் அல்ல. இது விஞ்ஞானிகளுடையவும் இராணுவத்தினுடையவும் மிலீஷியாவு [illegible]வும் பொறுப்பு. நான் செய்ய வேண்டியதெல்லாம் சீக்கிரமாக யாரேனும் மிலீஷியாக்காரனிடம் போய், இங்கே என்ன நடக்கிறது என்ற தகவலைத் தெரிவிப்பதுதான். இந்தக் கயவாளிகளைக் கூடிய விரைவில் அடக்கி ஒடுக்குவது அவசியம்!

கண்தலை தெரியாத ஆத்திரம் எனக்கு மண்டிக்கொண்டு வந்தது.

ரொபாட்டை நெட்டித் தள்ளிவிட்டு வெளிவாயிலை நோக்கி உறுதியுடன் விரைந்தேன். அக்கணமே ரொபாட் என் கழுத்தைப் பிடித்துத் தரையில் கடாசிவிட்டது. என்மேல் குனிந்த அருவருப்பான மூஞ்சி குடிவெறியில் தோன்றியதுபோல் இருந்தது—

"பசங்களா! எல்லோரும் சீக்கிரமாக சேமக்கலங்களில் மின்னேற்றம் செய்துகொள்ள வாருங்கள்!" என்று கணீரென்ற பெண் குரல் திடீரெனத் தோட்டத்தில் ஒலித்தது.

பந்தல் வாயிலில் தோன்றினாள் வெண்மேலங்கி அணிந்த ஒரு பெண்.

அவள் பந்தலுக்குள் வந்து, "ஊம், ஓடுங்கள்! இன்று மாலை சினிமா. மின்னேற்ற நிலையத்தை யார் முதலில் ஓடி அடைகிறானோ அவன்தான் திரை மாட்ட எனக்கு உதவுவான்" என்றாள்.

"சினிமா! சினிமா! நான் முதல்! நான்தான் முதல்!" என்று ஆரவாரித்தன ரொபாட்டுகள். நான் இருப்பதையே மறந்து தலை தெறிக்க ஓட்டம் பிடித்தன அவை.

அந்த மங்கை என்னை வியப்புடன் பார்த்தாள்.

"நீங்கள் இங்கே எப்படி வந்தீர்கள்?" என்று கண்டிப்புடன் கேட்டாள்.

"த-த-தற்செயலாக" என்று முனகினேன்.

"தடை அறிவிப்பை நீங்கள் பார்க்கவில்லையோ?"

"இல்-இல்லை... இது என்ன இடம்?"

"சோதனை உளநோய் இயல் ஆராய்ச்சி நிலையம் இது. இந்த ரொபாட்டுகள்மேல் நாங்கள் நரம்புநோய் ஆராய்ச்சி நடத்தி வருகிறோம். நல்லவேளையாக நீங்கள் முற்றிலும் சாதுக்களான பைத்தியங்களிடம் சிக்கிக்கொண்டீர்கள். இவை சிறுவர்கள்போல நாள் முழுதும் வேற்று உலகினர் விளையாட்டு விளையாடுகின்றன. உங்களுக்கு இவை கெடுதல் எதுவும் செய்ய வில்லையே?"

நான் சைக்கிளை வெளியே உருட்டிச்சென்றவாறே, "இல்லை. நாங்கள் மிக இனிமையாக நேரத்தைக் கழித்தோம்" என்று பதில் அளித்தேன்.



## இருவர் போர்

மாடிப்படியின் கடைசி வரிசை முடிவில் அவன் அழியைத் தாண்டிக் குதித்து, ஓடுகிற ஓட்டத்திலேயே இனிப்புப் பணியாரத்தைச் சவைத்தவாறு முன்கூடத்தின் வழியே விரைந்தான்.

நேரம் மிகக் கொஞ்சமே இருந்தது. மரச்சாலைத் தொடக்கத்தில் இருந்த பெஞ்சியில் அசட்டையாக விழுந்து சாய்ந்து, இரண்டாம் ஆண்டு மாணவர்கள் வெளிவருவதற்காகக் காத்திருந்து, அவளைக் காற்பந்தாட்டம் பார்க்க வரும்படி அழைக்கத்தான்

நேரம் காணும். ஆட்டம் பார்த்தபின் அவர்கள் இருவரும் மாணவர் உணவு விடுதியில் சாப்பிடுவார்கள். அப்புறம்... ஆனால் அப்புறம் என்ன நடக்கும் என்பது அவனுக்கு இன்னும் தெரியாது இந்த மாதிரி விவகாரங்களில் அவன் எப்போதும் உள்ளுணர்வையே நம்பியிருந்தான்.

மனோரதத்தில் அவன் பூங்கா சேர்ந்துவிட்டான், அந்த வேளை பார்த்து ஒலி பரப்பி குரல் முழக்கிற்று:

"முதல் ஆண்டு மாணவர் முஹாரீன்ஸ்க்கிய், தோற்றவகை சுட்டு எண் ஆயிரத்து முந்நூற்று எண்பத்து ஆறின் கீழ் பதினாறு ம.ப., வானொலி இயந்திரவியல் பிரிவுத் தலைவரால் அவசரமாக அழைக்கப்படுகிறார்."

தீர்மானம் உடனடியாகச் செய்ய வேண்டியிருந்தது. தப்பி ஓட உதவும் கதவு வரை செல்ல இன்னும் சில அடிகளே இருந்தன. உதடுகளைக் குழல்போலக் குவித்துக்கொண்டு, கைகளால் காதுகளை இழுத்துப் பரத்தி, இடக்கண்ணைச் சுரித்து, வலது காலை நொண்டியவாறு, அவன் தோற்றவகைப் பகுப்பாய்வுக் கருவியைக் கடந்து நழுவ முயன்றான்.

"கோரணி காட்டுவதை நிறுத்துங்கள், முஹாரீன்ஸ்க்கிய்!"

இது சாட்சாத் பிரிவுத் தலைவரின் குரல்.

"தாமதம் செய்துவிட்டேன்!"

ஒரு வினாடியின் அற்பப் பகுதி நேரத்திற்குள் பகுப்பாய்வுக் கருவி தரப்பட்ட சுட்டு எண்ணைக் கொண்டு பல்லாயிரம் மாணவர்களுக்கு இடையே அவனைப் பொறுக்கி எடுத்து விட்டது. அந்தக் கணமே விகாரமாகக் கோணிய முகத்தின் உருவம் பிரிவுத் தலைவரின் அறையில் இருந்த தொலைக்காட்சித் திரையில் அழகு காட்டலாயிற்று.

முஹாரீன்ஸ்க்கிய் உதடுகளை வழக்கமான நிலையில் வைத்துக் கொண்டான், காதுகளை விட்டான், இன்னும் சுரித்த விழியுடன் வலது முழங்காலைத் தேய்த்தான். திடீரென்று அவனுக்குக் கீல்வாதம் வந்துவிட்டதாகப் பிரிவுத் தலைவர் நினைக்க வேண்டும் என்பதே அவனது இந்தத் தந்திரச் செயலின் நோக்கம்.

ஆழ்ந்த மூச்சுவிட்டு, தொடர்ந்து நொண்டியவாறு அவன் மாடிக்குப் போனான்....



பிரிவுத் தலைவர் அவனது முகவெட்டைச் சில நிமிடங்கள் கூர்ந்து நோக்கினார். முஹாரீன்ஸ்க்கிய் முகத்தில் ஏக்கம் நிறைந்த ஒருமுனைப்பாட்டை வருவித்துக் கொண்டான். அந்தச் சந்தர்ப்பத்துக்கு ஏற்ற மிக மரியாதையான தோற்றம் அது என்பது அவன் நினைப்பு. அந்த இரண்டாம் ஆண்டு மாணவியை எட்டிப் பிடிக்கத் தனக்கு எவ்வளவு நேரம் தேவைப்படும் என்று மனதுக்குள் கணக்கிட்டான். அதாவது பிரிவுத் தலைவர் தன்னை...

"சொல்லுங்கள், முஹாரீன்ஸ்க்கிய்: உங்களுக்கு வாழ்க்கையில் எதிலாவது அக்கறை உண்டா?"

இது வீண் கேள்வி என்று முஹாரீன்ஸ்க்கியக்குத் தோன்றியது. எத்தனையோ விஷயங்களில் அவனுக்கு அக்கறை உண்டு. முதலாவது, தனக்கு யார்மேல் அதிகப் பிரேமை: நத்தாஷாமேலா, மூஸியாமேலா என்பதில்; இரண்டாவது, செமி ஃபைனல் ஆட்டத்துக்குப் பின் போட்டி அட்டவணையில் "ஸ்பார்த்தாக்" கால்பந்தாட்டக் குழுவின் இடம் எதுவாய் இருக்கக்கூடும் என்பதில்; மூன்றாவது, இந்த இரண்டாம் ஆண்டு மாணவியில்; நான்காவது... சுருங்கக்கூறின் அவனது அக்கறைக்கு உரிய விஷயங்களின் வட்டம் கணிசமாக விரிவானது. ஆனால் இதை எல்லாம் பிரிவுத் தலைவருக்குத் தெரிவிப்பதில் பயன் இருக்கும் என்று தோன்றவில்லை.

"வானொலி இயந்திரவியல் பொறி இயலாளர் தொழிலில் எனக்கு அக்கறை உண்டு" என்று பணிவாக விடையிறுத்தான்.

இது அனேகமாக உண்மை. அவனது வாழ்க்கை முயற்சிகள் யாவும் மாணவர் நகருக்கு வருவதுடன் ஏதேனும் ஒரு விதத்தில் தொடர்பு கொண்டிருந்தன. இளைஞர்கள் இங்கே வருவதன் காரணமோ தெரிந்த விஷயம் ஆயிற்றே.

"அப்படியானால் கல்வி ஆண்டின் இரண்டாம் பாதி இறுதி நெருங்குகையில் நீங்கள் இன்னும் ஒரு பரீட்சைக் கூடத் தேறாதது ஏன் என்று எனக்கு விளக்குவீர்களா?"

"அட, மோசம். விலக்கிவிடுவார். கல்லூரியிலிருந்து கட்டாயமாக விலக்கிவிடுவார்'' என்று நினைத்தான் முஹாரீன்ஸ்க்கிய்.

"ஒருவேளை இயந்திர வாயிலாகப் பயிற்சி அளிப்பதற்கான தனி முறை...'' என்று தயக்கத்துடன் ஆரம்பித்தான் முஹாரீன்ஸ்க்கிய்.

"அதுவேதான். தனிமுறைதான்" என்று அவன் பேச்சை இடைமுறித்தார் பிரிவுத் தலைவர். "பயிற்சி அளிக்கும் மூன்று தானியங்கிகள் உங்களுக்குப் போதிக்க ஏற்கனவே மறுத்து விட்டன. எதை நம்பிக்கொண்டிருக்கிறீர்கள் நீங்கள்?"

இந்தக் கேள்வியை சொல்லணி வகைப்பட்டதாக எடுத்துக் கொண்டு விடை அளிக்காமலே இருந்துவிடுவதுதான் செயல்முறைத் தந்திரப்படி சரியானதாக இருந்தது.

பிரிவுத் தலைவர் ஏதோ எண்ணத்தில் ஆழ்ந்தவராய் மேஜை மேல் விரல்களால் தாளம் போட்டார். முஹாரீன்ஸ்க்கிய் ஜன்னல் வழியாக வெளியே பார்த்தான். செம்பழுப்புக் கேசத்தினாலான இரண்டாம் ஆண்டு மாணவி மரச்சாலை வழியே சென்றாள். நீல பனியன் அணிந்து அவள் பக்கத்தில் சென்ற நெட்டையன் கையில் துடுப்புக்கள் வைத்துக்கொண்டிருந்தான். விஷயம் தெளிவாய் இருந்தது. காற்பந்தாட்டத்திற்கான இரண்டாவது டிக்கட்டை வேறு யாருக்கேனும் கொடுக்க வேண்டியதுதான். அங்கே வனப்பு வாய்ந்த மருத்துவக் கல்லூரி மாணவிகள் எப்போதும் நிறையக் காணப்படுவது உண்டு.

"உங்களுக்குப் பொறியியல் கல்வி போதிக்கும் முயற்சி நம்பிக்கைக்கே இடமற்றது என்று மெய்ப்பிக்கப்பட்டால் அன்றி உங்களை விலக்க நான் விரும்பமாட்டேன்."

இதைக் கேட்டதும் முஹாரீன்ஸ்க்கிய் களியால் துள்ளி ஒரு குட்டிக்கரணம் அடித்திருப்பான், ஆனால் அதில் அபாயம் இருந்ததால் ஆசையை அடக்கிக் கொண்டான்.

தரையைப் பார்த்தபடியே, "எனக்குத் திறன் இருப்பதாக நீங்கள் இன்னும் நம்புவது குறித்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்" என்றான்.

"உங்களுடைய திறனைப் பற்றி நினைப்பதாயிருந்தால் மாணவர் பட்டியலிலிருந்து உங்கள் பெயர் என்றைக்கோ அடிக்கப்பட்டிருக்கும். பயிற்சி அளிக்கும் தானியங்கிகளின் திறனையே நான் கருத்தில் கொண்டிருக்கிறேன். அவற்றை நான் நம்புகிறேன். இதை நீங்கள் சந்தேகிக்கவேண்டாம். 'ஏதொசவிபோ' பற்றி எப்போதாவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"

"ஆகா, கேள்விப்பட்டிருக்கிறேனே, இது வந்து..."

இந்த இடைநிறுத்தம் களைப்பூட்டுவதாக இருந்தது.



"நீங்கள் கேள்விப்படாமல் இருப்பீர்களா எங்காவது? பயிற்சி அளிக்கும் தானியங்கிகள் பிரிவு வெளியிடும் பிரசுரங்களை எல்லாம் தவறாமல் படிப்பவர் ஆயிற்றே நீங்கள்!" என்று நொடித்தார் பிரிவுத் தலைவர். பின்பு சொன்னார்: 'ஏதொசவிபோ' என்றால் ஏற்புத் தொடர் என்பது என்ன என்று நீங்கள் அறிவீர்கள் என நம்புகிறேன்."

"ம்ம்ம்... பொதுவான அம்சங்களில்" என்று எச்சரிக்கையுடன் கூறினான் முஹாரீன்ஸ்க்கிய்.

" 'ஏதொசவிபோ'வை நான் வியன்னா நகரில் நடக்கப்போகும் அனைத்துலக மகாநாட்டில் இயக்கிக்காட்ட எண்ணியிருக்கிறேன். அதன் திறனை நிர்ணயிக்கும் பொருட்டு இப்போது மாணவர் களின் சோதனைக் குழுவுக்கு அதைக் கொண்டு பயிற்சி தரப்படுகிறது. அதனிடம் பயில்பவர்களின் சராசரி அறிவுத்தரத்தை வேண்டுமென்றே குறைக்க எனக்கு விருப்பம் இல்லைதான். ஆனாலும் ஒரு விஞ்ஞானிக்கு உரிய அடிப்படை நேர்மை காரணமாக நான் அதை ஒரு... ம்ம்... ஒரு... அதாவது சுருங்கச் சொன்னால் உங்கள் மீது சோதித்துப் பார்ப்பது அவசியம் ஆகிறது. உங்களைச் சோதனை மாணவர் குழுவில் சேர்க்கிறேன்."

"நன்றி."

"குறைந்த பட்ச அறிவுத் தரத்தையாவது அது உங்களுக்கு முயன்று ஏற்றிவிடும் என்று நம்புகிறேன். அதன் திட்டம்..."

எந்தத் தானியங்கியின் திட்டத்திலும் முஹாரீன்ஸ்க்கிய்க்கு அவ்வளவாக அக்கறை கிடையாது. உன்னிப்பாகக் கவனித்துக் கேட்பது போன்ற தோற்றம் அவன் முகத்தில் நிலைத்திருந்தது ஆயினும் அவன் எண்ணங்கள் காற்பந்தாட்டத்தையும் காதல் மகளிரையுமே சுற்றி வந்தன: காற்பந்தாட்டத்தில் முதற்பாதி முடிவை நெருங்கிக் கொண்டிருக்கும், வேறு ஒருத்தியும் கிடைக்கா விட்டால் நத்தாஷாவாவது...

"...இந்த விதமாக, பயிற்சிக் காலத்தில் உங்கள் மூளை தானியங்கியின் பகுப்பாய்வுக் கருவியுடன் ஒரே முழுமையாக ஒன்றிவிடும். மாணவர்கள் விஷயத்தைக் கிரகித்துக்கொள்ளும் போக்குக்கு ஏற்பத் தானியங்கி பயிற்சி முறையை இடைவிடாது மாற்றிக்கொண்டு போகும். புரிந்ததா?"

"புரிந்தது."

"நல்லவேளைதான்! நீங்கள் போகலாம்"

...ஆயிரத்து முன்னூற்று நாற்பத்து இரண்டாவது தர்க்கமுறைத் தேட்டம், தேற்றத்தின் நிரூபணத்துக்கு உரிய பதினாறாவது மாற்றுப் பாடம். அப்போதும் போதனைத் தடுப்புக் கருவி "விஷயம் கிரகிக்கப்படவில்லை. முறையை மாற்றுக" என்ற குறியைக் காட்டுகிறது. மீண்டும் தர்க்கமுறைத் தேட்டம். குறி: "தேற்றத்தின் நிரூபணத்துக்கு உயர்நிலைப் பள்ளித் தர அடிப்படை அறிவு தேவைப்படுகிறது." உத்தரவு: "தொடக்க பீஜகணிதம் போதிக்கவும்." குறி: "விஷயம் ஓரளவு கிரகித்துக் கொள்ளப்பட்டுவிட்டது." மீண்டும் தேற்றத்தின் நிரூபணம் பற்றிய போதனை, நிரூபணத்தின் முடிவில் - குறி: "அடிப்படை அறிவு இழக்கப்பட்டுவிட்டது." மீண்டும் முறை மாற்ற உத்தரவு மீண்டும் தர்க்கமுறைத் தேட்டம்... விசைப் பலகைமீது சிவப்புக் குறி விளக்கு சுடர்ந்தெரிகிறது: "மட்டுமீறிச் சூடேறிவிட்டது." மின்மட்டமாற்றியிலிருந்து குபுகுபுவென்று புகை வருகிறது. தானியங்கி நிறுத்தப்படுகிறது.

முஹாரீன்ஸ்க்கிய் மின்னோட்டத்தை ஏற்பதற்கான இரு துருவக் கருவியைத் தலையிலிருந்து கழற்றிவிட்டு வியர்வையைத் துடைத்துக்கொள்கிறான். இந்த மாதிரி அவனுக்கு இதுவரை ஏற்பட்டதில்லை! பழைய மின்னனுப் போதக-பரீட்சை இயந்திரத்தின்மேல் இப்போது அவனுக்கு அன்புகூட உண்டாகிறது. அதைத் தாங்குவது ஒப்பிடமுடியாத அளவு எளிதாய் இருந்தது: வகுப்பு நேரம் முழுவதும் தூங்கலாம். அப்புறம் கேள்விகளுக்குப் பதிலே அளிக்காமல் இருந்துவிட வேண்டும், அவ்வளவுதான். "ஏதொசவிபோ"வோ, தூங்கவே விடுவதில்லை! நல்லவேளை, தானியங்கிக் காப்புக் கருவி இடையிடையே அதை நிறுத்திவிடுகிறதோ, அவன் பிழைக்கிறானோ.

முஹாரீன்ஸ்க்கிய் சிந்தனையைக் கலைக்கிறது உருக்காட்டித் தொலைபேசி மணி. திரையில் பிரிவுத் தலைவர்.

"நீங்கள் ஏன் ஒன்றும் செய்யாமல் இருக்கிறீர்கள்?"

"தானியங்கி சூடு ஆறுகிறது."

அவனுடைய கெட்ட வேளை, விசைப் பலகைமீது பச்சை விளக்கு எரியத் தொடங்குகிறது. முஹாரீன்ஸ்க்கிய் பெருமூச்சு



விட்டு இருதுருவக் கருவியைத் தலையில் மாட்டிக்கொள்கிறான்.

மறுபடி தர்க்கமுறைத் தேட்டம், முஹாரீன்ஸ்க்கியின் மூளையில் அவனுக்குக் கரிப்பான சமன்பாடுகள் மூண்டெரிகின்றன. அவன் தானியங்கியுடன் போராடக் கடுமுயற்சி செய்கிறான். காற்பந்தாட்டத்தின் இரண்டாம் பாதி முடிவில் தெமேந்தியேவ் கோல் போடத் தவறியிராவிட்டால் என்ன ஆகியிருக்கும் என்று எண்ணமிடுகிறான். இரண்டாம் ஆண்டு மாணவியை மிக மிக ஆசையூட்டும் நிலைமைகளில் உருவகப் படுத்திப் பார்க்கிறான். ஆனால் எல்லாம் வீண்.

... தர்க்கமுறைத் தேட்டம், குறி, உத்தரவு, முறைமாற்றம், போதனை முறையில் மாறுதல், குறி, தர்க்கமுறைத் தேட்டம்...

ஏழு நாட்கள் கழிந்தன. ஆ, அற்புதமே! போதனைப்பயிற்சி முஹாரீன்ஸ்க்கிய்க்கு இப்போது முன்போலச் சித்திரவதையாக இல்லை. தானியங்கியும் அவனுக்கு ஏற்றபடி தன்னை இசைவித்துக் கொண்டுவிட்டது போலிருந்தது. மட்டுமீறிச் சூடேறிவிட்டதைக் காட்டும் குறிகள் வர வர அரிதாகவே சுடரலாயின.

இன்னும் ஒரு வாரம் கழிந்தது. மீண்டும் ஒலிபெருக்கி கல்லூரிக் கட்டிடம் முழுவதிலும் கேட்கும்படி ஒலித்தது:

"முதல் ஆண்டு மாணவர் முஹாரீன்ஸ்க்கிய், தோற்றவகைச் சுட்டு எண் ஆயிரத்து முந்நூற்று எண்பத்து ஆறின் கீழ் பதினாறு ம.ப, வானொலி இயந்திரவியல் பிரிவுத் தலைவரால் அழைக்கப்படுகிறார்."

இந்தத் தடவை முஹாரீன்ஸ்க்கிய் தோற்றவகைப் பகுப்பாய்வுக் கருவியின் எல்லாவற்றையும் காணவல்ல பார்வைக்குத் தப்பி ஒளிய முயலவில்லை.

"உங்களுக்கு வாழ்த்து கூறுகிறேன், முஹாரீன்ஸ்க்கிய். நீங்கள் அசாதாரணத் திறமைகளைக் காட்டிவிட்டீர்கள்" என்றார் பிரிவுத் தலைவர்.

வாழ்நாளிலேயே முதல் தடவையாக முஹாரீன்ஸ்க்கிய் முகம் சிவந்தான்.

" 'ஏதொசவிபோ'வின் வியப்பூட்டும் திறமைகளைக் குறிப்பிடுவதே சரியாயிருக்கும் என்று நினைக்கிறேன். இது மெய்யாகவே சிறந்த புதுப்புனைவு" என்று பணிவுடன் விடை

பகர்ந்தான் முஹாரீன்ஸ்க்கிய்.

"உங்கள் திறமைகளைப் பற்றி நான் சொல்லும்போது உங்களையே தான் குறிக்கிறேன். 'ஏதொசவிபோ'வைப் பொறுத்தவரை, உங்களோடு இரண்டு வார காலம் கலந்து பழகியதன் சுவடுகள் அதன்மேல் பதியாமல் போய்விடவில்லை. இப்போது அது சாதாரணத் தானியங்கி அல்ல, ஏதோ டான் ஜுவான், காஸானோவா, அல்லது உங்களுக்குப் புரியும்படி சொல்வதானால் பெண்பித்தன். கண்ணுக்கு இனிய மாணவிகளுக்கு மட்டுமே அது உயர்ந்த மதிப்பெண்கள் வழங்குகிறது. போதாக்குறைக்கு அது ஒரே காற்பந்தாட்டப் பைத்தியம் ஆகிவிட்டது. சோதனைக் குழு மாணவர்கள் எல்லோரையும் வேறு காற்பந்து மோகம் பிடித்தவர்கள் ஆக்கிவிட்டது. படு சோம்பேறி ஆகிவிட்டது அது. நாளைக்கே அதைப் பகுதிகளாகப் பிரித்துவிடப் போகிறோம். ஆனால் உங்களை, நீங்களே புரிந்துகொள்வீர்கள்..."

"புரிந்துகொண்டேன். இந்த... ஹ்ம்... அதாவது, இந்த மாணவர்களுக்குப் போதனை அளிப்பதில் நீங்கள் மேலும் வெற்றிகள் பெறவேண்டும் என்று விரும்புகிறேன்"

தாழக் குனிந்து வணங்கிவிட்டுக் கதவுப் பக்கமாக நடந்தான் முஹாரீன்ஸ்க்கிய்.

"எங்கே போகிறீர்கள்?"

"எங்கேயாவது? டிக்கட்டு வாங்கத்தான், ஊருக்குப் போவதற்கு. நீங்கள்தாம் என்னை விலக்கிவிட்டீர்களே."

"மாணவர் பட்டியலிலிருந்து உங்கள் பெயரை நாங்கள் மெய்யாகவே அகற்றிவிட்டோம்தான். ஆனால் போதகத் தானியங்கிகள் பகுதிச் சீனியர் சோதனையாளராக உங்களை நியமனம் செய்திருக்கிறோம். இன்று முதல், ஏற்புத் தொடர்பு உள்ள ஓர் இயந்திரம்கூட, உங்களுடன் இருவர் போர் நடத்தி வெற்றி பெறாமல் சோதனைக்கூடத்திலிருந்து வெளியேறாது. எங்களுக்கு நீங்கள் அரிதிலே கிடைத்த புதையல்! நீங்கள் எங்களைக் கைவிடமாட்டீர்கள் என்று உறுதி கூறுங்கள், முஹாரீன்ஸ்க்கிய்!"





அனத்தோலிய் த்னெப்ரோவ் (பிறப்பு 1919) - பௌதிக இயல் அறிஞர். போருக்குப் பிந்தைய சோவியத் விஞ்ஞானக் கற்பனை இலக்கியத்தைத் தொடங்கியவர்களில் ஒருவர். "மாக்ஸ்வெல் சமன்பாடுகள்", "நான் மறைந்த உலகம்", "இறவாமைச் சூத்திரம்", "சிவப்பு மம்மி" முதலிய அநேக கதைத் தொகுப்புக்களும் நவீனங்களும் எழுதியுள்ளார். அவரது கதைகள் விறுவிறுப்பானவை, தற்காலப் பிரச்சினைகளை உள்ளடக்கியவை, விஞ்ஞானத்தின்பாலும் அதன் படைப்பாளர்கள்பாலும் பாராட்டுணர்வும் விஞ்ஞானத்தை மனிதச் சமுதாயத்துக்கு எதிராகப் பயன்படுத்த முயலுவோர் பால் வெறுப்பும் நிறைந்தவை. த்னெப்ரோவின் "நண்டுகள் தீவில் திரிகின்றன" என்னும் கதை இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

# நண்டுகள் தீவில் திரிகின்றன

அனத்தோலிய் த்னெப்ரோவ்

"டேய், ஆட்களா, ஜாக்கிரதையாக இறக்குங்கள்!" என்று மாலுமிகளை நோக்கிக் கத்தினான் கூக்ளிங்கு.

மாலுமிகள் இடுப்பளவு தண்ணீரில் நின்று, சிறிய மரப் பெட்டி ஒன்றைப் படகின் விளிம்புமேல் வைத்து அதை விளிம்போரமாக நகர்த்த முயன்று கொண்டிருந்தார்கள்.

பொறி இயலான் கூக்ளிங்கு தீவுக்குக் கொண்டு வந்திருந்தவற்றில் கடைசிப் பெட்டி அது.

பருத்துச் சிவந்த கழுத்தைப் பலநிறக் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டே, "வெக்கையோ வெக்கை! கணப்பு போல அல்லவா பொசுக்குகிறது!" என்று முனகினான் கூக்ளிங்கு. பின்பு வியர்வையில் நனைந்த சட்டையைக் கழற்றி மணலில் எறிந்துவிட்டு, "உடைகளைக் களையுங்கள் பாத், இங்கே நாகரிகத்தின் வாடை கூடக் கிடையாது" என்றான்.

கரையிலிருந்து ஓர் இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் அலைகள் மேல் மெதுவாக அசைந்து ஆடிக் கொண்டிருந்த கனமற்ற பாய்மரக் கப்பலை நான் சோர்வுடன் நோக்கினேன். இருபது நாட்களுக்குப் பிறகு அது எங்களை ஏற்றிச் செல்ல வரும்.

"உங்கள் இயந்திரங்களுடன் வெயில் எறிக்கும் இந்த நரகத்துக்கு நாம் வந்திருப்பது எந்த இழவுக்காகத்தான் தேவைப்பட்டதோ? இந்த வெயிலில் பொசுக்கினால் நாளைக்கே நம் தோல் உரிந்து சிகரெட்டுக் காகிதம் போல ஆகிவிடும்" என்று உடை களைந்தவாறே கூக்ளிங்கிடம் சொன்னேன்.

"அட அது ஒன்றும் பிரமாதம் இல்லை. வெயில் நமக்கு மிகவும் பயன்படும். பாருங்கள், இப்போது சரியாக நண்பகல். சூரியன் நம் தலைகளுக்கு நேர் உயரே இருக்கிறது."

"பூமத்தியரேகையில் எப்போதுமே இப்படித்தான். எல்லாப் பூகோளப் பாடப் புத்தகங்களிலும் இது எழுதப்பட்டிருக்கிறதே" என்று "புறா" என்னும் பெயருள்ள எங்கள் கப்பலில் பதித்த பார்வையை அகற்றாமலே முணுமுணுத்தேன்.

மாலுமிகள் அருகே வந்து பொறி இயலான் முன்னே மௌனமாக நின்றார்கள். அவன் நிதானமாக நோட்டுக் கற்றையை எடுத்தான்.

"போதுமா?" என்று சில நோட்டுக்களை அவர்கள் பக்கம் நீட்டியபடி கேட்டான்.

மாலுமிகளில் ஒருவன் தலையை அசைத்தான்.

"அப்படியானால் உங்கள் வேலை தீர்ந்தது. நீங்கள் கப்பலுக்குத் திரும்பலாம். காப்டன் கைலுக்கு நினைவு படுத்துங்கள், இன்னும் இருபது நாட்களில் நாங்கள் அவரை எதிர்பார்க்கிறோம் என்று...



வேலை தொடங்குவோம், பாத். எப்போது ஆரம்பிப்போம் என்று எனக்கு ஒரே ஆவலாய் இருக்கிறது."

நான் அவனை உற்றுப் பார்த்தேன்:

"உள்ளதை உள்ளபடி சொல்வதானால் நாம் எதற்காக இங்கே வந்திருக்கிறோம் என்பதை நான் அறியேன். அங்கே கடற்படைத் தலைமை அலுவலகத்தில் எனக்கு எல்லாவற்றையும் விவரிப்பது உங்களுக்கு அசௌகரியமாய் இருந்திருக்கலாம் என்பது எனக்குப் புரிகிறது. ஆனால் இப்போது நீங்கள் சொல்லலாம் என்று நினைக்கிறேன்"

கூக்ளிங்கு முகத்தைச் சுளித்து மணலைப் பார்த்தான்.

"தாராளமாகச் சொல்லலாம். நேரம் மட்டும் இருந்தால் அங்கேயே உங்களுக்கு எல்லாவற்றையும் சொல்லியிருப்பேன்..."

அவன் புளுகுகிறான் என்பதை நான் உணர்ந்தேன், ஆனால் ஒன்றும் சொல்லவில்லை. கூக்ளிங்கோ கொழுத்த உள்ளங்கையால் செக்கச்சிவந்த கழுத்தைத் தேய்த்துக்கொண்டு நின்றான்.

பொய் சொல்லத் திட்டமிடுகையில் அவன் இவ்வாறு செய்வான் என்பதை நான் அறிந்திருந்தேன்.

இப்போது எனக்கு இது கூடப் போதுமாய் இருந்தது.

"விஷயம் என்ன தெரியுமா, பாத், நாம் செய்யப் போவது ஒரு வேடிக்கையான சோதனை, ஒரு சித்தாந்தத்தைச் சரி பார்ப்பதற்காக. இந்த இவன் இருக்கிறானே... அட அவன் பெயர் என்ன..." என்று மென்று விழுங்கியவாறு, என்னைக் கேள்விக் குறிப்போடு பார்த்தான்.

"யார் பெயர்?"

"ஆங்கில விஞ்ஞானியின் பெயர்... அட சனியனே, அவன் பெயர் நினைவிலிருந்து நழுவிவிட்டது. ஆ, ஞாபகம் வந்துவிட்டது, சார்லஸ் டார்வின்..."

நான் அவன் பக்கத்தில் நெருங்கி அவனுடைய திறந்த தோள் மேல் கையை வைத்தேன்.

"கேளுங்கள், கூக்ளிங்கு. நான் அறிவற்ற மந்தன், சார்லஸ் டார்வினை அறியமாட்டேன் என்று நீங்கள் நினைக்கிறீர்கள் போலிருக்கிறது! புளுகியது போதும். மாகடலுக்கு நடுவில் உள்ள

இந்தக் கொதிக்கும் மணல் துண்டில் நாம் எதற்காகச் சாமான்களுடன் இறங்கியிருக்கிறோம் என்று தெளிவாகச் சொல்லுங்கள். மேற்கொண்டு டார்வின் பெயரை எடுக்காதீர்கள், உங்களை வேண்டிக்கொள்கிறேன்" என்றேன்.

கூக்ளிங்கு பொய்ப்பற்கள் நிறைந்த வாயை ஆவெனத் திறந்து உரக்கச் சிரித்தான். ஒருபுறமாக நாலைந்து அடி விலகிச் சென்று அவன் கூறினான்:

"ஆனாலும் நீங்கள் வெறும் மக்கு, பார். நாம் இங்கே சோதனை செய்து சரிபார்க்கப் போவது டார்வின் சித்தாந்தத்தையே தான்."

"இதற்காகத்தான் நீங்கள் பத்து பெட்டிகள் நிறைய இரும்பை இங்கே எடுத்து வந்திருக்கிறீர்களாக்கும்?" என்று மறுபடி அவன் அருகே போய் வினவினேன். வியர்வை வழியப் பளிச்சிட்ட அந்தத் தடியன்மேல் வெறுப்பு எனக்குள் பொங்கிற்று.

"ஆமாம்" என்று வெடுக்கெனச் சொன்னான் அவன். புன்னகை அவன் முகத்திலிருந்து மறைந்தது. "உங்களுடைய கடமை என்ன என்றால், முதலில் ஒன்றாம் எண் இட்ட பெட்டியைத் திறந்து கூடாரம், குடிநீர், உணவுப்பண்ட டப்பாக்கள் ஆகியவற்றையும் மற்றப் பெட்டிகளைத் திறப்பதற்குத் தேவையான கருவியையும் வெளியில் எடுப்பதுதான்."

சுடுகருவிப் பயிற்சிக் களத்தில் அவனுக்கு நான் அறிமுகம் செய்து வைக்கப்பட்டபோது பேசிய அதே தோரணையில் இப்போது என்னிடம் பேசினான் கூக்ளிங்கு. அப்போது அவன் இராணுவச் சீருடை அணிந்திருந்தான். நானும் அப்படியே.

"நல்லது" என்று பற்களின் இடை வழியாகக் கூறிவிட்டு ஒன்றாம் எண் இட்ட பெட்டி அருகே சென்றேன்.

இரண்டு மணி நேரத்திற்கெல்லாம் பெரிய கூடாரம் இங்கேயே கரைமீது அடிக்கப்பட்டுத் தயாராகிவிட்டது. மண்வெட்டி, கடப்பாரை, சம்மட்டி, சில திருப்புளிகள், செதுக்குளி, கருமானுக்குரிய பிற கருவிகள் ஆகியவற்றை நாங்கள் கூடாரத்துக்குள் கொண்டு வைத்தோம். பலவகை உணவுப் பண்டங்கள் அடங்கிய சுமார் நூறு டப்பாக்களையும் குடிநீர்ப் பாத்திரங்களையும் இங்கேயே வரிசையாக அடுக்கினோம்.

குழுத்தலைவன் என்ற தனது அந்தஸ்தைப் பாராமல் கூக்ளிங்கு



எருதுபோல உழைத்தான். சோதனை தொடங்க அவன் மெய்யாகவே ஆவல் கொண்டு துடித்தான். எங்கள் கப்பல் நங்கூரம் கிளப்பி, தொடுவானுக்கு அப்பால் மறைந்துவிட்டதைக் கூட வேலை மும்முரத்தில் நாங்கள் கவனிக்கவில்லை.

மாலைச் சாப்பாட்டுக்குப் பிறகு நாங்கள் இரண்டாம் எண் பொறித்த பெட்டியைத் திறந்தோம். ரெயில்வே பிளாட்பாரங்களில் சுமை ஏற்றிச் செல்லப் பயன்படுபவை போன்ற சாதாரணமான இரட்டைச் சக்கரத் தள்ளுவண்டி ஒன்று அதில் இருந்தது.

நான் மூன்றாவது பெட்டியின் பக்கம் போனேன், ஆனால் கூக்ளிங்கு என்னைத் தடுத்தான்.

"முதலில் வரைபடத்தைப் பார்ப்போம். மற்றச் சாமான்களை எல்லாம் வெவ்வேறு இடங்களுக்கு நாம் எடுத்துச் செல்ல வேண்டியிருக்கும்" என்றான்.

நான் வியப்புடன் அவனைப் பார்த்தேன்.

"சோதனைக்கு அப்படிச் செய்வது அவசியம்" என்று அவன் விளக்கினான்.

தீவு கவிழ்த்த தாம்பாளம்போல வட்டமாக இருந்தது. வடக்கே, நாங்கள் இறங்கிய இடத்தில் சிறு குறுங்குடா அமைந்திருந்தது. சுமார் ஐம்பது மீட்டர் அகலமுள்ள மணற் பரப்பு அதற்கு விளிம்பு கட்டியிருந்தது. கரையோர மணல் வளைத்துக்கு அப்பால் இருந்தது அதிக உயரம் அற்ற பீடபூமி. வெக்கையால் வாடிய குட்டைப் புதர்கள் அதன்மேல் வளர்ந்திருந்தன.

தீவின் வட்டம் மூன்று கிலோமீட்டருக்கு மேல் இராது.

வரைபடத்தில் சிவப்புப் பென்சிலால் சில குறிப்புக்கள் செய்யப்பட்டிருந்தன. சில மணற்கரையை ஒட்டினாற் போலவும் வேறு சில உட்பகுதியிலும்.

"இப்போது நாம் திறக்கப்போவதை இதோ, இந்த இடங்களுக்குக் கொண்டு சேர்க்க வேண்டும்" என்றான் கூக்ளிங்கு.

"இவை என்ன, அளக்கும் கருவிகளா?"

"இல்லை" என்று ஹி-ஹி-ஹி என இளித்தான் பொறி இயலான். தான் அறிந்ததை மற்றவன் அறியாவிட்டால் இப்படி இளிக்கும் வெறுப்பூட்டும் பழக்கம் அவனுக்கு உண்டு.

மூன்றாவது பெட்டி பயங்கரமாகக் கனத்தது. ஏதோ தொழிற் சாலை இயந்திரம் அதற்குள் வைக்கப்பட்டிருக்கும் என்று நினைத்தேன். ஆனால் முதல் பலகைகளை அகற்றியதுமே எனக்கு ஏற்பட்ட மலைப்பில் நான் வாய்விட்டுக் கத்தத் தெரிந்தேன். வெவ்வேறு அளவுகளும் வடிவங்களும் கொண்ட உலோகப் பாளங்களும் துண்டுகளும் அதிலிருந்து வெளியே சரிந்தன. உலோகத் துண்டுகளால் செம்மச் செம்ம நிறைந்திருந்தது அந்தப் பெட்டி.

சதுரமும் வட்டமும் உருண்டையுமான கனத்த உலோகத் துண்டுகளைச் சாய்த்துக் கொட்டியவாறு, "நாம் கனசதுரங்களை அடுக்கி வைக்கும் விளையாட்டு ஆடப்போகிறோம் போலிருக்கிறதே" என்றேன்.

"அதற்கு வாய்க்காது" என்று கூறிவிட்டு அடுத்த பெட்டியைத் திறக்கலானான் கூக்ளிங்கு.

நாலாவது முதல் ஒன்பதாவது வரை எல்லாப் பெட்டிகளுமே மூன்றாவதுபோன்றே பல வகை உலோகத் துண்டுகளால் நிறைந்திருந்தன.

இந்தத் துண்டுகள் மூன்று வகையானவை: சாம்பல், சிவப்பு, வெள்ளி நிறங்கள் கொண்டவை. அவை இரும்பாலும் செம்பாலும் துத்தநாகத்தாலும் ஆனவை என்று நான் எளிதில் தீர்மானித்தேன்.

கடைசி, பத்தாவது பெட்டியைத் திறக்க நான் முற்பட்டபோது கூக்ளிங்கு சொன்னான்:

"உலோகத் துண்டுகளைத் தீவின் வெவ்வேறு இடங்களுக்குக் கொண்டு சேர்த்தபிறகு இதைத் திறப்போம்."

அடுத்த மூன்று நாட்களும் நானும் கூக்ளிங்கும் உலோகத் துண்டுகளைக் கைவண்டியில் ஏற்றித் தீவின் பல பகுதிகளுக்குக் கொண்டு சேர்த்தோம். இந்தத் துண்டுகளைச் சிறு சிறு குவியல் களாக நாங்கள் குவித்தோம். சில மேற்பரப்பிலேயே குவிக்கப்பட்டன. மற்றவற்றைப் பொறி இயலானின் கட்டளைப் படி நான் தோண்டிப் புதைத்தேன். சில குவியல்களில் எல்லாவகை களையும் சேர்ந்த உலோகத் துண்டுகள் இருந்தன. மற்றவற்றிலோ, ஒரே வகைத் துண்டுகள் மட்டுமே இருந்தன.

இந்த வேலை எல்லாம் முடிந்தபின் நாங்கள் எங்கள்



கூடாரத்துக்குத் திரும்பி, பத்தாவது பெட்டியை அணுகினோம்.

"திறவுங்கள், ஆனால் ஜாக்கிரதையாக" என்று உத்தரவிட்டான் கூக்ளிங்கு.

இந்தப் பெட்டி மற்றவற்றைக் காட்டிலும் மிக லேசாகவும் அளவில் சிறியதாகவும் இருந்தது.

அதில் மரத்தூள் திணியத்திணிய நிறைத்து அழுத்தப் பட்டிருந்தது. நமுதாவாலும் மெழுகுத்தாளாலும் சுற்றப்பட்ட ஒரு பொட்டலம் அதன் நடுவில் இருந்தது.

எங்கள் கண்முன் நின்றது மிக விசித்திரமான ஒரு இயந்திரம்.

முதல் பார்வைக்கு அது சாதாரண நண்டு வடிவத்தில் செய்யப் பட்ட பெரிய உலோக விளையாட்டுக் கருவிபோலத் தோன்றியது. ஆனால் இது வெறும் நண்டு அல்ல. கணுக்கள் உள்ள ஆறு பெரிய கால்கள் தவிர முன்னே நுண்மையான இரு ஜோடி உணர்கொம்புகளும் அதற்கு இருந்தன. அவற்றின் நுனிகள் உறைக்குள் மறைந்திருந்தன. இந்த உறை விகாரமான ஐந்து ஒன்றின் முன் துருத்திய, பாதி திறந்த வாய் போன்று இருந்தது. மெருகிட்ட உலோகத்தால் செய்த பரவளைவுக் கண்ணாடி நண்டின் முதுகின் மேல் உட்புறம் ஒளிர்ந்தது. அதன் நடுவில் கருஞ்சிவப்புப் படிகம் இருந்தது. சாதாரண நண்டைப்போல் அன்றி இதற்கு முன்னும் பின்னுமாக இரண்டு ஜோடிக் கண்கள் இருந்தன.

நான் ஒன்றும் புரியாமல் அந்தப் பொருளை உற்று நோக்கினேன்.

"பிடிக்கிறதா?" என்று நீண்ட மௌனத்துக்குப் பின் கேட்டான் கூக்ளிங்கு.

நான் தோள்களைக் குலுக்கினேன்.

"நாம் மெய்யாகவே கனசதுரங்களையும் விளையாட்டுப் பொருள்களையும் வைத்து விளையாடப் போகிறோம் என்று தோன்றுகிறது" என்றேன்.

"இது அபாயம் நிறைந்த விளையாட்டுக் கருவி. இதோ நீங்கள் காண்பீர்கள். அதைத் தூக்கி மணல் மேல் வையுங்கள்" என்று சுயதிருப்தி ததும்பக் கூறினான் கூக்ளிங்கு.

நண்டு லேசாய் இருந்தது அதன் எடை மூன்று கிலோ

கிராமுக்கு மேல் போகாது.

மணல்மேல் அது மிக நிலையாக நின்றது.

"ஊம், அப்புறம் என்ன?" என்று கிண்டலாகக் கேட்டேன்.

"கொஞ்சம் பொறுப்போம். இதற்குச் சற்று சூடு பிடிக்கட்டும்."

நாங்கள் மணல்மேல் உட்கார்ந்து அந்த உலோக விகிருதியை நோக்கலானோம். இரண்டு நிமிடங்களுக்கெல்லாம் அதன் முதுகின் மேல் இருந்த கண்ணாடி சூரியனின் பக்கம் மெதுவாகத் திரும்பியதைக் கண்டேன்.

"ஓகோ, இது உயிர்ப்பு அடைவதுபோல் இருக்கிறதே!" என்று கூவி எழுந்து நின்றேன்.

நான் எழுந்ததும் என் நிழல் தற்செயலாக இயந்திரத்தின்மேல் விழுந்தது. உடனே நண்டு கால்களால் தத்தித் தத்தித் துள்ளி மறுபடி வெயிலில் நின்றது. நான் திடுக்கிட்டு ஒருபுறம் நீளத் தாவிக் குதித்தேன்.

"எப்படி இருக்கிறது விளையாட்டுக் கருவி! பயந்து விட்டீர்களோ?" என்று கெக்கலித்தான் கூக்ளிங்கு.

வியர்வை துளிர்த்த நெற்றியை நான் துடைத்துக்கொண்டேன்.

"ஆண்டவன் பெயரால் கேட்கிறேன், கூக்ளிங்கு, சொல்லுங்கள், இதை வைத்துக்கொண்டு நாம் என்ன செய்யப்போகிறோம்? எதற்காக நாம் இங்கே வந்திருக்கிறோம்?" என்று கேட்டேன்.

கூக்ளிங்கும் எழுந்து என் அருகே வந்து ஆழ்ந்த குரலில் சொன்னான்:

"டார்வின் சித்தாந்தத்தைச் சரி பார்ப்பதற்காக."

"இருக்கலாம். ஆனால் அது உயிரியல் சித்தாந்தம் ஆயிற்றே. இயற்கைத் தேர்வையும் பரிணாமத்தையும் பிறவற்றையும் பற்றிய சித்தாந்தம் அல்லவா அது?" என்று நான் முணுமுணுத்தேன்.

"அதுவேதான். அதோ பாருங்கள், நமது நண்டார் தண்ணீர் குடிக்கப் போகிறார்!"

நான் மலைத்துப்போனேன். இயந்திர நண்டு கரைக்கு ஊர்ந்து போய், உறிஞ்சு குழலை விட்டு நீரை உள் இழுத்தது. நீர் பருகி முடித்ததும் அது மறுபடி ஊர்ந்து வெயிலுக்கு வந்து அசையாமல் நின்றது.



நான் அந்தச் சிறு பொறியை நோக்கினேன். அதன்மேல் எனக்குப் பயங்கர அருவருப்பு உண்டாயிற்று. அதில் அச்சமும் கலந்திருந்தது. பாங்கற்ற அந்த இயந்திர நண்டு ஏதோ ஒரு வகையில் கூக்ளிங்கை ஒத்திருந்ததாகக் கணப்போது எனக்குத் தோன்றியது.

சற்றுநேரம் பேசாதிருந்தபின், "நீங்கள்தாம் இதைத் திட்டமிட்டு உருவாக்கினீர்களா?" என்று கூக்ளிங்கிடம் கேட்டேன்.

"ஹ்ம்-ம்" என்று ஊம் கொட்டிவிட்டு மணலில் நீட்டிப் படுத்தான் அவன்.

நானும் படுத்து அந்த விந்தைப் பொறியை நிலைக்குத்திட்டு நோக்கினேன். இப்போது அது முற்றிலும் உயிர் அற்றதாகத் தோன்றிற்று.

நான் அதன் அருகே ஊர்ந்து போய் அதை நோட்டமிடலானேன்.

நண்டின் முதுகு முன்னும் பின்னும் தட்டையான அடித் தளங்கள் கொண்ட அரைநீளுருளையின் மேற்பரப்பு போல் இருந்தது. இந்த அடித்தளங்களில்தான் விழிகளை ஒத்த இரண்டிரண்டு துளைகள் இருந்தன. துளைகளின் உள்ளே படிகங்கள் ஒளிர்ந்தமையால் அவை விழிகள் என்ற எண்ணம் இன்னும் வலுப்பட்டது. நண்டின் உடலுக்கு அடியில் தட்டையான மேடை - வயிறு - தெரிந்தது. மேடையின் மட்டத்துக்குச் சற்று உயரே மூன்று ஜோடி பெரியவையும் இரண்டு ஜோடி சிறியவையும் ஆன, கணுக்கள் உள்ள இடுக்கிகள் உள்ளிருந்து வெளியே நீண்டிருந்தன.

நண்டின் உட்புறத்தைக் கவனித்துப் பார்க்க வாய்க்கவில்லை.

இந்த விளையாட்டுக் கருவியை நோக்கியவாறே, கடற்படைத் தலைமைக் காரியாலயம் இதற்கு இவ்வளவு பெருத்த முக்கியத்துவம் அளித்து, இந்தத் தீவுக்குப் பயணம் செய்யத் தனிக் கப்பலைச் சாதன வசதிகளுடன் அனுப்பி வைத்தது ஏன் என்று புரிந்துகொள்ள முயன்றேன்.

கூக்ளிங்கும் நானும் அவரவர் எண்ணங்களில் ஆழ்ந்தவர் களாக மணலில் வெகு நேரம் படுத்திருந்தோம். சூரியன் மேற்கே தொடுவானை நெருங்கிவிட்டது. தொலைவில் வளர்ந்திருந்த புதர்களின் நிழல் உலோக நண்டின்மேல் பட்டது. பட்டதுமே

அது அனாயாசமாக நகர்ந்து மறுபடி வெயிலில் ஊர்ந்து போய் நின்றது. ஆனால் நிழல் அங்கேயும் அதை எட்டிப்பிடித்தது. அப்போது நண்டு கரையோரமாக ஊர்ந்து நீருக்கு மேலும் மேலும் அருகாக, வெயிலொளி தன்மேல் தொடர்ந்து படுவதற்கு வாகாக இறங்கியது. சூரிய கிரணங்கள் எந்த வகையிலும் தன்மேல் படுவது அதற்கு அவசியம் என்று தோன்றியது.

நாங்கள் எழுந்து, மெதுவாக நகர்ந்த பொறியின் பின்னே நடந்தோம்.

இவ்வாறு நாங்கள் படிப்படியாகத் தீவைச் சுற்றி வந்து, அதன் மேற்குப் பகுதியை அடைந்தோம்.

இங்கே கரையை ஒட்டினாற்போலக் குவிந்து கிடந்தன உலோகத் துண்டுகள். இந்தக் குவியலுக்குச் சுமார் பத்து தாவடி தூரம் வந்ததும் நண்டு வெயிலை மறந்துவிட்டதுபோல அதை நோக்கி விரைந்து ஒரு செப்புத் துண்டின் பக்கத்தில் அசையாது நின்றுவிட்டது.

கூக்ளிங்கு என் கையைத் தொட்டு, "இப்போது கூடாரத்துக்குப் போவோம். சுவையான நிகழ்ச்சிகள் நாளைக் காலையில் நடக்கும்" என்றான்.

கூடாரத்தில் நாங்கள் மௌனமாக உணவு அருந்தினோம். பின்பு லேசான பிளானல் போர்வையைப் போர்த்துக்கொண்டு மடக்குக் கட்டிலில் படுத்தோம். நான் ஒரு கேள்வியும் கேட்காதது கூக்ளிங்குக்குத் திருப்தி அளித்தது என்று எனக்குத் தோன்றியது. அவன் புரண்டு புரண்டு படுத்ததும் சில வேளைகளில் இஹிஹி என்று இளித்ததும் உறங்குவதற்குமுன் என் காதில் பட்டன. மற்றவர் யாருக்கும் தெரியாத ஒரு விஷயத்தை அவன் அறிந்திருந்தான் என்பது அந்த இளிப்புக்கு அர்த்தம்.

## 2

மறுநாள் அதிகாலையில் நான் கடலில் குளிக்கப் போனேன். நீர் வெதுவெதுப்பாக இருந்தது. அகன்ற அலைகளால் சிறிதே கலைக்கப்பட்ட நீரின் மழமழப்பான மேற்பரப்புக்கு உயரே கீழ்த்திசையில் தகதகத்தது சிவந்த புலர்போது. இந்தக் காட்சியை ஆர்வத்துடன் நோக்கியவாறு நான் நெடுநேரம் நீந்திக் கொண்டிருந்தேன். அப்புறம் நான் எங்கள் தங்கிடத்துக்குத் திரும்பிக் கூடாரத்துக்குள் போனபோது இராணுவப் பொறி இயலான் கூக்ளிங்கு அங்கே இல்லை.

நான் அன்னாசிப் பழ டப்பாவைத் திறந்து கொண்டே, "தன் இயந்திர அவலட்சணத்தைக் கண்டு களிக்கப் போயிருக்கிறான் போல் இருக்கிறது" என்று நினைத்துக்கொண்டேன்.

மூன்று பழத்துண்டுகளைக்கூட விழுங்கியிருக்கமாட்டேன், அதற்குள் பொறி இயலானின் குரல் முதலில் தொலைவிலிருந்தும் வரவரத் தெளிவாகவும் கேட்டது:

"லெப்டினன்டு! சீக்கிரம் ஓடி வாருங்கள் இங்கே! சீக்கிரம்! தொடங்கிவிட்டது! சீக்கிரம் ஓடிவாருங்கள்!"

நான் கூடாரத்திலிருந்து வெளியே வந்தேன். மேட்டில் புதர்களுக்கு நடுவே நின்ற கூக்ளிங்கைக் கண்டேன். அவன் என்னைக் கையாட்டி அழைத்தான்.

நீராவி எஞ்சின் போன்ற ஒலியுடன் திணறித் திணறி மூச்சு விட்டவாறு, "போவோம். வாருங்கள், சீக்கிரம்" என்றான்.

"எங்கே?"

"நம் அழகுப் பொறியை நேற்றுவிட்டு வந்தோமே, அந்த இடத்துக்கு."

உலோகத் துண்டுகளின் குவியல் எங்கள் கண்ணுக்குத் தட்டுப்பட்டபோது சூரியன் உயரே எழுந்துவிட்டிருந்தது. உலோகத் துண்டுகள் பிரகாசமாகப் பளிச்சிட்டன. ஆரம்பத்தில் எதையும் நான் தனிப்பிரித்துக் காண முடியவில்லை.

உலோகக் குவியலுக்கு இரண்டே தாவடித் தொலைவுக்குள் வந்த பிறகுதான் நீலம் பாரித்த இரண்டு மெல்லிய புகைத் தாரைகள் மேலே எழும்புவதை முதலில் கவனித்தேன். அப்புறம்... அப்புறம் அடித்த சிலைபோல் நின்றுவிட்டேன். கண்களைக் கசக்கித் துடைத்துக்கொண்டேன். அப்படியும் காட்சி மறைய வில்லை. எதிரே நின்றன இரண்டு நண்டுகள். தலைக்கு நாள் நாங்கள் பெட்டியிலிருந்து எடுத்த நண்டையே அச்சில் வார்த்தவை போன்றவை.

"இவற்றில் ஒன்று உலோகத் துண்டுகளுக்கு அடியில் அகப்பட்டுக் கொண்டிருந்ததா என்ன?" என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

கூக்ளிங்கு பல தடவை குத்திட்டு உட்கார்ந்தான். கைகளைத் தேய்த்தவாறு இளித்தான்.

"அட விடுங்களேன் இந்த இளித்த வாயன் நடிப்பை! இரண்டாவது நண்டு எங்கிருந்து வந்தது?" என்று கத்தினேன்.

"பிறந்தது! இந்த இரவில் பிறந்தது!"

நான் உதட்டைக் கடித்துக்கொண்டு, ஒரு வார்த்தை பேசாமல் நண்டுகளின் அருகே போனேன். அவற்றின் முதுகுகளுக்கு மேலே எழுந்த மெல்லிய புகைத் தாரைகள் காற்றில் கலந்தன. எனக்குத் தான் கண்மயக்கு ஏற்பட்டுவிட்டது என்று முதலில் நினைத்தேன்; இரண்டு நண்டுகளும் மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்தன!

ஆம், அவை வேலை தான் செய்துகொண்டிருந்தன - தங்கள் நுண்ணிய உணர்கொம்புகளால் விரைவாகத் தொட்டுத் தடவிய வாறு. உணர்கொம்புகள் உலோகத் துண்டுகள் மீது பட்டதும் அவற்றின் மேற்பரப்பில் மின் பற்றாசு வைக்கப்படுகையில் ஏற்படுவதுபோன்ற மின் வில் ஏற்பட்டது. இவ்வாறு உலோகத் துண்டுகள் உருக்கப்பட்டன. உருகிய உலோகத்தை நண்டுகள் மளமளவென்று தங்கள் அகன்ற வாய்களுக்குள் செலுத்திக் கொண்டன. இந்தப் பொறி விலங்குகளின் உட்புறம் ஏதோ நொய்யென முரன்றது. சிலவேளைகளில் அவற்றின் வாய்கள் சீறலுடன் பொறிக்கற்றைகளைச் சிதறின. அதன்பின் உணர் கொம்புகளின் இரண்டாவது ஜோடி தயாரான இயந்திரப் பகுதிகளை வெளியே எடுத்து வைத்தது.

இந்தப் பகுதிகள் நண்டின் அடியிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக வெளியே நகர்ந்து வந்த தட்டையான மேடைமீது பொருத்தப்பட்டன.

ஒரு நண்டின் மேடைமீது மூன்றாவது நண்டின் அனேகமாகத் தயாரான பிரதி அதற்குள் பொருத்தப்பட்டுவிட்டது. இரண்டாவது நண்டிலோ பொறியின் புடைப்பு வரைகள் அப்போது தான் உருவாகியிருந்தன. இதைக்கண்டு நான் மலைத்துப் போனேன்.

"இந்த விலங்குகள் தங்களைப் போன்றவற்றைத் தாமே தயாரிக்கின்றனவே!" என்று வியப்புடன் கூவினேன்.

"முற்றிலும் சரி. இந்தப் பொறியின் ஒரே வேலை தன் போன்ற பொறிகளைத் தயார் செய்வதுதான்" என்றான் கூக்ளிங்கு.

"இது நடக்கக்கூடியதுதானா?" என்று கேட்டேன், ஒன்றும் விளங்காமல்.

"ஏன் இல்லை? எந்த இயந்திரமும், உதாரணமாகக் கடைச்சல் இயந்திரம், தன்னையே போன்ற கடைச்சல் இயந்திரத்திற்கு வேண்டிய உறுப்புப் பகுதிகளைத் தயாரிக்கத் தானே செய்கிறது! என் மூளையில் உதித்தது ஒரு கருத்து: ஆதிமுதல் அந்தம் வரை தன்னையே திரும்பத் தயாரிக்கும் தானியங்கிப் பொறியை நிறுவுவது என்ற கருத்து. இந்தப் பொறியின் மாதிரிதான் என் நண்டு."

கூக்ளிங்கு சொன்னதைப் பற்றி எண்ணமிட முயன்றவாறு நான் சிந்தனையில் ஆழ்ந்தேன். அந்தச் சமயத்தில் முதல் நண்டின் வாய் திறந்தது. அகன்ற உலோகப் பட்டை அதிலிருந்து ஊர்ந்து வந்தது. மேடைமேல் பொருத்தப்பட்டிருந்த விசைப் பொறி முழுவதையும் இந்தப் பட்டை மூடியது. இவ்வாறு மூன்றாவது நண்டுப் பொறியின் முதுகு தயாராகிவிட்டது. முதுகு பொருத்தப் பட்டதும் விரைவாக இயங்கும் உணர்கொம்புகள் துளைகள் இட்ட உலோகச் சுவர்களை முன்புறமும் பின்புறமும் பற்றாசு வைத்து இணைத்தன. புதிய நண்டு தயாராகிவிட்டது. அதன் சகோதரர்களில் போலவே இதன் முதுகிலும் ஆழத்தில் உலோகக் கண்ணாடி மையத்தில் சிவப்புப் படிகத்துடன் பளிச்சிட்டது.

"தந்தை" நண்டு மேடையைத் தன் வயிற்றுக்கு அடியில் தூக்கிக் கொண்டது. அதன் "பிள்ளை" சொந்தக் கால்களை மணலில் ஊன்றி நின்றது. அதன் முதுகுக் கண்ணாடி வெயிலின் பக்கமாக மெல்லத் திரும்பத் தொடங்கியதை நான் கண்டேன். சற்று நேரம் நின்றபின் நண்டு இறங்கிப் போய் நீர் பருகிற்று. அப்புறம் வெயிலுக்கு ஊர்ந்து வந்து வெயில் காயத் தலைப்பட்டது.

இதெல்லாம் எனக்குக் கனவில் தெரிகிறது என்று எண்ணினேன்.

இந்தப் புதுப் பிறப்பை நான் பார்வையிட்டு முடிப்பதற்குள், "இதோ, நான்காவதும் தயாராகிவிட்டது" என்று கத்தினான் கூக்ளிங்கு.

நான் தலையைத் திருப்பி, நான்காவது நண்டு பிறந்து விட்டதைக் கண்டேன்.

இதற்கிடையே முதல் இரண்டு நண்டுகள் எதுவுமே நடக்காதது போல உலோகக் குவியலின் பக்கத்தில் நின்று உலோகத் துண்டுகளை உருக்கி உள்ளே செலுத்துவதும் முன்பு செய்ததைத் திரும்பச் செய்வதுமாக வேலையில் முனைந்தன.

நான்காவது நண்டும் கடல் நீரைக் குடிக்கலாயிற்று.

"எந்த இழவுக்காக இவை நீரை உறிஞ்சுகின்றன?" என்று கேட்டேன்.

"மின் சேமக்கலங்களுக்கு இவ்வாறு நீர் ஊற்றப்படுகிறது. வெயில் அடிக்கும் வரை சூரிய வெப்பத்தின் ஆற்றல் நண்டின் முதுகுமேலுள்ள கண்ணாடி, ஸிலிக்கன் மின்கலம், இவற்றின் உதவியால் மின் ஆற்றலாக மாற்றப்படுகிறது. எல்லா வேலை களையும் செய்வதற்கு இது போதுமானதாய் இருக்கிறது. இரவில் தானியங்கிப் பொறி பகலில் மின் சேமக்கலத்தில் சேமிக்கப்பட்ட ஆற்றலால் வேலை செய்கிறது."

"அப்படியானால் இந்த இயந்திர விலங்குகள் பகலும் இரவும் தொடர்ந்து வேலை செய்கின்றனவோ?" என்று கேட்டேன்.

"ஆமாம். இரவும் பகலும். இடைவிடாமல்"

மூன்றாவது நண்டு அசைந்து மற்றவை போலவே உலோகக் குவியலுக்கு ஊர்ந்து சென்றது.

இப்போது மூன்று தானியங்கிகள் வேலை செய்தன. நான்காவது சூரிய ஆற்றலை ஏற்றிக் கொண்டிருந்தது.

"ஆமாம், ஸிலிக்கன் மின்கலத்துக்கு வேண்டிய பொருள் இந்த உலோகக் குவியல்களில் இல்லையே" என்றேன் நான் - பொறிகள் விந்தையான முறையில் திரும்ப நிறுவப்படும் தொழில் நுணுக்கத்தைப் புரிந்து கொள்ள முயன்றவாறு.

"அது தேவையும் இல்லை. அது எவ்வளவு வேண்டுமானாலும் இங்கேயே இருக்கிறதே" என்று காலால் மணலை வாரித் தெளித்தான் கூக்ளிங்கு. "மணல் என்பது ஸிலிக்கன் ஆக்ஸைடு தானே. நண்டின் உள்ளே மின் வில்களின் செயல்பாட்டால் இது தூய ஸிலிக்கனாக மாற்றப்படுகிறது."

நாங்கள் மாலையில் கூடாரம் திரும்பினோம். அதற்குள் உலோகக் குவியலின் அருகே ஆறு தானியங்கிகள் வேலை செய்தன, இரண்டு வெயில் காய்ந்து கொண்டிருந்தன.



"இவை எல்லாம் எதற்காக?" என்று மாலைச் சாப்பாட்டின் போது கூக்ளிங்கிடம் கேட்டேன்.

"யுத்தத்திற்காக. இந்த நண்டுகள் பயங்கர மறைமுக அழிவுக் கருவிகள்" என்று அவன் ஒளிக்காமல் கூறினான்.

"எனக்குப் புரியவில்லை" என்றேன்.

கூக்ளிங்கு அவித்த இறைச்சித் துண்டைச் சுவைத்து விழுங்கி விட்டு நிதானமாகப் பதில் சொன்னான்:

"இம்மாதிரித் தானியங்கிகள் பகைவனின் பிரதேசத்தில் மறைமுகமாக இறக்கப்பட்டால் என்ன ஆகும் என்று எண்ணிப் பாருங்கள்."

"என்ன ஆகிவிடும்?" என்று சாப்பிடுவதை நிறுத்திவிட்டுக் கேட்டேன்.

"பெருக்கல் விருத்தி என்றால் என்ன, தெரியுமா?"

"தெரியும் என்று வைத்துக்கொள்வோம்"

"நேற்று நாம் ஒரே நண்டிலிருந்து தொடங்கினோம். இப்போதோ அவற்றின் எண்ணிக்கை எட்டு ஆகிவிட்டது. நாளைக்கு இது அறுபத்து நான்கு ஆகும். நாளை நின்றோ ஐநூற்றுப் பனிரெண்டு ஆகிவிடும். இப்படியே கணக்கிட்டால் இன்னும் பத்து நாட்களில் இவற்றின் எண்ணிக்கை ஒரு கோடிக்கும் மேல் போய்விடும். இதற்கு முப்பதினாயிரம் டன் உலோகம் தேவைப்படும்..."

இந்த எண்களைக் கேட்டதும் நான் வியப்பினால் கல்லாய்ச் சமைந்துபோனேன்.

"ஆமாம், ஆனால்..."

"இந்த நண்டுகள் குறுகிய காலத்திற்குள் பகைவனின் எல்லா உலோகச் சேமிப்பையும் சீரணித்துவிடும். பகைவனின் எல்லா டாங்கிகளும் பீரங்கிகளும் விமானங்களும் இயந்திரங்களும் பொறிகளும் உபகரண சாதனங்களும் பகைப் பிரதேசத்தில் உள்ள எல்லா உலோகங்களும் இவற்றுக்கு இரையாகி வீணாகிவிடும். ஒரு மாத காலத்தில் உலகின் எந்த மூலையிலும் ஒரு துணுக்கு உலோகம் கூட எஞ்சியிராது. இந்த நண்டுகளை மறுபடி நிறுவுவதற்கே எல்லா உலோகமும் பயன்பட்டுவிடும்... போர்க் காலத்தில் உலோகம் எல்லாவற்றிலும் முக்கியமான யுத்த சாதனம்

என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்."

"கடற்படைத் தலைமை அலுவலகம் உங்கள் விளையாட்டுக் கருவியில் அக்கறை காட்டியது இதனால்தானா...!" என்று கிசுகிசுத்தேன்.

"இதனாலேயேதான். ஆனால் இது முதல் மாதிரி அமைப்பு மட்டுமே. இதை இன்னும் கணிசமாக எளிதாக்கி அதன்மூலம் தானியங்கிகளின் மறு உற்பத்தி வேகத்தை அதிகரிக்க நான் திட்டமிட்டிருக்கிறேன். அதாவது இரண்டு மூன்று மடங்கு அதிகரிக்க. அமைப்பை இன்னும் உறுதியும் கெட்டியும் ஆக்குவேன். இவற்றை இன்னும் விரைவாக இயங்கக்கூடியவை ஆக்குவேன். உலோகச் சேமிப்புக்களுக்குச் செல்லத் தூண்டும் குறி காட்டிகளின் நுண் உணர்வை இன்னும் அதிகப்படுத்துவேன். அப்போது போர்க் காலத்தில் என் தானியங்கிப் பொறிகள் பிளேக் கொள்ளை நோயைவிடக் கொடியவையாக இருக்கும். பகைவன் தன் உலோக சக்தியை இரண்டு மூன்று நாட்களுக்குள் இழந்துவிட வேண்டும் என்பது என் விருப்பம்."

"சரிதான், ஆனால் பகைவனின் பிரதேசத்தில் உள்ள உலோகத்தை எல்லாம் தின்று தீர்த்ததும் இந்தத் தானியங்கிகள் சொந்தப் பிரதேசத்துக்கும் ஊர்ந்து வந்துவிடுமே!" என்றேன்.

"இது இரண்டாவது கேள்வி. தானியங்கிகளின் வேலையைக் குறியீடுகளால் நடக்கும் வகையில் அமைக்கலாம். இந்தக் குறியீடுகளை நாம் அறிவோம் ஆதலால் அவை நம் பிரதேசத்துக்கு வந்ததுமே வேலையை நிறுத்திவிடலாம். இதனால் இன்னொரு லாபமும் உண்டாகும்: நமது பகைவர்களின் எல்லா உலோகச் சேமிப்புக்களையும் நம் தரப்புக்குக் கொண்டு வந்து விடலாம்."

...அன்று இரவு நான் பயங்கரமான கெட்ட கனவுகள் கண்டேன்: உலோக நண்டுகள் படைபடையாக என்மேல் ஊர்ந்தன. அவை உணர்கொம்புகளைச் சிலுப்பின, அவற்றின் உலோக உடல்களுக்கு மேல் பீச்சியடித்தன மெல்லிய புகைத் தாரைகள்.

## 3

பொறி இயலான் கூக்ளிங்கின் தானியங்கிப் பொறிகள் நான்கு



நாட்களுக்கெல்லாம் தீவு முழுவதிலும் ஊரலாயின.

கூக்ளிங்கின் கணக்குப்படி இப்போது அவற்றின் எண்ணிக்கை நாலாயிரத்துக்கும் அதிகமாய் இருந்தது.

வெயிலில் மின்னிய அவற்றின் உடல்கள் எங்கும் காணப் பட்டன. ஒரு குவியலில் உலோகம் தீர்ந்து போனதும் அவை தீவில் சுற்றித் திரிந்து புதிய உலோகக் குவியல்களைக் கண்டு பிடித்தன.

ஐந்தாம் நாள் சூரியன் அஸ்தமிப்பதற்கு முன்னால் நான் ஒரு பயங்கரக் காட்சியைக் கண்டேன்: இரண்டு நண்டுகள் ஒரு துத்த நாகத் துண்டுக்காகப் போராடின.

இது தீவின் தென்பாகத்தில் நடந்தது. அங்கே சில துத்தநாகத் துண்டுகளை நாங்கள் மணலில் புதைத்திருந்தோம். வெவ்வேறு இடங்களில் வேலை செய்துகொண்டிருந்த நண்டுகள், அடுத்த துத்தநாகப் பகுதியைத் தயாரிப்பதற்கு இங்கே அவ்வப்போது ஓடி வந்தன. ஒருமுறை துத்தநாகத் துண்டுகள் இருந்த குழிக்குச் சுமார் இருபது நண்டுகள் ஒரே சமயத்தில் வந்துவிட்டன. அங்கே சரியான நெரிசல் தொடங்கிற்று. பொறிகள் ஒன்றுக்கொன்று இடைஞ்சல் செய்தன. ஒரு நண்டு மற்றவற்றைவிட அதிகத் துடியாக இயங்கிற்று. அது அதிக உரமும் வலிமையும் உள்ளது போல எனக்குத் தோன்றியது.

அது தன் உடன்பிறப்புக்களை இடித்து விலக்கி, அவற்றின் முதுகுகள் மேலாக ஊர்ந்து கிடங்கின் அடியிலிருந்து உலோகத் துண்டை எட்டி எடுப்பதற்காக விடாது முயன்றது. ஆனால் அது இலக்கை நெருங்கிவிட்ட சமயத்தில் அதே உலோகத் துண்டை இடுக்கிகளால் பற்றிக்கொண்டது இன்னொரு நண்டு. இரு பொறிகளும் உலோகத் துண்டை இரு வேறு திசைகளில் இழுத்தன. அதிகத் துடியுள்ளதாக எனக்குத் தோன்றிய இயந்திர நண்டு முடிவில் தன் போட்டியாளியிடமிருந்து உலோகத் துண்டைப் பிடுங்கிக் கொண்டது. ஆயினும் இரையை விட்டு விடப் போட்டியாளி இணங்கவில்லை. அது பின்னே ஓடி எதிராளிமேல் உட்கார்ந்து அதன் வாய்க்குள் தன் மெல்லிய உணர்கொம்புகளை விட்டது.

இரண்டுதானியங்கிகளின் உணர்கொம்புகளும் பின்னிக் கொண்டன. அவை பயங்கர வலிமையுடன் ஒன்றை ஒன்று கிழித்துப் பிய்க்கத் தொடங்கின!

சுற்றும் இருந்த பொறிகளில் எதுவும் இதைப் பொருட்படுத்த வில்லை. இந்த இரண்டுமோ இருப்பதா சாவதா என்பதை முடிவு செய்யும் போராட்டத்தில் முனைந்திருந்தன. மேலே உட்கார்ந்திருந்த நண்டுப் பொறி திடீரென மல்லாக்க விழுந்து விட்டது. இரும்பு மேடை கீழே நழுவிற்று. பொறியின் இயந்திர உட்புறம் வெளித் தெரிந்தது. அந்தக் கணத்தில் அதன் எதிராளி மின்பொறிகளால் பகை இயந்திரத்தின் உடலைப் பட்டை பட்டையாக மளமளவென்று பிய்க்கத் தொடங்கிற்று. இரையின் உடல் துண்டுகளாகப் பிளந்து விழுந்ததும் வெற்றியாளி நெம்பு கோல்களையும் பல்சக்கரங்களையும் கம்பிகளையும் பிய்த்து விரைவாக வாய்க்குள் திணித்துக்கொண்டது.

இந்த முறையில் கைப்பற்றப்பட்ட இயந்திரப் பகுதிகள் வேட்டைக்காரப் பொறியின் உள்ளே போகப்போக அதன் மேடை விரைவாக முன்னே நகரலாயிற்று. அதன்மேல் புதிய பொறி துரிதமாகப் பொருத்தப்பட்டது.

இன்னும் சில நிமிடங்களில் மேடையிலிருந்து மணலில் விழுந்தது புதிய நண்டுப் பொறி.

நான் கண்டவற்றை எல்லாம் கூக்ளிங்கிடம் சொன்னதும் அவன் வெறுமே இளித்தான்.

"இதுதான் வேண்டியதும்" என்றான்.

"எதற்காக?"

"என்னுடைய தானியங்கிப் பொறிகளைச் செவ்வைப்படுத்த விரும்புகிறேன் என்று சொன்னேன் அல்லவா?"

"அதற்கு என்ன? அமைப்பு வரைபடங்களை எடுத்துக்கொண்டு எப்படிச் செவ்வைப்படுத்துவது என்று சிந்தியுங்களேன். இந்த உட்போர் எதற்காக? இந்த ரீதியில் போனால் இவை ஒன்றை ஒன்று தின்று தீர்த்துவிடுமே!"

"சரியாகச் சொன்னீர்கள்! விளைவாக முற்றிலும் செவ்வை யானவை எஞ்சி நிற்கும்."

நான் சற்று சிந்தனை செய்துவிட்டு மறுப்புத் தெரிவித்தேன்:

"முற்றிலும் செவ்வையானவையாவது ஒன்றாவது? இவை எல்லாம் ஒரே மாதிரியானவைதாமே! நான் புரிந்துகொண்டவரை இந்தப் பொறிகள் தம்மைத்தாமே மீண்டும் நிறுவுகின்றன, அல்லவா?"



"முற்றிலும் அச்சில் வார்த்தது போன்று துல்லியமான பிரதியைத் தயாரிப்பது சாத்தியம் என்று நினைக்கிறீர்களா? உராய்வு தடுப்பதற்கான குண்டுகள் தயாரிக்கும்போதுகூட ஒரே மாதிரியான இரண்டு குண்டுகளை உற்பத்தி செய்வது இயலாது. அதுவோ மிகமிக எளிய விஷயம். இங்கேயோ, ஒவ்வொரு தானியங்கி நிறுவுபொறியிலும் உள்ள சரிபார்க்கும் சாதனம், நிறுவப்படும் நகல் தன் அமைப்பை ஒத்திருக்கிறதா என்று சரிபார்க்கிறது. அடுத்து வரும் ஒவ்வொரு பிரதியையும் மூலத்துக்கு ஏற்ப அன்றி, முந்திய பிரதிக்கு ஒப்பத் தயாரித்தால் என்ன ஆகும் என்று எண்ணிப் பாருங்கள். முடிவில், மூலத்தை அறவே ஒத்திராத பொறி ஒன்று நிறுவப்படக்கூடும்."

"அது மூலப் பொறியை ஒத்திருக்கவில்லை என்றால் தன்னையே மீண்டும் உற்பத்தி செய்தல் என்ற அடிப்படைச் செயலை அது நிறைவேற்றாதே" என்று நான் மறுத்துரைத்தேன்.

"அதனால் என்ன வந்தது? அதன் பிணத்தைக் கொண்டு அதிக வெற்றிகரமான பிரதிகள் வேறொரு தானியங்கிப் பொறியை நிறுவி விடும். பொறிகளை அதிகத் துடியானவை ஆக்கும் அமைப்புச் சிறப்புக்கள் எவற்றில் தற்செயலாகக் குவிந்துவிடுமோ அவையே வெற்றிகரமான பிரதிகளாக விளங்கும். அதிக வலிமையும் அதிக விரைவும் அதிக எளிமையும் உள்ள பிரதிகள் இவ்வாறு கட்டாயம் தயாராகும். அதனால்தான் நான் அமைப்பு வரைபடங்களை வைத்துக்கொண்டு பாடுபடப்போவதில்லை. நண்டுப்பொறிகள் இந்தத் தீவில் உள்ள உலோகத்தை எல்லாம் தின்று தீர்த்துவிட்டுத் தங்களுக்குள் போர் தொடங்கி, ஒன்றை யொன்று விழுங்கி மீண்டும் நிறுவத் தொடங்கும்வரை காத்திருப்பதுதான் நான் செய்ய வேண்டியதெல்லாம். இவ்விதமாக எனக்குத் தேவையான தானியங்கிப் பொறிகள் தயாராகிவிடும்.

அன்று இரவு நான் கூடாரத்துக்கு முன்னே மணலில் நெடு நேரம் உட்கார்ந்து கடலை நோக்கியவாறு புகைபிடித்துக் கொண்டிருந்தேன். மனிதகுலத்துக்குப் பெருத்த தீங்குகள் விளைவிக்கும் காரியத்தைக் கூக்ளிங்கு உண்மையாகவே திட்ட மிட்டிருக்கிறானா? உலகில் உள்ள உலோகங்கள் அனைத்தையும் தின்று தீர்க்கவல்ல பயங்கரக் கொள்ளை நோயை, மாகடலின் நடுவே எங்கோ கிடக்கும் இந்த அற்பத் தீவில் நாங்கள் உற்பத்தி செய்து கொண்டிருக்கிறோமா என்ன?

நான் உட்கார்ந்து எண்ணமிட்டுக் கொண்டிருக்கையிலேயே

சில உலோக விலங்குகள் என் அருகாக ஓடிச் சென்றன. ஓடும் போதே அவற்றின் இயந்திரங்கள் கிரீச்சிட்டன, அவை களைப்பின்றி வேலை செய்தன. ஒரு நண்டுப் பொறி என்மேல் மோதியது. நான் அருவருப்புடன் அதை உதைத்துத் தள்ளினேன். அது நிர்க்கதியாக மல்லாக்க விழுந்தது. மறுகணமே வேறு இரண்டு நண்டுகள் அதைத் தாக்கின. கண்களைக் கூசச் செய்யும் மின்பொறிகள் இருளில் மின்னலாயின.

மல்லாக்க விழுந்த ஆக்கங்கெட்ட நண்டு மின்பொறிகளால் துண்டுகளாகக் கூறுபோடப்பட்டது. எனக்கு இது போது போதும் என்று ஆகிவிட்டது. நான் சட்டென்று கூடாரத்துக்குள் போய், பெட்டியிலிருந்து கடப்பாரையை எடுத்தேன். கூக்ளிங்கு அதற்குள் குறட்டைவிட்டுக் கொண்டிருந்தான்.

நண்டுப் பொறிகள் குழுமியிருந்த இடத்துக்குச் சந்தடியின்றி வந்து, அவற்றில் ஒன்றை முழு பலத்துடனும் ஓங்கி அடித்தேன்.

இதனால் மற்றவை மிரண்டு ஓடிவிடும் என்று எதனாலோ எனக்குத் தோன்றியது. உண்மையிலோ, அப்படி ஒன்றுமே நடக்கவில்லை. நான் உடைத்துத் தகர்த்த நண்டை மற்றவை தாக்கின. மீண்டும் மின்பொறிகள் சுடர்ந்தன.

நான் இன்னும் சில முறை தாக்கினேன். ஆனால் இவற்றால் மின்பொறிகளின் எண்ணிக்கை மேலும் அதிகரித்ததே தவிர வேறில்லை. தீவின் உட்பகுதியிலிருந்து இன்னும் சில நண்டுப் பொறிகள் இங்கே ஓடி வந்தன.

இருட்டில் பொறிகளின் புடைப்புவரைகள் மட்டுமே எனக்குப் புலப்பட்டன. அவற்றில் ஒரு பொறி அளவில் சிறப்பாகப் பெரியதுபோல எனக்குத் திடீரெனத் தோன்றியது.

நான் அதையே குறி வைத்துத் தாக்கினேன். ஆனால் என் கடப்பாரை அதன் முதுகில் பட்டதுமே நான் கூச்சலிட்டு வெகு தூரம் அப்பால் துள்ளி விழுந்தேன். கடப்பாரை வழியாக மின்னோட்டம் என் உடலில் ஏறிவிட்டது! எப்படியோ இந்த ஆபாசத்தின் உடல் மின்னாற்றலால் கவசமிடப்பட்டிருந்தது. "பரிணாமப் போக்கின் விளைவாய் ஏற்படும் காப்பு" என்ற கருத்து என் மூளையில் பளிச்சிட்டது.

என் ஆயுதத்தை எடுப்பதற்காகப் பொறிகளின் இரையும் கூட்டத்தை நடுங்கும் உடலுடன் நெருங்கினேன். ஆனால் அதற்குள் நேரம் கடந்துவிட்டது. இருட்டில், பல மின் வில்களின் சமமற்ற பிரகாசத்தில், என்னுடைய கடப்பாரை துண்டுகளாக்கப் பட்டதைக் கண்டேன். எந்தப் பெரிய தானியங்கிப் பொறியை நான் உடைக்க விரும்பினேனோ அதுதான் எல்லாவற்றையும்விட மும்முரமாக வேலை செய்தது.

கூடாரம் திரும்பிக் கட்டிலில் படுத்தேன்.

சற்றுநேரம் ஆழ்ந்து தூங்கினேன். ஆனால் இது வெகுநேரம் நீடிக்கவில்லை போலும். திடீரென நான் திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன். குளிர்ந்த கனத்த ஏதோ ஒன்று என் உடம்பில் ஊர்வதை உணர்ந்தேன். துள்ளி எழுந்து நின்றேன். அது நண்டுப் பொறி என்பதை நான் உடனே புரிந்துகொள்ளக்கூட இல்லை. அது கூடாரத்துக்கு உள்ளே மறைந்துவிட்டது. சில வினாடிகளுக் கெல்லாம் பிரகாசமான மின்பொறிகளைக் கண்டேன்.

பாழாய்ப்போகிற நண்டு உலோகத்தைத் தேடி நேரே எங்களிடமே வந்துவிட்டது. அதன் மின்வாய் குடிநீர் நிறைந்த தகரப் பாத்திரத்தை வெட்டியது.

நான் கூக்ளிங்கைத் தட்டி எழுப்பி, நடந்தது என்ன என்பதைக் குழப்பத்துடன் தெரிவித்தேன்.

"எல்லா டப்பாக்களையும் கடலுக்குக் கொண்டு சேருங்கள். உணவுப் பண்டங்களையும் குடிநீரையும் கடலில் கொண்டு சேருங்கள்!" என்று உத்தரவிட்டான் அவன்.

நாங்கள் தகர டப்பாக்களைக் கடலுக்கு எடுத்துப்போய், இடுப்பளவு நீருக்குள் மணல் தளத்தில் வைத்தோம். எங்கள் எல்லாக் கருவிகளையும் நாங்கள் அங்கேயே கொண்டு சேர்த்தோம்.

இந்த வேலைக்குப் பிறகு, நனைந்து சோர்ந்து போய் நாங்கள் கடற்கரையில் உட்கார்ந்து காலைவரை உறக்கம் இல்லாமலே கழித்தோம். கூக்ளிங்கு சிரமத்துடன் மூக்கை உறிஞ்சினான். இப்போது நான் அவனை வெறுத்தேன். அவனுக்கு இன்னும் கடுமையான தண்டனை கிடைக்கவேண்டும் என்று விரும்பினேன்.

## 4

நாங்கள் தீவுக்கு வந்து எத்தனை நாட்கள் ஆயினவோ எனக்கு நினைவில்லை. ஒருநாள் கூக்ளிங்கு வெற்றிக் குரலில் முழங்கியது

தான் நினைவிருக்கிறது:

"மிகவும் அக்கறைக்குரிய நிகழ்ச்சிகள் இனிதான் தொடங்கும். உலோகங்கள் எல்லாம் தின்று தீர்க்கப்பட்டுவிட்டன."

இது உண்மையே. முன்பு உலோகத் துண்டுகள் கிடந்த எல்லா இடங்களையும் நாங்கள் சுற்றிப் பார்த்தோம். அங்கே ஒன்றுமே மிச்சமில்லை. கரையோரத்திலும் புதர்களுக்கு இடையிலும் வெற்றுக் கிடங்குகள் காட்சி அளித்தன.

உலோகக் கனசதுரங்களும் துண்டுகளும் முளைகளும் மிகப் பெருத்த எண்ணிக்கையில் தீவில் சுற்றித் திரிந்த பொறிகளாக மாறிவிட்டன. அவற்றின் இயக்கங்கள் அதிக விரைவும் படபடப்பும் உள்ளவை ஆகியிருந்தன. மின்சேமக்கலங்கள் கொள்ளும் அளவுக்கு மின் ஏற்றப்பட்டிருந்தன. ஆற்றல் வேலையில் செலவிடப்படவில்லை. அவை வெட்டியாகத் தீவில் திரிந்தன, பீடபூமியில் இருந்த புதர்களுக்கு இடையே ஊர்ந்தன, ஒன்றன்மேல் ஒன்றும், அடிக்கடி எங்கள் மேலும் மோதிக் கொண்டன.

அவற்றைக் கூர்ந்து நோக்கியதும் கூக்ளிங்கு சொன்னது சரியே என்பது எனக்கு உறுதிப்பட்டது. நண்டுப் பொறிகள் மெய்யாகவே வெவ்வேறாய் இருந்தன. அளவிலும் இயக்கத்திறனிலும் இடுக்கி களின் பரிமாணங்களிலும் தொழிற்கூடவாய்களின் அளவிலும் அவை ஒன்றுக்கொன்று வேறுபட்டன. அவற்றின் உள் அமைப்பில் இன்னும் ஆழ்ந்த வேறுபாடுகள் இருக்கும் என்று தோன்றியது.

"நல்லது. நாம் போரைத் தொடங்கி வைக்க வேளை வந்து விட்டது!" என்றான் கூக்ளிங்கு.

"நீங்கள் மெய்யாகவேதான் சொல்லுகிறீர்களா?" என்று கேட்டேன்.

"மெய்யாகவேதான். இதற்காக இவற்றுக்குக் கோபால்ட் பயன் படுத்தி கொடுக்கவேண்டும். மிகச் சிறு அளவு கோபால்ட் உள்ளே போனாலும் போதும், இவை ஒன்றுக்கு ஒன்று மரியாதை காட்டுவதை - அப்படிச் சொல்லலாம் என்றால் - நிறுத்திவிடும். இவற்றின் இயந்திர அமைப்பு அந்த வகையில் செய்யப் பட்டிருக்கிறது."

மறுநாள் காலை நானும் கூக்ளிங்கும் எங்கள் "கடல்



சேமிப்பிடம்" சென்றோம். கடல் அடித்தளத்திலிருந்து உணவுப் பண்டடப்பாக்களையும், குடிநீர்ப் பாத்திரத்தையும் சாம்பல் நிறமான நான்கு கனத்த கோபால்ட் பாளங்களையும் எடுத்துப் போனோம். சோதனையின் நிர்ணயகரமான கட்டத்திற்காகக் கூக்ளிங்கு இவற்றை விசேஷமாகப் பதுக்கி வைத்திருந்தான்.

கோபால்ட் பாளங்கள் கொண்ட கைகளை உயரத் தூக்கியவாறு கூக்ளிங்கு நீரிலிருந்து மணலுக்கு வந்ததுமே பல நண்டுப் பொறிகள் அவனைச் சூழ்ந்து மொய்த்தன. அவன் உடல் நிழல் எல்லைகளை அவை தாண்டவில்லைதான். என்றாலும் புது உலோகம் வந்ததனால் அவை பெரிதும் சஞ்சலம் அடைந்து விட்டன என்பது புலப்பட்டது. நான் கூக்ளிங்குக்குச் சில தாவடிகள் தள்ளி நின்று கொண்டிருந்தேன். சில நண்டுப் பொறிகள் தத்தக்க பித்தக்கவென்று துள்ள முயன்றதைக் கண்டேன்.

"பார்த்தீர்களா, இயக்கங்களில் எவ்வளவு வேறுபாடு என்று! இவை எல்லாம் ஒன்றுக்கு ஒன்று எப்படி வேறுபடுகின்றன பாருங்கள்! நாம் இவற்றுக்குள் மூட்டிவிடப் போகிற போரில் எல்லாவற்றிலும் வலிமையும் தகவமைப்பும் மிக்கவையே நிலைத்திருக்கும்."

இவ்வாறு சொல்லிவிட்டுக் கூக்ளிங்கு கோபால்ட் பாளங்களை ஒன்றன் பின் ஒன்றாகப் புதர்களின் பக்கம் எறிந்தான்.

அதன்பின் நடந்ததை வருணிப்பது கடினம்.

அநேக நண்டுப் பொறிகள் ஒரே சமயத்தில் கோபால்ட் பாளங்கள்மேல் பாய்ந்தன. ஒன்றை ஒன்று இடித்து விலக்கியவாறு அவை மின்பொறிகளால் பாளங்களைத் துண்டு போடலாயின. மற்றவை தாமும் ஒரு துண்டு உலோகத்தைப் பிய்த்துப் பிடுங்கிக் கொள்ள முயன்றவாறு பின்னே வீணாக நெரிந்தன. சில மையத்துக்குப் போகும் ஆர்வத்தில் கூட்டாளிகளின் முதுகுகள் மேலாக ஊர்ந்தன.

"பாருங்கள், முதல் சண்டை இதோ தொடங்கிவிட்டது!" என்று களிப்புடன் கூவிக் கைக்கொட்டினான் கூக்ளிங்கு.

கூக்ளிங்கு உலோகப் பாளங்களை எறிந்த இடம் சில நிமிடங் களுக்கெல்லாம் பயங்கரமான போர்க்களமாக மாறிவிட்டது. மேலும் மேலும் புதிய தானியங்கிகள் அந்த இடத்துக்கு விரைந்தன.

வெட்டுண்ட இயந்திரங்களின் பகுதிகளும் கோபால்ட் துண்டுகளும் மேலும் மேலும் வந்த புதிய இயந்திர நண்டுகளுடைய வாய்களில் எந்த அளவுக்குச் சென்றனவோ அந்த அளவுக்கு அவை காட்டுத்தனமான, அச்சமற்ற வேட்டை விலங்குகளாக மாறி, அக்கணமே தங்கள் உடன்பிறப்புக்கள் மேல் பாய்ந்தன.

இந்தப் போரின் முதல் கட்டத்தில் தாக்கும் தரப்பில் இருந்தன கோபால்டை உட்கொண்ட இயந்திர நண்டுகள். தேவையான உலோகம் பெறும் நம்பிக்கையுடன் தீவின் எல்லாப் புறங்களிலுமிருந்து இங்கே ஓடிவந்த தானியங்கிகளை அவைதாம் துண்டுகளாகக் கூறுபோட்டன. ஆனால் மேலும் மேலும் அதிக நண்டுகள் கோபால்ட்டை உட்கொள்ள, உட்கொள்ள இந்தச் சண்டை கொடியதாக மாறியது. இந்த நெரிசலில் தயாரிக்கப்பட்ட புதிய தானியங்கிகள் இதற்குள் தாமும் சண்டையில் கலந்துகொள்ளத் தொடங்கின.

இவை வியப்பூட்டும் தலைமுறையைச் சேர்ந்த தானியங்கிகள்! இவை அளவில் சிறுத்தவை, அபரிமிதமான இயக்க விரைவு உள்ளவை. தங்கள் 'மூதாதைகள்' போல சேமக்கலங்களில் மின்னேற்றிக் கொள்வது இப்போது இவற்றுக்குத் தேவைப்படவில்லை என்பதைக் கண்டு நான் ஆச்சரியம் அடைந்தேன்.

இவற்றின் முதுகுகளில் இருந்த கண்ணாடிகள் வழக்கமானவற்றைவிடக் கணிசமாகப் பெரியவை. இந்தக் கண்ணாடிகளால் கிரகிக்கப்பட்ட சூரிய ஆற்றலே இவற்றுக்குப் போதியதாக இருந்தது. இவற்றின் வலியத்தாக்கும் போக்கு பிரமிப்பு உண்டாக்கிற்று. ஒரே சமயத்தில் அநேக இயந்திர நண்டுகளைத் தாக்கி இரண்டு மூன்றை ஏககாலத்தில் மின்பொறிகளால் கூறு படுத்தின அவை.

கூக்ளிங்கு தண்ணீரில் நின்று கொண்டிருந்தான். அவன் முகத்தில் எல்லையற்ற மனநிறைவு ததும்பியது.

"நல்லது! நல்லது! மேற்கொண்டு என்ன நடக்கும் என்பதை இப்போதே மனத்திரையில் காண்கிறேன்" என்று கைகளைத் தேய்த்துக் கொண்டு கொக்கரித்தான்.

நானோ, இயந்திரங்களின் இந்தச் சண்டையை உள்ளார்ந்த அருவருப்புடனும் அச்சத்துடனும் பார்த்துக் கொண்டிருந்தேன். அடுத்து வரும் இயந்திர வேட்டை விலங்குகள் எப்படிப்பட்டவையாய் இருக்கும்? இந்தப் போராட்டத்தின் விளைவாக எது



பிறக்கும்? - இதையே ஊகிக்க முயன்று கொண்டிருந்தேன்.

நடுப் பகலுக்குள் எங்கள் கூடாரத்தின் அருகிலிருந்த கடற்கரை முழுவதும் பெரிய போர்க்களமாக மாறிவிட்டது. தீவு முழுவதிலிருந்தும் இங்கே ஓடிவந்தன தானியங்கிகள். கத்தல்களோ கூச்சலோ தடதடப்போ இரைச்சலோ இல்லாமல் நிசப்தமாக நடந்தது சண்டை. சரசரப்பும் நெறுநெறுப்பும் நிறைந்த இந்த விந்தைப் போரில், பெருந்தொகையான மின்பொறிகளின் சடசடப்பும் இயந்திர உடல்களின் உலோகக் கிணுகிணுப்பும் உடன் ஒலித்தன.

இப்போது உருவாகியிருந்த இயந்திர நண்டுகளில் பெரும்பாலானவை குட்டையாகவும் மிக விரைந்த இயக்கம் உள்ளவையாகவும் இருந்தன. ஆயினும் புது வகைத் தானியங்கிகளும் தோன்றத் தொடங்கிவிட்டன. மற்றவற்றைவிட அவை அளவில் கணிசமாகப் பெரியவையாய் இருந்தன. அவை மெதுவாகவே இயங்கின. ஆனாலும் அவற்றின் வலிமையை உணர முடிந்தது. தங்களைத் தாக்கிய குள்ள இயந்திர நண்டுகளை அவை வெற்றிகரமாகச் சமாளித்தன.

சூரியன் அஸ்தமிக்கத் தொடங்கியதும் சிறு இயந்திரங்களில் திடீரெனப் பெருத்த மாற்றம் காணப்பட்டது: அவை எல்லாம் மேற்குப் பகுதியில் குழுமின. அவற்றின் இயக்கமும் மந்திக்கலாயிற்று.

"அட சைத்தான், இந்தக் கும்பல் எல்லாம் கட்டாயம் அழிந்து போகும். இவை மின் சேமக்கலங்கள் அற்றவை. சூரியன் அஸ்தமித்ததுமே இவற்றின் வாழ்வு தீர்ந்துவிடும்" என்று கரகரத்த குரலில் சொன்னான் கூக்ளிங்கு.

மெய்யாகவே, புதர்களின் நிழல்கள் சிறு தானியங்கிகளின் கும்பலை மூடும் அளவுக்கு நீண்டதும் அவை அங்கங்கே அசையாது நின்றுவிட்டன. இப்போது இவை தாக்கும் வெறி கொண்ட சிறு வேட்டைப் பிராணிகள் அல்ல, உயிரற்ற உலோகப் பெட்டிகளின் பெருத்த சேமிப்பு ஆகிவிட்டன.

கிட்டதட்ட அரை ஆள் உயரம் உள்ள பிரமாண்டமான இயந்திர நண்டுகள் அவசரம் இன்றி அவற்றின் அருகே ஊர்ந்து வந்து அவற்றை ஒன்றன்பின் ஒன்றாகத் தின்று தீர்க்கலாயின. பூதாகாரத் தந்தைகளின் அமைப்பு மேடைகள் மீது இன்னும் பிரமாண்டமான அளவுள்ள சந்ததிகளின் புடைப்பு வரைகள்

தோன்றலுற்றன.

கூக்ளிங்கின் முகம் சுளித்தது. இத்தகைய பரிணாமம் அவனுக்குப் பிடிக்கவில்லை என்பது துலக்கமாகத் தெரிந்தது. பெரிய அளவும் மெதுவான இயக்கமும் உள்ள தானியங்கி நண்டுகள் பகைவனின் பின்புலத்தில் மறைமுக அழிவுவேலை செய்வதற்கு மிகவும் மோசமான ஆயுதங்கள் ஆயிற்றே!

பூதாகார நண்டுகள் சிறு நண்டுகளைத் தீர்த்துக் கட்டிக் கொண்டிருக்கையில் கடற்கரையில் தற்காலிக அமைதி நிலவியது.

நான் நீரிலிருந்து வெளியே வந்தேன். பொறி இயலான் மௌனமாக என் பின்னே நடந்தான். நாங்கள் சற்று இளைப்பாறுவதற்காகத் தீவின் கிழக்குப் பகுதிக்குப் போனோம்.

மிகவும் களைத்திருந்தபடியால் நான் இருள் படிந்த மெதுவான மணலில் படுத்த உடனேயே கண்ணயர்ந்துவிட்டேன்.

## 5

காட்டுக் கத்தலைக் கேட்டு நான் நடுநிசியில் விழித்துக் கொண்டேன். நான் துள்ளி எழுந்ததும் மணல் கரையின் சாம்பல் நிறப் பட்டையும் விண்மீன்கள் தெளித்திருந்த கரிய வானுடன் ஒன்று கலந்த கடலும் தவிர வேறு எதுவும் என் பார்வைக்குப் புலப்படவில்லை.

கத்தல் புதர்கள் இருந்த இடத்திலிருந்து மறுபடி கேட்டது, ஆனால் முன்னைவிடத் தணிவாக. கூக்ளிங்கு அருகே இல்லை என்பதை அப்போதுதான் கவனித்தேன். அவன் கத்தல் வந்ததாக எனக்குத் தோன்றிய திசையில் பாய்ந்து ஓடினேன்.

கடல் எப்போதும் போலவே மிக அமைதியாய் இருந்தது. சிற்றலைகள் அரிதாகவே காதில்படும் சீறல் ஓசையுடன் எப்போதாவது மட்டுமே மணலில் விழுந்து பரவின. ஆயினும் நாங்கள் உணவுப் பண்டச் சேமிப்புக்களையும் குடிதண்ணீர்ப் பாத்திரங்களையும் வைத்திருந்த இடத்தில் கடலின் மேற்பரப்பு அமைதியற்றதாக இருந்தது போல எனக்குத் தென்பட்டது. அங்கு ஏதோ துளைவதும் அடிப்பதுமாக இருந்தது.

கூக்ளிங்கு அங்கேதான் ஏதோ செய்துகொண்டிருக்கிறான் என்று நினைத்தேன்.



"கூக்ளிங்கு, இங்கே என்ன செய்கிறீர்கள்?" என்று எங்கள் நீரடிச் சேமிப்பிடத்தின் பக்கத்தில் போய்க் கத்தினேன்.

"நான் இங்கே இருக்கிறேன்!" என்ற குரல் எங்கோ வலப்புறத்தில் கேட்டது.

"அட கடவுளே, எங்கே இருக்கிறீர்கள் நீங்கள்?"

"இங்கே" - பொறி இயலானின் குரல் மறுபடி என் காதில் பட்டது. "நான் கழுத்தளவு தண்ணீரில் நிற்கிறேன். என்னிடம் வாருங்கள்."

நான் நீரில் இறங்கி நடந்தவன், கடினமான ஏதோ ஒன்றில் இடறிக்கொண்டேன். அது பிரமாண்டமான இயந்திர நண்டு. நீண்ட இடுக்கிகளை ஊன்றி நீரின் ஆழத்தில் நின்றது அது.

"நீங்கள் அவ்வளவு ஆழத்துக்கு ஏன் போனீர்கள்? அங்கே என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"அவை என்னை விரட்டிக்கொண்டு வந்து இதோ இங்கே துரத்திவிட்டன!" என்று கீச்சுக்குரலில் முறையிட்டான் தடியன்.

"விரட்டிக்கொண்டு வந்தனவா? எவை?"

"நண்டுகள்."

"இருக்கமுடியாது! என்னை அவை விரட்டக் காணோமே!"

நான் நீரில் மறுபடி ஒரு தானியங்கியுடன் மோதிக் கொண்டேன். அதைவிட்டு விலகி, முடிவில் பொறி இயலான் அருகே போய்ச் சேர்ந்தேன். அவன் உண்மையாகவே கழுத்தளவு தண்ணீரில் நின்று கொண்டிருந்தான்.

"சொல்லுங்கள், என்ன நடந்தது?"

"எனக்கே விளங்கவில்லை" என்று நடுங்கும் குரலில் சொல்லலானான் அவன். "நான் தூங்கிக் கொண்டிருந்தபோது ஒரு தானியங்கி என்னைத் தாக்கிற்று... அது தற்செயல் என்று நான் நினைத்தேன்... நான் ஒருபுறம் விலகினேன், ஆனால் அது மறுபடி என்னை நெருங்கி என் முகத்தைத் தன் இடுக்கியால் தொட்டது... நான் எழுந்திருந்து அப்பால் விலகினேன்... அது என்னைத் தொடர்ந்தது... நான் ஓடினேன்.... நண்டு என் பின்னே வந்தது... இன்னொன்றும் அதனுடன் சேர்ந்து கொண்டது... பின்பு மேலும் ஒன்று... ஒரு கும்பல் முழுவதும்... அவைதாம்

என்னை இங்கே துரத்திவிட்டன."

"விந்தைதான். முன்பு ஒருபோதும் இப்படி நடக்கவில்லையே. பரிணாமப் போக்கில் மனித துவேஷம் இவற்றுக்கு உண்டாகியிருந்தால் இவை என்னையும் விட்டு வைத்திருக்க மாட்டாவே" என்றேன்.

"அறியேன். கரைக்குப் போகத்தான் பயமாய் இருக்கிறது..." கூக்ளிங்கின் குரல் கரகரத்தது.

"வெட்டிப்பேச்சு! கரையை ஒட்டினாற்போல கிழ்த் திசையில் நடந்து போவோம். நான் உங்களுக்குக் காவலாய் இருக்கிறேன்" என்று சொல்லி அவன் கையைப் பிடித்துக்கொண்டேன்.

"எப்படி?"

"இதோ சேமிப்பிடத்துக்குப் போவோம். நான் சம்மட்டி போன்ற ஏதாவது கனத்த சாமானை எடுத்துக் கொள்கிறேன்..."

"உலோகச் சாமான் மட்டும் வேண்டாம்" என்று முனகினான் பொறி இயலான். "பெட்டிப்பலகையையோ, பொதுவாக மரத்தாலான எதையேனுமோ எடுத்துக் கொள்ளுங்கள். அதுவே மேல்."

நாங்கள் கரையோரமாக நீரில் மெதுவாய் நடந்தோம். சேமிப்பிடத்தை நெருங்கியதும் நான் கூக்ளிங்கைத் தனியாக விட்டு விட்டுக் கரையின் அருகே போனேன்.

தண்ணீர் சளப்பிடும் உரத்த ஓசைகளும் இயந்திர இயக்கத்தின் பழக்கமான ரீங்காரமும் கேட்டன.

உலோக விலங்குகள் உணவுப் பொருள் டப்பாக்களைப் பற்றி இழுத்தன. எங்கள் நீரடிச் சேமிப்பிடத்துக்கும் அவை வந்து விட்டன.

"கூக்ளிங்கு! நாம் தொலைந்தோம்! இவை நம் உணவுப் பண்ட டப்பாக்களை எல்லாம் தின்றுவிட்டன!" என்று கத்தினேன்.

"அப்படியா? இனி நாம் என்ன செய்வது?" என்று முறையிட்டான் அவன்.

"என்ன செய்வது என்று சிந்தியுங்கள். இதெல்லாம் உங்கள் மடத்தனமான திட்டந்தானே. உங்களுக்குப் பிடித்தமான வகை மறைமுக நாசக்கருவியை நீங்கள் உண்டாக்கினீர்கள். இப்போது



இந்தக் கந்தரகோளத்தைச் சீர்படுத்துங்கள்."

தானியங்கிக் கும்பலை விட்டு விலகி நடந்து கரையை அடைந்தேன்.

அங்கே இருட்டில் இயந்திர நண்டுகளுக்கு நடுவே தவழ்ந்தவாறு மாமிசத் துண்டுகள், பதனிட்ட அன்னாசிப் பழங்கள், ஆப்பிள்கள், வேறு உணவுப் பண்டங்கள் ஆகியவற்றைத் தொட்டுத் தடவிச் சேகரித்து மணல் பீடபூமியில் கொண்டு சேர்த்தேன். கரையில் அவ்வளவு நிறையப் பண்டங்கள் சிதறிக் கிடந்தைப் பார்த்தால், நாங்கள் தூங்கியபோது இந்த உலோக விலங்குகள் மும்முரமாக உழைத்திருந்தன என்பது தெரிந்தது. முழுதாக ஒரு டப்பாகூட எனக்கு அகப்படவில்லை.

எங்கள் உணவுப் பொருள்களில் எஞ்சியவற்றைப் பொறுக்கித் திரட்டுவதில் நான் முனைந்திருந்த நேரமெல்லாம் கூக்ளிங்கு கரையிலிருந்து சுமார் இருபது தாவடித் தொலைவில் கழுத்தளவு நீரில் நின்று கொண்டிருந்தான்.

எஞ்சிய உணவுப் பண்டங்களை திரட்டிச் சேர்ப்பதில் நான் மும்முரமாக ஈடுபட்டிருந்தேன். தவிர நடந்த நிகழ்ச்சியால் பெரிதும் உளம் சோர்ந்திருந்தேன். எனவே கூக்ளிங்கு இருப்பதையே மறந்துவிட்டேன். ஆனால் விரைவிலேயே அவன் காதைத் துளைக்கும் கூச்சலால் தான் இருப்பதை எனக்கு நினைவுபடுத்தினான்:

"அட கடவுளே! பாத், உதவி செய்யுங்கள், இவை என்னை நெருங்கப் பார்க்கின்றன!"

நான் நீரில் பாய்ந்து இயந்திர விகிருதிகள் மேல் இடறி விழுந்தவாறு கூக்ளிங்கின் பக்கம் சென்றேன். அங்கேயும், அவனுக்கு ஐந்தடி தூரத்தில் அடுத்த இயந்திர நண்டின் மேல் மோதிக் கொண்டேன்.

நண்டு என்னைச் சட்டை செய்யவே இல்லை.

"அட சனியனே! எதனால்தான் இவற்றுக்கு உங்கள்மேல் இவ்வளவு காட்டமோ? பார்க்கப் போனால் நீங்கள் இவற்றின் ஆதித் தந்தை ஆயிற்றே!" என்றேன்.

"அறியேன். இதை விரட்டுவதற்கு ஏதாவது செய்யுங்களேன். இதைவிடப் பெரிய நண்டு பிறந்துவிட்டால் நான் ஒழிந்தேன்" என்று தொண்டையில் நீர் களகளக்கக் கம்மிய குரலில்

சொன்னான் கூக்ளிங்கு.

"அழகாய்த்தான் இருக்கிறது பரிணாமத்தின் லட்சணம்... சரி, சொல்லுங்கள், இந்த நண்டுகளின் எந்தப் பகுதி தாக்கினால் சேதமடையும்? இயந்திரத்தைப் பழுதுபடுத்துவது எப்படி?"

"முன்பு பரவளைவுக் கண்ணாடியை உடைக்க அல்லது சேமக் களத்தை அகற்றவேண்டியிருந்தது... இப்போது எப்படியோ, அறியேன். தனிப்பட்ட ஆராய்ச்சி இதற்குத் தேவை..."

"நீங்களும் உங்கள் ஆராய்ச்சிகளும் நாசமாய்ப் போக!" என்று வெறுப்புடன் சொல்லிவிட்டு நண்டின் மெல்லிய முன்காலைக் கையால் பிடித்து வளைத்தேன். உணர்கொம்புகள் செம்புக் கம்பிபோல எளிதில் வளைந்தன.

உலோக விலங்குக்கு இந்தச் செயல் பிடிக்கவில்லை என்று தெரிந்தது. அது நீரிலிருந்து மெதுவாக வெளியேறத் தொடங்கிற்று. நானும் பொறி இயலானும் கரையை ஒட்டினாற்போல மேலே நடந்தோம்.

சூரியன் உதித்ததும் எல்லாத் தானியங்கிகளும் நீரிலிருந்து வெளியே ஊர்ந்து மணல்மேல் வந்து சற்று நேரம் வெயில் காய்ந்தன. அந்த நேரத்தில் நான் சுமார் ஐம்பது விகிருதிகளின் பரவளைவுக் கண்ணாடிகளைக் கல்லால் உடைத்துவிட்டேன். அவை எல்லாம் அசைவற்றுப் போயின.

ஆனால், துர்ப்பாக்கியவசமாக, நிலைமை இதனால் சீர்படவில்லை. மற்ற இயந்திர விலங்குகளுக்கு அவை உடனே இரை ஆயின. இவற்றிலிருந்து புதிய தானியங்கிகள் வியப்பூட்டும் வேகத்துடன் தயாராகத் தொடங்கின. எல்லா இயந்திரங்களின் முதுகுகளிலும் இருந்த சிலிக்கன் மின்கலங்களை உடைப்பது சாத்தியமாய் இல்லை. மின்னோட்டக் காப்பு உள்ள தானியங்கிகளில் பட்டு மின்தாக்குக்கு உள்ளானேன். அவற்றோடு போராட்டம் நடத்தும் என் உறுதி இதனால் குலைந்து போயிற்று.

இந்த நேரமெல்லாம் கூக்ளிங்கு நீரில் நின்று கொண்டிருந்தான்.

விரைவிலேயே இயந்திர விகிருதிகளுக்குள் போராட்டம் மீண்டும் உக்கிரம் ஆயிற்று, அவை பொறி இயலானை அறவே மறந்துவிட்டதாகத் தோன்றியது.

சண்டை நடந்த இடத்திலிருந்து அகன்று தீவின் எதிர்ப்புறத்துக்கு நாங்கள் போனோம். பலமணி நேரம் கடலில்



குளித்தமையால் பொறி இயலான் வெடவெடவென்று நடுங்கினான். அவன் பற்கள் அடித்துக் கொண்டன. மணலில் மல்லாந்து படுத்து, சுடு மணலைத் தன்மேல் தூவும்படி என்னைக் கேட்டுக்கொண்டான்.

இதன் பிறகு உடைகளையும் மிச்சம் இருந்த உணவுப் பண்டங்களையும் எடுத்துப் போவதற்காக நான் எங்கள் முதல் தங்கிடத்துக்குத் திரும்பினேன். கூடாரம் அழிக்கப்பட்டுவிட்டதை அப்போதுதான் கண்டேன். தரையில் அடித்துப் புதைக்கப்பட்டிருந்த இரும்பு ஈட்டிகள் மறைந்துவிட்டன. தார்ச்சீலை ஓரங்களில் கயிறுகள் இறுக்குவதற்காக இருந்த உலோக வளையங்கள் தின்று ஒழிக்கப்பட்டுவிட்டன.

தார்ச்சீலைக்கு அடியில் கூக்ளிங்கின் உடைகளும் என் உடைகளும் இருந்ததைக் கண்டேன். உலோகம் தேடிய நண்டுகளின் வேலை இங்கேயும் தடங்களைப் பதித்திருந்தது. உலோகக் கொக்கிகள், பொத்தான்கள், பக்கிள்கள் ஆகியன மறைந்து விட்டன. அவற்றின் இடத்தில் கரிந்த துணியின் தடங்களே எஞ்சியிருந்தன.

இதற்கிடையே தானியங்கிகளுக்குள் போர் நடந்த இடம் கரையிலிருந்து தீவின் உள் பகுதிக்கு மாறிவிட்டது. நான் பீடபூமியில் ஏறியதும், அனேகமாகத் தீவின் நடுவில், புதர்களுக்கு இடையே கிட்டதட்ட ஆள் உயரமான இடுக்கிகளை ஊன்றிக் கொண்டு சில இயந்திர விகிருதிகள் நிற்கக் கண்டேன். அவை இணை இணையாக மெதுவாய் வெவ்வேறு புறங்களில் நகர்ந்து, பின்பு பெருத்த வேகத்துடன் ஒன்றின் மேல் ஒன்று பாய்ந்தன.

அவை மோதுகையில் உலோகங்கள் அடித்துக் கொள்ளும் ஓசை கிளம்பிற்று. இந்த அரக்க இயந்திரங்களின் மெதுவான இயக்கத்தில் பெருவலிமையும் மிகுந்த எடையும் புலப்பட்டன.

என் கண்ணெதிரே சில இயந்திரங்கள் தரையில் அடித்து வீழ்த்தப்பட்டன. உடனேயே அவை துண்டு துண்டாகக் கூறாக்கப் பட்டுவிட்டன.

ஆனால் வெறிகொண்ட இயந்திரங்களுக்குள் நடந்த சண்டையின் இந்தக் காட்சிகள் எனக்குத் தெவிட்டிப் போயிருந்தன. எனவே, பழைய தங்கிடத்தில் சேகரிக்க முடிந்தவற்றை எல்லாம் எடுத்துக் கொண்டு நான் கூக்ளிங்கிடம் போனேன்.

வெயில் இரக்கமின்றிப் பொசுக்கியது. எனவே கூக்ளிங்கை இடுப்பு வரை புதைத்திருந்த இடம் போய்ச் சேர்வதற்குள் நான் பல முறை தண்ணீரில் இறங்கினேன். நடந்தவற்றை எல்லாம் பற்றி எண்ணமிட எனக்கு நேரம் இருந்தது.

ஒன்று மட்டும் தெளிவாய் இருந்தது: பரிணாமம் பற்றிய கடற்படைத் தலைமைக் காரியாலயத்தின் திட்டம் பலிக்காது போய்விட்டது. செவ்வைப்பாடுள்ள சின்னஞ்சிறு இயந்திரங்களுக்குப் பதில் மிகப் பெருத்த வலிமையும் மந்தமான இயக்கங்களும் கொண்ட பாங்கற்ற இயந்திர பூதங்கள் உருவாகியிருந்தன.

இராணுவ நோக்கில் இவை அறவே பயனற்றவை.

இரவுக் குளியலால் திராணி அற்றுப் போயிருந்த கூக்ளிங்கு எந்த மணல் மேட்டின் அடியில் உறங்கிக்கொண்டிருந்தானோ அதை நான் நெருங்கிவிட்டேன் என்னும்போது பீடபூமியின் திக்கில் புதர்களின் பின்னிருந்து தென்பட்டது பூதாகாரமான ஒரு நண்டு.

அது என்னைவிட உயரமாக இருந்தது. அதன் கால்கள் மிக நீளமாகவும் பருத்தும் இருந்தன. அது தன் உடலை விசித்திரமாக வளைத்து, ஒரு சீரற்ற துள்ளல்களால் இயங்கியது. வேலை செய்யும் முன் உணர்கொம்புகள் நம்பமுடியாத அளவு நீளமாயிருந்தன. அவை மணலில் இழுபட்டன. சிறப்பாக அளவு கடந்து பெரிதாயிருந்தது அதன் தொழிற்கூட வாய். உடம்பில் பாதி இடத்தை அது வியாபித்துக்கொண்டிருந்தது.

"இக்தியோஸாரஸ்" - அரக்கப் பல்லி - என்று நான் மனதுக்குள் அதற்குப் பெயர் சூட்டினேன். அது கரைமீது தத்தக்க பித்தக்க என்று ஊர்ந்து, இடத்தை நோட்டமிடுவது போல உடலை எல்லாப் புறங்களிலும் மெதுவாகத் திருப்பிற்று. நான் என்னையும் அறியாமலே தார்ச்சீலைக் கூடாரத் துணியை அதன் பக்கம் வீசி ஆட்டினேன். அதுவோ என்னைச் சட்டை செய்யவே இல்லை. விந்தையான முறையில் விலாப்பக்கமாக அகன்ற அரை வட்டம் இட்டுத் திரும்பி, கூக்ளிங்கு படுத்திருந்த மணல் மேட்டை நெருங்கத் தொடங்கிற்று அது.

அரக்க விலங்கு பொறி இயலானிடம் போகிறது என்பதை நான் ஊகித்திருந்தால் உடனே அவனுக்கு உதவ ஓடியிருப்பேன். ஆனால் இயந்திர விலங்கின் இடப்பெயர்வுப் பாதை நிச்சயம் அற்றதாக இருந்தமையால் அது தண்ணீரை நோக்கிச் செல்கிறது



என்று எனக்கு முதலில் தோன்றிற்று. அது கால்களால் தண்ணீரைத் தொட்டுவிட்டு ஒரேயடியாகத் திரும்பி, கூக்ளிங்கு இருந்த இடத்துக்கு விரைவாக நகரத் தொடங்கியதுந்தான் நான் சாமான் களை எறிந்துவிட்டு முன்னே ஓடினேன்.

"இக்தியோஸாரஸ்" கூக்ளிங்கின் பக்கத்தில் நின்று சிறிது ஒதுங்கியது.

அதன் நீண்ட உணர்கொம்புகளின் நுனிகள் மணலில், கூக்ளிங்கின் முகத்தருகே அசையத் தொடங்கியதை நான் கண்டேன்.

மறுகணமே மணல்மேடு இருந்த இடத்தில் மணல் புழுதிப் படலம் திடீரென்று கிளம்பியது. கூக்ளிங்கு தேள் கொட்டியவன் போலத் துள்ளி எழுந்து கலவரத்துடன் அரக்க விலங்கின் பிடியிலிருந்து திமிற முயன்றதால் எழுந்தது அந்தப் புழுதிப் படலம்.

ஆனால் அதற்குள் நேரம் கடந்துவிட்டது.

மெல்லிய உணர்கொம்புகள் பொறி இயலானின் கொழுத்த கழுத்தைச் சுற்றி இறுக்கி அவனைத் தூக்கி இயந்திரத்தின் வாய்க்குக் கொண்டு போயின. கூக்ளிங்கு கைகளையும் கால்களையும் அர்த்தமின்றி ஆட்டி உதறியவாறு புகலின்றி அந்தரத்தில் தொங்கினான்.

கூக்ளிங்கை நான் மனமார வெறுத்தேன், என்றாலும் மூளையற்ற ஏதோ உலோக ஆபாசத்துடன் போராட்டத்தில் அவன் மடியும்படி விட என்னால் முடியவில்லை.

நெடுநேரம் சிந்திக்காமல் நான் நண்டின் உயரமான இடுக்கிகளைப் பற்றி முழு வலிமையுடனும் அவற்றை இழுத்தேன். ஆனால் தரையில் ஆழமாக அடித்துப் புதைக்கப்பட்ட எஃகுக் குழாயைச் சாய்ப்பதற்கு ஒப்பாக இருந்தது இந்தச் செயல். "இக்தியோஸாரஸ்" அசையக்கூட இல்லை.

நான் அதன் முதுகுமேல் தொற்றி ஏறினேன். கணப்போது என் முகம் கூக்ளிங்கின் விகாரமாகக் கோணிய முகத்தின் மட்டத்தில் இருந்தது. "பற்கள்!" என்று என் உணர்வில் பட்டது. "கூக்ளிங்கு எஃகுப் பற்கள் கட்டிக்கொண்டிருக்கிறானே!..."

வெயிலில் பளிச்சிட்ட பரவளைவுக் கண்ணாடியை பலமெல்லாம் கொண்டு ஓங்கிக் குத்தினேன்.

இயந்திர நண்டு ஒரே இடத்தில் சுழலத் தொடங்கிற்று. கூக்ளிங்கின் நீலம் பாரித்த முகம் தொழிற்கூட வாயின் மட்டத்துக்கு வந்தது. அப்போது நிகழ்ந்தது ஒரு பயங்கரம். மின் பொறிகள் கூக்ளிங்கின் நெற்றி மேலும் பொருத்துக்கள் மேலும் பாய்ந்தன. அப்புறம் நண்டின் உணர்கொம்புகள் தளர்ந்தன. உலோகக் கொள்ளைநோயைத் தோற்றுவித்தவனுடைய உணர்வற்ற பருவுடல் மணலில் பொத்தென விழுந்தது.

நான் கூக்ளிங்கை அடக்கம் செய்தபோது, சில பிரமாண்டமான நண்டுகள் ஒன்றை ஒன்று துரத்தியவாறு தீவில் திரிந்தன. ஆனால் அவை என்னையோ இராணுவப் பொறி இயலானின் சவத்தையோ லட்சியம் செய்யவில்லை.

கூக்ளிங்கின் உடலைத் தார்ச்சீலையால் சுற்றி, தீவின் நடுவில் ஆழமற்ற மணல் பள்ளத்தில் அடக்கம் செய்தேன். அப்போது எனக்குச் சற்றும் வருத்தம் உண்டாகவில்லை. என் வறண்ட வாயில் மணல் கரகரத்தது. இந்த அசிங்கம் பிடித்த திட்டத்திற்காக இறந்த பொறி இயலானை நான் மனதுக்குள் சபித்தேன். கிறிஸ்தவ ஒழுக்கநெறியின் நோக்கில் பார்த்தால் நான் பெருத்த அபசாரம் செய்தேன்.

"புறா" என்ற எங்கள் கப்பல் வரவேண்டிய திசையில் மணிக் கணக்காகத் தொடுவானை நோக்கியவாறு நான் எவ்வளவு நேரந்தான் கடற்கரையில் விழுந்து கிடந்தேனோ தெரியாது. நேரம் மிகவும் மெதுவாக நகர்ந்தது எனக்குச் சித்திரவதையாய் இருந்தது. இரக்கமற்ற கொடுஞ் சூரியன் என் தலைக்கு மேலே அசையாது நின்றுவிட்டது போல் இருந்தது. சில வேளைகளில் நான் நீருக்குத் தவழ்ந்து சென்று வெயிலில் கன்றிய முகத்தை அதில் முக்கிக் கொண்டேன்.

பசியையும் வதைக்கும் தாகத்தையும் மறப்பதற்காக நான் வேறு விஷயங்களில் கவனத்தைத் திருப்ப முயன்றேன். இந்தக் காலத்தில் எத்தனையோ அறிவுள்ள மனிதர்கள் மற்ற மனிதர்களுக்குக் கீழ்மை நிறைந்த கேடு விளைவிப்பதற்கே தங்கள் அறிவுத் திறனைச் செலவிடுகிறார்கள். கூக்ளிங்கையே எடுத்துக் கொள்ளலாம். அவனுடைய இயந்திர நண்டுகளை நல்ல நோக்கங் களுக்குப் பயன்படுத்தலாம் என்று நான் நம்பினேன். உதாரணமாக உலோகம் எடுப்பதற்கு அவற்றைக் கையாளலாம். இந்த நோக்கத்தை அதிகத்திலும் அதிகப் பயன் விளைவிக்கும் வகையில் நிறைவேற்றும் விதத்தில் அவற்றின் பரிணாமத்தை



இயக்கலாம். இயந்திர அமைப்பு பொருத்தமான வகையில் செவ்வைப்படுத்தப் பட்டால் அது மந்தமாக அசையும் பூதாகரமான பிரமாண்டமாக உரு எடுத்திருக்காது என்று நான் முடிவு செய்தேன்.

ஒருதடவை மிகப் பெரிய வட்ட நிழல் என்மேல் படிந்தது. நான் சிரமத்துடன் தலையை நிமிர்த்தி என்மேல் வெயில் படாமல் மறைத்தது எது என்று பார்த்தேன். பரிமாணத்தில் பேரரக்கன் போன்றிருந்த இயந்திர நண்டு ஒன்றின் பிரமாண்ட இடுக்கி களுக்கு நடுவே நான் கிடப்பதை அறிந்தேன். அது கடற்கரைக்குப் போய், தொடுவானை நோக்கி எதையோ எதிர்பார்த்தது.

அதன்பிறகு எனக்கு உருமயக்கங்கள் ஏற்படலாயின. காய்ச்சலால் கிளர்ச்சி அடைந்திருந்த என் மூளையில் பேரரக்க நண்டு நன்னீர் நிறைந்த தொட்டியாக மாறிற்று. அதன் மேல் விளிம்பை எட்ட என்னால் முடியவே இல்லை.

"புறா"க் கப்பலின் மேல்தான் எனக்கு உணர்வு திரும்பியது. கரையில் கிடக்கும் பிரமாண்டமான விசித்திர இயந்திரத்தைக் கப்பலில் ஏற்ற வேண்டுமா என்று காப்டன் கைல் என்னிடம் கேட்டபோது, தற்போதைக்கு அது அவசியம் அல்ல என்று சொல்லிவிட்டேன்.





பொரீஸ், அர்க்காதிய் ஸ்த்ருகாத்ஸ்கிய் சகோதரர்களின் நூல்கள் 1958ஆம் ஆண்டு முதல் பிரசுரமாகி வருகின்றன. அர்க்காதிய் ஸ்த்ருகாத்ஸ்கிய் (பிறப்பு 1925) மொழி இயல் அறிஞர். ஆங்கில, ஜப்பானிய நூல்களின் மொழிபெயர்ப்பாளர். பொரீஸ் ஸ்த்ருகாத்ஸ்கிய் (பிறப்பு 1933) வானவியல் அறிஞர், புல்கோவா வானிலை ஆராய்ச்சி நிலையத்தில் சோதனைக் கூடத் துணைவர். ஸ்த்ருகாத்ஸ்கிய் சகோதரர்கள் பதினைந்து கற்பனை விஞ்ஞான நவீனங்களும் பல சிறுகதைத் தொகுப்புக்களும் இயற்றியுள்ளனர். விண்வெளியை வெற்றி கொள்ளல், வருங்காலப் புவிவாசிகளின் இயல்புகள், வாழ்க்கைப் போக்குகள் ஆகியவையே இவர்களது நூல்களின் கருப்பொருள்கள். குறுகிய மனப்பான்மை, தனித்துவவாதம் போன்ற பழங்கால மீத மிச்சங்களுக்கு எதிரான போராட்டம் இவர்களுடைய நூல்களில் நிறைய இடம் பெற்றிருக்கிறது. இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ள "செப்பமாக அமைந்த கிரகம்" என்னும் குறுநாவல், இதே தலைப்புடன் பல குறுநாவல்களின் கோவையாக வெளிவந்த அவர்களது பிரபல நவீனத்தின் ஒரு பகுதி ஆகும்.

## செப்பமாக அமைந்த கிரகம்

பொரீஸ், அர்க்காதிய் ஸ்த்ருகாத்ஸ்கிய்

**லி**யூ இடுப்புயரம் பசபசவென்று வளர்ந்த சாறு நிறைந்த புற்களி் நடுவே நின்று ஹெலிகாப்டர் தரையிறங்குவதை நோக்கினான். ஹெலிகாப்டரின் விசிறி அலகுகள் கிளப்பிய காற்றினால் புற்கள்மீது வெள்ளியும் கரும்பச்சையுமான அகன்ற அலைகள் எழுந்து பரவின. ஹெலிகாப்டர் மிக மெதுவாக இறங்குவதுபோல லியூவுக்குத் தோன்றியது. அவன் பொறுமை



யின்றிக் கால்களை மாற்றி மாற்றி வைத்தவாறு நின்றான். மிகவும் வெக்கையும் இறுக்கமுமாக இருந்தது. சிறு வெண் சூரியன் உயரே காட்சி தந்தது. புற்களிலிருந்து வந்தது ஈரித்த கதகதப்பு. விசிறி அலகுகள் இன்னும் உரத்த ஓசையுடன் சுழன்றன. ஹெலிகாப்டர் லியூவின் புறம் தன் ஒரு பக்கம் இருக்கும்படி திரும்பியது. பின்பு சுமார் ஒன்றரை மீட்டர் சட்டெனத் தாழ்ந்து, குன்றின் உச்சியில் அடர்ந்திருந்த புற்களில் ஆழ்ந்தது. லியூ மேட்டில் ஏறி உச்சியை நோக்கி ஓடினான்.

எஞ்சின் அடங்கிவிட்டது. அலகுகள் வர வர மெதுவாகச் சுழலத் தொடங்கி, முடிவில் நின்றுவிட்டன. ஹெலிகாப்டர் அறைக்குள்ளிருந்து ஆட்கள் இறங்கினார்கள். முதலில் இறங்கினான் கைகள் மடித்துவிட்ட மேற்சட்டை அணிந்த ஒடிசலான நெடியவன். அவன் தலைக் காப்பு அணியவில்லை. அவனது நிறம் மங்கிய முடிகள் நீண்ட பழுப்பு முகத்திற்கு மேலே சிலிர்த்து நின்றன. லியூ அவனை அடையாளம் கண்டு கொண்டான். அவன்தான் குழுத் தலைவன், அடையாளத் தேட்டக்காரன் கோமவ்.

"வணக்கம், வீட்டுக்கார ஐயா!" என்று குதூகலமாகக் கையை நீட்டினான் கோமவ்.

"வணக்கம், காப்டன், லெஒனீதாவில் உங்கள் வரவு நல்வரவு ஆகுக" என்றான் லியூ.

அவனும் கையை நீட்டினான். ஆனால் அவர்கள் கைகுலுக்கு வதற்கு ஒருவரையொருவர் நோக்கி இன்னும் பல பத்தடிகள் நடக்க வேண்டியிருந்தது.

"நீங்கள் வந்ததில் எனக்கு மிக மிக மகிழ்ச்சி!" என்றான் லியூ புன்னகையுடன்.

"ஏங்கிப் போனீர்களோ?"

"ஆம். மிகவும் ஏங்கிப்போய்விட்டேன். கிரகம் முழுவதிலும் நான் தனி ஆள்."

"ஆத்தஸ் உங்களுக்கு வணக்கம் தெரிவிக்கச் சொன்னான்."

"ஆத்தஸா?"

"ஆமாம். அவன்தான் ஸீதரொவ். நினைவு இருக்கிறதா?"

கோமவின் பின்னே "அட சே" என்ற சொற்கள் கேட்டன.

பொத்தென்று எதுவோ புல்லில் விழுந்தது.

கோமவ் திரும்பிப் பாராமலே, "இது பொரீஸ் ஃபோக்கின் தானே விழும் தொல்பொருள் இயலான்" என்றான்.

"புல் இப்படிப் பயங்கரமாக மண்டியிருந்தால் என்ன செய்வதாம்!" என்று எழுந்துகொண்டே சொன்னான் பொரீஸ் ஃபோக்கின். செம்பட்டை மீசையும் மச்சங்கள் அப்பிய மூக்கும் உள்ளவன் அவன். வெண்ணிறத் தொப்பியைச் சாய்வாக அணிந்திருந்தான். பச்சைப் புல் கறை படிந்த உள்ளங்கைகளைக் காற்சட்டையில் தேய்த்துத் துடைத்துக் கொண்டு, "நான்தான் ஃபோக்கின், அடையாளத் தேட்டத் தொல்பொருள் இயலான்" என்று அறிமுகப்படுத்திக்கொண்டான்.

"நல்வரவு ஃபோக்கின்" என்றான் லியூ.

"இவள் தான்யா பாலேய், பொறிஇயல் - தொல்பொருள் நிபுணி."

லியூ அருகே போய் மரியாதையாகத் தலைகுனிந்து வணங்கினான். தான்யாவின் சாம்பல் நிற விழிகளில் துணிவு காணப்பட்டது. பற்கள் பளிச்சிட்டன. அவளுடைய வலிய கை சுரசுரப்பாக இருந்தது. மேலுடை அவளுக்குப் பாந்தமாக ஒயிலுடன் திகழ்ந்தது.

"என் பெயர் தான்யா" என்றாள் பொறிஇயல் - தொல்பொருள் நிபுணி.

"லியூ ஹுவான் - சேன்" என்று தயக்கத்துடன் சொன்னான் லியூ.

"ம்போகா, உயிரியல் நிபுணர், வேட்டைக்காரர்" என அறிமுகப் படுத்தினான் கோமவ்.

"எங்கே?" என்று கேட்டான் லியூ: "ஆ, மன்னிக்க வேண்டும், தயை செய்து!" என்றான்.

"பரவாயில்லை, தோழர் லியூ" என்றான் ம்போகா.

ம்போகா காங்கோவாசி, பிக்மிகள் எனப்படும் குறளர் இனத்தைச் சேர்ந்தவன். புல்லுக்குமேல் அவனுடைய தலை மட்டுமே தெரிந்தது. அது வெள்ளைக் குட்டையால் இறுகக் கட்டப்பட்டிருந்தது. தலைக்குப் பக்கத்தில் நீட்டிக் கொண்டிருந்தது துப்பாக்கியின் கரிய குழல்.



"வேட்டைக்காரர் - தோரா என்பவர் இவர்தாம்" என்றாள் தான்யா.

வேட்டைக்காரன் - தோராவோடு கை குலுக்குவதற்கு லியூ குனிய வேண்டியிருந்தது. ம்போகா யார் என்பதை இப்போது அவன் தெரிந்துகொண்டான். பிற கிரகங்களில் விலங்கினங்களைக் காப்பதற்கான குழுவின் உறுப்பினன் ஆன வேட்டைக்காரன்-தோரா. பண்டோரா என்னும் கிரகத்தில் "உயிர் பாக்டீரியத்தைக்" கண்டுபிடித்தவன். செவ்வாய் கிரகத்தில் "ஸோரா-தோபூ ஹ்ரா" எனப்பட்ட பறக்கும் அரக்க அட்டைகளைப் பழக்கிய விலங்கு உளவியல் அறிஞன். இத்தனை சிறப்புக்களும் வாய்ந்தவன் ம்போகா. அப்பேர்ப்பட்டவனை உடனே அடையாளம் கண்டு கொள்ளத் தவறியது லியூவுக்கு எக்கச்சக்கமாயிருந்தது.

"உங்களிடம் ஆயுதம் இல்லை போலக் காண்கிறதே" என்றான் ம்போகா.

"என்னிடம் ரிவால்வர் இருக்கத்தான் செய்கிறது, ஆனால் அது மிகவும் கனமானது" என்று விடையிறுத்தான் லியூ.

"புரிகிறது" என்று ஆமோதிப்பைக் காட்டும் வகையில் தலையசைத்தான் ம்போகா. அவன் சுற்றுமுற்றும் கண்ணோட்டினான். "எப்படியும் திடல்வெளியில் நெருப்பு வைத்து விட்டார்களே" என்று தணிந்த குரலில் கூறினான்.

லியூ திரும்பிப் பார்த்தான். குன்றில் இருந்து தொடுவானம் வரை நீண்டு பரந்திருந்தது தளதளப்பான புல் மண்டிய தட்டையான சமவெளி. குன்றுக்கு ஒரு மூன்று கிலோமீட்டர் தொலைவில், போட்டின் ரியாக்டரால் நெருப்பு வைக்கப்பட்ட புல் மூண்டு எரிந்தது. வெண் வானை நோக்கி எழுந்தன அடர்ந்த வெண்புகைப் படலங்கள். அகலப் பரப்பிய மூன்று ஆதாரக் கால்கள்மேல் வைத்த கரு முட்டை வடிவான போட் புகைக்குப் பின்னே மங்கலாகத் தெரிந்தது. போட்டை சூழ்ந்திருந்தது எரிந்த பகுதியின் அகன்ற கரிவட்டம்.

"இது சீக்கிரம் அணைந்துவிடும். இங்கே ஈரிப்பு மிகுதி. போவோம் வாருங்கள். உங்கள் வேலையிடத்தைக் காண்பிக்கிறேன்" என்றான் லியூ.

அவன் கோமவின் கையைப் பிடித்துக்கொண்டு ஹெலி காப்டரைக் கடந்து குன்றின் மறு பக்கம் அவனை அழைத்துச்

சென்றான். மற்றவர்கள் அவர்களைத் தொடர்ந்து சென்றார்கள். வியூ பல முறை திரும்பி அவர்களைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

"இறங்கியதுமே ஆபாசம் செய்வது எப்போதுமே மனதுக்குக் கஷ்டமாய் இருக்கிறது" என்று எரிச்சலுடன் சொன்னான் கோமவ்.

"இது சீக்கிரம் அணைந்துவிடும்" என்று திரும்பச் சொன்னான் வியூ. பின்னால் ஃபோக்கின் தான்யாவைப் பரிவுடன் கவனித்துக் கொள்வது அவன் காதில்பட்டது.

"ஜாக்கிரதை, தான்யா, இங்கே மேடு போலிருக்கிறது"...

"காண்கிறேன். நீ கீழே பார்த்து நட" என்றாள் பொறிஇயல்-தொல்பொருளியல் நிபுணி.

"இதுதான் உங்கள் வேலையிடம்" என்றான் வியூ.

அமைதியாகப் பெருகிய அகன்ற ஆறு பசிய சமவெளியை ஊடறுத்துச் சென்றது. ஆற்றின் திருப்பத்தில் துத்தநாக முகடு பளிச்சிட்டது.

"இது என் சோதனைக்கூடம்" என்றான் வியூ.

சோதனைக்கூடத்தின் வலப்புறம் கறுப்பும் சிவப்புமான புகைத் தாரைகள் விண்ணை நோக்கிக் கிளம்பின.

"பண்டசாலை கட்டப்படுகிறது" என்றான் வியூ.

புகையில் எவையோ நிழல்கள் வளையவருவது தெரிந்தது. கணப்போதில் தென்பட்டது பட்டைச் சக்கரம் கொண்ட பிரமாண்டமான, பாங்கற்ற இயந்திரம். அதுதான் தாய்-ரொபாட். புகை நடுவே ஏதோ அதிர் முழக்கத்துடன் சட்டென மின்னியது. உடனே புகை இன்னும் அடர்த்தியாகக் குமைந்தது.

"அதோ அங்கே இருக்கிறது நகரம்" என்றான் வியூ.

தளத்திலிருந்து நகரம் ஒரு கிலோமீட்டருக்குச் சிறிதே அதிகத் தொலைவில் இருந்தது. குன்றிலிருந்து பார்ப்பதற்கு நகரக் கட்டிடங்கள் பருத்த செங்கல்கள் போலத் தோற்றம் அளித்தன. பசும்புல்லுக்கு மேலே நீண்டிருந்த பதினாறு சாம்பல் நிற மட்டச் செங்கல்கள்.

"ஊம், திட்ட அமைப்பு அசாதாரணமானது" என்றான் ஃபோக்கின்.



கோமவ் மௌனமாகத் தலையசைத்தான். இந்த நகரம் மற்ற வற்றைச் சிறிதும் ஒத்திருக்கவில்லை. விண்வெளியில் வேற்றுலக அறிவாளி ஜீவன்களது செயல்களின் தடங்களை ஆராய்வதற்கான குழுவின் ஊழியர்கள் லெஒனீதா கிரகம் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன் இரண்டே நகரங்களைக் கண்டிருந்தார்கள். ஒன்று செவ்வாய் கிரகத்தில் இருந்த வெற்று நகரம். மற்றது "எ.ந.17" நீல நட்சத்திரத்தின் கோளான விளாதிஸ்லாவில் இருந்த வெற்று நகரம். இரண்டு நகரங்களையும் நிறுவியவன் ஒரே கட்டிடச் சிற்பி என்பது துலக்கமாய்த் தெரிந்தது. நிலத்துக்கு அடியில் பல அடுக்குகள் சென்றிருந்த நீளுருளை வடிவான கட்டிடங்கள். ஒளிரும் ஸிலிக்கனால் கட்டப்பட்ட இந்தக் கட்டிடங்கள் ஒரே மையம் கொண்ட வட்டவாகில் அமைந்திருந்தன. லெஒனீதாவில் உள்ள நகரமோ முற்றிலும் வேறானது. புரையோடிய சுண்ணக் கற்களால் அமைந்த இரண்டு வரிசை சாம்பல் டப்பாக்கள் இவை.

"நீங்கள் அங்கே போனீர்களா?" என்று கேட்டான் கோமவ்.

"இல்லை. ஒரு தடவைகூடப் போகவில்லை. உண்மையிலேயே எனக்கு நேரம் கிடைக்கவில்லை. நான் தொல்பொருள் இயலான் அல்லவே, வளிமண்டல பௌதிக விஞ்ஞானிதானே. தவிர, அங்கே போகாதிருக்கும்படி கொர்போவ்ஸ்க்கிய் என்னைக் கேட்டுக் கொண்டான்.

"பூ-புஹீ!" என்ற முழக்கம் கட்டுமான இடத்திலிருந்து வந்தது. அங்கே செம் புகைப் படலங்கள் அடர் மேகங்கள் போல மேலே எழுந்தன. பண்டசாலையின் மழமழப்பான சுவர்கள் அவற்றின் ஊடாக அதற்குள் வரைவடிவம் காட்டின. தாய்-ரொபாட் புகையிலிருந்து புல்வெளிக்கு வந்தது. அதன் அருகே துள்ளிக் குதித்தன கட்டுமான ரொபாட்டுகள். அவற்றின் கரிய உருவங்கள் வழிபாட்டு யாத்திரிகர்களை ஒத்திருந்தன. பிறகு அவை வரிசை யாக அணிவகுத்து ஆற்றை நோக்கி ஓடின.

"எங்கே ஓடுகின்றன இவை?" என்று ஆவல் காரணமாகக் கேட்டான் ஃபோக்கின்.

"குளிர்வதற்கு" என்றாள் தான்யா.

"அவை மேடுகளைச் சமப்படுத்துகின்றன. பண்டசாலை அனேகமாகக் கட்டி முடிந்துவிட்டது. இப்போது எல்லா அமைப்புக்களும் மீண்டும் நிறுவப்படும். விமானத் தங்கு நிலையமும் குடிநீர்க் குழாய் வசதியும் கட்டப்படும்" என்று

விளக்கினான் வியூ.

"குடிநீர்க் குழாயா!" என்று பரவசப்பட்டான் ஃபோக்கின்.

"இருந்தாலும் தளத்தை நகரத்திலிருந்து அதிகத் தொலைவில் அமைத்திருந்தால் மேலாய் இருந்திருக்கும்" என்று சந்தேகத்துடன் கூறினான் கோமவ்.

"கொர்போவ்ஸ்க்கிய்தான் இப்படி ஏற்பாடு செய்தான். தளத்திலிருந்து தொலைவில் போவது நன்றாயிராது" என்றான் வியூ.

"அதுவும் சரிதான். இந்தக் கட்டுமானக்காரர்கள் நகரத்தைக் கெடுக்காமலிருந்தால் தேவலை" என்றான் கோமவ்.

"அட நீங்கள் என்ன! அவர்கள் நகரின் பக்கம் போவதே கிடையாதே."

"எவ்வளவு செப்பமாக அமைந்த கிரகம்!" என்றான் ம்போகா.

"ஆமாம்! ஆறு, காற்று, பசுமைச் செழிப்பு, கொசுக்களே கிடையாது, தீங்குள்ள பூச்சி புழுக்கள் எவையும் கிடையாது..." என்று மகிழ்வுடன் சொன்னான் வியூ.

"மிகவும் செப்பமாக அமைந்த கிரகம்" என்று திரும்பக் கூறினான் ம்போகா.

"ஆற்றிலே நீந்தலாமா?" என வினவினாள் தான்யா.

வியூ ஆற்றை நோக்கினான். ஆறு பசிய நிறத்துடன் கலங்கலாக இருந்தது. ஆனால் இது உண்மையான நீர் நிறைந்த உண்மையான ஆறு. சுவாசிக்க ஏற்ற காற்றும் உண்மையான நீரும் உள்ள முதலாவது வேற்றுக்கோள் லெஓனீதா தான்.

"நீந்திக் குளிக்கலாம் என்றே நினைக்கிறேன். ஆனால் நேரம் இல்லாமையால் எனக்கு இன்னும் நீந்த வாய்க்கவில்லை" என்றான் வியூ.

"நாம் தினந்தோறும் நீந்திக்குளிப்போம்" என்று உற்சாகமாக மொழிந்தாள் தான்யா.

"இவ்வளவுதானா? தினந்தோறுமாம்! நாள் தோறும் மூன்று தரம்! சதா நீந்திக் குளிப்பது தவிர வேறு எதுவும் செய்யப் போவதில்லை நாம்!" என்று எகத்தாளம் செய்தான் ஃபோக்கின்.



"சரி, விடு, ஆமாம், அங்கே என்ன?" என்று தொடுவானத்தில் தெரிந்த தட்டைக் குன்றுகளின் தொடரைச் சுட்டிக் காட்டினான் கோமவ்.

"தெரியாது. அங்கே இன்னும் ஒருவரும் போகவில்லை. வால்கின்ஷ்தைன் திடீரென்று நோய்ப்பட்டுவிட்டான். ஆகவே கொர்போவ்ஸ்க்கிய் உடனே பறந்துபோக நேர்ந்தது. எனக்கு வேண்டிய இயந்தி சாதனங்களை இறக்குவதற்குத்தான் அவனுக்கு நேரம் இருந்தது."

சற்றுநேரம் எல்லோரும் தொடுவானத்துக் குன்றுகளையே பேசாமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

"இன்னும் இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் நானே ஆற்றை ஒட்டினாற்போலப் பறந்து பார்வையிடுகிறேன்" என்று அப்புறம் கோமவ் கூறினான்.

"இன்னும் எவையேனும் தடங்கள் இருந்தால் ஆற்றின் அருகேதான் அவற்றைத் தேட வேண்டும்" என்றான் ஃபோக்கின்.

"நிச்சயமாக" என்று மரியாதையாக இசைவு தெரிவித்தான் வியூ. "இப்போது என் இடத்துக்குப் போகலாம்" என்று அழைத்தான்.

கோமவ் ஹெலிகாப்டரைத் திரும்பிப் பார்த்தான்.

"பரவாயில்லை. இது இங்கே இருக்கட்டும். நீர்யானைகள் குன்றுகள் மேல் ஏறுவதில்லை" என்றான் வியூ.

"அப்படியா? நீர்யானைகள் இருக்கின்றனவா இங்கே?" என்று வியந்தான் ம்போகா.

"நான்தான் அவற்றை இந்தப் பெயரால் குறிக்கிறேன். தொலைவிலிருந்து பார்ப்பதற்கு அவை நீர்யானைகள் போல இருக்கின்றன. கிட்டத்திலிருந்து நான் அவற்றைப் பார்த்தது இல்லை."

அவர்கள் குன்றிலிருந்து இறங்கலாயினர்.

"ஆற்றின் அக்கரையில் புல் மிக உயரம். நான் இந்த விலங்குகளின் முதுகுகளை மட்டுமே கண்டேன்."

மெதுவான சறுக்கு நடையில் ம்போகா வியூவின் அருகாகச் சென்றான். புற்கள் அவன் இருமருங்கிலும் வழிந்தோடுவதுபோல

இருந்தது.

"தவிர இங்கே பறவைகள் உள்ளன. அவை மிகப் பெரியவை. சில வேளைகளில் மிகவும் தாழப் பறக்கின்றன. ஒன்று என் லொக்கேட்டரை அடித்து வீழ்த்தப் பார்த்தது" என்று பேச்சைத் தொடர்ந்தான் லியூ.

கோமவ் நடை வேகத்தைக் குறைக்காமலே வெயில் படாதபடிக் கண்களைக் கையால் மறைத்துக்கொண்டு வானத்தை நோக்கினான்.

"'சூரிய காந்திக்கு' நான் வானொலிச் செய்தி அனுப்ப வேண்டும். உங்கள் வானொலி அஞ்சல் கருவியை உபயோகிக்கலாம் அல்லவா?" என்றான்.

"தாராளமாக. ஒன்று தெரியுமா? பெர்ஸிடிக்ஸன் ஒன்றைச் சுட்டு வீழ்த்த விரும்பினான். நான் சொல்லுவது இந்தப் பறவைகளைப் பற்றி. ஆனால் கொர்போவ்ஸ்க்கிய் அனுமதிக்கவில்லை."

"ஏன்?" என்று கேட்டான் ம்போகா.

"அறியேன். அவன் கடுங்கோபம் அடைந்தான், எல்லோருடைய ஆயுதங்களையும் பிடுங்கிக் கொள்ளக் கூட விரும்பினான் என்பதுதான் எனக்குத் தெரியும்" என்றான் லியூ.

"எங்களுடைய ஆயுதங்களை அவன் பிடுங்கிக் கொண்டே விட்டான். ஆலோசனைச் சபையில் இது பெரிய தகராறுக்குக் காரணம் ஆயிற்று. விஷயம் மிகவும் ரசாபாசமாய்ப் போய் விட்டது என்பது என் கருத்து. கொர்போவ்ஸ்க்கிய் தன் செல்வாக்கால் எல்லோரையும் அடக்கி ஒடுக்கிவிட்டான்" என்றான் ஃபோக்கின்.

"ம்போகாவைத் தவிர" என்றாள் தான்யா.

"ஆம். நான் துப்பாக்கியை எடுத்து வந்திருக்கிறேன். ஆனால் கொர்போவ்ஸ்க்கியின் உள்ளம் எனக்குப் புரிகிறது. இங்கே எந்தப் பிராணியையும் சுட மனம் வரவில்லை" என்றான் ம்போகா.

"இருந்தாலும் கொர்போவ்ஸ்க்கிய் விசித்திரப் போக்குகள் உள்ளவன்" என்று கூறினான் ஃபோக்கின்.

"இருக்கலாம். என் கருத்துப்படி அவன் சிறந்த மனிதன்" என்றான் லியூ.



விசாலமான கும்மட்டமும் தாழ்ந்த வட்டக் கதவும் உள்ள சோதனைக் கூடத்தை அவர்கள் நெருங்கினார்கள். வலைக் கம்பிகள் கொண்ட தட்டுக்கள் போன்ற மூன்று லொக்கேட்டர்கள் - விண்வெளிக் கப்பல்கள் இருக்கும் இடத்தை வானொலி அலையதிர்வு வாயிலாகக் கண்டறியும் கருவிகள் - கும்மட்டத்துக்கு மேலே வெவ்வேறு பக்கங்களில் சுழன்றன.

"இங்கே உங்கள் கூடாரங்களை நாட்டிக் கொள்ளலாம். தேவையானால் கட்டுமான ரொபாட்டுகளிடம் சொல்லி அதிக உறுதியான இருப்பிடம் அமைக்கச் சொல்லுகிறேன்" என்றான் லியூ.

கோமவ் கும்மட்டத்தையும், சோதனைக்கூடத்தின் பின்னே குமைந்த சிவப்பு, கறுப்புப் புகையையும் நோக்கினான். பின்பு நகரத்தின் சாம்பல் நிற முகடுகள் மீது கண்ணோட்டினான்.

"கேளுங்கள், லியூ. நாங்கள் உங்களுக்கு இடைஞ்சலாய் இருப்போமோ என்று அஞ்சுகிறேன். நகரத்திலேயே இட வசதி செய்து கொள்கிறோமே, ஊம்?" என்று தவறு செய்தவன் போலக் கூறினான்.

"தவிர இங்கே கரிந்த நாற்றம் வேறு அடிக்கிறது. கட்டுமானப் பணியினரிடம் எனக்குப் பயமாக இருக்கிறது" என்றாள் தான்யா.

லியூ மனத்தாங்கலுடன் தோள்களைக் குலுக்கினான்.

"உங்கள் இஷ்டம். இங்கே மிக நன்றாக இருக்கும் என நான் நினைக்கிறேன்" என்றான்.

"நாங்கள் கூடாரங்கள் அடித்துக்கொண்டதும் நீங்கள் எங்கள் இடத்துக்கு வாருங்கள். உங்களுக்குப் பிடித்திருக்கும், நீங்களே பார்ப்பீர்கள், நகரத்திலிருந்து தளம் ரொம்பத் தூரமும் இல்லை."

"ம்-ம்-ம்... இருக்கலாம்... இப்போது என்னிடத்துக்கு வாருங்கள்." என்றான் லியூ.

தொல்பொருள் இயல் நிபுணர்கள் நேரத்துக்கு முன்பே முதுகை வளைத்துக்கொண்டு தாழ்ந்த வாயிலை நோக்கிச் சென்றார்கள். ம்போகா எல்லோருக்கும் பின்னே போனான். அவன் தலையைக் குனிந்து கொள்ளக்கூட வேண்டியிருக்க வில்லை. லியூ நிலையில் சற்று தாமதித்து, அக்கம்பக்கம் பார்வை செலுத்தினான். மிதித்துத் துவைக்கப்பட்ட தரை, மஞ்சள் பாரித்து அலங்கோலமாய் இருந்த புற்கள், அவலக் காட்சி அளித்த

பிளாஸ்டிக் அடுக்குகள் ஆகியவற்றைக் கண்டு, இங்கே உண்மை யாகவே கரிந்த நெடி வீசுகிறது என எண்ணினான்.

நகரத்தில் ஒரே ஒரு வீதிதான் இருந்தது. அது மிக அகல மானது. அடர்ந்த புற்கள் மண்டிக் கிடந்தது. வீதி கிட்டதட்டத் துல்லியமாகத் தீர்க்கரேகைவாகில் தென்வடலாக நீண்டு சென்று ஆற்றிற்குச் சற்று தூரத்தில் முடிந்திருந்தது. நகரின் மையத்தில் முகாம் போடுவது என்று கோமவ் தீர்மானித்தான். முகாம் போடும் வேலை வட்டார நேரப்படி (லெஔனீதா கிரகத்தில் ஒரு நாள் இருபத்தேழு மணிகளும் சில நிமிடங்களும் கொண்டது) பிற்பகல் மூன்று மணிக்குத் தொடங்கப்பட்டது.

வெக்கை இன்னும் கடுமை ஆகிவிட்டதுபோல் இருந்தது. காற்று வீசவில்லை. சாம்பல் நிறக் கட்டிடங்களுக்கு மேலே உஷ்ணக் காற்று நடுங்கியது. ஆற்றின் அருகே இருந்த நகரின் தென்பகுதியில் மட்டுமே ஓரளவு குளுகுளுவென்று இருந்தது. ஃபோக்கினின் சொற்களில் உலர்புல்லும் "ஒரு சிறிது குளோ ரெல்லாவகைத் தாவரமும்" கலந்த மணம் கமழ்ந்தது.

ம்போகாவையும் உதவி செய்ய முன்வந்த லியூவையும் அழைத்துக்கொண்டு கோமவ் ஹெலிகாப்டரில் அமர்ந்து இயந்திர சாதனங்களும் உணவுப் பண்டங்களும் எடுத்து வருவதற்காக போட்டுக்குப் புறப்பட்டான். தான்யாவும் ஃபோக்கினும் நகரத்தைப் படம் பிடிப்பதில் ஈடுபட்டார்கள். இயந்திர சாதனங்கள் கொஞ்சமே இருந்தன. இரண்டு தடவைகளில் கோமவ் அவற்றை முகாம் கொண்டு சேர்த்துவிட்டான். முதல் தடவை அவன் வந்ததும் சாமான்களை இறக்குவதில் உதவி செய்த ஃபோக்கின் பொருள் பொதிந்த பார்வையுடன் ஒரு தகவல் தெரிவித்தான். நகரின் எல்லாக் கட்டிடங்களும் அளவுகளில் ஒன்றுக்கொன்று பெரிதும் நிகராய் இருப்பதாக அவன் அறிவித்தான்.

"மிகுந்த அக்கறைக்கு உரிய விஷயம்" என்று மரியாதைப் பாங்குடன் சொன்னான் லியூ.

"எல்லாக் கட்டிடங்களும் ஒரே நோக்கம் கொண்டவை என்பதை இது காட்டுகிறது" என்றான் ஃபோக்கின். பிறகு சற்று சிந்தித்துவிட்டு, "அது என்ன நோக்கம் என்று தீர்மானிப்பதுதான் பாக்கி" எனக் கூறினான்.

ஹெலிகாப்டர் இரண்டாவது முறை திரும்பியதும், தான்யாவும் ஃபோக்கினும் உயரமான கழியில் அடையாளத் தேட்டக்காரர்களின் அதிகார பூர்வம் அற்ற கொடியைக் கட்டி நகருக்கு மேலே பறக்க விட்டிருப்பதைக் கோமவ் கண்டான். ஏழு முகப்புச் சுரையின் உருவம் பொறித்த வெள்ளைத் துகில் இந்தக் கொடி. வெகு காலத்துக்கு, அனேகமாக ஒரு நூற்றாண்டுக்கு முன்பு இருந்த விண்வெளிப் பயணப் பிரமுகர் ஒருவர், வேற்றுலக அறிவாளிகளின் செயல்களது அடையாளங் களை விண்வெளியில் தேடி ஆராய்வதை உக்கிரமாக எதிர்த்து வந்தவர், அச்சில் சுழலும் சக்கரத்தையும் பாறையில் செதுக்கிய பிதாகரஸ் தேற்றத்தின் வரைவையும் ஏழு முகப்புகள் கொண்ட சுரையையுமே இத்தகைய அறிவுச் செயல்களின் மறுக்க முடியாத சான்றுகளாகக் கருத் தாம் தயாராயிருப்பதாக ஒருமுறை ஆவேசத்துடன் கூறிவிட்டார். அடையாளத் தேட்டக்காரர்கள் இந்த அறைகூவலை ஏற்று, தங்கள் கொடியில் ஏழு முகப்புச் சுரையைப் பொறித்துக்கொண்டார்கள்.

கோமவ் மன நிறைவுடன் கொடி வணக்கம் செய்தான். இந்தக் கொடி தோன்றியது முதல் இதுவரை எத்தனையோ ஒளியாண்டுத் தொலைவுகள் கடக்கப்பட்டுவிட்டன, எவ்வளவோ எரிபொருள் செலவாக்கப்பட்டுவிட்டது. செவ்வாயில் வெற்று நகரத்தின் வட்ட வாகான வீதிகளுக்கு மேலே இந்தக் கொடி முதன்முதலில் பறக்க விடப்பட்டது. செவ்வாய் கிரகத்தின் நகரமும் துணைக்கோள் களும் இயற்கையாகத் தோன்றியவை என்ற வெறுங் கற்பனை நிறைந்த அனுமானம் அப்போதும் நிலவிவந்தது. நகரமும் துணைக் கோள்களும் மட்டுமே மர்மமாக மறைந்துவிட்ட செவ்வாய் நாகரிகத்தின் ஒரே எஞ்சிய சின்னங்கள் என்று மிகத் துணிவுள்ள முன்னோடிகள்கூட அப்போது கருதினார்கள். வெற்று நகரமும் விட்டுவிடப்பட்ட துணைக்கோள்களும் தொலைவில் உள்ள, இன்னும் அறியப்படாத கிரக மண்டலத்திலிருந்து வந்தவர்கள் நிறுவியவை என்ற ஒரே அனுமானம் மறுப்பிற்கு இடமற்றதாக ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு முன் விண்வெளியில் இன்னும் எத்தனையோ ஒளியாண்டுத் தொலைவுகளைக் கடப்பதும் தரையைத் தோண்டுவதும் தேவைப்பட்டன. ஆனால் லெஔனீதாவில் உள்ள இந்த நகரந்தான்...

கோமவ் ஹெலிகாப்டரின் அறையிலிருந்து கடைசி மூட்டையை வெளியே போட்டுவிட்டுப் புல்லில் குதித்து, ஹெலி காப்டர் கதவை வலுவாக அறைந்து மூடினான். லியூ அவன் அருகே போய், மடக்கிய சட்டைக் கையைப் பிரித்துவிட்டு,

"இப்போது எனக்கு விடை கொடுங்கள். இன்னும் இருபது நிமிடங்களில் நான் வானிலை ஆராய்ச்சி பலூனைப் பறக்கவிட வேண்டும்" என்றான்.

"ஆகா, போய் வாருங்கள். இதற்குத் தடை சொல்ல முடியுமா? நன்றி, லியூ. மாலைச் சாப்பாட்டுக்கு இங்கே வந்துவிடுங்கள்" என்றான் கோமவ்.

லியூ கடிகாரத்தைப் பார்த்தான்.

"நன்றி. வருவதாக உறுதிகூற மாட்டேன்" என்றான்.

ம்போகா பக்கத்திலிருந்த கட்டிடத்தின் சுவற்றில் துப்பாக்கியைச் சார்த்திவிட்டு தெருவின் நட்டநடுவில் கூடாரத்தை நிறுத்திக் காற்று அடைத்தான். லியூ போவதைப் பார்த்துக் கோமவை நோக்கிப் புன்னகை செய்தான். அவனது சுருக்கம் விழுந்த சிறு முகத்தில் சாம்பல் நிற உதடுகள் விரிந்தன.

"மெய்யாகவே செப்பமாக அமைந்த கிரகம் இது, கோமவ். இங்கே ஆயுதங்கள் இல்லாமல் வளையவரலாம், புல்மேலே கூடாரம் அடிக்கலாம்... தவிர இதோ இதுவும்..." என்று ஃபோக்கினும் தான்யாவும் இருந்த பக்கத்தைத் தலையசைப்பால் குறித்தான் ம்போகா. அடையாளத் தேட்டத்-தொல்பொருள் இயலானும் பொறிஇயல்-தொல்பொருள் இயல் நிபுணியும் தங்களைச் சுற்றிப் புல்லை மிதித்துச் சமப்படுத்தி, கட்டிட நிழலில் அவசரச் சோதனைக்கூடம் அமைப்பதில் முனைந்திருந்தார்கள். தான்யா கைகள் அற்ற பட்டுச் சொக்காயும் குட்டை நிஜாரும் அணிந்திருந்தாள். அவளுடைய கனத்த ஜோடுகள் கட்டிட முகட்டின்மேல் கொலு இருந்தன. மேலாடையோ பக்கத்தில் மூட்டைகளின் மேல் கிடந்தது. வாலி பால் ஆட்டக்காரனுக்கு உரிய அரை நிஜார் அணிந்திருந்த ஃபோக்கின் வேர்வையில் நனைந்த மேற்சட்டையைக் கடுங் கோபத்துடன் கழற்றினான்.

"ஃபோக்கின், மின் சேமக்கலங்களை எங்கே பதுக்கிவிட்டாய்?" என்றாள் தான்யா.

"இதோ, தான்யா!" என்று பட்டும் படாமலும் பதிலளித்தான் ஃபோக்கின்.

"ஆமாம், இது பண்டோரா அல்ல" என்றான் கோமவ்.

அவன் மூட்டையிலிருந்து இரண்டாவது கூடாரத்தை எடுத்து



அதில் மையவிலக்கப் பம்பைப் பொருத்துவதில் முனைந்தான். ஆம், இது பண்டோரா அல்ல என்று எண்ணமிட்டான். பண்டோராவினால் தாங்கள் இருளடர்ந்த காட்டின் வழியே சிரமப்பட்டு வழிசெய்து கொண்டு நடந்தது அவன் நினைவுக்கு வந்தது. உயர்தரப் பாதுகாப்புக்கான கனத்த உடைகளை அவர்கள் அணிந்திருந்தார்கள். தடுப்புவிசை அகற்றப்பட்ட பாரியான சிதைகருவி கைகளைப் பின்னிழுத்தது. காலடியில் சேறு சளப்பிட்டது. ஒவ்வோர் அடிவைப்பின்போதும் நாற்புறமும் தாவின பல கால்கள் கொண்ட ஆபாசங்கள். தலைக்கு உயரே, பிசுபிசுப்பான கிளைகளின் வலைப்பின்னல் வழியே ஏக்கத்துடன் சுடர்ந்தன கிட்டத்தில் இருந்து இரண்டு குருதிச் செஞ் சூரியன்கள். அட, இம்மாதிரி நிலைமை பண்டோராவில் மட்டுந்தானா? வளிமண்டலம் உள்ள எல்லாக் கோள்களிலும் அடையாளத் தேட்டக்காரர்களும் இறங்கு பயணிகளும் மிகப் பெருத்த முன்ஜாக்கிரதையுடனேயே நடமாடினார்கள். வேவு பார்க்கும் ரொபாட்டுகளையும், தானியங்கி ஸைபர்னெடிக்ஸ் உயிரியல் சோதனைக் கூடங்களையும் நச்சு நுண்ணுயிர் பகுப்பாய்வுக் கருவிகளையும் அனைத்து நோயணுக் கொல்லிகளின் கட்டியாக்கப்பட்ட ஆவிப்படலங்களையும் வரிசை வரிசையாக முன்னே அனுப்பினார்கள். விண்வெளிக் கப்பல் தரை இறங்கியதுமே பாதுகாப்பு இடப் பரப்பை மீவெப்பூட்டியான டெர்மைட்டால் சுட்டுப் பொசுக்குவது கப்பல் தலைவனின் கடமையாக இருந்தது. மிக மிகக் கவனத்துடன் தொற்று நீக்கமும் நுண்ணுயிர் நீக்கமும் செய்து கொள்ளாமல் விண்வெளிக் கப்பலுக்குத் திரும்புவது மிகக் கடுங்குற்றமாக மதிக்கப்பட்டது. பிளேக்கையும் குஷ்ட ரோகத்தையும் விடப் பயங்கரமான நோய்கள் விளைவிக்கும் புலப்படா நுண்ணுயிர்கள் அஜாக்கிரதையாய் இருப்பவர்களைத் தொற்றிக்கொண்டன. பத்தே ஆண்டுகளுக்கு முன் இருந்த நிலைமை இது.

இப்போதும்கூட, செப்பமாக அமைந்த லெஒனீதாவிலும்கூட இதே நிலைமை நிலவியிருக்கக்கூடும். இங்கேயும் நுண் விலங்குகள் உள்ளன. அதுவும் மிக ஏராளமாகப் பல்கியுள்ளன. ஆனால் பத்து ஆண்டுகளுக்கு முன் சிறு மேனியனான மருத்துவன் ம்போகா, பயங்கரக் கோள் பண்டோராவில் "உயிர் பாக்டீரியத்தைக்" கண்டுபிடித்தான். பூமியில் பேராசிரியர் கார்ப்பென்கோ உயிர் முற்றுகையைத் தொடங்கி வைத்தார். ஒரு நாளைக்கு ஒரு தடுப்பூசி. ஒரு வாரத்துக்கு ஒன்று கூட்ட்போட்டுக்

கொள்ளலாம். கோமவ் வியர்த்த முகத்தைத் துடைத்துக்கொண்டு, மேற்சட்டைப் பொத்தான்களைக் கழற்றலானான்.

சூரியன் மேற்கே சாய்ந்தது. வெண்மையாயிருந்த கீழ் வானம் கரு ஊதா நிறம் ஆயிற்று. அப்போது அவர்கள் மாலை உணவு அருந்த அமர்ந்தார்கள். முகாம் தயார் ஆகிவிட்டது. தெருவின் குறுக்காக நின்றன மூன்று கூடாரங்கள். இயந்திரச் சாதனங்கள் உள்ள மூட்டைகளும் பெட்டிகளும் ஒரு கட்டிடத்தின் சுவற்றை ஒட்டினாற்போல ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஃபோக்கின் பெருமூச்சுவிட்ட வண்ணம் உணவு தயாரித்துக் கொண்டிருந்தான். எல்லோருக்கும் பசியாய் இருந்தமையால் லியூவுக்காகக் காத்திருக்க அவர்கள் விரும்பவில்லை. லியூ தன் சோதனைக்கூட முகட்டின்மேல் உட்கார்ந்து வானொலி அலைக் கம்பிகளை ஏதோ செய்துகொண்டிருந்தது முகாமிலிருந்து கண்ணுக்குத் தெரிந்தது.

"பரவாயில்லை. அவருக்குச் சாப்பாடு மிச்சம் வைத்திருப்போம்" என்றாள் தான்யா.

"அதற்கென்ன. பசி எடுத்தால் தானே வருகிறான்" என்றான் ஃபோக்கின், வெந்த கன்றிறைச்சியை மென்றவாறு.

"ஹெலிகாப்டரை நீ தவறான இடத்தில் நிறுத்தியிருக்கிறாய், கோமவ். ஆற்றின் காட்சி முழுவதையும் மறைத்துவிட்டாய்" என்று குறை சொன்னாள் தான்யா.

எல்லோரும் ஹெலிகாப்டரைப் பார்த்தார்கள். ஆற்றுக் காட்சி மெய்யாகவே தென்படவில்லை.

"ஆற்றின் இனிய காட்சியை முகட்டின் மேலிருந்து காணலாம்" என்று சற்றும் கிளர்ச்சியின்றிக் கூறினான் கோமவ்.

"இல்லை, உண்மையாகவேதான். ரசித்துப் பார்ப்பதற்கு அறவே ஒன்றும் இல்லை" என்றான் ஃபோக்கின்.

"என்ன? அறவே ஒன்றும் இல்லையா?" என்று முன்போலவே கிளர்ச்சியின்றி வினவினான் கோமவ். "கன்றிறைச்சியோ?"

அவன் மல்லாந்து படுத்து வானை நோக்கலானான்.

ஃபோக்கின் கைத்துவாலையால் மீசையைத் துடைத்துக் கொண்டு, "நான் என்ன நினைக்கிறேன் என்றால், இந்தச் சவப் பெட்டிகளுக்குள் நாம் எப்படி நுழையப் போகிறோம் என்பது தான். அகழப்போகிறோமா அல்லது சுவற்றைப் பிளக்கப் போகிறோமா?" என்று பக்கத்தில் இருந்த கட்டிடத்தை விரலால் குத்தினான்.

"இது ஒன்றும் பெரிய பிரச்சினை அல்ல. சொந்தக்காரர்கள் இவற்றுக்குள் எப்படிப் புகுந்தார்கள் என்பதுதான் பிரச்சினை. அவர்களும் சுவற்றைப் பிளந்தார்களா?" என்று அலட்சியத்துடன் கூறினான் கோமவ்.

ஃபோக்கின் சிந்தனையுடன் கோமவைப் பார்த்து, "இந்தச் சொந்தக்காரர்களைப் பற்றி உனக்கு என்ன தெரியும், மெய்யாகவே? ஒருவேளை இவற்றுக்குள் புகவே அவர்களுக்குத் தேவை ஏற்பட வில்லையோ என்னவோ!" என்றான்.

"ஆகாகா! புதிய கட்டிடக்கலைக் கோட்பாடு. மனிதன் புல்லின் மேல் அமர்ந்து, தன்னைச் சுற்றிச் சுவர் எழுப்பி, மேல் முகடு வேய்ந்து.... அப்புறம்..." என்று இழுத்தாள் தான்யா.

"...அப்புறம் மாண்டுவிட்டான்" என்று முடித்தான் ஃபோகா.

"அல்லது இவை உண்மையாகவே கல்லறைகளோ?" என்று சவால் விட்டான் ஃபோக்கின்.

சிறிது நேரம் எல்லோரும் இந்த யோசனை பற்றிச் சிந்தனை செய்தார்கள்.

"தான்யா, பகுத்தாய்வில் என்ன தெரிந்தது?" என்று வினவினான் கோமவ்.

"சுண்ணப் பாறை. கரியமிலக் கால்ஷியம். நிறையக் கலவைகளும் உள்ளன. ஆனால் மொத்தத்தில் இது எல்லாம் எதைப்போல் இருக்கிறது தெரியுமா? பவளப் பாறையைப் போல். தவிர, எல்லாக் கட்டிடங்களும் ஒரே பாறையால் கட்டப் பட்டவை என்றும் தோன்றுகிறது" என்றாள் தான்யா.

"இயற்கையாக அமைந்த ஒற்றைப்பாறை."

"இயற்கையாக அமைந்ததாவது, கதை!" என்று கூவினான் ஃபோக்கின். "ஏதேனும் புதிய குறி கண்டுபிடிக்கப்பட வேண்டியது தான் தாமதம், அது இயற்கையாகவே உருவானது என்று கூறுவதற்குத் தோழர்கள் கிடைத்துவிடுவார்கள். இது வழக்கமான விவகாரம் ஆகிவிட்டது..."

"இயற்கையான அனுமானம்" என்றான் கோமவ்.

"நாளையே ஊடுநோக்கிக் கருவியைப் பொருத்தி இதைப் பார்ப்போம்" என்று உறுதி கூறினாள் தான்யா. "முக்கியமானது என்ன என்றால் செவ்வாய்க் கிரக நகரமும் விளாதிஸ்லாவ் கிரகத்தில் உள்ள நகரமும் கட்டப்பட்டிருக்கும் அம்பர் நிறக் கற்களுக்கும் இந்தப் பாறைக்கும் பொதுவான அம்சம் எதுவும் இல்லை என்பதாகும்."

"அப்படியானால் வேறு யாரோ கிரகங்களில் சுற்றுப்பயணம் செய்கிறார்கள் என்று ஆகிறது. இந்தத் தடவையாவது அவர்கள் திண்ணமான குறிகளை நமக்காக விட்டுச் சென்றிருந்தால் தேவலை" என்றான் கோமவ்.

"ஏதேனும் நூலகம் தட்டுப்பட்டால் நல்லது! அல்லது எவையேனும் இயந்திரங்கள் கிடைக்காதா!" என்று அங்கலாய்த்தான் ஃபோக்கின்.

அவர்கள் பேசாதிருந்தார்கள். ம்போகா குட்டைச் சுங்கானை எடுத்துப் புகையிலைத்தூள் நிறைத்துத் திணிக்கலானான். அவன் குத்திட்டு உட்கார்ந்து வெள்ளிய வானில் கூடாரங்களின் மேலே நோக்கினான். வெள்ளைத் தலைக்குட்டைக்கு அடியே அவனது சிறு முகம் முழு அமைதியையும் நல்லியல்பையும் காட்டியது.

"எவ்வளவு நிசப்தம்!"

பூம்! பா! தடதடதட்! என்ற ஓசைகள் தளத்தின் புறமிருந்து வந்தன.

"அட சைத்தான்! இது எதற்காக?" என்று முணுமுணுத்தான் ஃபோக்கின்.

ம்போகா புகை வளையம் விட்டுவிட்டுத் தணிந்த குரலில் சொன்னான்:

"ஃபோக்கின், உங்கள் உணர்ச்சி எனக்குப் புரிகிறது. நமது இயந்திரங்கள் வேற்றுக் கோளில் வேலை செய்வதைக் கேட்டு எனக்கும் இப்போதுதான் முதல் தடவையாக மகிழ்ச்சி உண்டாக வில்லை."

"எப்படியோ இது வேற்றுக் கோளாகவே படவில்லை. அதுதான் விஷயம்" என்றாள் தான்யா.

ஒரு பெரிய கருவண்டு எங்கிருந்தோ பறந்து வந்து கனத்த



ரீங்காரம் செய்தவாறு அடையாளத் தேட்டக்காரர்களுக்கு மேலே வட்டம் இட்டுவிட்டு அப்பால் பறந்து சென்றது.

ஃபோக்கின் மடக்கிய முழங்கையில் மூக்கை வைத்தவாறு மெதுவாக மூச்சிழுத்தான். தான்யா எழுந்து கூடாரத்துக்குப் போய் விட்டாள். கோமவும் எழுந்து இன்பத்துடன் சோம்பல் முறித்தான். நாற்புறமும் நிசப்தமும் இனிமையும் நிலவின. அதில் ஒரேயடியாகச் சொக்கிப்போன கோமவ், திடீரென ம்போகா துள்ளி எழுந்து ஆற்றின் பக்கம் பார்த்தவாறு அசையாது நின்றதும் முற்றிலும் திகைத்துப்போனான். கோமவும் ஆற்றின் பக்கம் திரும்பினான்.

பிரமாண்டமான விலங்கு ஒன்றின் கரிய உடல் ஆற்றின் புறமிருந்து முகாமை நோக்கி நகர்ந்தது. ஹெலிகாப்டர் அதன் ஒரு பகுதியை மறைத்தது எனினும் அந்த விலங்கு நடக்கையில் அசைந்தாடுவதும், நீர்யானை வயிறுபோன்று புடைத்த அதன் ஈரமும் பளபளப்பும் உள்ள விலாக்களில் பட்டு மாலைக் கதிரொளி மின்னுவதும் தென்பட்டது. விலங்கு உடல் புற்களை இருபுறமும் விலக்கியவாறு கணிசமான வேகத்துடன் முன்னேறியது. ஹெலிகாப்டர் அசைந்து மெதுவாக விலாப்புறம் சரியத் தொடங்கியதைக் கோமவ் பெருந்திகிலுடன் கவனித்தான். கட்டிடச் சுவருக்கும் ஹெலிகாப்டரின் அடித்தளத்துக்கும் இடையே நெருக்கிப் புகுந்து முன்னே துருத்தியது இரண்டு பெரிய முழைப்புக்கள் கொண்ட மிகப் பருத்த நெற்றி. பிதுங்கிய இரண்டு ஒளியற்ற கண்களைக் கோமவ் கண்டான். அவை தன்னையே பார்ப்பது போல அவனுக்குத் தோன்றியது.

"ஜாக்கிரதை!" என்று கூச்சலிட்டான் அவன்.

ஹெலிகாப்டர் குப்புறச் சாய்ந்து உந்து விசிறி அலகுகளைப் புல்லில் ஊன்றி நின்றது. அரக்கவிலங்கு முகாமை நோக்கி மேலும் மேலும் முன்னேறியது. அதன் உயரம் மூன்று மீட்டர்களுக்குக் குறையாது. அதன் சாய்ந்த விலாக்கள் ஒரு சீராக உப்பி உப்பித் தணிந்தன. அது ஒரே நிதானமாக, ஓசையுடன் மூச்சு விடுவது காதில் பட்டது.

கோமவின் பின்னே ம்போகா துப்பாக்கியின் கொண்டியைக் கிளிக்கொலியுடன் சுழற்றினான். அப்போதுதான் கோமவ் சுய நினைவுக்கு வந்து கூடாரங்களின் பக்கம் பின்நகர்ந்தான். ஃபோக்கின் கைகளையும் கால்களையும் தரையில் ஊன்றி

விரைவாக அவனைக் கடந்து தத்திச் சென்றான். அரக்க விலங்கு ஒரு இருபது தாவடி தொலைவிலேயே இருந்தது.

"முகாமைப் பிரிக்க நேரம் இருக்குமா உங்களுக்கு?" என்று சட்டெனக் கேட்டான் ம்போகா.

"இருக்காது" என்றான் கோமவ்.

"நான் சுடப்போகிறேன்!"

"பொறுங்கள்" என்றான் கோமவ். அவன் முன்னே சென்று, கையை வீசி ஆட்டி, "நில்!" என்று கத்தினான்.

உயிருள்ள மாமிச மலை கணப்போது நின்றது. முழைப்புக்கள் கொண்ட நெற்றி திடீரென மேல் நிமிர்ந்தது. ஹெலிகாப்டர் அறை போன்ற பேழை வாய் அகலத் திறந்தது. சவைத்த பச்சைப் புல் அதில் நிறைந்திருந்தது.

"கோமவ்! உடனே பின்னே நகர்!" என்று கத்தினாள் தான்யா.

பெருவிலங்கு கரகரத்த குரலெடுத்து நீடித்த முழக்கம் செய்து முன்னிலும் விரைவாக முன்னேறிற்று.

"நில்!" என்று மறுபடி அதட்டினான் கோமவ். ஆனால் முந்திய உற்சாகம் இப்போது அவன் குரலில் இல்லை. "இது புல்தின்னும் விலங்குபோல் இருக்கிறது" என்று கூறிக் கூடாரங்களின் பக்கம் பின்னே நகர்ந்தான்.

திரும்பிப் பார்த்தான். ம்போகா துப்பாக்கியும் தோளுமாகச் சுடத் தயாராக நின்றுகொண்டிருந்தான். தான்யா வெடிச் சத்தத்தை எதிர்பார்த்து அதற்குள் காதுகளைப் பொத்திக் கொண்டிருந்தாள். தான்யாவின் பக்கத்தில் மூட்டையும் முதுகுமாக நின்றான் ஃபோக்கின். அவனுடைய மீசை கலைந்திருந்தது.

"இன்றைக்கு அதைச் சுடப் போகிறீர்களா இல்லையா? ஊடு நோக்கிக் கருவியை அப்பால் எடுத்துப் போகவா வேண்டாமா?" என்று நெரிந்த தொண்டையில் கத்தினான் ஃபோக்கின்.

டூ-டுப்! ம்போகாவின் அரைத்தானியங்கி வேட்டைத் துப்பாக்கி 16.3 மில்லிமீட்டர் குழல் விட்டம் கொண்டது. பத்து தாவடித் தொலைவில் இருந்து சுடப்பட்ட குண்டின் தாக்கு திறன் எட்டு டன் நிறைக்குச் சமம். குண்டு நடு நெற்றியில், இரண்டு முழைப்புக்களுக்கும் மத்தியில் பாய்ந்தது. பெருவிலங்கு



தடாலென்று பின்னே சாய்ந்தது. டூ-டுப்! இரண்டாவது குண்டுத் தாக்கு 'அதை மல்லாக்கத் தள்ளிவிட்டது. பருத்த குட்டைக் கால்கள் துடித்தன. "ஹ்-ஹா-ஆ..." என்ற பேரரவம் அடர்ந்த புற்களிலிருந்து வந்தது. கரு வயிறு உப்பித் தணிந்தது. அத்துடன் சந்தடி அடங்கிப் போயிற்று. ம்போகா துப்பாக்கியைத் தாழ்த்தினான்.

"போய்ப் பார்வையிடுவோம்" என்றான்.

பெருவிலங்கு அளவில் வளர்ந்த ஆப்பிரிக்க யானைக்கு நிகராய் இருந்தது. ஆயினும் வடிவில் பிரமாண்டமான நீர்யானை போன்று இருந்தது.

"இரத்தம் செந்நிறமானது. ஆனால் இது என்ன?" என்றான் ஃபோக்கின்.

பெருவிலங்கு விலாப்புறமாகக் கிடந்தது. அதன் வயிற்றில் கைமுட்டி அளவான மிருதுவான புடைப்புக்கள் நீளவாகில் மூன்று வரிசையாகக் காணப்பட்டன. புடைப்புக்களிலிருந்து கசிந்தது பளபளப்பான கட்டித் திரவம். ம்போகா திடீரென ஓசையுடன் மூச்சிழுத்துவிட்டு, விரல் நுனியால் திரவத் துளியை எடுத்து நாவில் வைத்துச் சுவைத்தான்.

"ச்சீ!" என்று அருவருத்தான் ஃபோக்கின்.

எல்லா முகங்களும் ஒரே பாவத்தைக் காட்டின.

"தேன்" என்றான் ம்போகா.

"அடே, அப்படியா?" என்று வியந்தான் கோமவ். சற்று தயங்கிய பின் அவனும் விரலை நீட்டினான்.

தான்யாவும் ஃபோக்கினும் அவனுடைய அங்க அசைவுகளை அருவருப்புடன் நோக்கினார்கள்.

"சுத்தமான தேன்! லிண்டன் பூந்தேன்!" என்று ஆர்ப்பரித்தான் கோமவ்.

"இந்தப் புல்லில் சர்க்கரைச் சத்து நிறைய என்று டாக்டர் டிக்ஸன் சொன்னார்" என்றான் ம்போகா.

"தேன் சுரக்கும் அரக்க விலக்கு நாம் வீணாக அதை இப்படி" என்றான் ஃபோக்கின்.

"நாமாம்!" என்று நொடித்தாள் தான்யா. "அட என் கஷ்ட

காலமே! ஊடுநோக்குக் கருவியை ஒழுங்குபடுத்தி வை, போ" என்று கூறினாள்.

"நல்லது. மேற்கொண்டு என்ன செய்வது? இங்கேயோ வெக்கை. இவ்வளவு பெரிய உடல் முகாமுக்குப் பக்கத்தில் கிடந்தால்..." என்று இழுத்தான் கோமவ்.

"இது என் பொறுப்பு. கூடாரங்களைத் தெருவோரமாக ஒரு இருபது தாவடி நகர்த்துங்கள். நான் அளவுகள் எல்லாம் எடுத்து, சில விவரங்களைப் பார்த்துவிட்டு இதை அழித்துவிடுகிறேன்" என்றான் ம்போகா.

"எப்படி?" என்று கேட்டாள் தான்யா.

"சிதைகருவியால். என்னிடம் இருக்கிறது சிதைகருவி. தான்யா, நீ இங்கிருந்து போய்விடு. நான் இப்போது மிகவும் குமட்டலெடுக்கும் வேலையில் ஈடுபடப் போகிறேன்."

தடதடவென்ற காலடிச் சத்தம் கேட்டது. கூடாரங்களின் பின்னே இருந்து பெரிய தானியங்கி ரிவால்வரும் கையுமாக ஓடி வந்தான் லியூ.

"என்ன நடந்தது?" என்று மூச்சிரைக்கு கேட்டான்.

"உங்கள் நீர்யானைகளில் ஒன்றை நாங்கள் கொன்று விட்டோம்" என்று நடிப்புப் பெருமையோடு விளக்கினான் ஃபோக்கின்.

லியூ சட்டென்று எல்லோரையும் சுற்றிப் பார்த்தவன், விரைவில் அமைதி அடைந்தான்.

"தாக்கிற்றோ?" என்று வினவினான்.

"அப்படி ஒன்றும் இல்லை" என்று குழப்பத்துடன் விடையளித்தான் கோமவ். "என் கருத்துப்படி அது வெறுமே திரிந்தது. ஆனால் அதை நிறுத்துவது அவசியமாகிவிட்டது."

குப்புறக் கவிழ்ந்த ஹெலிகாப்டரைப் பார்த்துவிட்டு லியூ தலை அசைத்தான்.

"இதை உண்ண முடியாதோ?" என்று கூடாரத்திலிருந்து கத்தினான் ஃபோக்கின்.

ம்போகா நிதானமாகச் சொன்னான்:

"யாரோ இதை உண்ண ஏற்கனவே முயற்சி செய்திருக்கிறார்கள்



போலிருக்கிறதே."

கோமவும் லியூவும் அவன் அருகே சென்றார்கள். விலங்கின் முதுகுப் புறம் இருந்த ஆழ்ந்த, நேரான, அகன்ற தழும்புகளை ம்போகா விரல்களால் தொட்டுப் பார்த்தான்.

"இந்தக் காயம் ஏற்படுத்திய கோரப்பற்கள் விறல் மிக்கவை. கத்திபோலக் கூரியவையுங்கூட. இரண்டு மூன்று கிலோகிராம் எடையுள்ள துண்டுகளைத் தடவைக்கு ஒன்றாக யாரோ இதிலிருந்து எடுத்திருக்கிறார்கள்." என்றான் ம்போகா.

"அட பயங்கரமே!" என்று மனப்பூர்வமாகச் சொன்னான் லியூ.

விந்தையான நீட்டிய கூவல் வானில் உயரேயிருந்து வந்தது. எல்லோரும் நிமிர்ந்து பார்த்தார்கள்.

"இதோ அவை!" என்று கத்தினான் லியூ.

நகரின் மேல் பாய்ந்து வந்தன பெரிய வெண் சாம்பல் நிறப் பறவைகள். அவை கழுகுகள்போல் இருந்தன. மிகப் பெரும் உயரத்திலிருந்து அவை ஒன்றன் பின் ஒன்றாகத் தாழப் பாய்ந்து வந்து, மனிதர்களின் தலைகளுக்கு மேலே அகன்ற மென் சிறகுகளை நேராகப் பரப்பி, கதகதப்பான காற்றலைகளை மனிதர்கள் மீது மோதியவாறு அதே விரைவுடன் ஓயிலாக உயரே பறந்து சென்றன. பூமியில் உள்ள பெரிய கழுகுகளையும் பண்டோரா கிரகத்தில் இருந்த பறவை நாகங்களையுமே விடப் பெரியவை இந்தப் பிரமாண்டமான பட்சிகள்.

"ஊனுண்ணிகள்!" என்று கலவரத்துடன் சொன்னான் லியூ.

இடையிலிருந்து ரிவால்வரை எடுக்கப் பார்த்தான், ஆனால் ம்போகா அவன் கையை இறுகப் பிடித்துக்கொண்டான்.

பறவைகள் நகருக்கு மேலாகப் பறந்து, ஊதாநிற மாலை வானத்தில் மேற்கே சென்று மறைந்துவிட்டன. கடைசிப் பறவை கண்ணுக்கு மறைகையில் முன்போன்றே கலவரம் நிறைந்த நீண்ட கூவல் ஒலித்தது.

"நான் சுடுவதற்கிருந்தேன்..." என்று ஆறுதலுடன் பெருமூச்சு விட்டான் லியூ.

"அறிவேன். ஆனால் எனக்குத் தோன்றிற்று..." என்று வாக்கியத்தை முடிக்காமலே நிறுத்தினான் ம்போகா.

"ஆமாம், எனக்குங்கூடத் தோன்றிற்று..." என்றான் கோமவ்.

கோமவ் விரிவாகச் சிந்தனை செய்தபின் கூடாரங்களை இருபது தாவடி நகர்த்துவது மட்டுமின்றி ஒரு கட்டிடத்தின் சமமான முகட்டின் மேல் அமைக்கும்படி ஏற்பாடு செய்தான். கட்டிடங்கள் அதிக உயரமானவை அல்ல - இரண்டே மீட்டர்கள்தான் - அவற்றின் மேல் ஏறுவது கடினமாய் இல்லை. எல்லாவற்றிலும் முக்கியமான இயந்திர சாதனங்கள் கொண்ட மூட்டைகளை ஃபோக்கினும் தான்யாவும் அடுத்த கட்டிடத்தின் முகட்டில் கொண்டு வைத்தார்கள். ஹெலிகாப்டர் பழுதடையவில்லை என்று தெரிய வந்தது. கோமவ் அதைக் கிளப்பி, மூன்றாவது கட்டிடத்தின் முகட்டின்மேல் சரியாக இறக்கினான்.

ம்போகா இரவு முழுவதும் புரோஜெக்டர் வெளிச்சத்தில் பெருவிலங்கின் உடலுடன் பாடுபட்டுக் கொண்டிருந்தான். பலபலவென்று விடியும் தறுவாயில் காதைத் துளைக்கும் சீறலோசை தெருவில் ஒலித்தது. நகரத்துக்கு மேலே எழுந்தது பெரிய வெள்ளாவிப் படலம். ஆரஞ்சு ஒளிர்வு திடீரெனச் சுடர்ந்து சற்று நேரத்தில் மறைந்தது. அங்ககச் சிதை கருவி எப்படி வேலை செய்கிறது என்று அதற்கு முன் ஒருபோதும் கண்டிராத ஃபோக்கின், அரைக் கச்சம் மட்டும் அணிந்து கூடாரத்திலிருந்து வெளியே வந்தவன், ம்போகாவை மட்டுமே கண்டான். ம்போகா புரோஜெக்டர்களையும் கருகிய புற்கள்மேல் இருந்த மெல்லிய சாம்பல் துகள்களின் பெரிய குவியலையும் நிதானமாக அப்புறப்படுத்திக் கொண்டிருந்தான். தேன் சுரக்கும் பெருவிலங்கில் எஞ்சியிருந்தது ஒளிபுகும் பிளாஸ்டிக் உறையில் வைக்கப்பட்டிருந்த விகாரமான தலை மட்டுமே. அதைக் கேப்டவுனில் இருந்த விண்வெளி விலங்கியல் காட்சி சாலைக்கு அனுப்பத் தீர்மானிக்கப்பட்டிருந்தது.

ஃபோக்கின் ம்போகாவுக்குக் காலை வணக்கம் தெரிவித்து விட்டு, மீண்டும் உறங்குவதற்காகக் கூடாரத்துக்குத் திரும்பப் போனவன், கோமவைச் சந்தித்தான்.

"எங்கே?" என்று கேட்டான் கோமவ்.

"உடை அணியத்தான்" என்று மதிப்பை விட்டுக்கொடுக்காமல் கூறினான் ஃபோக்கின்.

காலை குளுகுளுவென்று மப்புமந்தாரமின்றி இருந்தது. தெற்கே



மட்டுமே ஊதா வானத்தில் வெண்மேகங்கள் மிதந்தன. கோமவ் புல்லில் குதித்து, காலை உணவு தயாரிக்கச் சென்றான். முட்டைப் பொரியல் செய்ய எண்ணினான், ஆனால் வெண்ணெய் எங்கிருக்கிறது என்று தேடிக்காண அவனால் முடியவில்லை.

"ஃபோக்கின், வெண்ணெய் எங்கே?" என்று கேட்டான்.

முகட்டின்மேல் யோகாசனப் பயிற்சி செய்து கொண்டிருந்த ஃபோக்கின் விசித்திரமான நிலையில் காட்சி தந்தான்.

"அறியேன்" என்று மிடுக்காகப் பதில் கூறினான் அவன்.

"நேற்று நீதானே முறைவேலை பார்த்தாய்!"

"ஊம், ஊம்.. ஆமாம். வெண்ணெய் நேற்றுச் சாயங்காலம் இருந்த இடத்தில்தான் இருக்கும்."

"நேற்றுச் சாயங்காலம் அது எங்கே இருந்தது?" என்று எரிச்சலை அடக்கிக்கொண்டு கேட்டான் கோமவ்.

ஃபோக்கின் அதிருப்தித் தோற்றத்துடன் தலையை வலது முழங்காலுக்கு அடியிலிருந்து வெளியே எடுத்தான்.

"எனக்கு எப்படித் தெரியும்? அப்புறந்தான் எல்லாப் பெட்டிகளையும் நாம் வேறிடத்தில் கொண்டு வைத்தோமே?" என்றான்.

கோமவ் பற்களை நெறுநெறுத்தவாறு ஒவ்வொரு பெட்டியாகப் பொறுமையுடன் பார்வையிட்டான். வெண்ணெயைக் காணவில்லை. அப்போது அவன் கட்டிடத்தின் அருகே போய், ஃபோக்கினைக் காலைப் பற்றிக் கீழே இழுத்தான்.

"வெண்ணெய் எங்கே?" என்று கேட்டான்.

ஃபோக்கின் வாயைத் திறக்க எத்தனித்தான். அதற்குள் தான்யா மூலை திரும்பி வரக் காணப்பட்டாள். கைகளற்ற சட்டையும் அரை நிஜாரும் போட்டுக் கொண்டிருந்தாள். அவள் கூந்தல் நனைந்திருந்தது.

"காலை வணக்கம், பையன்களா" என்றாள்.

"காலை வணக்கம், தான்யா" என்று பதில் முகமன் கூறிவிட்டு, "வெண்ணெய் வைத்திருந்த பெட்டி தற்செயலாக உன் பார்வையில் படவில்லையா?" என்று வினவினான் ஃபோக்கின்.

"நீ எங்கே போயிருந்தாய்?" என்று சீறினான் கோமவ்.

"நீந்திக் குளித்தேன்"

"தவறு. உன்னை அனுமதித்தது யார்?" என்றான் கோமவ்.

தான்யா இடுப்பிலிருந்து பிளாஸ்டிக் அலகுகள் கொண்ட மின்சார அறுவைப் பொறியைக் கழற்றிப் பெட்டி மேல் போட்டாள்.

"கோமவ், ஆற்றில் முதலைகள் எவையும் இல்லை. அருமையான நீர், மணல் தரை" என்றாள்.

"வெண்ணெயை நீ பார்க்கவில்லையா?" என்று கேட்டான் கோமவ்.

"வெண்ணெயை நான் பார்க்கவில்லை. ஆனால் என் ஜோடுகள் யாரேனும் கண்டதுண்டா?"

"நான் பார்த்தேன். அதோ, அந்த முகட்டின் மேல் இருந்தன அவை" என்றான் ஃபோக்கின்.

"அந்த முகட்டில் அவற்றைக் காணோம்."

மூவரும் திரும்பி அந்த முகட்டை நோக்கினர். ஜோடுகள் மெய்யாகவே அங்கு இல்லை. அப்போது கோமவ் டாக்டர் ம்போகாவைப் பார்த்தான். டாக்டர் ம்போகா புல்லில் படுத்து, கன்னத்தின் அடியில் முட்டிபிடித்த சிறு கையை வைத்தவாறு ஆழ்ந்து உறங்கிக்கொண்டிருந்தான்.

"அட நீ ஒன்று! இவனுக்கு என் ஜோடுகள் எதற்காக?" என்றாள் தான்யா.

"அல்லது வெண்ணெய்தான் எதற்காக?" என்றான் ஃபோக்கின்.

"ஒருவேளை அவை இவனுக்கு இடைஞ்சலாக இருந்திருக்கும், சரி, சரி, வெண்ணெய் இல்லாமலே ஏதாவது தயாரிக்க முயல்கிறேன்" என்று வாய்க்குள் சொல்லிக்கொண்டான் கோமவ்.

"ஜோடுகளும் இல்லாமலே..."

"நல்லது, நல்லது. போய் ஊடுநோக்கிக் கருவியைச் சரிபார். தான்யா, நீயும் போ. சீக்கிரமாகப் பொருத்தி அமைக்க முயலுங்கள்." எனக் கூறினான் கோமவ்.

காலைச் சாப்பாட்டுக்கு முன் லியூ வந்து சேர்ந்தான். ஆறு இயந்திரக் கால்கள் உள்ள பெரிய கறுப்புப் பொறி ஒன்றை



அவன் முன்னே தள்ளிக்கொண்டு வந்தான். பொறியின் பின்னால் புற்கள் வெட்டப்பட்ட அகன்ற பகுதி காணப்பட்டது. அது தளத்திலிருந்தே தொடங்கியிருந்தது. லியூ முகட்டின் மேல் ஏறி, சாப்பாட்டு மேஜை அருகே உட்கார்ந்தான். பொறி தெரு நடுவே நின்றது.

"கேளுங்கள் லியூ. உங்கள் தளத்தில் சாமான் எதுவும் காணாமற் போகவில்லையா?" என வினவினான் கோமவ்.

"எந்த அர்த்தத்தில்?"

"அதாவது... இரவில் எதையாவது வெளியே வைக்கிறீர்கள், காலையில் அதைக் காணவில்லை"

"அப்படி ஒன்றும் நேர்ந்ததாகச் சொல்ல முடியாது." - லியூ தோள்களைக் குலுக்கினான். "சில வேளைகளில் அற்பப் பொருள்கள், பல்வகைக் கழிவுப் பண்டங்கள் காணாமல் போகின்றன... கம்பித் துணுக்குகள், பிளாஸ்டிக் தகட்டின் வெட்டுத் துண்டுகள் போன்றவை. ஆனால் இந்தக் குப்பைகளை எல்லாம் பொறுக்கியவை என்னுடைய தானியங்கி ரொபாட்டுகள் என்று நினைக்கிறேன். அவை மிகச் செட்டானவை, எல்லாப் பொருள்களையும் அவை பயன்படுத்திக் கொள்கின்றன."

"என்னுடைய ஜோடுகளை அவை பயன்படுத்திக்கொள்ள முடியுமா?" என்று கேட்டாள் தான்யா.

லியூ பக்கென்று சிரித்துவிட்டான்.

"அறியேன். சந்தேகம்தான்" என்றான்.

"வெண்ணைப் பெட்டி அவற்றிற்கு பயன்பட முடியுமா?" என்று கேட்டான் ஃபோக்கின்.

லியூ சிரிப்பதை நிறுத்திவிட்டான்.

"உங்கள் இடத்தில் வெண்ணெய் காணாமல் போய்விட்டதா?" என்று வினவினான்.

"ஆமாம், அதோடு ஜோடுகளும் மறைந்துவிட்டன."

"இல்லை. ரொபாட்டுகள் நகரத்திற்கு வருவது கிடையாது."

அரணைபோல முகட்டின்மேல் லாவகமாக ஏறி வந்தான் ம்போகா.

"காலை வணக்கம். நேரமாக்கிவிட்டேன், மன்னிக்க வேண்டும்" என்றான்.

தான்யா அவனுக்குக் காப்பி ஊற்றிக் கொடுத்தாள். ம்போகா காலையில் ஒரு கோப்பை காப்பி மட்டுமே அருந்துவது வழக்கம்.

"ஆக, நாம் திருட்டுக் கொடுத்துவிட்டோமாக்கும்" என்று புன்னகையுடன் சொன்னான்.

"நீங்கள் எடுக்கவில்லையே?" என்று கேட்டான் ஃபோக்கின்.

"இல்லை, நான் எடுக்கவில்லை. ஆனால் இரவில் இரண்டு தடவை நகருக்கு மேலே பறந்தன நேற்றையப் பறவைகள்."

"ஜோடுகள் போன விதம் இதுதான். நான் எங்கேயோ படித்திருக்கிறேன்..." என்று ஆரம்பித்தான் ஃபோக்கின்.

"வெண்ணெய்ப் பெட்டியோ?" என்று அவனை இடைமறித்தான் கோமவ்.

ஒருவரும் பதில் பேசவில்லை. ம்போகா சிந்தனையுடன் காப்பியைப் பருகினான்.

"இரண்டு மாதங்களாக நான் இங்கே இருக்கிறேன். என்னிடம் எதுவும் காணாமற்போகவில்லை. எல்லாச் சாமான்களையும் நான் கும்மட்ட அறைக்குள் வைத்திருக்கிறேன் என்பது உண்மையே.. தவிர, என்னிடம் ரொபாட்டுகள் வேறு இருக்கின்றன. ஓயாப் புகையும் படாரொலிகளும்" என்றான் வியூ.

"சரி" என்று எழுந்திருந்தான் ஃபோக்கின். "வேலை செய்யப் போவோம் வா, தான்யா. பிரமாதமாக்கும், ஜோடுகள்!" என்றான்.

அவர்கள் போய்விட்டார்கள். கோமவ் பாத்திரங்களை ஒழுங்கு படுத்துவதில் முனைந்தான்.

"இன்று மாலையே உங்கள் இடத்தைச் சுற்றிக் காவல் ஏற்பாடு செய்கிறேன்" என்றான் வியூ.

"செய்யலாம். ஆனால் ஆரம்பத்தில் நானே பாரா கொடுப்பது மேல் என்று நினைக்கிறேன். கோமவ், இப்போது நான் படுத்து உறங்குகிறேன். ராத்திரி பதுங்கி இருந்து கண்காணிக்கிறேன்" என்று யோசனையுடன் கூறினான் ம்போகா.

"நல்லது, டாக்டர் ம்போகா" என்று விருப்பின்றி இசைந்தான் கோமவ்.



"நீங்கள் அனுமதித்தால் நானும் வருகிறேன்" என்றான் வியூ.

"வாருங்கள், ஆனால் ரொபாட்டுகள் இல்லாமல், தயை செய்து" என்று நிபந்தனையுடன் ஒப்புக்கொண்டான் ம்போகா.

பக்கத்து முகட்டிலிருந்து கடுஞ் சீற்றம் வெடித்து வந்தது.

"ஃபோக்கின், நான்தான் உன்னிடம் சொன்னேனே மூட்டைகளை வரிசைக்கிரமமாக அடுக்கு என்று!"

"நான் என்ன செய்தேனாம்? அப்படியேதானே வரிசைப்படுத்தி வைத்தேன்!"

"இதற்குத் தான் வரிசைக்கிரமம் என்று பேரோ? குறி எண் 'யெ-7', 'அ-2', 'வ-16'... மறுபடி 'யெ-'!..."

"தான்யா!... மெய்யாகவே சொல்லுகிறேன்... தோழர்களே! மூட்டைகளைத் தாறுமாறாக்கியது யார்?" என்று மனத்தாங்கலுடன் கூச்சல் இட்டான் ஃபோக்கின்.

"இதோ! 'யெ-9' இலக்கமிட்ட மூட்டையைக் காணவே காணோம்!" என்று கத்தினாள் தான்யா.

ம்போகா மெதுவான குரலில் சொன்னான்:

"எங்கள் துப்பட்டி காணாமல் போய்விட்டது!"

"என்ன? நன்றாகத் தேடிப்பாருங்கள்!" என்று கத்தினான் கோமவ். அவன் முகட்டின் மேலிருந்து தாவி ஃபோக்கினும் தான்யாவும் இருந்த இடத்துக்கு ஓடினான்.

ம்போகா அவனைப் பார்வையால் தொடர்ந்தவன், தெற்கே, ஆற்றின் அக்கரைப் பக்கம் கண்ணோட்டினான். கோமவ் பக்கத்து முகட்டிலிருந்து சொன்னது காதில்பட்டது:

"என்ன காணாமல் போயிருக்கிறது?"

"ஊடு நோக்கி கருவி" என்று பதிலளித்தாள் தான்யா.

"இதற்கு என்ன காச்சுமூச்சென்று கத்தல்? புதிதாகப் பொருத்தி அமையுங்கள்."

"அதற்கு இரண்டு நாட்கள் பிடிக்குமே."

"அப்படியானால் என்ன செய்யலாம் என்கிறாய்?"

"சுவற்றைப் பிளக்கவேண்டும்" என்றான் ஃபோக்கின்.

முகட்டில் மௌனம் குடிகொண்டது.

"பாருங்கள், தோழர் லியூ" என்று திடீரெனக் கூறினான் ம்போகா. அவன் நின்று வெயில் கண்களில் படாமல் மறைத்த வாறு ஆற்றை நோக்கிக்கொண்டிருந்தான்.

லியூ திரும்பினான். ஆற்றின் அக்கரையில் இருந்த பச்சைச் சமவெளி கரும்புள்ளிகள் நிறைந்து காணப்பட்டது. இவை "நீர்யானைகளின்" முதுகுகள். மிக ஏராளமாக இருந்தன அவை. ஆற்றின் மறு கரையில் அத்தனை நிறைய "நீர்யானைகள்" இருக்கும் என்ற எண்ணமே லியூவுக்கு உண்டாகவில்லை. கரும் புள்ளிகள் மெதுவாகத் தெற்கு நோக்கி நகர்ந்தன.

"அவை அப்பால் போகின்றன. நகரத்திலிருந்து தொலைவில், குன்றுகளின் மறுபுறம்" என்றான் ம்போகா.

திறந்த வெளியில் இரவைக் கழிப்பது என்று கோமவ் முடிவு செய்தான். அவன் கூடாரத்திலிருந்து தன் படுக்கையை வெளியில் எடுத்து, கையைத் தலைக்குயரம் வைத்தவாறு படுத்துக் கொண்டான்.

வானம் கருநீலமாக இருந்தது. கிழக்கே தொடுவானத்தின் பின்னிருந்து மெதுவாக மேலே எழுந்தது பசுமை கலந்த ஆரஞ்சு நிறமான பெரிய வட்டம். அதுதான் லெஷனீதா கிரகத்தின் துணைக்கோளான பால்மீரா. ஆற்றின் மறுகரையில் இருந்த இருண்ட சமவெளியிலிருந்து நீட்டிய கத்தல்கள் மந்தமாகக் காதுக் கெட்டின. அவை பறவைக் குரல்களாக இருக்கவேண்டும். தளத்துக்கு மேலே மின் வெளிச்சங்கள் சட்டெனத் தோன்றி மறைந்தன. ஏதுவோ கரகரத்தது, படாரென வெடித்தது.

"சுற்றுவேலி அமைக்க வேண்டும்" என்று எண்ணமிட்டான் கோமவ். "நகரைச் சுற்றிலும் கம்பி வேலியால் வளைத்து, அதிகத் தீவிரம் அற்ற மின்னோட்டத்தைப் பாய்ச்ச வேண்டும். ஆனால் இது பறவைகளின் வேலை என்றால் சுற்று வேலியால் பயன் இல்லை. பெரும்பாலும் பறவைகளின் வேலையாகத்தான் இருக்கும் இது. இவ்வளவு பிரமாண்டமான பறவைக்கு ஒரு மூட்டையைத் தூக்கிச் செல்வது கடினமே அல்ல. மனிதனையே தூக்கிச் செல்வதுகூட அதற்கு ஒரு பிரமாதம் இல்லை போலும். பண்டோரா கிரகத்தில் பறவை நாகம் உச்சப் பாதுகாப்பு உடையணிந்த மனிதனைத் தூக்கிச் சென்றுவிடவில்லையா? காப்பு



உடையும் ஆளுமாக மொத்தம் நூற்றைம்பது கிலோகிராம் ஆயிற்றே! அப்படியேதான் நடக்கிறது இங்கும்- முதலில் ஜோடுகள், அப்புறம் மூட்டை... நம்மிடமோ, இருப்பது ஒரே ஒரு துப்பாக்கிதான்! கொர்போவ்ஸ்க்கிய் ஆயுதங்கள் எடுத்துச் செல்வதை அப்படி எதிர்த்தது ஏன்? பார்க்கப்போனால் அப்போதே சுட்டிருக்க வேண்டும். குறைந்தபட்சம் அவற்றை அச்சுறுத்தியாது இருக்கலாம்... ஆனால் டாக்டர் ம்போகா ஏன் சுடவில்லை? ஏனென்றால் அவனுக்குத் 'தோன்றியது'... நானுந்தான் சுட்டிருக்கமாட்டேன், ஏனென்றால் எனக்குங்கூடத் "தோன்றியது'... மெய்யாக, என்ன தோன்றியது எனக்கு?"- உள இறுக்கத்தால் சுருக்கங்கள் விழுந்த நெற்றியை அழுத்தித் தேய்த்துக் கொண்டான் கோமவ். "பிரமாண்டமான பறவைகள், மிக அழகான பறவைகள். எவ்வளவு ஒயிலாகப் பறந்தன அவை!... எவ்வளவு ஓசையற்ற, அனாயாசமான, சரியான பறப்பு... ஊம், வேட்டைக்காரர்கள் கூடத்தான் சிலவேளைகளில் இரையை இரக்கங்கொண்டு சுடாமல் விட்டுவிடுகிறார்கள். நானோ, வேட்டைக்காரன்கூட இல்லை."

சிமிட்டிய தாரகைகளின் இடையே நிதானமாக வானுச்சியில் குறுக்கே சென்றது பிரகாசமான வெண் புள்ளி. கோமவ் முழங்கைகளை ஊன்றி நிமிர்ந்து அதைப் பார்வையால் தொடர்ந்தான். அதுதான் அதிதூரப் பறப்புக்கு உரிய பயணி விண்வெளிக் கப்பல் "சூரியகாந்தி" - ஒன்றரைக் கிலோமீட்டர் நீளமுள்ளது. இப்போது அது லெஷனீதா கிரகத்தின் மேற்பரப்புக்கு இரண்டு மெகாமீட்டர் (இரண்டாயிரம் கிலோமீட்டர்) தொலைவில் இதைச் சுற்றிப் பறந்து கொண்டிருந்தது. ஆபத்தை அறிவிக்கும் குறியொலி அனுப்பப்பட்டதுமே அங்கிருந்து உதவி வந்துவிடும். ஆனால் அத்தகைய குறியொலி அனுப்புவது தேவை தானா? ஒரு ஜோடி செருப்புக்களும் இரண்டு மூட்டைகளும் காணாமல் போய்விட்டன. தவிர தளமுதல்வனுக்கு ஏதோ தோன்றியது. இதுவும் விபத்தாகுமா? செப்பமாக அமைந்த கிரகம்!

வெண்புள்ளி மங்கி மறைந்தது-"சூரியகாந்தி" லெஷனீதாவின் நிழற் பகுதிக்குப் போய்விட்டது. கோமவ் மறுபடி படுத்துக் கைகளைத் தலைக்குப் பின் வைத்துக்கொண்டான். "அளவு மீறிச் செப்பமாக அமைந்தது, அல்லவா?" என்று எண்ணினான். "வெதுவெதுப்பான பசிய சமவெளிகள், நறுமணம் கமழும் காற்று, ஓவிய வனப்புள்ள ஆறு, முதலைகள் அற்றது... ஒருவேளை இது வெறும் வெளி மறைப்பு தானோ? இதன்பின் விளங்காத சக்திகள்

செயலாற்றுகின்றனவோ? அல்லது எல்லாம் மிகஎளியதோ? தான்யா ஜோடுகளைப் புல்லில் எங்கேனும் தவறவிட்டிருப்பாள். ஃபோக்கின் குட்டைகுழப்புபவன் என்பதோ தெரிந்ததே. மூட்டைகள் அகழ் தோண்டிப் பொறியின் பகுதிகளது குவியலின் அடியில் எங்கேனும் கிடக்கும். அதனால்தான் போலும், அவன் இன்று திருட்டு விழி விழித்துக்கொண்டு ஓர் அடுக்கிலிருந்து மற்றோர் அடுக்கிற்கு நாள் முழுதும் ஓடியாடிய வண்ணமாய் இருந்தான்."

கோமவ் உறங்கிவிட்டான் போலிருக்கிறது. அவன் தூக்கம் கலைந்தபோது பால்மீரா உயரே வந்துவிட்டது. ஃபோக்கின் உறங்கிய கூடாரத்திலிருந்து சப்புக்கொட்டுவதும் குறட்டை விடுவதும் கேட்டன. பக்கத்து முகட்டில் கசுமுசுவென்று பேச்சு நடந்து கொண்டிருந்தது.

கோமவ் விலாப்புறம் திரும்பிப் பார்த்தான். தான்யாவும் லியூவும் கால்களைத் தொங்கவிட்டபடி முகட்டின்மேல் உட்கார்ந்திருந்தார்கள். "சிட்டுக்குருவிகள். நாளைப் பகல் முழுதும் உறங்கி வழிவார்கள்" என்று நினைத்துக்கொண்டான் கோமவ்.

"தான்யா, உறங்க நேரமாகிவிட்டது" என்று தணிந்த குரலில் சொன்னான்.

"உறங்க மனம் இல்லை" என்று பதில் அளித்தாள் தான்யா. "நாங்கள் ஆற்றின் கரையோரமாக உலாவினோம் (லியூ கூச்சத்துடன் நகர்ந்தான்). ஆற்றில் மிக ரம்மியமாய் இருக்கிறது. நிலா வீசுகிறது, மீன்கள் விளையாடுகின்றன."

லியூ சொன்னான்:

"ஊம், ஊம்... எங்கே டாக்டர் ம்போகா?"

"டாக்டர் ம்போகா வேலையாய் இருக்கிறார்" என்றான் கோமவ்.

தான்யாவுக்கு ஒரே களி பிறந்துவிட்டது. "சொன்னாற்போல, டாக்டர் ம்போகாவைத் தேடப்போவோமே, லியூ" என்றாள்.

"இவளைக் கட்டுப்படுத்த முடியாது" என்று எண்ணி மறுபுறம் புரண்டு படுத்தான் கோமவ். தான்யாவும் லியூவும் தங்கள் இரகசிய உரையாடலைத் தொடர்ந்தார்கள். கோமவ் தீர்மானத்துடன் எழுந்து படுக்கையைச் சுருட்டி எடுத்துக் கொண்டு கூடாரத்துக்குள் வந்தான். அங்கே ஒரே சந்தடியாய்



இருந்தது. ஃபோக்கின் குறட்டைவிட்டவாறு உறங்கிக் கொண்டிருந்தான். "கையாலாகாதவன் நீ, உதவாக்கரை! -இந்த மாதிரி ராத்திரியில் பெண்ணோடு அளவளாவி நைச்சியம் செய்ய வேண்டும். நீயோ, மீசையை வளர்த்துக் கொண்டு, அவ்வளவுதான், காரியம் பழம் என்று எண்ணிக்கொண்டிருக்கிறாய்." - படுக்கையை விரித்து வசதியாகப் படுத்தவாறு இப்படி நினைத்துக்கொண்டான் கோமவ். பின்பு துப்பட்டியை இழுத்துப் போர்த்துக் கொண்டு அக்கணமே உறங்கிப் போனான்.

காதைத் துளைக்கும் அதிரொலி அவனைத் தூக்கிவாரிப் போட்டது. கூடாரத்தில் இருட்டாய் இருந்தது. "டு-டுப்! டு-டுப்!" என்று இன்னும் இரண்டு துப்பாக்கிக் குண்டுகள் வெடித்தன.

"இது என்ன இன்னும்? யார் இங்கே?" என்று கூச்சலிட்டான் ஃபோக்கின்.

முயல் கத்துவது போன்ற குறுகிய ஒலி கேட்டது.

"ஆகா-ஆ! இங்கே, என்னிடம்!" என்று ஃபோக்கின் கத்தினான்.

கோமவ் துப்பட்டிப் போர்வையில் சிக்கிக் கொண்டிருந்தான். அதிலிருந்து விடுபட்டு எழ அவனால் எவ்வளவு முயன்றும் முடியவில்லை. மொத்தென்ற அடிச் சத்தம் கேட்டது. ஃபோக்கின் "ஐயோ" என்றான். அக்கணமே கரிய சிறு உருவம் ஒன்று கூடார வாயிலின் வெளிச்சமான முக்கோணத்தில் பளிச்சிட்டு மறைந்தது. கோமவ் அதன் பின்னே பாய்ந்தான். ஃபோக்கினும் பாய்ந்தான். இருவரும் தலைகளை மோதிக்கொண்டார்கள். கோமவ் பற்களை நெறுநெறுத்து, முடிவில் வெளியே பாய்ந்து ஓடினான். எதிர் முகடு வெற்றாய் இருந்தது. கோமவ் சுற்றுமுற்றும் பார்த்தவன், ம்போகா வீதி வழியே புற்கள் மேல் ஆற்றை நோக்கி ஓடக் கண்டான். அவன் பின்னே இடறித் தடுமாறியவாறு ஓடினார்கள் லியூவும் தான்யாவும். இன்னும் ஒன்றையும் கோமவ் கவனித்தான்: ம்போகாவுக்கு முன்னே வெகு தூரத்தில் யாரோ ஒருவன் புற்களை இருபுறமும் விலக்கியவாறு ஓடிக்கொண்டிருந்தான். அந்த ஆள் ம்போகாவைவிட மிக விரைவாக ஓடினான். ம்போகா நின்று, ஒரு கையால் துப்பாக்கியைக் குழல் மேல்நோக்கி இருக்கும்படி வைத்துக்கொண்டு இன்னொரு தடவை சுட்டான். தடம் சட்டென ஒருபுறம் ஒதுங்கி, கடைசிக் கட்டிடத்தின் மூலையில் திரும்பிவிட்டது. நொடிப்போதில் அங்கிருந்து பிரமாண்டமான சிறகுகளை விசாலமாகவும் அனாயாசமாகவும் அடித்துக்கொண்டு

கிளம்பியது ஒரு பறவை. நிலவொளியில், அது வெண்மையாகத் தெரிந்தது.

"சுடுங்கள்!" என்று வீறிட்டான் ஃபோக்கின்.

அவன் வீதி வழியே விரைவாக ஓடி வந்தான், ஐந்து அடிகளுக்கு ஒரு தரம் விழுந்தான். ம்போகா துப்பாக்கியைத் தொங்கவிட்டு அசையாமல் நின்று, பறவையை அண்ணாந்து பார்த்தான். பறவை மேலும் மேலும் உயரே சென்றவாறு நகரத்துக்கு மேலே ஒயிலுடன் ஓசையின்றி வட்டமிட்டுவிட்டுத் தெற்கே பறந்து போயிற்று. ஒரு நிமிடத்திற்கெல்லாம் அது மறைந்துவிட்டது. தளத்துக்கு மேலே மிகத் தாழ்வாக இன்னும் சில பறவைகள் பறப்பதை அப்போதுதான் கோமவ் கண்டான். மூன்று, நான்கு, ஐந்து... ஐந்து மிகப் பெரிய வெண்பறவைகள், ரொபாட்டுகள் வேலை செய்யும் இடத்துக்கு மேலே வட்டமிட்டு விட்டு அப்பால் சென்று மறைந்தன.

கோமவ் முகட்டிலிருந்து இறங்கினான். உயிரற்ற கட்டிடங்கள் புல்மீது அடர்ந்த கரு நிழலை வீழ்த்தின. புற்கள் வெள்ளி முலாம் பூசியவை போலக் காணப்பட்டன. காலடியில் எதுவோ கிணுகிணுத்தது. கோமவ் குனிந்தான். புல்மீது பளிச்சிட்டது தோட்டாமூடி. கோமவ் ஹெலிகாப்டரின் விகாரமான நிழலைக் கடந்து சென்றான்.

குரல்கள் கேட்டன. ம்போகா, ஃபோக்கின், லியூ, தான்யா ஆகியோர் நிதானமாக அவனை நோக்கி வந்தார்கள்.

"நான் அவனைக் கைகளில் பிடித்திருந்தேன்! ஆனால் அவன் என் நெற்றியில் இடித்துவிட்டுத் திமிறிக்கொண்டு தப்பி ஓடி விட்டான். அவன் என்னை இடித்திருக்காவிட்டால் நான் அவனை விட்டிருக்கவே மாட்டேன்! மென்மையான, கதகதப்பான மேனி அவனுக்கு, குழந்தையுடையதுபோல. தவிர, ஆடை அற்றது" என்று கிளர்ச்சியுடன் கூறினான் ஃபோக்கின்.

"நாங்களும் அவனை அனேகமாகப் பிடித்துவிட்டோம். ஆனால் அவன் பறவையாக மாறிப் பறந்துபோய்விட்டான்" என்றாள் தான்யா.

"ஆமாம், ஆமாம். 'பறவையாக மாறினானாம்'" என்று நொடித்தான் ஃபோக்கின்.

"மெய்தான். அவன் மூலை திரும்பினான். உடனே அங்கிருந்து



ஒரு பறவை பறந்து போயிற்று." என்று உறுதிப்படுத்தினான் லியூ.

"அதனால் என்னவாம்? அவன் பறவையை மிரளச் செய்து விட்டான். நீங்களோ, வாயைப் பிளந்துக் கொண்டு நின்று விட்டீர்கள்" என்றான் ஃபோக்கின்.

"உடன் நிகழ்வு" என்று சொன்னான் ம்போகா.

கோமவ் அவன் அருகே சென்றான். எல்லோரும் நின்று விட்டார்கள்.

"உண்மையில் நடந்தது என்ன?" என்று வினவினான் கோமவ்.

"நான் அவனைப் பிடித்துவிட்டேன். ஆனால் அவன் என் நெற்றியில் இடித்தான்" என்று மீண்டும் கதைத்தான் ஃபோக்கின்

"இதைத்தான் முன்பே சொல்லிவிட்டாயே. எல்லாம் எதிலிருந்து தொடங்கியது?" என்று கேட்டான் கோமவ்.

ம்போகா சொன்னான்: "நான் மூட்டைகளின் பக்கத்தில் பதுங்கியிருந்தேன். வீதி நடுவே யாரோ புல்லில் ஊர்வதைக் கண்டேன். அவனைப் பிடிக்க எண்ணி எதிரே போனேன். அவன் என்னைக் கண்டுகொண்டு பின்னே திரும்பிவிட்டான். அவனை எட்டிப் பிடிக்க என்னால் முடியாது என்று தெரிந்தது. எனவே நான் உயரே சுட்டேன். எனக்கு மிகவும் வருத்தம், கோமவ், நான் அவர்களை அச்சுறுத்திவிட்டேன் போலிருக்கிறது"

மௌனம் குடிகொண்டது. அப்புறம் ஃபோக்கின் விளங்காமையுடன் கேட்டான்:

"உங்களுக்கு வருத்தம் எதனால், டாக்டர் ம்போகா?"

ம்போகா உடனே பதில் சொல்லவில்லை. எல்லோரும் எதிர் பார்த்தார்கள்.

"அவர்கள் குறைந்தது இரண்டு பேராவது இருந்தார்கள். ஒருவனை நான் கண்டேன். மற்றவன் உங்கள் கூடாரத்தில் இருந்தான். ஆனால் நான் ஹெலிகாப்டரின் அருகாக ஓடிய போது... ஒன்று செய்வோம்... போய்ப் பார்க்க வேண்டும். ஒருவேளை நான் நினைப்பது தவறாய் இருக்கலாம்" என்று எதிர் பாராவிதமாகப் பேச்சை முடித்தான் ம்போகா.

ஓசையின்றி முகாமை நோக்கி நடந்தான் அவன். மற்றவர்கள்

ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு அவனைப் பின்பற்றி னார்கள். ஹெலிகாப்டர் நின்ற கட்டிடத்தின் பக்கத்தில் ம்போகா நின்றுவிட்டான்.

"இங்கே எங்கேயோ" என்றான்.

ஃபோக்கினும் தான்யாவும் சுவற்றின் அடியிலிருந்த நிழலில் விரைவாக ஊர்ந்து சென்றார்கள். வியூவும் கோமவும் ம்போகாவை எதிர்பார்ப்புடன் நோக்கினார்கள். ம்போகா சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

"இங்கே ஒன்றும் இல்லை!" என்று எரிச்சலுடன் சொன்னான் ஃபோக்கின்.

"நான் என்ன கண்டேன்? எதைக் கண்டேன் நான்?... எதைத்தான் பார்த்தேன் நான்?" என்று முணுமுணுத்தான் ம்போகா.

ஃபோக்கின் சிடுசிடுப்புடன் சுவற்றுக்கு அடியிலிருந்து வெளி வந்தான். ஹெலிகாப்டர் உந்து விசிறியின் கருநிழல் அவன் முகத்தின்மேல் வழுகிச் சென்றது.

"ஆ! விந்தையான நிழல்!" என்று உரக்கக் கூவினான் ம்போகா.

துப்பாக்கியை எறிந்துவிட்டு ஓடிச் சுவர் மேல் துள்ளி ஏறினான்.

"வந்து பாருங்கள்!" என்று முகட்டின் மேலிருந்து அழைத்தான்.

முகட்டின்மேல், ஹெலிகாப்டரின் உடலுக்குப் பின்னே, கடையின் காட்சி அலமாரியில் போல ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன பொருள்கள். வெண்ணெய்ப் பெட்டி, "யெ-9" என்ற குறி எண் உள்ள மூட்டை, செருப்பு ஜோடி, பிளாஸ்டிக் உறையில் இருந்த, பையில் வைத்துக்கொள்ளக்கூடிய நுண் மின்மானி, நான்கு நியூட்ரான் சேமக்கலங்கள், கறுப்பு மூக்குக் கண்ணாடி ஆகியன அங்கே இருந்தன.

"ஜோடுகளும் இதோ இருக்கின்றன. மூக்குக் கண்ணாடியும்கூட இதை நேற்று ஆற்றில் மூழ்கடித்துவிட்டேன்" என்றாள் தான்யா.

"ஆ...ஆம்'' என்று எச்சரிக்கையுடன் சுற்றுமுற்றும் கண்ணோட்டினான் ஃபோக்கின்.

கோமவ் திடீரென்று சுயநினைவுக்கு வந்தவன் போலத் திடுக்கிட்டான்.



"வியூ! நான் உடனே 'சூரியகாந்தி'யுடன் தொடர்பு கொள்ள வேண்டும். ஃபோக்கின், தான்யா, இந்தக் கண்காட்சியைப் படம் பிடியுங்கள்! அரை மணி நேரத்தில் நான் திரும்பி வருவேன்" என்று மளமளவென்று கூறினான்.

முகட்டிலிருந்து குதித்து விடுவிடுவென்று நடந்தான். அப்புறம் தளத்தை நோக்கி வீதி வழியே ஓடினான். வியூ பேசாமல் அவனைத் தொடர்ந்தான்.

"என்ன இது?" என்று ஓலமிட்டான் ஃபோக்கின்.

ம்போகா குத்திட்டு அமர்ந்து, சிறு சுங்கானை எடுத்து நிதானமாகப் புகை இழுத்துவிட்டு விட்டுச் சொன்னான்:

"இவர்கள் மனிதர்கள், ஃபோக்கின். பொருள்களைத் திருடுவது விலங்குகளாலும் முடியும். ஆனால் திருடுண்ட பொருள்களைத் திரும்பக் கொண்டு சேர்ப்பது மனிதர்கள் மட்டுமே செய்யக் கூடும்."

ஃபோக்கின் சற்று பின்னே நகர்ந்து ஹெலிகாப்டரின் சக்கரத்தின்மேல் உட்கார்ந்தான்.

கோமவ் தனியே திரும்பி வந்தான். அவன் மிகுந்த கிளர்ச்சி அடைந்திருந்தான். முகாமைச் சுருட்டி எடுத்துக்கொண்டு உடனே புறப்படும்படி கணீரென்ற குரலில் உத்தரவிட்டான். ஃபோக்கின் அவனிடம் ஏதோ கேட்க முயன்றான். விளக்கம் கூறும்படிக் கோரினான். அப்போது கோமவ் அதே கணீர்க்குரலில் உத்தரவைப் படித்தான்:

" 'விண்வெளிக் கப்பல் தலைவரின் உத்தரவு. மூன்று மணி நேரத்திற்குள் வானிலை ஆராய்ச்சித்தளச் சோதனைக் கூடத்தையும் தொல்பொருள் ஆராய்ச்சி முகாமையும் கலைத்துவிட வேண்டும். எல்லாத் தானியங்கி அமைப்புக்களையும் பிரித்துவிட வேண்டும். வானிலைப் பௌதிக விஞ்ஞானி வியூ உட்பட எல்லோரும் 'சூரியகாந்திக்குத்' திரும்பிவிட வேண்டும்.'"

வியப்பு மிகுதியால் ஃபோக்கின் பதில் பேசாமல் கீழ்ப்படிந்து, வழக்கத்துக்கு மாறான ஈடுபாட்டுடன் வேலையில் முனைந்தான்.

இரண்டு மணி நேரத்தில் ஹெலிகாப்டர் எட்டு பறப்புக்கள் நடத்தியது. சுமைதூக்கி ரொபாட்டுகள் தளத்திலிருந்து போட் வரை புல்லில் அகன்ற பாதை அமைத்தன. தளத்தில் வெற்றுக்

கட்டுமானங்கள் மட்டுமே எஞ்சின. நிர்மாண வேலைத் தானியங்கி ரொபாட்டுக்களின் மூன்று தொகுதிகளும் பண்ட சாலைக் கட்டிடத்துக்குள் செலுத்தப்பட்டு, முழுமையாக விசை நீக்கப்பட்டன.

லெஹனீதா நேரப்படி காலை ஆறு மணிக்கு, கிழக்கே பசிய உதய ஒளி பரவத் தொடங்கியபோது, களைத்துச் சோர்ந்த ஆட்கள் போட்டின் அருகே குழுமினார்கள். அப்போதுதான் ஃபோக்கினுக்குப் பேச்சு கிளம்பிற்று.

"நல்லது" என்று கரகரத்த குரலில் கோபத்துடன் கிசுகிசுக்கத் தொடங்கினான். "கோமவ், நீ எங்களுக்கு உத்தரவு இட்டாய். நான் அவற்றை நேர்மையுடன் நிறைவேற்றினேன். ஆனால், நாசமாய்ப்போக, நாம் எதற்காக இங்கிருந்து கிளம்புகிறோம் என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன். எப்படி இருக்கிறது சேதி!" என்று திடீரெனக் கீச்சுக்குரலில் கத்திக் கையை நாடக பாணியில் வீசி ஆட்டினான் அவன். (எல்லோரும் திடுக்கிட்டார்கள். ம்போகா சுங்கானைப் பற்களின் இடையி லிருந்து நழுவவிட்டான்.) "எப்படியிருக்கிறது! பகுத்தறிவுச் சோதரர்களை மூன்று நூற்றாண்டுகளாகத் தேடி, அவர்களைக் கண்டுபிடித்ததும் பிடிக்காததுமாக வெட்கக்கேடான முறையில் ஓடுவதாவது? மனித குலத்தின் தலைசிறந்த அறிவாளிகள்..."

"ஃபோக்கின், ஃபோக்கின்!" என்று கண்டனம் தெரிவிக்கும் விதத்தில் தலை அசைத்தாள் தான்யா.

"ஒன்றுமே எனக்குப் புரியவில்லை!" என்று கரகரத்த குரலில் சீறினான் ஃபோக்கின்.

"ஃபோக்கின், மனித குலத்தின் தலைசிறந்த அறிவாளிகளைப் பிரதிநிதித்துவப்படுத்த நாம் வல்லவர்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?" என்று கேட்டான் ம்போகா.

கோமவ் ஏக்கத்துடன் முணுமுணுத்தான்:

"நாம் இங்கே எவ்வளவு ஆபாசம் செய்திருக்கிறோம்! திடல் முழுவதையும் எரித்துவிட்டோம். விளைநிலத்தை மிதித்துத் துவைத்தோம். குண்டுகள் சுட்டோம்... தளத்தின் இடத்திலோ..." என்று கையை வீசி ஆட்டினான்.

"யாருக்குத் தெரியும்?" என்று குற்றப்பாங்குடன் சொன்னான் வியூ.



"ஆம். நாம் நிறையத் தவறுகள் செய்தோம். ஆனால் அவர்கள் நம்மைப் புரிந்துகொண்டார்கள் என்று நம்புகிறேன். அந்த அளவுக்குப் போதிய நாகரிகம் படைத்தவர்கள் அவர்கள்" என்றான் ம்போகா.

"அட இது என்ன நாகரிகம்? இயந்திரங்கள் எங்கே? உழைப்புக் கருவிகள் எங்கே? நகரங்கள் தாம் எங்கே?" என்று கிளர்ச்சியுடன் கூறினான் ஃபோக்கின்.

"அட நீ சும்மா இரேன், ஃபோக்கின்!" என்றான் கோமவ். "இயந்திரங்களாம்.... நகரங்களாம்...' இப்போதாவது கண்களைத் திறந்து பாரேன்! நம்மால் பறவைகள் மேல் உட்கார்ந்து பறக்க முடியுமா? நம்மிடம் உள்ளனவா தேன் சுரக்கும் பெருவிலங்குகள்? அதிலும் உயிருள்ள உடலிலிருந்தே இறைச்சி தரக் கூடியவை? பூமியில் கொசுக்களை நாம் அறவே ஒழித்து வெகுகாலம் ஆகிவிட்டதோ? இயந்திரங்களாம்..."

"உயிரியல் நாகரிகம்" என்று கூறினான் ம்போகா.

"எப்படி?" என்று கேட்டான் ஃபோக்கின்.

"உயிரியல் நாகரிகம். இயந்திர நாகரிகம் அல்ல, உயிரியல் நாகரிகம். தேர்வு, பாரம்பரியவியல், விலங்குப் பயிற்சி விஞ்ஞானம். எத்தகைய ஆற்றல்களை இவர்கள் வெற்றிகொண்டார்களோ, யார் கண்டது? யாருடைய நாகரிகம் மேலானது என்று எவர் சொல்ல முடியும்?"

"எண்ணிப்பார், ஃபோக்கின். பாக்டீரியங்கள் பயிற்றப்பட்டிருக் கின்றன" என்றாள் தான்யா.

ஃபோக்கின் சீற்றத்துடன் மீசையை முறுக்கினான்.

"நாம் இங்கிருந்து போவதன் காரணம், முதல் தொடர்பு ஏற்படுத்தும் பொறுப்பை ஏற்க நம்மில் யாருக்கும் உரிமை இல்லை என்பதே" என்றான் கோமவ்.

"ஆ, இங்கிருந்து, போய்விட எவ்வளவு வருத்தமாய் இருக்கிறது!" என்று அவன் எண்ணமிட்டான். "மிக மிக வருத்தமாய் இருக்கிறது! எனக்குப் போகவே மனமில்லை. அவர்களைத் தேடிக் காண விரும்புகிறேன். அவர்களுடன் உரையாடவும் அவர்கள் எப்பேர்ப்பட்டவர்கள் என்று பார்க்கவும் ஆசைப்படுகிறேன். ஒரு முழு மனித சமுதாயம்! அறிவற்ற ஓனான்களோ, எவையோ நத்தைகளோ அல்ல, மனிதர்கள். ஒரு முழு உலகம், முழுமையான

வரலாறு... உங்கள் கிரகத்தில் போர்களும் புரட்சிகளும் நிகழ்ந்தனவா? முதலில் உங்கள் உலகில் இருந்தது எது, நீராவியா, மின் ஆற்றலா? உங்கள் கிரகத்தில் வாழ்க்கையின் உட்பொருள் என்ன? லெஒனீதாவில் எத்தனை மொழிகள் உள்ளன? உங்கள் உலகில் ஏதேனும் படிக்கக் கிடைக்குமா? மனித குல ஒப்பு வரலாற்றின் முதல் அனுபவம்... ஆயினும் போக வேண்டியதாய் இருக்கிறது. ஐயையோ, போக மனமே இல்லையே!.. பூமியில் ஐம்பது ஆண்டுகளாக நிலவி வருகிறது தொடர்பு ஆராய்ச்சிக் குழு. மீன்களதும் எறும்புகளதும் ஒப்பு உளவியல் ஐம்பது ஆண்டுகளாக ஆராயப்பட்டு வருகிறது. முதல் "ஏ!"யை எந்த மொழியில் சொல்லுவது என்று விவாதம் நடந்துவருகிறது. ஆனால் இப்போது இந்தக் குழுவை எள்ளி நகையாட முடியாது. குழுவினர் நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைக்க வேண்டி இருக்கும் இனி. அவர்களில் யாரேனும் உயிரியல் நாகரிகத்தை முன்கண்டார்களா என்று தெரிந்து கொள்வது அக்கறைக்கு உரியது. முன்கண்டிருக்கலாம், ஒருவேளை. அவர்கள் முன் காணாதது ஏதாவது உண்டா? அதிர்ஷ்டசாலிகள்!"

"இந்த கொர்போவ்ஸ்க்கிய்தாம் எத்தகைய கூர்மதியாளர்! ஏதோ அவர் உணர்வில் பட்டிருக்கிறது என்பது தெளிவு" என்றான் ம்போகா.

"ஆம். நம்மிடம் ஆயுதங்கள் மட்டுமே இருந்தால் ஃபோக்கின் என்ன செய்திருப்பான் என்று நினைக்கவே பயங்கரமாக இருக்கிறது" என்றாள் தான்யா.

"என்னை மட்டும் ஏன் குத்திக்காட்டுகிறாய்? உன் யோக்கியதை என்ன? மின்சார வெட்டுப் பொறி அணிந்து கொண்டு ஆற்றில் குளிக்கப்போனது யாராம்?" என்று சீறினான் ஃபோக்கின்.

லியூ பெருமூச்சுவிட்டு, "நாம் எல்லோருமே நல்லவர்கள்தாம்" என்றான்.

கோமவ் கடிகாரத்தைப் பார்த்தான். "புறப்பாடு இன்னும் இருபது நிமிடங்களில். அவரவர் இடங்களில் அமரும்படி கேட்டுக்கொள்கிறேன்" என்றான்.

ம்போகா கதவருகே சற்று நின்று சுற்றுமுற்றும் பார்வை செலுத்தினான். "எந.23" எண்ணுள்ள வெண் தாரகை லெஒனீதாவின் பசிய சமவெளிகளுக்கு மேலே எழுந்துவிட்டது. ஈரப்புல், கதகதப்பான தரை, புதுத்தேன் ஆகியவற்றின் நறிய



மணம் கமழ்ந்தது. தொலைதூரக் குன்றுகளின் உயரே அசையாமல் மிதந்தன கலைந்த வெண் முகில்கள்.

"ஆம். அசாதாரணமாகச் செப்பமாக அமைந்த கிரகம். இம்மாதிரி ஒன்றைப் படைக்க இயற்கைக்கு இயலுமா?" என்று சொல்லிக் கொண்டன் ம்போகா.





மிஹயீல் யேமத்ஸெவ், யெரெமேய் பர்னோவ் - "அதிநவத்தின் வீழ்ச்சி", "கர்னல் ஃபோஸ்ஸெட்டின் இறுதிப் பயணம்", "பச்சைக் கூனிறால்" ஆகிய கதைத் தொகுப்புக்களும் "பிரபஞ்சத்தின் ஆன்மா", "திராக்கின் கடல்" என்னும் நவீனங்களும் எழுதிப் பிரசித்தி பெற்றவர்கள். மிஹயீல் யேமத்ஸெவ் (பிறப்பு 1933) இரசாயனி. யெரெமேய் பர்னோவ் (பிறப்பு 1935) பௌதிக இரசாயன நிபுணர். இவர்களது நூல்கள் வழக்கமாக விஞ்ஞானத்தின் மிக நவீனப் பிரச்சினைகளை தொட்டுக் காட்டுவ தோடு, இரண்டு முகாம்களாகப் பிரிவு பட்டிருக்கும் உலகில் விஞ்ஞானக் கண்டுபிடிப்பு களின் விதிபற்றி விஞ்ஞானிகள் ஏற்கவேண்டிய பொறுப்பையும் வலியுறுத்துகின்றன. இந்தத் தொகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கும் "வெண்பனிப் பந்து" என்பது. ஆசிரியர்களின் பெரிதும் விரும்பப்பட்ட கதைகளில் ஒன்றாகும்.

# வெண்பனிப் பந்து

மிஹயீல் யேமத்ஸெவ், யெரெமேய் பர்னோவ்

என்னுடைய பர்ஸில் பாஸ்போர்ட், அலுவலகச் சான்றிதழ், மாதக் கட்டணங்கள் வரவு வைக்கப்பட்ட பலநிற உறுப்பினர் கார்டுகள் சில ஆகியன இருந்தன. எனினும் நான் வெறும் பிசாசு, குறுவாழ்வு உள்ள ஜீவன். நான் வெண்பனி படிந்த நடைபாதை வழியே நடக்கவோ, நவச்சார திரவம் போன்ற இந்தக் கெட்டியான காற்றைச் சுவாசிக்கவோ கூடாது. உரிமை அற்றவர்களில் எல்லாம்



உரிமை அற்றவனுக்கு வாழ்வின் நலங்கள் யாவும் பறிக்கப்பட்டு ஆயுட்காலச் சிறைவாசம் அனுபவிப்பவனுக்குக் கூட எனக்கு இருந்தவற்றைவிட அதிக உரிமைகள் உண்டு. அளவிட முடியாத படி அதிக உரிமைகள்!

நான் இப்படி நினைத்தேனே தவிர, எப்போதுமே இதை நம்பி விடவில்லை. என்னைச் சுற்றியுள்ள உலகம் எனக்கு மிக மிகப் பழக்கமானது, நன்கு தெரிந்தது. மரக் கிளைகள் உறைபனி அடர்ந்து உப்பியிருந்தன, இள மான் கொம்புகளை ஒத்திருந்தன. வெளிறிய வானின் பகைப்புலத்தில் கம்பிகள் அரிதாகவே புலப் பட்டன. அவை சணல் கயிறுகள் போல வெண்மையாகிப் பருத்து விட்டன. பௌதிகப் பிரிவின் முகட்டின்மீது வானொலி அலைக் கம்பிகள் வெளிர் கருக்கலில் விரைத்து நின்றன, கண்ணாடிக் கப்பலின் பாய்மரங்கள்போல. இரசாயனப் பிரிவு ஆவிகளின் விந்தையான மணத்தால் தான் இருப்பதைக் காட்டிக்கொண்டது. இந்த மணம் உவப்பானதா குமட்டுவதா என்று என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. பழகிய அன்றாட உலகம்! நினைவு மட்டுமே கலவரம் ஊட்டும் உண்டைபோல நெஞ்சை அழுத்திற்று, பின்வருமாறு கிசுகிசுத்தது:

"கனவுகள் எல்லாம் - நனவு
அற்றவை எல்லாம்,
இனி என்றும் வாராது - ஏகி
விட்ட நாட்களின்
நனி நிழல் உருத் - தன்மை
மட்டுமே போலும்."

நேற்று இன்னும் கோடைகாலமாய் இருந்தது. இன்றோ, பனிக்காலம். "நேற்று" என்னும் இந்தச் சொல்லில் எவ்வளவு பொய்கள் அடங்கி உள்ளன! இல்லை, இது நேற்றைய விஷயம் அல்ல...

என்னிடம் மேல்கோட்டு இல்லை. இன்னும் சரியாகச் சொன்னால் அது எங்கோ மாட்டலில் தொங்கிற்று. ஆனால் அதற்கு உரிய குறித் தகடு வேற்றாளின் பையில் கிடந்தது. மறுபடி பொய்: "வேற்றாளின்" என்பது. வேற்றாளின் பையில் அல்ல... இதைக் குறிக்கத்தக்க சொல் இன்னும் புனையப்படவில்லை, அவ்வளவுதான். குளிரில் விரைத்துவிடாமல் இருப்பதற்காக நான் விரைவாய் நடந்தேன். மேல்கோட்டு இல்லாமல் எப்படியாவது

சமாளித்துவிடுவேன். முன்பு நான் மேல்கோட்டைக் கழற்றி வைத்துவிட்டு ரசாயனப் பிரிவுக்கோ, பிரதானக் கட்டிடத்துக்கோ அடிக்கடி ஓடியதுண்டு.

நான் திடுக்கிட்டு நின்றுவிட்டேன். இப்படியும் வாய்க்க வேண்டுமா! பிரமாண்டமான லாரி ஒன்றின் அடியில் நசுங்கத் தெரிந்தேன். காரோட்டி வெளியே தலையை நீட்டினான். அவன் விட்ட மூச்சினால் வெளிவந்த முத்து நீராவியோடு அவன் நாவிலிருந்து உதித்த கற்பனை வளம் செறிந்த ஆபாசத்திட்டும் தூய கடுங்குளிர் காற்றில் வெடித்துச் சிதறியது.

நான் கலகலவென்று நகைத்தேன். அடி மடையனப்பா நீ, காரோட்டி! நான் வெறும் தோற்றம் மட்டுமே. என்னைத் தயங்காமல் நசுக்கு! உன் வக்கீல் அது சரி என்று நிரூபிக்க முடியும். எவன் நிலவவே இல்லையோ, அவனைக் கொல்ல முடியாது அல்லவா?

ஆனாலும் ஏதோ அபத்தம் மூளையை ஓயாமல் குடைந்து கொண்டிருந்தது. மறந்துவிடாதிருக்கவும், கவனத்தை வேறு திசையில் செலுத்தாதிருக்கவும் நான் முயன்றேன். இங்கே நான் வேற்றாள் என்பதை நான் நினைவு வைத்திருக்க வேண்டும்.

எனக்கு எதிராக வந்தது மாணவர்களின் பளிச்சிடும் வரிசை. கவலையற்ற இளைஞர்கள். பகைவர்களைப் போரில் வெற்றி கொண்ட வீரர்கள் போன்ற பெருமிதத்துடன், உரக்கச் சிரித்துக் கொண்டும், அடக்கமுடியாமல் பெருமையடித்துக் கொண்டும் ஆடி அசைந்து வந்தார்கள்.

"உனக்குக் கிடைத்த கேள்வித்தாள் எப்படி, பிங்குவின்?" - ஆடம்பரமாக உடையணிந்த நெடிய இளைஞன், செம்பட்டை முடியனான குட்டையனிடம் கேட்டான்.

"சுமார்! பாடாவதி! உறிஞ்சுதல், லாங்மியூரின் சமவெப்பநிலைக் கோடுகள், இரட்டை மின் அடுக்கு, நீரின் இரு கட்டமைப்பு மாதிரி... நான் எடுத்த எடுப்பிலேயே, அலட்சியமாக ஊதித் தள்ளி விட்டேன்..."

"பௌதிக இரசாயனப் பரீட்சை கொடுத்துவிட்டு வருகிறார்கள்" என்று நினைத்துக்கொண்டு நடையை மட்டுப் படுத்தினேன்.

"நான் என்ன சட்டை போட்டுக்கொண்டிருக்கிறேன், கொஞ்சம் பாரேன்" என்று கம்பளிக் கழுத்துக்குட்டையின் அடியிலிருந்து சட்டைக்காலரை இழுத்துக்காட்டினான். வெள்ளைக் கோடுகள் போட்ட நீலச்சட்டை அது. "இது இன்னமும் எப்படித்தான் தாக்குப் பிடிக்கிறதோ அறியேன்! எல்லாப் பரீட்சைகளும் இதைப் போட்டுக் கொண்டுதான் கொடுக்கிறேன். ஆகிவந்த சட்டை! ஸூட்டுப் பழையதுதான், பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது தைத்தது" என்றான்.

லேசான, ஏக்கம் நிறைந்த பொறாமை எனக்கு உண்டாயிற்று.

இதோ சிவப்புக்கல் வாயிற்படிகள். வெண்பனித் துகள் தூவிய கானடா நாட்டுப் பிர் மரங்கள். ஓயிலான வெண்பனித் தொப்பி யால் மூடப்பட்ட புத்லெரோவ் சிலையின் வழுக்கைத் தலை.

நுழைவுச் சீட்டை எடுப்பதற்காக வழக்கம்போலப் பையில் கையை விட்டேன்.

நெஞ்சுத் துடிப்பு கணப்போது நின்று போயிற்று.

வாயில் காப்பு மாதுக்கு அளவுமீறிய உற்சாகத்துடன் வணக்கம் தெரிவித்து, பாதி திறந்த நுழைவுச் சீட்டை நேரே அவள் மூக்கருகே காட்டிவிட்டு லிஃப்டை நோக்கி எடுத்தேன் ஓட்டம்.

பாவம் அவள்! நுழைவுச் சீட்டு எந்தத் தேதிவரை நீடிக்கப் பட்டிருந்தது என்பதை மட்டும் அவள் பார்த்தாளானால்!

லிஃப்டுக்கு வெளியே சிவப்பு அம்புக்குறி விளக்கு எரிந்தது. இதோ லிஃப்டின் கதவுகள் திறக்கும். நான்காவது மாடிக்கு நான் போகாதிருப்பதே நலம் என்று எனக்குத் தோன்றியது. அவனை நான் எதிர்ப்படவும் சேர்ந்தாற்போல எங்கள் இருவரையும் யாரேனும் பார்க்கவும் நேர்ந்தால் என்ன ஆகும்? இந்த ஓர் எண்ணத்தினாலேயே எனக்குக் குளிர் எடுத்துவிட்டது.

வீட்டுக்குப் போவதையும் நினைக்கவே முடியாது. பெற்றோர்கள் இதைத் தாங்க மாட்டார்கள். அவர்களுக்கு ஒன்றுமே தெரியக்கூடாது. ஒருகால் அவனை எதிர்ப்பட நேர்ந்தாலும்கூட, உடனேயே எல்லாவற்றையும் பற்றி ஒப்பந்தம் செய்துகொண்டுவிட வேண்டும்.

அவனைப்பற்றி எண்ணியபோது நான் வாய்விட்டுச் சிரித்துக் கூட விட்டேன். நகைச்சுவை, நிலைமையின் அசாதாரணத் தன்மைக்கும் இயல்பின்மைக்கும் நேர் விகிதம் கொண்டது போலும். இத்தகைய மாற்றம் நொடிப்போதில் நிகழ்ந்துவிட்டது

என்பதை நினைக்கவே மலைப்பாய் இருந்தது. குறைந்தது அகநிலையாகப் பார்த்தால் கணப்போதில். எதார்த்தத்திலோ? என் ஆய்வுரையைச் சமர்ப்பித்துத் தாங்கிப் பேசுகையில், பொறியை மூடியிருந்த கறுப்பு உறையை இழுத்து அகற்றினேனே. அதற்குப்பின் எவ்வளவு நேரம் கழிந்திருக்கும்?

என் சித்தாந்த முதனிலைகளை ஒருவருமே அவ்வளவாக எதிர்க்கவில்லை. பிரிவுத் தலைவர் எனது ஆய்வுரைக்கு அருமையான பாராட்டு வழங்கினார். அதிகாரப்பூர்வமான எதிராளிகள் சில அம்சங்களை மட்டுமே குறை கூறினார்கள்.

அவர்களில் ஒருவரான பேராசிரியர் ப்ரொஸோஹின், மூக்குக் கண்ணாடியில் மூச்சுவிட்டு, அதை நெடுநேரம் துடைத்தார். கமறினார். மசகு போடாத சக்கரம்போலக் கீரிச்சிட்டவாறு அவர் காகிதத்தைப் பார்த்து மெதுவாக ஏதோ முணுமுணுத்தார். என் ஆய்வுரையில் உள்ள அத்தியாயங்கள் எத்தனை, பக்கங்கள் எத்தனை, விளக்கப் படங்கள் எத்தனை, எடுத்தாளப்பட்ட ருஷ்ய, வெளிநாட்டு நூல்கள் எத்தனை என்ற விவரங்களில் ஒருவருக்கும் சிறிதேனும் அக்கறை இல்லை. தேர்வுக் குழுவினர் என் ஆய்வுரையை ஏற்கனவே மனதுக்குள் மதிப்பிட்டுவிட்டார்கள். எனவே நுணுகி ஆராய்ந்த பேராசிரியரின் அலுப்பூட்டும் பேச்சைச் சலிப்புடன் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

நான் அவ்வப்போது தனித்தனி வாக்கியங்களை எழுதிக் குறிப்புக்கள் எடுத்துக்கொண்டேன். நான் இன்னும் பதில் உரை ஆற்ற வேண்டியிருந்தது. ப்ரொஸோஹின் கடைசியில் பின்வரும் சடங்குமுறை வாக்கியங்களைக் கூறிப் பேச்சை முடித்தார்:

"ஆயினும் நான் எடுத்துக்காட்டிய குறைகள் விவாதிக்கப்படும் ஆய்வுரையின் மதிப்பை எவ்வகையிலும் குறைக்க மாட்டா. இத்தகைய ஆய்வுரைக்குத் தேவையான எல்லாச் சிறப்புக்களையும் கொண்டிருக்கிறது இது. ஆய்வுரையாளர் பௌதிக-கணித பிஎச்டி பட்டம் பெற முற்றிலும் தகுதி உள்ளவர்."

தேர்வுக் குழு தலைவர் பேராசிரியர் வலெந்தினவ் நெடியமேனி அழகர், அலுமினிய இழைகள் போன்ற நரைமுடியர். அவர் பெரியமனிதப் பாங்குடன் தொண்டையைக் கனைத்து, "ஆய்வுரையாளர் இரு எதிராளிகளுக்கும் ஒரேயடியாகப் பதில் சொல்லப் போகிறாரா, தனித்தனியாவா?" என்று கேட்டார்.



"ஒரேயடியாக! ஒரேயடியாக!" என்று தேர்வுக்குழு உறுப்பினர்கள் குரல் கிளப்பினார்கள். ஆய்வுரை சமர்ப்பிக்கும் சடங்கின் ஒரே மாதிரியான போக்கு அவர்களுக்குச் சலித்துப் போய்விட்டது.

வலெந்தினவ் அரச விருது பெற்ற பிரபு போன்ற வசீகரப் புன்னகையுடன், "நல்லது, அப்படியானால், நமது மதிப்பிற்குரிய விருந்தினர் ஸ்மஸோன் இவானவிச் கொகொத்ஸோரித்ஸேயைப் பேச முன்வருமாறு அழைக்கிறேன்" என்றார்.

அகாதமி உறுப்பினர் பட்டம் பெற்றவர் கொகொத்ஸோரித்ஸே குதிரைவீரர் போலப் பேச்சு மேடைமேல் பாய்ந்து ஏறினார். நாற்புறமும் கொடூரப் பார்வை செலுத்தினார். அது எவரையும் அச்சுறுத்தவில்லை (ஏனெனில் அவர் மிக மிக நல்லியல்பு உள்ளவர்). பின்பு மெஷீன்கன் குண்டுவரிசை சுடுவதுபோலச் சொற்கணைகள் வீசலானார்.

"நமது மதிப்பிற்குரிய பேராசிரியர் ப்ரொஸோஹின் மிகக் கவனத்துடன் நுணுக்கமாகப் பகுத்தாய்ந்துவிட்ட படியால், மதிப்பிற்குரிய வீக்தர் அர்க்காதியெவிச்சின் (என் பக்கம் நல்லெண்ணம் நிறைந்த தலை அசைப்பு) ஆய்வுரையை விரிவாகப் பார்வையிடும் தேவையிலிருந்து எனக்கு விடுதலை கிடைத்து விட்டது. எனவே ஆய்வுரையின் சில குறைகளை மட்டும் எடுத்துக்காட்டுவதோடு நான் நிறுத்திக்கொள்கிறேன். இவை சிலவே. ஆய்வுரையில் உள்ள சிறந்த அம்சங்களின் கடலில் இந்தக் குறைகள் அமிழ்ந்துவிடுகின்றன."

கொகொத்ஸோரித்ஸே ஆழ்ந்து மூச்சு இழுத்தார், வெண்பனி போன்ற தூய கைக்குட்டையால் சிவந்த முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

"ஆம்... ஆய்வுரையின் சிறப்புக்களைப் பற்றிப் பேசாமல் அதன் குறைகளை மட்டுமே சுருக்கமாகக் குறிப்பிடப் போகிறேன்."

இந்தச் "சுருக்கமாகக்" குறிப்பிடுதல் பதினேழு நிமிடங்கள் நீடித்தது. அதற்குள் நான் பொறுமை இழந்து பதற்றம் அடையத் தொடங்கிவிட்டேன். ஆனால் பிரிவுத் தலைவர் என்னைப் பார்த்து அரிதாகவே புலப்படும்படி கண் சிமிட்டினார். அதனால் நான் அமைதி உற்றேன். எல்லாக் குறைகளையும் வரிசையாக அடுக்கியபின் கொகொத்ஸோரித்ஸே ஒரு தம்ளர் கனிய நீர் பருகி விட்டு, இன்னின்ன குறைபாடுகள் இருந்தாலும் ஆய்வுரை

சிறப்பானது, ஆய்வுரையாளர் பட்டம் பெறத் தகுந்தவர் என்ற வழக்கமான முத்தாய்ப்புடன் பேச்சை முடித்தார்.

பதில் கூறும் பொருட்டு நான் இடத்தைவிட்டு எழுந்தேன். என்னை ஒருவரும் தாக்கவில்லை ஆதலாலும் எதிராளிகளுக்குப் பிடிக்காத தனித்தனி அம்சங்கள் முக்கியமற்றவை ஆதலாலும் பல்லைக் காட்டி உறுமத் தேவையில்லை என்று முடிவு செய்தேன். எனக்கு ஆராய்ச்சியில் உதவிய எல்லோருக்கும் ஐந்து நிமிடங்கள் நன்றி தெரிவித்தேன். இது அனேகமாக முதன்மையான விஷயம். யாரையேனும் மறந்தேனோ, தொலைந்தேன்! பின்பு எதிராளி களைக் குழையடித்தேன்: மேற்கொண்டு நடத்தும் ஆராய்ச்சியில் அவர்களது விமர்சனத்தைக் கருத்தில் கொள்வதாகவும் அவர்களுடைய மதிப்புயர்ந்த யோசனைகளையே பொதுவாக வாழ்க்கையில் வழிகாட்டியாகக் கொண்டு நடப்பதாகவும் உறுதி கூறினேன்.

பிரிவுத் தலைவர் என் சொற்களின் லயத்துக்கு இசையத் தலையை ஆட்டினார். எல்லாம் சிறப்பாக நிகழ்ந்தேறியது.

பிறகு வலெந்தீனவ் கூடியிருந்தவர்களை விரும்பினால் பேசலாம் என்று அழைத்தார். ஆனால் ஒருவரும் பேச அவசரப் படவில்லை. தேர்வுக்குழு உறுப்பினர் ஒருவர் விருப்பம் இல்லாமல், கடனைக் கழிப்பதற்காகப் போல எழுந்து ஏதோ முணுமுணுத்துவிட்டு உட்கார்ந்தார். இன்னும் ஒருவர் சுமார் ஐந்து நிமிடங்கள்வரை ஏதோ சம்பந்தமற்ற விஷயத்தைப் பற்றிப் பேசிவிட்டு, என் போன்ற இளம் விஞ்ஞானிகள் தேவை என்று எனது ஆராய்ச்சி பிஎச்டி. பட்டத்துக்கான ஆய்வுரையின் தரத்தை விஞ்சக்கூடச் செய்கிறது என்றும் சொன்னார்.

நான் நெடுநேரமாக எதிர்பார்த்த கேள்வி திடீரென என் காதில் பட்டது. கேட்டவள் எனக்கு அறிமுகம் இல்லாத பெண்.

"வீக்தர் அர்க்காதியெவிச் தமது ஆய்வுரையின் ஒரு பகுதியில், கால ஏவரைக்கு எதிராக, பின்னோக்கிய பெயர்ச்சி சாத்தியமே என்பதற்குச் சித்தாந்தரீதியாக ஆதாரங் காட்டுகிறார். இந்தப் பகுதியை நான் மிகக் கவனமாகக் கேட்டேன். ஆய்வுரைச் சுருக்கக் குறிப்பில் இந்தப் பாராவை நான் அடிக்கோடுகூட இட்டிருக்கிறேன். இந்த நிகழ்வைச் சோதனைமுறையில் சரி பார்ப்பதற்கான முதனிலைகளை அறிய நான் பெரிதும் விரும்பு கிறேன்."



கேட்க வேண்டிய கேள்வி இதுதான்! பிரிவுத் தலைவரும் நானும் இதை எதிர்பார்த்து, அருமையான பதிலை ஒரு மாதத்துக்கு முன்பே தயாரித்து வைத்திருந்தோம். காலப்போக்குக்கு எதிராகச் செல்ல உதவும் பொறியை நாங்கள் அமைத்து விட்டோம் என்பதுபற்றி மூச்சுவிடக்கூடாது என்று தலைவர் உத்தரவு போட்டுவிட்டார். ஏனெனில் இதனால் ஆய்வுரையைத் தாங்கிப் பேசுவதற்கு இடையூறு விளையலாம். எல்லோரும் உற்சாகம் அடைந்து விவரமாகக் கேள்வி மாரி பொழியத் தொடங்கிவிடுவார்கள் - என்ன, எப்படி என்று. ஆயினும் ஆய்வுரை சமர்ப்பிக்கும் ஹாலுக்கு அந்தப் பொறியைக் கொண்டு வந்து கறுப்பு உறையால் மூடி வைக்கப் பிரிவுத் தலைவரை நான் வற்புறுத்தி இணங்க வைத்தேன் - எதற்கும் கையோடு காவலாக இருக்கட்டும் என்று.

பெண் தனது கேள்வியைக் கேட்டதும் பிரிவுத் தலைவர் புன்னகை செய்து, பொறியின்பக்கம் தலையசைப்பால் சுட்டி, விரலை உதடுகள்மேல் வைத்து ஜாடை காட்டினார். நான் அவரைப் பார்த்துக் கண் சிமிட்டினேன்: "சொல்லவும் வேண்டுமா? நான் எனக்கே பகைவன் அல்லவே" என்ற பாவனையில்.

கேள்விகளுக்கு விடை பகரவும் என்னுடைய நூலறிவைக் காட்டிப் பகட்டவும் நான் எழுந்தேன். சில பொதுவான வாக்கியங் களை வீசினேன், முன் பேசியவர்களுக்கு நன்றி தெரிவித்தேன், பின்பு இந்தக் கேள்விக்கு விடை கூற முற்பட்டேன். உண்மையிலோ, இது ஒன்றுதான் பதில் அளிக்கத் தகுதி உள்ள கேள்வி.

அந்தக் கணத்தில் நான் அம்மங்கையின் கண்களைப் பார்த்தேன். தங்கப் பொறிகள் சிந்தும் கருந்தேன் விழிகள் அவை. கவனமும் ஆழ்ந்த நோக்கும் கொண்டவை. என்னுள் இருந்த தூய ஆண்மை குபீரென்று வெளிப்பட்டது. காற்றில் ஏறி விண்ணையும் சாட நான் ஆயத்தம் ஆகிவிட்டேன்.

எப்படித்தான் நேர்ந்ததோ அறியேன், நான் பொறியின் அருகே சென்று, உறையை இழுத்து அகற்றி, கம்மிய குரலில் சொன்னேன்:

"இதோ!"

ஹாலில் மௌனம் நிலவியது. பிரிவுத் தலைவரைப் பார்க்காதிருக்க முயன்றேன். உற்சாகக் கிளர்ச்சி அடங்கிவிட்டது.

அசட்டுத்தனம் செய்துவிட்டோம் என உணர்ந்தேன். ஆனால் பின்வாங்க வழி இல்லை. நீர்ச் சுழலில் அகப்பட்டுக்கொண்டவன் போன்ற நிலையில் நான் தாக்குதலைத் தொடங்கினேன்:

"இந்தச் சோதனைப் பொறியின் திறன் இன்னும் மிகக் குறைவே. எனவே நான் சில மாதங்களுக்கே கடந்த காலத்துக்குப் பெயர முடியும். இதோ நான் அவ்வாறு செய்யப்போகிறேன். நான் மறைந்ததும் எல்லோரும் அவரவரர் இடங்களிலேயே இருக்கும்படி கேட்டும்கொள்கிறேன். இப்போது இந்தப் பொறி இருக்கும் இடத்தில் எந்தக் காரணத்தை முன்னிட்டும் நிற்காதிருக்க வேண்டுகிறேன்... நான் விரைவில் திரும்பிவருவேன்."

ஹாலில் ஒருவரும் மூச்சுக்கூட விடவில்லை. நான் விசை அமைப்பை நெருங்கி, பொறியை இயக்கினேன். அரைத் தூக்கத்தில் போல, பளிங்கு வளையத்தை நெற்றியில் பொருந்தும் படி தலையில் மாட்டிக் கொண்டேன், கோட்டைக் கழற்றினேன், சட்டைக் கைகளை மடக்கிவிட்டுக் கொண்டு, செப்பு இணைக் கம்பிகளைக் கைகளில் பொருத்திக் கொண்டேன். பின்பு விசைப் பொத்தானை அழுத்தினேன். கடைசியாக நான் கண்டது பேராசிரியர் வலெந்தீனவின் திறந்த வாய்தான். பேராசிரியரின் கைகளில் நுணுக்கமான வேலைப்பாடு உள்ள தோல் மேலுறை போட்ட குறிப்புப் புத்தகம் இருந்தது. இது அவர் தென் அமெரிக்காவில் வாங்கியது.

ஹாலில் குளிராகவும் அரையிருட்டாகவும் இருந்தது. நான் தலை வளையத்தைக் கழற்றிவிட்டு, கோணமானியைப் பூஜ்ஜியத்தில் வைத்தபின் பொறியை நிறுத்தினேன். பிறகு சுற்று முற்றும் பார்த்தேன். சுவர்களில் உறைபனி இலைகள் போன்ற சித்திரங்கள் தீட்டியிருந்தன. அவை வெளிர்மணி போல ஒளிர்ந்தன. வெற்று பெஞ்சுகள் மீது மங்கிய ஒளிக் கீற்றுகள் தென்பட்டன. உயரமான விட்டம் மங்குலில் மூழ்கியிருந்தது. நான் கதவின் அருகே போய் அதை என் பக்கம் இழுத்தேன். அது பூட்டியிருந்தது. அட துரதிர்ஷ்டமே! இது காரியத்தை எல்லாம் கெடுத்துவிடக்கூடும். கூச்சல் போடுவது பயனற்றது, ஆபத்தானதுகூட. எல்லா அறைகளும் இரவில் பூட்டி முத்திரை இடப்படுவது வழக்கம். விடியும்வரை காத்திருப்பதா? நான் விட்டு விட்டு வந்தேனே... வருங்காலத்தில், அவர்கள் எனக்காகக் காத்திருப்பார்களா?

இப்போது மணி என்ன இருக்கும்? மேலே எங்கோ பலகை மேல் கடிகாரம் இருக்கவேண்டும். அதன் வட்டக் கண்ணாடியின் லேசான ஒளிர்வு எனக்குப் புலப்படுவதுபோல இருந்தது. விளக்கு ஸ்விச் எங்கிருக்கிறது என்று நினைவுபடுத்திக் கொள்ள முயன்றேன். என்ன வேடிக்கை! பகலிலும் முன்னிரவிலும் எத்தனையோ தடவைகள் நான் இந்த ஹாலுக்கு வந்திருக்கிறேன். ஆயினும் ஸ்விச் எங்கிருக்கிறது என்று கவனிக்கவில்லை.

நான் சுவர் அருகே போய், அதில் சாய்ந்து கொண்டு கைகளை நீட்டியபடி ஹாலைச் சுற்றிச் சுவரோரமாக நடக்கலானேன். முடிவில் ஸ்விச் என் கைக்குத் தட்டுப்பட்டது. அது கதவின் பக்கத்திலேயே இருந்தது. எப்படித்தான் முன்னமே இதை நான் கவனிக்காமல் விட்டேனோ?!

விளக்கு பளிச்சென எரிந்தது. கடிகாரம் நான்கு அடித்து இருபத்தேழு நிமிடங்கள் ஆகியிருப்பதாகக் காட்டியது. வேலை நாள் தொடங்க இன்னும் நான்கு மணி நேரம் இருந்தது. அதாவது நான் தற்செயலாக ஞாயிற்றுக் கிழமையில் மாட்டிக் கொண்டிராவிட்டால். காலைவரை காத்திருக்க முடிவு செய்தேன். விளக்கை அணைத்துவிட்டு ஹாலின் உள்ளே போய்ப் பின் பெஞ்சில் படுத்துக்கொண்டேன். காலையில் தூர்த்துப் பெருக்குபவள் இங்கே வரும்போது என்னைப் பொருட்படுத்த மாட்டாள். எத்தனையோ தரம் நான் இங்கே உறங்கியிருக்கிறேனே!

ஆனால் அப்போது எல்லாம் வேறு விதமாக இருந்தது. உரையாற்று மேடைமேல் யாரோ ஆசிரியர் நின்று வளவளத்துக் கொண்டிருந்தார், சுற்றிலும் மாணவர்கள் இருந்தார்கள். சிலர் விரிவுரையை எழுதிக்கொண்டிருந்தார்கள். வேறு சிலர் இரகசியம் பேசிக்கொண்டிருந்தார்கள். நானோ, தூங்கிக்கொண்டிருந்தேன்.

மென்மையற்ற பெஞ்சின்மேல் நான் வெகுநேரம் புரண்டு கொண்டிருந்தேன். என்ன சள்ளை! கோட்டை ஏன்தான் நான் உடன் கொண்டுவரவில்லையோ? கைகள் மடக்கிவிடப்பட்ட நைலான் சட்டை மட்டுமேதான் அணிந்திருந்தேன். சட்டைக் கைகளைப் பிரித்துவிட்டேன். கைகளை மார்புறச் சேர்த்துத் தோள்கள்மேல் இறுக்கிக்கொண்டு உறங்க முயன்றேன். ஆனால் சிந்தனை தூக்கத்தை விரட்டிவிட்டது.

ஹால் கதவு திறக்கப்பட்டதுமே நான் ஒருவரும் கவனிக்காதவாறு நழுவிச் சோதனைக்கூடத்துக்குப் போய்விட வேண்டும். தோழர்களும், முக்கியமாக அவனும் வருவதற்குள்.

வழக்கமாக நான் சோதனை நடத்துகையில் அணிந்துகொள்ளும் பழைய ஸ்கீ-ஸூட்டை மாட்டிக்கொண்டுவிட வேண்டும். என் அலமாரியில் வெள்ளை மேலங்கிக்குப் பக்கத்தில் மாட்டியிருக்கிறது அது. நல்லவேளையாக, பணம் வைத்திருந்த பர்ஸ் கோட்டுப் பையில் அல்ல, காற்சட்டைப் பையில் இருந்தது! இப்போதே எனக்குப் பசி எடுத்துவிட்டது. காலையில் என்ன ஆகுமோ... மெய்யாகவே காலையில் என்ன ஆகும்?

எல்லாம் நான் அனுமானித்தபடியே நடந்தன. அறையைக் கூட்டிப் பெருக்கும் காத்யா அத்தை மூக்கால் முனகியவாறு ஈர மரப்பொடியைத் தரையில் தூவினாள் - புழுதி கிளம்பாமல் தரையைத் துப்புரவாகப் பெருக்க வாகாக. நான் மேஜைகளின் அடியே தவழ்ந்தபடி அவளுடைய கழுகுப் பார்வையில் படாமல் நடைக்கு நழுவி வந்துவிட்டேன். எனது பொறியைப் பற்றி நான் கவலைப்படவில்லை. எங்கள் மாணவர்கள் எதையும் கைகளால் தொடாதிருக்கப் பயிற்றப்பட்டிருந்தார்கள். விஞ்ஞான ஊழியர்கள் பரிச்சயம் அற்ற இயந்திரத்தை முடுக்க மாட்டார்கள். அதிலும் மூடிமீது எச்சரிப்பு வாசகம் பொறிக்கப் பட்டிருந்தால்.

உடை மாற்றிக்கொண்டு நான் தடதடவென்று மாடிப்படி இறங்கிக் கீழே சென்றேன். இரசாயனப் பிரிவுக்கு ஓடிப்போய்ச் சேரத் தீர்மானித்தேன். அங்கே எனக்குத் தெரிந்தவர்கள் குறைவு. என்னுடைய நிலைமைபற்றி எண்ணமிடுவது அங்கே எளிதாயிருக்கும். இரண்டாவது மாடி நடையின் வழியே விரைந்து சென்றவாறே, பாதி திறந்த படிப்பறை வாயிலுக்குள் பார்வை செலுத்தினேன். அங்கே ஒருவரும் இல்லை. நடைக் கம்பளத்தின் மேல் ஓசையின்றி நடந்து ஜன்னல் குறட்டை நெருங்கினேன். அதன்மேல் சப்பாத்திக் கள்ளிகளும் அகவே கற்றாழைகளும் தொட்டிகளில் வைத்து வளர்க்கப்பட்டிருந்தன. ஜன்னலுக்கு வெளியில் காலை நேர நகரம் ஒலித்து முழங்கியது. புகை சூழ்ந்த குழாய்கள், டிராலிபஸ்கள் விரைந்தோடும் சாலைகள், வேலைக்கு அவசரமாகச் செல்லும் மனிதர்கள். இவை எல்லாம் எதார்த்தமான நனவு, நான் எப்படி எதார்த்தமான நனவோ அப்படியே.

படிப்பறையில் இருந்த எல்லா மேஜைகள் மேலும் எவையேனும் சாமான்கள் வைக்கப்பட்டிருந்தன. ஆசிரியர்களும் ஆராய்ச்சி மாணவர்களும் தங்கள் தோல்பைகளையும் காகித அடுக்குகளையும் நோட்டுப்புத்தகங்களையும் எழுதிய தாள்களையும் ஊற்றுப்பேனாக்களையும் வைத்துவிட்டுப் போயிருந்தார்கள். சில நிமிடங்களில் அவர்கள் இங்கே வந்து நடுவில் விட்ட வேலையில் மீண்டும் முனைவார்கள். பேராசிரியர்களின் மேஜைகள் ஒன்றின் மேல் இருந்த ஒரு பொருள் என்னை எச்சரிக்கை அடையச் செய்தது. பேராசிரியர் வலெந்தீனவின் குறிப்புப் புத்தகம் அது. அதன் மஞ்சள் தோலுறைமீது பண்டை அத்ஸ்தேக்கர்களின் குறியெழுத்துக்கள் வேறு வண்ணத்தில் அலங்காரமாகப் பொறிக்கப்பட்டிருந்தன. மறுநாள் தாம் செய்ய வேண்டியவற்றை எல்லாம் இந்தப் புத்தகத்தில் குறித்துக்கொள்வது பேராசிரியரின் வழக்கம். எழுதப்பட்ட பக்கங்களை நான் மளமளவென்று புரட்டினேன். கடைசிக் குறிப்பு டிசம்பர் பதினோராம் தேதிக்கு உரியது. "அப்படியானால் இன்று டிசம்பர் பதினோராம் தேதி, குறிப்பு நேற்று எழுதப்பட்டிருக்கிறது" என்று முடிவு செய்தேன். ஏனெனில் குறிப்பில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

"1. அஸ்தாங்கவா விஷயமாக நிக்கொலாய் அந்திரேயெவிச்சுக்கு போன் செய்யவேண்டும்.

2. 11.30 - 13.20 - மூன்றாம் ஆண்டு மாணவர்களுக்கு விரிவுரை.

3. 14.00 - தேர்வுக் குழு.

4. 17.00 - ஆராய்ச்சி மாணவர்கள்."

ஆம், இன்று டிசம்பர் பதினோராம் தேதி... ஏழு மாதங்களுக்கு மேல்...

அப்போது ஓர் அருமையான எண்ணம் எனக்கு உதித்தது. யாரேனும் அறைக்குள் வந்து நிற்கிறார்களா என்று நோட்டமிட்டுவிட்டு, குறிப்புப் புத்தகத்தைச் சட்டென எடுத்துப் பைக்குள் வைத்துக்கொண்டு படிப்பறைக்கு வெளியே ஓடினேன்.

இரசாயனப் பிரிவில் பரீட்சை கெடுபிடி பலமாயிருந்தது. எல்லோரும் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்கள், அவசரப்பட்டார்கள், பதற்றம் அடைந்தார்கள். பரீட்சை தேறிய அதிர்ஷ்டசாலிகளின் கூட்டம் கலகலவென நகைத்தவாறு மாடிப்

படியில் உருண்டோடியது. வாயில்காப்பு மாதுகள் கூடப் பொதுவான மனநிலைக்கு ஆட்பட்டிருந்தார்கள்.

அவர்களில் ஒருத்தி கம்பளி நூல் பந்தைப் பிரித்துச் சுற்றிக் கொண்டே சொன்னாள்: "படிக்கிறவன்தான் பரீட்சை தேற முடியும். என் மகள் மாணவர்களின் மூடநம்பிக்கைப்படி ராத்திரி புத்தகங்களைத் தலையணைக்கு அடியில் வைத்துக் கொள்கிறாள். ஜோட்டில் ஐந்து கோபெக் நாணயத்தைப் போட்டுக் கொள்கிறாள். ஆனாலும் படிக்கவில்லையானால், ஒன்றும் பலிப்பதில்லை..."

எனக்கு எதிரே லிஃப்ட் கதவுகள் சீறல் ஒலியுடன் திறந்து கொண்டன. அப்போதும் என்ன செய்வது என்று நிதானிக்கவே என்னால் முடியவில்லை. கதவுகள் ஓசையுடன் மூடிக்கொண்டன. அழைப்பு மணி ஒலித்தது. எங்கோ மேலிருந்து வந்த அழைப்பை ஏற்று லிஃப்ட் என்னை விட்டுவிட்டுச் சென்றது. வேலை நாள் தொடங்கும்வரை காத்திருந்து அவனுக்கு போன் செய்வது எனத் தீர்மானித்தேன். இல்லாவிட்டால் இரசாயனப் பிரிவுக்கோ வேறு எங்கேனுமோ போய்விடுவானே.

தானியங்கித் தொலைபேசியில் நான் புகுத்திய நாணம் கிணிங்கென்று ஒலித்து அதன் எஃகுத் தொண்டையில் விழுந்தது. ஒரு பெண்ணின் சரசக் குரல் "ஹலோ-உ" என்று இனிமையாக இசைத்தது.

"அன்பு வணக்கம், ராயாக் கண்ணே. நான்தான் வீக்தர் பேசுகிறேன்" என்ற வழக்கமான சொற்கள் என் வாயிலிருந்து கிளம்பப் பார்த்தன. சட்டென அவற்றை விழுங்கிவிட்டேன்.

"ஹலோ-உ?"

"வீக்தர் அர்க்காதியெவிச்சை அழையுங்கள், தயை செய்து" என்று உலர்ந்த உதடுகளை நக்கிவிட்டுச் சொன்னேன்.

மறுபக்கம் தொலைபேசிக் குழாய் எழுது மேஜையின் கண்ணாடி மேல் வைக்கப்பட்டது. அந்த இடத்துக்கே உரிய ஒலி என் காதில் பட்டது. அவர்கள் தொலைபேசிக் குழாயை வைக்கும் இடம் எனக்குத் தெரிந்ததுதானே. நிசப்தமாயிருந்தது. தொலைவு காரணமாக அமுங்கிய பேச்சுக் குரல்கள் சற்றைக்கு ஒரு தரம் கேட்டன. இதோ காலடிச் சத்தம். யாரோ ஆடவன் அகல அடிவைத்து உறுதியாக நடந்து வந்தான். அவனது



அடிவைப்பு இத்தகையது என்று அறிந்து எனக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆடவனது பூட்சுடன் அனேகமாக இணைந்து ஒலித்தன பெண்ணின் கூரிய பூட்சுக் குதிகள். நான் காதைக் கூராக்கிக் கொண்டேன்.

"வீக்தர் அர்க்காதியெவிச், நீங்கள் இங்கே இருக்கிறீர்கள் என்று நான் அறிந்திராவிட்டால் நீங்கள்தாம் கிண்டல் செய்கிறீர்கள் என்றே நினைத்திருப்பேன். அப்படியே உங்கள் குரல்!" என்று ராயா சொன்னது எங்கோ தொலைவில், வேற்று உலகிலிருந்து கேட்டது.

"ஹலோ, வீக்தர் அர்க்காதியெவிச் பேசுகிறேன்" என்றது ஆண் குரல்.

அப்படிப் போடடா என்றானாம்!

அவனுடைய குரல் எனக்குப் பழக்கம் அற்றதாக, பிடிக்காததாக இருந்தது. என் சொந்தக் குரல் டேப் ரெக்கார்டரில் எப்படி ஒலிக்கிறது என்பதை நினைவுபடுத்திக்கொண்டு அமைதி அடைந்தேன். சொந்தக் குரலை அடையாளம் காண்பது கடினம். அதற்கு நீண்ட காலம் பழக வேண்டும்.

ஆழ்ந்து அமைதியாக மூச்சுவிட முயன்றவாறு நான் பேசினேன்: "வீக்தர் அர்க்காதியெவிச், என் பேச்சில் குறுக்கிடாதீர்கள், சுருக்கமாகப் பதில் சொல்ல முயற்சி செய்யுங்கள். முக்கியமாக, வியப்போ குழப்பமோ அடையாதீர்கள்.. எனக்கு மிகவும் அவசியமான வேலை இருக்கிறது. உங்களையும் என்னையும் தவிர வேறு எவனும் இதைப்பற்றி அறியக் கூடாது. நான் சொல்வது உங்களுக்குப் புரிகிறதா?"

"இல்லை. பேசுவது யார்?"

"கால ஏவரைக்கு எதிராக நுண் தொகுப்பின் இயக்கம் பற்றிச் சோதனை நடத்த நீங்கள் திட்டமிட்டிருக்கிறீர்கள் அல்லவா, வீக்தர் அர்க்காதியெவிச்?" - நான் எல்லாவற்றையும் பணயம் வைத்துவிட்டேன்.

"பேசுவது யார்?"

"தயை செய்து பதற்றப்படாதீர்கள். நாம் சந்திக்க வேண்டும். அப்போது நீங்கள் எல்லாவற்றையும் புரிந்து கொள்வீர்கள். நானே எல்லாவற்றையும் உங்களுக்கு விளக்குகிறேன்..."

நான் மிரட்டிப் பணம் பறிப்பவன் அல்லது உளவாளி என்று

அவன் நினைத்தான் போலிருக்கிறது.

"உங்கள் பெயரை ஏன் சொல்லமாட்டேன் என்கிறீர்கள்?" - அவன் குரலில் மறைக்கமுடியாத எரிச்சல் பீறிட்டது.

"உங்களுக்கு என்னைத் தெரியாது. அறவே தெரியாது! உங்கள் திட்டங்களைப்பற்றி நான் தற்செயலாக அறிந்தேன். முற்றிலும் தற்செயலாக. நீங்கள் ஆராயும் பிரச்சினை பற்றியே நானும் ஆராய்ச்சி நடத்திவருகிறேன். ஆனால்.. நான் விபத்தில் மாட்டிக் கொண்டுவிட்டேன். எனக்குத் தோல்வி ஏற்பட்டுவிட்டது. உங்கள் உதவி எனக்குத் தேவை."

தொலைபேசிக் குழாயில் மூச்சு முன்னிலும் அடிக்கடி விடுவது கேட்டது. நான் உள்ளூரக் கும்மாளம் போட்டேன். மீன் இரையைக் கவ்விவிட்டது என்று தெரிந்தது. நான் நிச்சயமாகப் பாதிப்பு விளைவித்துவிட்டேன். நான்தான் அவனை அறிந்திருந்தேனே, ஒருவன்... தன்னையே எப்படி அறிய முடியுமோ அப்படி.

"இதெல்லாம் ஓரளவு விசித்திரமானது என்று உங்களுக்குப் படவில்லையா?" என்று முடிவில் கேட்டான் அவன்.

"கொஞ்சங்கூட இல்லை. எல்லாம் முற்றிலும் முறையானதே. நான் உங்களிடம் வேண்டுவது சந்திப்பு மட்டுமே. வேறு எதுவும் அல்ல. நீங்கள் கன்னிப் பெண்ணாக இருந்தால் நமது உரையாடல் இயற்கைக்குப் பொருத்தமாக இருக்கும்: அவன் வேண்டுகிறான், அவள் முகத்தைக் கோணிக்கொள்கிறாள்... நீங்களோ, கன்னிப் பெண் அல்ல. என் வேண்டுகோளை மறுக்க உங்களால் முடியாது. உங்களுக்கு அந்த உரிமை கிடையாது!"

"ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?"

இம்மாதிரி அசட்டுக் கேள்வியை நான் அவனிடம் எதிர்பார்க்கவில்லை.

"ஏன் அப்படி நினைக்கிறேனா? ஏனென்றால், 'தன்னை அறிந்தது போன்றே அவளை அறிந்தேன், முன்பு காதல் பொங்க எதிர்நோக்கியிருந்தேன்' என்பதால்தான். இங்கே நான் 'அவளை' என்று குறிப்பிடுவது உங்களைத்தான்!"

"நல்லது! உங்களுக்கு எங்கு சௌகரியமோ அங்கு சந்திப்போம்... நாம் ஒருவரை ஒருவர் அடையாளம் கண்டுகொள்வது எப்படி?"



"ஓ, கவலைப்படாதீர்கள்! எந்தக் கூட்டத்திலும் சந்தித்த கணத்திலேயே நாம் ஒருவரை ஒருவர் அடையாளம் தெரிந்து கொள்வோம்."

நான் சட்டென்று பேச்சை நிறுத்திவிட்டேன். மிகை விளையாட்டினால் பயன் இல்லை. அவனுக்கு இது பிடிக்காது. ஆனால் இப்போது நேரம் கடந்துவிட்டது.

"நீங்கள் சொல்வதன் உட்பொருள் என்ன?" - மறுபடியும் அவனது குரலில் நம்பிக்கையின்மை தொனித்தது.

"எழில் நீல மாலை ஒன்று,
தன்னை நிலைவுறுத்தும்,
வழிச் செல விடாது, தன்னை
மறக்கவே விடாது.
இவ்வாறே கற்குழியில்
பாடுபடும் அடிமை
செல்வழியைக் குறுக்கிவிடும்
கால்விலங்கத் தளைதான்."

அவன் மாணவனாய் இருக்கும்போதே எழுதிய, ஒருபோதும் யாருக்கும் காட்டாத செய்யுளின் இந்த வரிகளை நான் ஒப்பித்தேன்.

தொலைபேசிக் குழாய் மௌனமாய் இருந்தது.

"ஊம், எங்கே, எத்தனை மணிக்கு?" என்று கடைசியில் கேட்டான் அவன்.

அருமையான ஆள்! அவன் இவ்வளவு அருமையான ஆள் என்று எனக்குத் தெரியவே தெரியாது. இப்போது அவன் மிகவும் பதற்றம் அடைந்திருக்கிறான். இதை நான் அறிவேன். ஆயினும் எவ்வளவு அமைதியான குரல்! உணர்ச்சிக் கொந்தளிப்பே இல்லாதது!

"சாயங்காலம் உங்களுக்கு ஒழிவு இருக்குமா?"

"ஏழு மணி வரை மட்டும்."

எங்கே போகப்போகிறான்?... ஏதேனும் முக்கிய விஷயமாய் இருக்கும். இல்லாவிட்டால் எனக்காக எல்லா வேலைகளையும் அப்படியே போட்டுவிட்டு வந்துவிடுவான். எனக்குத்தான்

தெரியுமே! விஷயங்களை அறிவதில் அவனுக்கு உள்ள ஆர்வம் எல்லை மீறியது.

"வேலை முடிந்ததுமே சந்தித்தாலோ? உங்கள் வீட்டில்... தாயார் எங்கேனும் போகப் போகிறார்களா?"

"உங்கள் தாயார்" என்று சொல்ல விரும்பினேன், ஆனால் வாய் வரவில்லை. எனவே வெறுமே "தாயார்" என்று மட்டுமே சொன்னேன்.

"ஐந்து மணிக்கு வாருங்கள். நான் வசிக்கும் இடம் உங்களுக்குத் தெரியும் என்று நம்புகிறேன்."

"ஆம், தெரியும்"

"எதனாலோ நான் அப்படித்தான் நினைத்தேன். அப்போது, ஐந்து மணிக்கா?"

"ஆம், ஐந்து மணிக்கு. நன்றி. விரைவில் சந்திப்போம். நீங்கள் பலே பேர்வழி!"

அவனும் நானும் இருவருமே இன்னும் சுயநிதானத்துக்கு வர இயலாதிருந்தோம். நான் என் இருப்பிடத்தைப் பார்த்தேன். ஒவ்வொரு சாமானையும் கவனமாக நோட்டமிட்டேன். சுவர்க் காகிதம், நான் தீட்டிய ஓவியங்கள், என்னுடைய புத்தகங்கள், என் நண்பன் செதுக்கிய சிற்பம், எல்லாமே எனக்கு அக்கறைக்கு உரியவையாகப் பட்டன. அம்மாவின் தையல் இயந்திரம் பூவேலை செய்த துணியால் மூடப்பட்டிருந்தது. தொலைக்காட்சிப் பெட்டி மீது அதன் காட்சித்திரையை மயிர் அடர்ந்த வாலால் மூடியவாறு படுத்துக் கிடந்தது என் கிழட்டுச் செம்பழுப்புப் பூனை. இவற்றை எல்லாம் ஏதோ மிகப் பெரிய அற்புதத்தைப் போல நான் வியந்து நோக்கினேன். இங்கே எவ்வித மாற்றமும் எனக்குத் தென்படவில்லை. நான் இந்த வீட்டிலிருந்து நேற்றுதான் வெளியேறினேன் என்பதனாலோ ஒருவேளை? ஆனால் நான் இன்று வந்திருக்கும் இந்த வீட்டைவிட நேற்று நான் வெளியேறியபோது இது ஏழு மாதங்கள் முதிர்ந்ததாக இருந்ததே!

என் இருப்பிடத்தைவிட அதிகமாக வேறு எதுவும் எனக்கு வியப்பூட்டவில்லை. இதில் அவன் இருந்ததே ஒருவேளை இதன் காரணம் போலும். நான் "அவன்" என்று சொல்லுகிறேன் - அவன் ஏதோ என்னிலிருந்து வேறான மனிதன்போல.... ஆனால்



மெய்யாகவே அவன் என்னிலிருந்து தனியான மற்றொருவன் தானே! எங்கள் இருவரில் அதிக எதார்த்தமானவன், தனக்கு உரிய இடத்தில் இருப்பவன் யார்? அவனா, நானா?

அவன் வேதனைப்படுபவன்போல முறுவலித்து, "நீங்களும் நானும் இப்போது ஒரே விஷயத்தைப் பற்றியே சிந்திக்கிறோம் போலும்" என்றான்.

"ஆம், அது சாத்தியமே... இருக்கட்டும், நாம் ஒருவரை ஒருவர் மரியாதைப் பன்மையில் "நீங்கள்" என்று அழைப்பானேன்? பார்க்கப் போனால் நாம்... எப்படியும் இரட்டைப் பிள்ளைகளை விட நெருங்கியவர்கள் ஆயிற்றே."

"ஆமாம், நாசமாய்ப் போக! இதை எப்படிச் சொல்வது என்று தீர்மானிக்க என்னால் முடியவில்லை... தொண்டையில் இருக்கிறது, வெளியே வரமாட்டேன் என்கிறது! ஒரு நிமிடம்... நீங்களும் நானும்... நீயும் நானும் காலத்தில் இயங்கும் நிலைமையில் ஒரே ஆள்தாம். ஆனால் ஒரே சமயத்தில் நாம் வெவ்வேறாகப் பிரிந்தே நிலவ முடியும்! இதன் உட்பொருள் விளங்குகிறதா உனக்கு?"

"இதை நீ எனக்குச் சொல்லுகிறாயோ? முட்டைகள் கோழிக்குப் பாடம் கற்றுத்தர முயல்கின்றனவோ?"

"த்ஸொ-த்ஸொ-த்ஸொ! ஆத்திரப்படுகிறாய் போல் இருக்கிறதே?" - அவன் விழிகளில் குதூகலம் தாண்டவமாடிற்று. "கடந்த காலத்துக்குப் பெயர்ந்து செல்லும் கருத்தைச் செப்பமாக வெளியிட்டவன் நான். நீ அதைச் செயல்படுத்தினாய், அவ்வளவுதான்."

இந்தத் துடுக்குப் பேச்சைக் கேட்டு நான் உட்கார்ந்துவிட்டேன். ஆனால் சிந்தித்தபின் அவன் நினைப்பதில் ஓரளவு தர்க்கப் பொருத்தம் இருப்பதைக் கண்டுகொண்டேன். தவிர, அவனுடைய ஆயுதத்தையே அவனுக்கு எதிராக எப்படிப் பிரயோகிப்பது என்பதும் என் மூளையில் பட்டுவிட்டது. அவன் இன்னும் ஏதோ சொல்ல வாயெடுத்தான். ஆனால் நான் முந்திக்கொண்டேன்.

"நிறுத்து, அப்பனே! நிறுத்து! இப்படிச் செய்வது சரியல்ல" - பேசவிடாதவாறு அவன் வாயை இம்மாதிரி அடைத்துவிட்டு நான் சொன்னேன்: "அவரவர் முறைப்படி சுடவேண்டும். நீ சுட்டாய், நான் ஏற்றுக்கொண்டேன். உன் குண்டு என் பதவிச் சின்னத்தைப் பிய்த்துவிட்டது என்று வைத்துக்கொள்வோம். இப்போது என் முறை. சுயமோகம் கொண்ட சிறுவா, கடந்த

காலத்துக்குப் பெயர்ந்து செல்லும் கருத்து உன்னுடையது அல்ல என்பது தெரியவில்லையா உனக்கு? ஆம், ஆம், கைகளை உதறாதே உன் மறுப்பைத் தடையின்றி ஏற்றுக்கொள்கிறேன். இந்தக் கருத்து என்னுடையது அல்ல, ஒப்புக்கொள்கிறேன். ஆனால் உன்னுடையதும் அல்லவே! இந்தக் கருத்து எவன் மூளையில் உதித்ததோ அவன் உன்னைவிட ஓர் ஆண்டு இளையவன், எனக்குப் பத்தொன்பது மாதங்கள் சிறியவன்... என்ன, இலக்கில் தைத்துவிட்டதா? நான் வென்றுவிட்டேன். நீ கொல்லப் பட்டுவிட்டாய், அப்பனே. ஆண்டவா, இவனுடைய ஆன்மாவை ஏற்றுக்கொள். நல்லவன் பாவம்."

அவன் கலகலவெனச் சிரித்தான். பலே பேர்வழி அவன், இல்லையா? நான் அவன்மேல் காதல் கொண்டுவிட்டேன். ஆகா, எப்போதும் இப்படியே இருவராக இருக்க முடிந்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்! சகோதரன் வேண்டும் என்று நான் எவ்வளவு ஆசைப்பட்டேன்! ஆனால் இவன் என் சகோதரன் அல்ல...

"முதுமை உன்னை இன்னும் நலிவடையச் செய்துவிடவில்லை. அறிவுக்கூர்மை இருக்கிறது!" என்று என் தோளைத் தட்டிக் கொடுத்தான். "அற்புதமான கருத்து! அதை மேற்கொண்டு விரிவுபடுத்துவது நல்லதே... பொறி எங்கே இருக்கிறது?"

"கல்லூரிப் பிரிவு ஹாலில். ஏன்?"

"வினாடியில் நூற்றில் நான்கு பங்கு எதிர்த்தகவுக் கோணம் உள்ளதாக நான் அதைச் சிந்தனை செய்தேன். நீ அதை எப்படி நிறுவினாய்?"

"என்னுடைய, அதாவது உன்னுடைய கணக்கீட்டில் பிழை நேர்ந்துவிட்டது. நிர்ணயமின்மை - வரம்பிலியை வரம்பிலியால் பெருக்கிய தொகை - முற்றிலும் துல்லியமாக வெளிப்படுத்தப் படவில்லை!"

"ஏன் துல்லியமாக இல்லை? லோப்பித்தால் விதிப்படி!"

"இந்த விதி இங்கே பொருந்தாது. நான் ஃபெர்ஷ்த்மானின் முறையைப் பயன்படுத்தினேன். கோணம் வினாடியின் ஆயிரத்தில் ஐம்பத்திரண்டு பங்கு வந்தது."

"ஆனால் இது பிரமாதம் இல்லையே... ஒரு மனிதனுக்கு மட்டுமே உரிய பொறி. வருந்தத்தக்க விஷயம்!"

"எது வருந்தத்தக்க விஷயம்?"



"நாம் இருவரும் சேர்ந்தாற்போல ஓர் ஆண்டு பின் செல்ல முடிந்தால்.. எனக்கு, அதாவது அவனுக்கு இன்னும் சரியாய்ச் சொன்னால், நம் மூவருக்கும், இந்தக் கருத்து உதித்த கணத்தை அடைந்திருப்போம்! எப்படி?"

"அருமை! அற்புதமான எண்ணம்! நாம் மூவர் ஆக முடிந்தால்!"

"திரிமூர்த்தி போல! ஒரே நபரில் மூன்று பெயர்!"

"உன்னோடு வேலை செய்வது மோசமாயில்லை!" - நான் ஆர்வத்துடன் அவன் முகத்தை நுணுகி ஆராய்ந்து, காலத்தின் போக்கால் எனக்கு நேர்ந்த அழிக்கமுடியாத மாற்றங்களைக் கண்டறிய முயன்றேன்.

"உன்னுடன் வேலை செய்வதும் நன்றாய்த்தான் இருக்கிறது" - அவன் குரலில் மென்மையை நான் உணர்ந்தேன். அவனும் வைத்த கண் வாங்காமல் என்னைப் பார்வையிட்டான். சகஜம்தானே! இன்னும் ஏழு மாதங்களில் அவன் என் மாதிரி ஆக வேண்டியிருந்ததே. எப்படி ஆவோம் என்று தெரிந்துகொள்ள யாருக்குத்தான் ஆவல் உண்டாகாது?...

நாங்கள் பேசாதிருந்தோம். இந்தச் சந்திப்பு எனக்கு இவ்வளவு அதிர்ச்சி ஏற்படுத்தும் என்று நான் எண்ணவே இல்லை. எல்லாம் முற்றிலும் வேறுவிதமாக இருக்கும் என நினைத்திருந்தேன். நான் வருங்காலத்தின் ஒளி திகழும் தூதுவனாக, மூதறிவும் ஒளிர்வும் வாய்ந்தவனாக விளங்குவேன் என்று எனக்குத் தோன்றியது. நான் கற்பிப்பேன், அறிவுரை பகர்வேன், "அவன்" ஆகாகா என்று மெச்சிப் பாராட்டுவான், கண்ணை உருட்டி விழிப்பான், மூர்ச்சைபோட்டு விழுவான் என்று எண்ணியிருந்தேன். அவனோ பலே ஆளாய் இருக்கிறான்! இது சகஜந்தான், இயல்பானதுதான். எதார்த்தம் எப்போதும் போலவே எளிதாகவும் யாவற்றிலும் திகைப்பூட்டுவதாகவும் இருந்தது. மூதறிவாளி, இயற்கை அன்னை மூதறிவாளி! நமது அனுமானங்கள் அவளுக்கு ஒரு பொருட்டாகுமா?

"கேள், அப்பனே, நாம் சாப்பிட வேண்டாமா?" - அவன் முதலில் மௌனத்தைக் கலைத்தான்.

"இவ்வளவு நேரத்துக்குப் பின் இப்போதுதான் அறிவார்ந்த சொற்களை உன்னிடம் கேட்கிறேன். இன்றைக்கு உங்கள் வீட்டில் என்ன சமைத்திருக்கிறார்கள்?"

"மாவும் வெங்காயமும் வறுத்துத் தாளித்த தட்டைப் பயறு சூப். கறிவடையை நெய்யில் லேசாக வதக்குகிறேன் - ஒரு பக்கம் மூன்று நிமிடங்களும் மறுபக்கம் மூன்று நிமிடங்களும். உன் ருசி மாறிவிடவில்லை என்று நம்புகிறேன்."

எதையோ நினைவு கூர்ந்தவனாக அவன் மௌனத்தில் ஆழ்ந்தான்.

வாயில் ஊறிய நீரை விழுங்கினேன். எனக்கு அசுரப்பசி எடுத்து விட்டது.

"ஆமாம்! உலர் பழங்களை வேகவைத்த சாறு இருக்கிறது. கடற்சீப்பும் ஒரு டின் வாங்கியிருக்கிறேன்" என்று தொடர்ந்தான் அவன்.

"கடற்சீப்புத் தசையா? எந்தச் சாற்றில் இட்டது?" என்று கூவினேன்.

"சதகுப்பைச் சாற்றில்" என்று சிறிது வியப்புடன் அவன் பதிலளித்தான்.

"இந்த டின்னை இதற்கு முன் எப்போதாவது நீ வாங்கியது உண்டா?"

"இல்லை. இன்றுதான் முதல் தடவையாகப் பல்கலைக் கழகத்தில் வாங்கினேன், ருசி பார்ப்பதற்காக, ஏன்?"

"சும்மாதான்..."

நான் முதல் தடவை இந்த டின் வாங்கிய நாளை நினைவு படுத்திக்கொண்டேன். நான் அதை வீட்டுக்குக் கொண்டு வந்தேன். இப்போதுபோலவே அம்மா எங்கோ போயிருந்தாள். நான் தனியே சாப்பிட்டேன். காதலியைச் சந்திக்கப் போகும் அவசரத்தில் டின்னை ஒரு கையில் பிடித்தவாறு கத்தியால் அழுத்தித் திறந்தேன். கத்தி வழுகிவிட்டது, டின் நழுவி விழுந்தது, வெள்ளை சதகுப்பைச் சாறு என் காற்சட்டையில் கொட்டிவிட்டது.

நான் அவனுடைய காற்சட்டையை ஓரக் கண்ணால் பார்த்தேன். அது புதியதுபோல் இருந்தது. கச்சிதமாகப் பெட்டி போடப்பட்டிருந்தது. என் காற்சட்டையோ, இந்த ஏழு மாதங் களில் கொஞ்சம் பழசாகிவிட்டது. இடது முழங்காலுக்கு மேல் கொட்டிவிட்ட சாற்றின் மங்கலான கறை கூர்ந்து பார்த்தால் தெரிந்தது.



"பரவாயில்லை. இப்போது இவன் காற்சட்டையிலும் ஒரே மாதிரிக் கறை ஏற்படும். இவனும் டின்னைக் கையில் பிடித்த படியே திறக்கப் போகிறான் போலிருக்கிறது" என்று வைரம் நிறைந்த களிப்புடன் நினைத்தேன்.

உடனேயே எனக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. மனிதகுல வரலாற்றில் செயலூக்கத்துடன் குறுக்கிட்டு ஏதேனும் ஒரு வகையில் அதைச் சீர்படுத்துவது பயனுள்ளதாயிருக்குமோ ஒரு வேளை? ஆனால் நிதானமாகச் சீர்தூக்கிப் பார்த்தபின் இது தேவை இல்லை என்ற முடிவுக்கு வந்தேன். இது மிகமிகப் பொறுப்பற்ற செயலாக இருக்கும். விஞ்ஞானக் கற்பனைக் கதை களில் மட்டுமே அனுமதிக்கத் தக்கது இது. ஒரு நிகழ்ச்சிப் போக்கில் குறுக்கிடுவதன் விளைவு என்ன ஆகும் என்று தெரியாதிருக்கையில் அதில் குறுக்கிடுவது கூடாது.

இந்தத் துப்புரவாளனின் காற்சட்டையில் கறை நன்றாகப் படட்டும்!

"சீ! அட சனியனே!" என்று முழங்கால் மீது நழுவி விழுந்த டின்னை லாவிப்பிடித்தவாறு கிசுகிசுத்தான் அவன். நண்டு இறைச்சியின் மணம் உள்ள கடற்சீப்பின் மென்மையான தசை இருந்தது அந்த டின்னில்.

நானும் அப்போது இப்படித்தான் திட்டினேன் போலிருக்கிறது.

தொலைக்காட்சிப் பெட்டிமேல் படுத்திருந்த பூனை இடது கண்ணைத் திறந்தது! நாய்கள் இல்லை என்று கண்டு கொண்டதும் மறுபடியும் அதைச் சுருக்கிக் கொண்டது.

நாங்கள் கடற்சீப்பை ருசி பார்க்கவே செய்தோம். தன் பங்கை அவன் சூப்புக்கு முன்பே தின்றுவிட்டான். நானோ, கறிவடையை ஹதம் செய்த பிறகு பக்க வெஞ்சனத்தோடு அதைச் சுவைத்துச் சாப்பிட்டேன். பிறகு படுக்கையாக மாற்றக்கூடிய நீள் சோபாவைப் பரப்பி, பூட்சுகளைக் கழற்றாமலே அதன் அகலவாட்டில் படுத்து, இன்பமாகப் புகை குடித்தோம். எங்கள் வழக்கங்கள் ஒரே மாதிரி இருந்தன. நான் மாறவில்லை என்று தெரிந்தது.

நான் சுவையில் திளைத்தவாறு புகை வளையங்களை விட்டேன். நாங்கள் பேசவில்லை. அவன் கடிகாரத்தைக் கீழ்நோக்காகச் சில தடவைகள் பார்வையிட்டதை நான் கவனித்தேன்.

"உனக்கு ஏழு மணிவரைதான் ஒழிவு இருப்பதாகச் சொன்னாயே. எங்கே போகிறாய்? இரகசியம் இல்லை என்றால் சொல்லு."

"இரகசியமா? உன்னிடமா?"

"நினைவாற்றலை நீ கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை. மறப்பது மனிதனின் இயல்பு. மறந்துவிடுவதும் அறியாதிருப்பதும் ஒன்றுதானே. எனவே, இரகசியம் என்றால்..."

"அர்த்தமற்ற பேச்சு! நான் ஈராவைச் சந்திக்கப் போகிறேன். கலூழ்ஸ்க்காயாச் சதுக்கத்தில், தானியங்கித் தொலைபேசியின் அருகே."

"ஈராவையா?"

"உனக்கு அவளைத் தெரியாதா என்ன? இதுவும் தனி வேடிக்கையாகத்தான் இருக்கும்... ஊம், அவள் எப்படியிருக்கிறாள்... வருங்காலத்தில்? அவள் அழகு குறைந்து விடவில்லையே? அல்லது நீயும் அவளும்?..."

அவனுடைய செயற்கையான கேலிப் பேச்சில் உள்ளார்ந்த பதற்றத்தை உணர முடிந்தது. அன்று என்ன கிழமை என்பதை முடிவாக நான் நினைவுபடுத்திக் கொள்ள அதுவே உதவியது.

டிசம்பர் பதினொன்று என்ற தேதிச் சுருக்கமும் நெஞ்சின் நினைவில் துயர்தரும் எண்ணங்களை நிறைத்தது.

அப்போது நான் தானியங்கித் தொலைபேசியின் அருகே ஈராவை எதிர்பார்த்திருந்தேன். ஆட்கள் தொலைபேசி அறைக்குள் போவதும் வெளிவருவதுமாக இருந்தார்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் சந்திப்பதற்கு இடமும் நேரமும் தீர்மானித்துக் கொண்டார்கள், சிரித்தார்கள், நைச்சியமாக இணங்கச் செய்தார்கள், மன்றாடி வேண்டிக் கொண்டார்கள். மூச்சுடன் வெளிப்பட்ட நீராவி, தெரு விளக்கொளி ஊடுருவியதால் இளஞ் சிவப்பாகவும், ஓரளவு பலநிறச் சாயல்கள் உள்ளதாகவும் இருந்தது. கடிகாரத்தின் எண்வட்டம் பெரிய அம்பர் நிறக் கண்ணால் இமைப்பின்றி என்னை நோக்கியது. ஈரா மூன்று நிமிடங்கள் நேரம் தாழ்த்துவிட்டாள். நிமிட முள் வெகுநேரம் அசையாது இருந்துவிட்டு, திடீரெனத் துள்ளி நகர்ந்தது. என் இதயத்திலும் ஏதோ ஒன்று அதற்கு இசையத் துள்ளி நகர்ந்தது.

அவள் தெருவைக் குறுக்காகக் கடந்தபோது தொலைவிலேயே



நான் கண்டுகொண்டேன். அவள் அவசரமாக விரைந்தாள். அவளுடைய மென்மயிர்த்தோல் பூட்சுகளைச் சுற்றிலும் சிறு வெண்பனிச் சூறாவளிகள் சுழன்றடித்தன. அவளுடைய விழிகளில் ஒளி சுடர்ந்தது. ஆனால் அந்த ஒளியை நான் நம்ப வில்லை. மேல்கோட்டின் நரித்தோல் காலர்மீது படிந்த வெண்பனித் துகள் போன்று உறைந்திருந்தன அவளுடைய உணர்ச்சிகள். அவள் உள்ளக் கிளர்ச்சி அற்றவள், நெடிய மேனியள், மிக அழகானவள்.

எட்டாத் தொலைவில் இருந்தாள் அவள், எட்டாத் தொலைவில்.

இதுதான் அவளிடம் எல்லாவற்றையும் சொல்லித் தீர்த்துவிடும் படி என்னைத் தூண்டியது. அவளுக்கு என்மேல் காதல் இல்லை என்பதை நான் உணர்ந்தேன். ஆயினும் அதை நம்ப எனக்கு விருப்பமில்லை, என்னால் முடியவில்லை. இந்த உணர்வை உள்ளத்திலிருந்து அகற்றினேன். நிகழ்ச்சிகளை விரைவு படுத்தினேன். அவளுக்கு என்னைப் பிடித்திருந்தது, என்மேல் சலிப்பு ஏற்படவில்லை. அப்படியே தொடர்ந்திருக்க வேண்டும் - கேலிப் பேச்சுக்கள் பேசுவதும் காதலால் வெளிறாது இருப்பதுமாக. அவள்பால் நான் உணர்ச்சியற்றவனாக, அசட்டையாக நடந்துகொண்டிருந்தால் என்ன நேர்ந்திருக்குமோ தெரியாது. எல்லோரும் தனக்குத் தலை வணங்குவது அவளுக்குப் பழக்கமாகியிருந்தது. வெற்றிக்குப் பின் வெற்றியாக அவள் பவனி வந்து கொண்டிருந்தாள் - வெறும் ஆவலால் உந்தப்பட்டவளாக, எதார்த்த விழிப்பு ஏற்படாதவளாக.

அவள் விரும்பியதோ, ஆணை செலுத்துவதை அல்ல, மற்றவனது அதிகாரத்தை உணர்வதை, மற்றவனது அமைதிக்கும் நம்பிக்கை நிறைந்த வலிமைக்கும் முன் மென்மையான கீழ்ப்படிவை அனுபவிக்கவே அவள் ஆசைப்பட்டாள்.

எனக்கு இது புரிந்தது. ஆனால் எதுவும் செய்ய இயலவில்லை. நான் காதல் வயப்பட்டிருந்தேன். எனவே ஆயுதமற்றவனாக இருந்தேன். அவளால் வெற்றி கொள்ளாமல் இருக்க முடிய வில்லை. இது சமபலம் அற்றவர்களிடையே நடந்த போர்.

அன்றைய தினம் என் இறுதித் தோல்வி ஏற்பட்ட நாள்.

நான் அவளிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டேன்.

அவள் எனக்கு என்ன பதில் கூறியிருக்க முடியும்? என்ன

யோசனை சொல்லியிருக்க முடியும்?

நட்பா?

வெற்றியாளி முன் முடிதாழ்த்து அவளுக்கு அடிமை ஆகிவிடும் வகையைச் சேர்ந்தவன் அல்ல நான் என்பதை அவள் புரிந்து கொண்டாள். நிராகரிக்கப்பட்டுத் தனக்காக ஏங்கிப் பெருமூச்சு விடும் வழிபாட்டாளனாக என்னைத் தன் அருகே வைத்திருக்க ஒருவேளை அவள் விரும்பியிருக்கலாம். ஆனால் இது பலிக்காது என்பதை அவள் புரிந்துகொண்டாள்.

நாம் நண்பர்களாக இருக்கலாம் என்று அவள் என்னிடம் சொல்லவில்லை. என்பால் தனக்கு உள்ள உணர்ச்சிகள் "தனக்குப் புரியவில்லை" என்றும் "யோசித்துத் தெரிந்துகொள்ள" வேண்டும் என்றும் அவள் கூறவில்லை. அவள் அற்புதமாக நடந்து கொண்டாள்.

சவால் விடப்பட்டுவிட்டது, அதற்குப் பதில் சொல்லியாக வேண்டியிருந்தது. நான் அவசரப்பட்டுவிட்டது குறித்து ஒருவேளை அவள் வருந்தினால்போலும். அறியேன். அவள் சொன்னது எல்லாம் இதுதான்:

"மாட்டேன்."

"உன்னைக் காண எனக்கு எப்போதும் மகிழ்ச்சி உண்டாகும், எப்போதும்" என்றும் கூறினாள்.

கதை முடிந்தது என்று நான் புரிந்துகொண்டேன். அப்புறம் நான் அவள் வீட்டுக்குப் போகவும் இல்லை, போன் செய்யவும் இல்லை. அவளும் போன் செய்யவில்லை.

க்ரீம்ஸ்க்கிய் பாலத்தருகே நாங்கள் பிரிந்தோம்.

இப்போதும், சுமார் ஒரு மணி நேரத்தில் இதை எல்லாம் இவன் அனுபவிக்க வேண்டியிருந்தது. எல்லாவற்றையும்! அவள் ஐந்து நிமிடங்கள் நேரம் தாழ்த்து வந்ததிலிருந்து க்ரீம்ஸ்க்கிய் பாலத்தருகே "மாட்டேன்" என்று சொன்னதுவரை. அவன் மேல் உண்டான இரக்கத்தால் எனக்கு நெஞ்சு வலித்தது, கண்ணீர் வந்தது. அவன் நான்தான், ஆனால் எதையோ இன்னும் அறியாதவன், எதையோ புரிந்துகொள்ளாதவன், ஏதோ பிசகைச் செய்யாதவன் என்பதை இப்போதுதான் நான் உணர்ந்தேன். நேர இருந்த வேதனையிலிருந்து அவனைத் தப்புவிக்க, அவனுக்கு முன்னெச்சரிக்கை செய்து என் அனுபவத்தால் அவனை வலுப்படுத்த எனக்கு மிகவும் விருப்பம் உண்டாயிற்று.

அவளை, எங்கள் சந்திப்புகளுக்கு ஏற்பட்ட முடிவை இன்னும் அறியாத, முந்தைய அவளைச் சந்திக்கவும் எனக்குள் பெருத்த ஆசை கிளர்ந்து எழுந்தது. இப்போது நான் போரில் வெற்றி பெற்றிருப்பேன். எல்லாம் முற்றிலும் வேறுவிதமாக நடந்திருக்கும். பொறாமையாலும் சந்தேகத்தாலும் அவள் வேதனைப் பட்டிருப்பாள். உணர்ச்சி அற்றவன் என்று என் மீது குற்றம் சாட்டியிருப்பாள். அவள் என்னைக் காதலிக்கும்படி நான் செய்திருப்பேன்.

அல்லது இதெல்லாம் எனக்கு ஏற்பட்ட வெறும் பிரமைதானோ?

எதையும் மாற்றுவது என் வசத்தில் இல்லையோ ஒருவேளை?

"உனக்குப் பதில் நான் போகிறேனே அவளைச் சந்திக்க!"

"எதற்காக?" - அவன் முகம் கருண்டு கடுகடுப்பாகிவிட்டது.

"இன்று உனக்கு என்ன நேரவிருக்கிறது என்பதை நீ அறியாய். அவளையோ உன்னையோ நீ தெரிந்து கொள்ளவில்லை! என்னைப் போகவிடு! இன்று மட்டும்... அப்புறம் நான் மறைந்து விடுவேன். நீ எனக்கு நன்றி செலுத்துவாய். உன் விஷயத்தில் எல்லாம் வேறுவிதமாக நேரட்டும்! என் விஷயத்தில் போல நகர வேண்டாம்!"

"வேண்டாம். உனக்கு என்ன நேர்ந்தது என்று அறிய நான் விரும்பவில்லை."

"உனக்குத்தான் தெரியாதே, ஒன்றுமே தெரியாதே! இன்றையச் சந்திப்பு திருத்த முடியாத தவறு... நான் அறிவேன், உனக்குச் சொல்லுகிறேன்."

"வேண்டாம், தேவையில்லை!"

"நீ என்னைப் புரிந்துகொள்ளவில்லை. சரி, நான் உனக்குப் பதிலாகப் போகவில்லை. ஆனால் நீ வேறு விதமாக நடந்து கொள்ளவேண்டும், அப்போது நான் நடந்துகொண்டதுபோல் அல்ல. போகாமலே இருந்துவிடுவது இன்னும் மேல். அவளாகப் போன் செய்யும்வரை காத்திரு. அவள் போன் செய்வாள்."

"உன் பேச்சைக் கேட்க நான் விரும்பவில்லை! புரிகிறதா?

விரும்பவில்லை!"

"ஏன்? உன் கண்களைத் திறக்கத்தானே நான் விரும்புகிறேன். எனக்காக அல்ல, உனக்காக!"

"தேவை இல்லை!" என்று கம்மிய குரலில் கூறினான் அவன்.

அவனுடைய விழிகளை உற்று நோக்கியதும் நான் புரிந்து கொண்டேன்: காதல் நெஞ்சால் அவன் எல்லாவற்றையும் அறிந்திருந்தான், எல்லாவற்றையும் புரிந்துகொண்டிருந்தான், ஒரு காலத்தில் நான் புரிந்துகொண்டிருந்தது போலவே. அறிந்திருந்தும் நம்ப விரும்பவில்லை, ஒரு காலத்தில் நான் விரும்பாதது போலவே. எதையும் மாற்ற இயலாது இருந்தான். ஒரு காலத்தில் நான் இருந்தது போலவே. அவன் சந்திக்கப் போவான், உள்ளத்தை அவளுக்கு அப்படியே திறந்து காட்டுவான். நான் இதைப் புரிந்து கொண்டேன். ஒருகாலத்தில் நான் என்னுடனேயே கற்பனையில் இப்படி உரையாடியிருக்கிறேன். இப்போது இவன் என்னிடம் இதைப்பற்றிச் சொல்லுவான். என்ன வித்தியாசம்?

தொட்டில் பருவம் முதலே மனிதன் எல்லாவற்றையும் தானே செய்ய ஆசைப்படுகிறான். செய்யவும் சோதித்து அறியவும், தவறு புரியவும் அடிபட்ட இடங்களைத் தடவியவாறு எழுந்திருக்கவும் விரும்புகிறான். இதுவும் நல்லதே.

"அப்படியானால் நான் திரும்பிவிடுவதே தேவலையோ?"

"ஆமாம்... நாம் மறுபடி சந்திப்போமா?"

நான் கடகடவென்று சிரித்தேன்.

"நீ எப்போதும் என்னில் இருப்பாய். நானோ... நான் எப்போதும் உன்னிலிருந்து அப்பால் வழுகிச் சென்று கொண்டிருப்பேன். உன் வாழ்க்கை என் பின்னே விரட்டிக் கொண்டு வருவது ஆகும். நாம் இரு வேறு கட்டங்களில் விலகி இருக்கிறோம்."

"நீ உன் காலத்துக்குத் திரும்பியதும் நான் மறைந்துவிடுவேனோ?"

"இல்லை. நிகழ்காலம் என்ற, பிடிக்கு அகப்பட முடியாத கணத்தில் நாம் வெறுமே ஒன்று கலந்துவிடுவோம். கடந்த காலத்திலிருந்து வருங்காலத்துக்கு நேராக வழுகிச் செல்லும் புள்ளி அது. பிரிவு சொல்லிக் கொள்வோமா?"

"நான் உன்னோடு வருகிறேன். பல்கலைக்கழகம்வரை."



"நல்லது."

நான் அவனுடைய கையை விடாமல் வெகுநேரம் அவன் விழிகளை விழிபொருந்த நோக்கியவாறு இருந்தேன். நமது கடந்த காலம் நம்மையே அறிந்துகொள்ள நமக்கு உதவுகிறது. இது மிக அவசியம்.

"நல்லது, விடை கொடு" என்றேன்.

"மறு சந்திப்புவரை" என்று புன்னகை செய்தான் அவன். "நீ எப்போதும் என்னிடம் திரும்பி வருவாய். நீ மறுபடி காதல் கொள்ளும்போது நாம் கட்டாயம் சந்திப்போம்."

"மறு சந்திப்புவரை" என்று இசைந்தேன் நான்.

என்னைத் துயர் கவ்வியது. நான் குனிந்து பூந்துகள்போன்று குவிந்து கிடந்த வெண்பனியை இரு கைகளாலும் அள்ளி விரல்களால் இறுக அழுத்திப் பனிக்கட்டி உருண்டையாக உருட்டினேன். இந்த வெண்பனிப் பந்தை அவன்மேல் விளையாட்டாக எறிய நினைத்தேன். ஆனால் என் கண்கள் எதனாலோ மங்கின, நான் வெறுமே கையை ஆட்டினேன்.

அவன் மெல்ல முறுவலித்தான்.

நான் திரும்பி, கல்லூரியின் திண்ணிய கதவைத் திறந்தேன்.

நான் விழிகளைத் திறந்து பளிங்கு வளையத்தைத் தொட்டேன். ஹாலில் பார்வை செலுத்தினேன். அங்கே எதுவுமே மாறவில்லை! பேராசிரியர் வலெந்தீனவ் திறந்த வாயை இன்னும் மூடக்கூட இல்லை. பெண்ணின் அம்பர் விழிகளில் திகிலும் பாராட்டும் தென்பட்டன. பிரிவுத் தலைவர் வெளிறி, பயங்கரத் தோற்றம் அளித்தார். ஊமைக்காட்சி! இதோ ஒருவன் நெருப்பணைக்கும் படைக்குரிய எஃகுத் தலைக்காப்பும் தானுமாகக் கதவைத் திறந்து, "இன்ஸ்பெக்டர் ஜெனரல் வருகிறார்!" என்று சொல்லப் போகிறான்.

"ஊம்?" என்று கடைசியில் அமுங்கிய குரலில் கேட்டார் வலெந்தீனவ்.

நான் புரிந்துகொள்ளாமல் அவரைப் பார்த்தேன்.

"நாங்கள் காத்திருக்கிறோம்... தயை செய்து சோதனை நடத்துங்கள்" என்றார் அவர்.

"மன்னியுங்கள். நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை." என்றேன். நான் இன்னும் சுயநிதானத்துக்கு வரவில்லை. அவர் என்னிடம் விரும்புவது என்ன என்று உண்மையாகவே எனக்குப் புரியவில்லை.

"மறையப் போவதாக நீங்கள் எங்களுக்கு வாக்களித்தீர்கள்..."

அவர் புன்னகைத்தார். அவருடைய நெற்றி சுருக்கங்கள் நீங்கி மழமழப்பாயிற்று. அவர் கிளர்ச்சி அடைந்து மீண்டும் அரச விருது பெற்ற வீரரின் தோற்றத்தை மேற்கொண்டார்.

"நான் என்ன, மறைய... நான் சில மணி நேரம் இங்கு இல்லாதிருக்கவில்லையா?"

"இல்லையே!" - இவ்வாறு கத்தினாள் அந்த மங்கை.

அவளுடைய கத்தலில் உள வேதனை பொங்கித் ததும்பியது. என் பொருட்டாகவும் வேறு எதன் பொருட்டாகவுமோ ஏற்பட்ட வேதனை.

"அப்படியானால் நான் மறையவில்லையோ?"

"இல்லை!" என்று முறுவலித்தார் பேராசிரியர் வலெந்தீனவ். "அட கிண்டல் செய்தாயாக்கும், போதுமே. ஹ-ஹ-ஹா. இளங்கன்று பயம் அறியாது" என்று கூறின அவரது கண்களைச் சுற்றிக் கதிர்கள்போன்று ஓடியிருந்த சுருக்கங்கள்.

"மறையவில்லையோ?..." - நான் வளையத்தைக் கழற்றிவிட்டு விசையை நிறுத்தினேன்.

அப்புறம் நான் வலெந்தீனவின் அருகே போய், அத்ஸ்தேக்கர்களின் அலங்காரச் சித்திரம் பொறித்த மஞ்சள் குறிப்புப் புத்தகத்தை அவரிடம் நீட்டினேன். பேராசிரியரின் கைகளில் அதேபோன்ற குறிப்புப் புத்தகம் இருந்தது.

"இந்த இரண்டு புத்தகங்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள், பேராசிரியர் அவர்களே. இவை முற்றிலும் ஒரே மாதிரி இருக்க வேண்டும். வேறுபாடு ஒன்று மட்டுமே: என் கையில் இருக்கும் புத்தகத்தில் கடைசிக் குறிப்பு சென்ற ஆண்டு டிசம்பர் மாதம் பதினோராம் தேதி எழுதப்பட்டது. இப்போதோ, ஜூலை மாதம்" என்று ஜன்னல் பக்கம் சுட்டிக் காட்டினேன். அங்கே அடர்நீல வெளியில் பறந்துகொண்டிருந்தன பாப்ளார்மரப் பூந்துவிகள்.

எல்லோரும் எதனாலோ ஜன்னலுக்கு வெளியே கண்ணோட்டினார்கள். அப்போது மெய்யாகவே ஜூலைதானா, டிசம்பர் அல்லவா என்று திடீரெனச் சந்தேகிப்பவர்கள் போல.

"தவிர, இதோ!" என்று கடினமாக இறுகிய, உருகத் தொடங்கியிருந்த வெண்பனிப் பந்தைப் பையிலிருந்து எடுத்து, மேலிருந்து கீழ்வரை சூத்திரங்கள் எழுதப்பட்டிருந்த லைனோலியம் எழுது பலகைமீது திருப்தியுடன் எறிந்தேன்.

வெண்பனிப் பந்து நடுமையத்தில் தாக்கி ஒட்டிக்கொண்டது.

இப்போதும், சுமார் ஒரு மணி நேரத்தில் இதை எல்லாம் இவன் அனுபவிகக வேண்டியிருந்தது. எல்லாவற்றையும்! அவள் ஐந்து நிமிடங்கள் நேரம் தாழ்த்து வந்ததிலிருந்து க்ரீம்ஸ்க்கிய் பாலத்தருகே "மாட்டேன்" என்று சொன்னதுவரை அவன் மேல் உண்டான இரக்கத்தால் எனக்கு நெஞ்சு வலித்தது. கண்ணீர் வந்தது. அவன் நான்தான், ஆனால் எதையோ இன்னும் அறியாதவன எதையோ புரிந்துகொள்ளாதவன், ஏதோ பிசகைச் செய்யாதவன் என்பதை இப்போதுதான் நான் உணர்ந்தேன். நேர இருந்த வேதனையிலிருந்து அவனைத் தப்புவிக்க, அவனுக்கு முன்னெச்சரிக்கை செய்து என் அனுபவத்தால் அவனை வலுப்படுத்த எனக்கு மிகவும் விருப்பம் உண்டாயிற்று.

*வெண்பனிப் பந்து கதையிலிருந்து*




நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்
41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை - 600 098.

ISBN: 81-234-1116-2



9788123411163

Code No. A 1543 Rs. 125.00